# அதி உன்னத வழி

புத்தரின் 42 வாய்பாடுகள் பற்றிய
விளக்கச் சொற்பொழிவுகள்

பாகம்–1

ஓஷோ

தமிழில்
கோடீஸ்வரன்

கண்ணதாசன் பதிப்பகம்

23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர், சென்னை – 600 017.
போன் : 24332682
E-mail : kannadhasan@vsnl.com

# ஓஷோ

பகவான் ரஜ்னீஷ், தற்போது
'ஓஷோ' என்ற பெயரால் மட்டுமே
குறிப்பிடப்படுகிறார்.

வில்லியம் ஜேம்ஸ் குறிப்பிட்ட
'ஓஷியானிக்' என்ற சொல்லிலிருந்து
தம்முடைய பெயர் உருவானதாக
ஓஷோ குறிப்பிட்டுள்ளார்.

"'ஓஷியானிக்' என்றால்
கடலில் கரைந்து போவது
என்று பொருள்.
'ஓஷியானிக்' என்ற சொல்
அனுபவத்தை மட்டுமே குறிக்கின்றது.
ஆனால், அனுபவிப்பவரைக்
குறிப்பிடவில்லை. அதனால்,
'ஓஷோ' என்ற சொல்லை
உருவாக்கினேன்" என்கிறார் ஓஷோ.

ஆனால், இந்தச் சொல்
கீழை நாடுகளில், நீண்ட காலமாக,
வேறு ஒரு பொருளிலும்
பயன்படுத்தப்பட்டு வருவதை
ஓஷோ பின்னால் கண்டு கொண்டார்.

இதன் பொருள்:
'வானம் பூச்சொரிந்து
ஆசிர்வதிக்கப்பட்ட மனிதன்.'

# உள்ளே

# அறிமுகம்

ஓர் ஆண்டுகாலமாக நான் என்னுடைய ஹிப்பிப் பயணத்தைத் தொடர்ந்து கொண்டிருந்தபோது, ஆன்மிகம் என்பதோடு முதல்வகைத் தொடர்பு எனக்கு இறுதியாக ஏற்பட்டது. இதற்கு முன்பெல்லாம் வேலை செய்யும் பெண்ணின் பயணம், கிராமத்தனிமைப் பயணம், இப்படிப் பல பயணங்கள் நான் செய்து வந்துள்ளேன். இப்போதுதான் அவை அனைத்துமே ஓர் உள்ளார்ந்த தேடுதல் நிறைந்த பயணங்களாகத் எனக்குத் தெரிகின்றன. அந்த நேரத்தில் என் விழிப்புணர்வு முழுவதும் வெளிப் புறம் சார்ந்தவை; மிகவும் குறைவாக வளர்ந்து வரும் அறிவோடு, நான் ஒரு குறிப்பிட்ட கால கட்டத்தில் இருந்தேன். இனிமேல் மீண்டும் இதைச் செய்யக்கூடாது என்று நான் உணர்ந்து கொண்டேன்.

இதழில் பத்திரிகையாளராகச் சேர்ந்து மிகவேகமான வாழ்க்கைக்கு வழி செய்து கொண்டேன். அல்லது சூரிய ஒளியில் மெல்ல நடத்தல், அதாவது தங்கமணல் கடற்கரையில், சமூக விருந்துகள் அளித்தல், சிறிய படகுமூலம், அட்லாண்டிக் கடலில் பயணம், அறையில் உட்கார்ந்து கொண்டு சூரியன் மறைவதைக் கண்டுகளித்தல், எனக்கு நன்றாக இருந்தது. திருப்தியாக இருந்தது. இந்தக்கணத்தில் அதிருப்தி எழுந்தது கொஞ்ச காலத்தில்! மீண்டும் பயணம் செல்ல வேண்டும் என்று ஓர் உந்துதல் வந்தது.

இதனால், இந்தத் தேடுதல் வேட்டையில் போதைப் பொருள் பழக்கம் கொண்டேன். புதிய பழக்கம் நீண்ட நாட்களுக்கு என்னை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது. நான் பயணம் செய்தேன். அது தனிமனிதத் தன்மை கொண்டது. சமூகமுறைப் பயணம் அல்ல; அறையில் உட்கார்ந்து கொண்டு சூரியன் மறைவதைக் கண்டு களித்தேன். நலமாக உணர்ந்தேன். திருப்தியடைந்தேன் அந்தக் கணத்தில்.

உள்ளார்ந்த விழிப்புணர்வைப் பற்றிச் சிறிது கற்றுக் கொண்டேன். இன்பகரமாகத் தப்பித்துக் கொண்டிருந் தேன்.

ஆனால் மிகவும் விரைவிலேயே வேலைக்காரன் எஜமான் ஆனான். நான் கொக்கி போடப்பட்டேன். உடல்ரீதியான போதையன்று. நுட்பமான மனோ ரீதியான போதைக்கு– உயர்வுக்கு– ஆளானேன். எல்லா நேரமும் நன்றாக உணர ஆசைப்பட்டேன். அதனால் எல்லா நேரத்திலும் புகைத்தேன். உச்சங்கள் சுருங்கிச் சுருங்கிக் கடைசியில் மரத்துப் போய்விட்டது எனக்கு. பாதி- விழிப்புணர்வு, தலை மிகவும் கனமாகவும் நீளமாகவும் இருப்பதுபோல் உணர்ந்தேன்.

என் தலையில் கறுப்புச் சிறைகளில் நான் சிறைப் பட்டதாக உணர்ந்தேன். வாழ்க்கை சரியாக இல்லை. நான் மிகவும் துயரப்பட்டேன். தனிமை வாட்டியது. உலகம் பற்றியும் என்னைப்பற்றியுமே மிகவும் விரக்தி! ஆனால் என்ன செய்வது? அடுத்த இணைப்பு, எனக்குச் சில கணங்கள், ஆனந்தமுழுமையைத் தந்தது.

உள்புறத்தில், தப்பிப்பதற்கு ஒரே வழி தியானம் என்று புரிந்து கொண்டேன். எப்படி, எங்கே இதுபற்றி அறிவது என்பதெல்லாம் எனக்குத் தெரியாது. என்ன நடக்கும்

என்பதே தெரியாத நிலையில் நல்லது நடக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டேன்.

தர்மசாலா என்னுமிடத்தில் இருந்தேன். அது ஒரு கிராமம். இமயமலை அடிவாரத்தில் உள்ளது. அங்கு நம்பிக்கையின்றித் திரிந்து கொண்டிருக்கும்போது தலாய்லாமாவைச் சுற்றிலும் திபேத் புத்தமதத்தினர் பற்றிக் கொண்டிருந்தார்கள் என்று அறிந்தேன்.

டல்ஹௌசியில் தியான வகுப்புகள் நடக்கின்றன என்று கேள்விப்பட்டேன். திபெத் பயணம் எனக்கில்லை என்றறிந்தேன். திபெத் புத்தமதத்தினர் தங்கள் அமைதிக்காக ஒளி வட்டம் பெற்றிருந்தனர். இந்துக்களும் பாக்கிஸ்தானிய முஸ்லிம்களும் அங்கே இருந்தனர். நான் நிம்மதியாய் இருந்தேன். என்னால் அங்கிருந்த வண்ணமயமான கடவுள்களோடு இணங்க முடியவில்லை. நான் வேறு ஒருவரின் மதத்தைப் பற்றியறிய விரும்பவில்லை. நான் என் சொந்த அனுபவம் பெற விரும்புகிறேன்.

ஆகவே, வேறு வழியே இல்லாமல், நான் டல்ஹௌசிக்குச் சென்றேன்.

அங்கு இருந்த அணுகுமுறையை என்னால் புரிந்து கொள்ளவும் ஏற்றுக்கொள்ளவும் முடிந்தது. அது என் சொந்தமான அனுபவத்திற்காகக் கொடுக்கப்பட்ட அழைப்பிதழாகும். புத்தர் என்ன அனுபவம் கொண்டிருந்தாரோ அது போன்ற ஒன்றை நான் என் சொந்த அனுபவத்தில் பெற்றேன். நான் அவரை நேசித்தேன், நான் பகவானை நேசித்தேன்.

அதிலிருந்து மெதுவாக, தவிர்க்கமுடியாத வகையில் என்று தோன்றுகிறது- வாழ்க்கையுடனேயே நான் நேசம் கொண்டேன். கண்களை மூடிக்கொள். மதம் என்பது என் முதுகில் ஏறி உட்கார்ந்து கொண்டிருக்கவில்லை என்று

நான் கண்டுபிடித்தேன்... வாழ்வது, கொண்டாடுவது, குதூகலிப்பது, உயிர்த் துடிப்போடு இருப்பது, இது தான் மதம் என்று அறிந்து கொண்டேன்.

இந்தப் புத்தகம் 'The Discipline of Transcendence' (அதி உன்னத வழி பாகம்-I) இந்த மந்திரவித்தை உலகத்திற்கு உங்களைத் திருப்பக்கூடிய திறவுகோலாக அமையக்கூடும்.

*மா. பிரேம் மங்களா*

# நூன்முகம்

1976 ஆம் ஆண்டு, ஆகஸ்டு 21 முதல் 30 வரை, பூனாவில் உள்ள ஸ்ரீரஜ்னிஷ் ஆஸ்ரமத்தில், புத்தரின் நாற்பத்திரண்டு வாய்பாடுகளின் விளக்கச் சொற்பொழிவுகளின் நான்கு வரிசைகளில் முதல் பகுதி இது ஆகும்.

புத்தர் வாய்பாடுகளின் மூலம் பற்றிப் பகவான் ஓஷோ பேசுகிறார்.

இந்த வாய்பாடு-'நாற்பத்திரண்டு அத்தியாயங்களைக் கொண்ட வாய்பாடு'- இந்தியாவில் ஒருபோதும் இருந்த தில்லை. அது ஒருபோதும் சம்ஸ்கிருதத்தில் அல்லது பாலியில் இருந்ததில்லை; இது சீனமொழியில் மட்டும் தான் இருந்தது.

ஹான் வம்சத்தின் ஒரு குறிப்பிட்ட சக்கரவர்த்தியாகிய மிஸ், கி.மு. 67ல் சீனாவிற்கு பௌத்த மதத்தின் ஆசான் களை அழைத்து அவர்களின் மூலமாகப் புத்தரின் செய்தி களைக் கொடுக்கச் செய்தார். அந்தப் புத்த ஆசான்கள் பற்றி யாருக்கும் தெரியாது. ஆனால் ஒரு குழு அங்குச் சென்றது.

சீனமக்களுக்குப் புத்தரின் பொன்மொழிகளின் தொகுப் பாக ஒரு சிறு நூலைச் சீனமக்களுக்கு அறிமுகப்படுத்த விரும்பினார்.

புத்த மறைநூல்கள் மிகவும் பெரியவை. புத்த இலக்கியம், அதுவே ஓர் உலகம். ஆயிரக்கணக்கான மறைநூல்கள் இருக்கின்றன. அவை மிகப் பெரிய விளக்கங்களை எல்லாம் சொல்கின்றன. ஏனென்றால் புத்தருக்குத் தர்க்கவியல் பகுப்பாய்வில் மிகுந்த நம்பிக்கை உண்டு. அவர் ஒவ்வொரு விஷயத்திலும் ஆணிவேருக்கே செல்கிறார். அவரது பகுப்பாய்வு செறிவாகவும் சரியாகவும் உள்ளது. அதனால் அவர் ஆழமான விளக்கங்களுக்குச் செல்கிறார்.

அது மிகவும் கடினமாக இருந்தது. முற்றிலும் ஒரு நாட்டிற்கு எதனை மொழிபெயர்ப்பது, புத்தர் போன்று யாரும் இருந்திராத ஒரு நாட்டிற்கு எதை மொழிபெயர்த்து அளிப்பது?

ஆகவே இந்தப் பௌத்த ஆசான்கள் நாற்பத்திரண்டு அத்தியாயங்கள் கொண்ட ஒரு சிறு தொகுப்பை அமைத்தார்கள். அங்கும் இங்கும் இருந்த புத்தரின் பொன்மொழிகளையும், பல மறைநூல்களிலிருந்தும், பல சொற்பொழிவுகளிலிருந்தும் பல கருத்துக்களை ஒன்றுதிரட்டித் தொகுத்தார்கள்.

இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில், நிபுணர்கள், அத்தொகுப்பின் மூல நூல் சம்ஸ்கிருதத்தில் அல்லது பாலியில் இருந்திருக்க வேண்டும் என்றும், அது மறைந்திருக்கலாம் என்றும், அல்லது தொலைந்திருக்கலாம் என்றும், இப்படிச் சீனநூல் ஒருமொழிபெயர்ப்பே என்றும் கருதினார்கள்.

இது முற்றிலும் தவறானதாகும். இந்த வாய்பாடு ஒருபோதும் இந்தியாவில் இருந்ததில்லை. அது இந்த நிலையில் ஒருபோதும் இங்கே இருந்ததில்லை. உண்மையில் ஒவ்வொரு பொன்மொழியும் புத்தரிடமிருந்து தான் வருகிறது. ஆனால் முப்படைப்பும் புதிய படைப்பு. ஒரு புதிய தொகுப்பே. ஆகவே இதை நன்றாக நினைவில் கொள்ள வேண்டும்.

அதனால்தான் புத்தர் உலகத்திற்கு இது ஒரு புது அறிமுகம் ஆகும். இது மிகவும் எளிமையானது. எல்லா வற்றையும் எளிமையான வழியில் உள்ளடக்கியுள்ளது.

இது நேரடியானது. முழுச் செய்தியின் மொத்த சாராம்சம் இது. ஆனால் மிகவும் குறுகியது, பொதுவாக புத்த இலக்கியங்கள் பெரியவை, இன்றைய ஒன்று மிகவும் சிறியது ஆகும்.

ஓசைகளிலிருந்து விடுதலை பெற்று
அமைதி அடைதலே மிக உன்னதமான வழியாம்!
பெற்றோரை விட்டுச் செல்வோர்,
வீட்டை விட்டுச் செல்வோர்,
மனம் பற்றி புரிந்து கொள்வோர்,
ஆதாரத்தை அடைவோர்,
பொருளல்லாததை உணர்வோர்—ஆகியோர்
சிரமணர்கள் என்று அழைக்கப்படுவோர்.

தர்மத்தின் கட்டளைகளை கடைபிடிப்போர்,
தங்கள் நடத்தையில் அப்பழுக்கற்ற தூயோர்,
முனிவர் நிலையின் கனிகளை அடைந்திடக்
கடுமையாய் தமக்குத் தாமே உழைப்போர்,
இவர்கள் 'அர்கத்கள்' எனப்படுவோர்.
தனது வாழ்க்கை முடிவில்
திரும்பவாரானின் ஆவி ஏறும் சொர்க்கத்தில்...
அடைவான் அங்கே 'அர்கத் தன்மை.'

அடுத்து வருவது ஸ்கிருதாகமின்
(திரும்ப வருவோன்) (மரணத்தின் பின்னர்)
'திரும்ப வருவோன்' 'சொர்க்கத்தில் ஏறுகிறான்
வருகிறான் ஒருமுறை பூமிக்கு
மீண்டும் அதன்பின் அடைகிறான்
அர்கத் நிலையை!

அடுத்து வருவது ஸ்ரோதபன்னா
(ஓடையில் நுழைந்தோன்) ஸ்ரோதபன்னா இறக்கிறான்
ஏழு தடவை மேலும் பிறக்கிறான் ஏழு தடவை
அர்கத் நிலையை இறுதியில் அவன் அடையும்போது

ஆசைகளைத் துண்டித்தல் என்பதன் பொருள்
அங்கங்களைத் துண்டித்தல் என்பது போல...
அவற்றை ஒருபோதும் மீண்டும் பயன்படுத்த முடியாது!



கௌதம புத்தர் இமயமலையின் மிக மிக உயர்ந்த சிகரம் போன்றவர். அவர் கௌரிசங்கர் போன்றவர்... மிகமிகத் தூய்மையவர்களில் அவரும் ஒருவர்; மிக மிகப் புனிதமான ஆன்மாக்களில் அவரும் ஒருவர். உலகில் உள்ள மிக அரிய நிகழ்வுகளில் அவரும் ஒருவர். அவரிடம் உள்ள அருமை எது தெரியுமா? ‘உள்-உலகத்தின்’ விஞ்ஞானி அவர்! ‘சமய’ விஞ்ஞானி அவர்; அவர் ஓர் அரிய கலவை; சமயவாதியாக இருப்பது எளிது; விஞ்ஞானியாக இருப்பது எளிது; ஆனால் அந்த இரண்டு துருவங்களையும் ஒன்றாக இணைப்பது நம்ப முடியாதது. ஆனால் நம்ப முடியாத அது நடந்திருக்கிறது.

இவ்வுலகத்தில் வாழ்ந்த மனிதர்களிலேயே தலைசிறந்த செல்வந்தர் புத்தர் தான்; செல்வந்தர் என்றால் என்ன பொருள்? வாழ்க்கையின் பரிமாணங்கள் அனைத்தும் நிரம்பிய செல்வந்தர் அவர். ஒரே ஒரு பரிமாணம் மட்டுமே உடையவர் அல்லர் அவர். சத்தியத்தை அடைய மூன்று அணுகுமுறைகள் உள்ளன. ஒன்று 'சக்தி'-அணுகுமுறை; இரண்டாவது அழகு- அணுகுமுறை; மூன்றாவது கம்பீர-அணுகுமுறை.

சக்தியைத் தேடுவது விஞ்ஞான அணுகுமுறை; அதனால்தான் பேகன் பிரபு "அறிவு ஒரு சக்தி" என்கிறார். விஞ்ஞானம் மனிதனை மிகுந்த சக்திமானாக ஆக்கி உள்ளது; எந்த அளவுக்கு? இந்தப் பூமிகிரகத்தையே அழிக்க முடியக்கூடிய அளவுக்கு!

உணர்வுநிலை உலக வரலாற்றிலேயே முதல் தடவையாக, மனிதன் உலகளாவிய தற்கொலை, கூட்டுத் தற்கொலை செய்து கொள்ளக்கூடிய அளவு சக்தி கொண்டுள்ளான். விஞ்ஞானம் மகத்தான சக்தியை விடுவித்திருக்கிறது. விஞ்ஞானம் தொடர்ந்து மேலும் மேலும் சக்தியைத் தேடிக்கொண்டுள்ளது. இதுவும்கூட சத்தியத்தை அடையும் அணுகுமுறைதான்; ஆனால் பகுதி அணுகுமுறையே தவிர முழுமை அணுகுமுறை அன்று.

அடுத்து, கவிஞர்கள் ஆன்மிகவாதிகள் ஆகியோர், அழகுணர்ச்சி உள்ளவர்கள்; அவர்கள் சத்தியத்தை 'அழகு' என்று பார்க்கிறார்கள்; ஜாலுதீன்ரூமியும் ரபீந்திரநாத் தாகூரும் மற்றவர்களும் அழகை சத்தியம் என்று நினைக்கிறார்கள். அவர்கள் மிகுந்த கலையைப் படைக்கிறார்கள்; உலகில் அழகின் புதிய ஆதாரங்களை அவர்கள் படைக்கிறார்கள். ஓவியர், கவிஞர், நடனர், இசைஞர் ஆகிய அனைவரும்கூட, சக்தியைக் காட்டிலும் முற்றிலும்

வேறுபட்ட பரிமாணத்தில் சத்தியத்தை அணுகிக் கொண்டிருக்கிறார்கள்.

ஒரு கவிஞர் விஞ்ஞானியைப் போன்றவர் அல்லர். பகுப்பாய்வு, காரணம், உற்று நோக்கல் ஆகியவற்றைக் கொண்டு விஞ்ஞானி வேலை செய்கிறார். ஆனால், கவிஞர், பகுத்தறிவுக்கப்பாற்பட்ட இதயம்... நம்பிக்கை, காதல் ஆகியவற்றின் மூலமாக இயங்குகிறார். மனமும் காரணமும் பற்றிய அக்கறை அவர்களுக்கு இல்லை.

சமய மக்களின் பெரும் பகுதியினர் இந்த இரண்டாவது பரிமாணத்தைச் சேர்ந்தவர்கள்.

சூஃபிகளும், பவுல்களும்- அழகு அணுகுமுறை வர்திகள் ஆவர்! அதனால்தான் அழகான மசூதிகள், மாதாகோயில்கள், தேவாலயங்கள், கோயில்கள், அஜந்தா-எல்லோரா ஆகிய அனைத்தும் உருவாகின!

சமயநடவடிக்கைகள் மேலோங்கும் போதெல்லாம், கலை படைக்கப்படுகிறது, இசை படைக்கப்படுகிறது. மகத்தான ஓவியம் படைக்கப்படுகிறது; இந்த உலகம் இன்னும் கொஞ்சம் அதிக அழகு பெறுகிறது. அது அதிக சக்தி வாய்ந்ததாக ஆகவில்லை; ஆனால் இன்னும் அழகானதாக, இன்னும் அன்பானதாக வாழத் தகுதியுள்ளதாக ஆகிறது.

மூன்றாம் அணுகுமுறை கம்பீர-அணுகுமுறை! பழைய ஏற்பாடு விவிலியத்தின் தீர்க்கதரிசிகளாகிய மோயீசன், ஆபிரகாம், இஸ்லாம் தீர்க்கதரிசி, முகம்மது, கிருஷ்ணர், ராமர்-ஆகியோரது அணுகுமுறை 'கம்பீரம்' என்னும் பரிமாணம் உள்ள அணுகுமுறை... பிரபஞ்சத்தின விரிந்த பரப்பை நோக்கும்போது ஏற்படும் திகைப்பு பற்றிய உணர்வு இவர்களைப் பார்க்கும்போதும் ஏற்படும்! உபநிடதங்களும் வேதங்களும், உலகத்தையும், சத்தியத்தின்

உலகத்தையும் இந்த அணுகுமுறையில் தான் அணுகு கின்றனர். அவர்கள் விந்தை மயமானவர்கள்; நம்ப முடியாத அளவுக்கு அவர்களிடம் கம்பீரம் உள்ளது. எந்த அளவுக்கு? அதன்முன்பு நீங்கள் பணிவை தவிர தலை குனிந்து வணங்குவதைத் தவிர வேறு வழியில்லை. வேறு எதுவும் சாத்தியம் இல்லை. இவர்முன் 'நாம் ஒன்று மில்லை' என்னும் உணர்வுதான் உங்களுக்கு ஏற்படும்.

சத்தியத்தை அடைவதற்கு இருக்கக்கூடிய இயல்பான மூன்று பரிமாணங்கள் இவை.

முதல் பரிமாணம் விஞ்ஞானியைப் படைக்கிறது; இரண்டாவது, கலைஞனையும்; மூன்றாவது தீர்க்கதரிசியை யும் படைக்கிறது.

புத்தரின் 'அருமை' எங்கே இருக்கிறது தெரியுமா?- அவரது அணுகுமுறை இந்த மூன்று பரிமாணங்களின் தொகுப்பு. அது மட்டுமன்று- அதற்கு மேலும் செல்கிறது.

அவர் ஒரு பகுத்தறிவாளர். அவர் ஏசுவைப் போன்றவர் அல்லர்; கிருஷ்ணரைப் போன்றவர் அல்லர். அவர் முற்றி லும் ஒரு பகுத்தறிவாளர். ஐன்ஸ்டினோ, நியூட்டனோ, எடிசனோ அவருடைய பகுத்தறிவில் ஒரு குறைகூடக் காணமுடியாது.

எந்த ஒரு விஞ்ஞானியும் உடனடியாக அவருடைய சத்தியத்தை ஏற்றுக் கொண்டுவிடுவார்கள். அவருடைய அணுகுமுறை முற்றிலும் தர்க்கரீதியானது. மனதை ஒத்துக்கொள்ளச் செய்து விடுவார். நீங்கள் ஒரு சிறு சந்து பொந்தைக்கூட அவருடைய அணுகுமுறையில் காண முடியாது.

யாரோ ஒருவர், எனக்கு W.C. பீல்ட்ஸ என்ற புகழ்பெற்ற நாத்திகர் பற்றிய நிகழ்ச்சிக்குறிப்பொன்றை அனுப்பியுள் ளார். அவர் அமெரிக்காவில் பயணித்துக் கொண்டிருந்

தார். ஒருநாள் அவரது மேனேஜர் அவரது ஹோட்டல் அறைக்கு வந்தார். அப்போது அவர் கிடியான்ஸ் "பைபிள்" படித்துக் கொண்டிருந்தார்.

"பில்! என்ன மோசமான விஷயம் செய்கிறீர்கள் நீங்கள்! தாங்கள் ஒரு நாத்திகர் என்று நினைத்திருந்தேனே!"

பீல்ட்ஸ் பதிலளித்தார். "சந்து பொந்துகளைத் தேடுகிறேன்; சந்துபொந்துகளைத் தேடுகிறேன்."

ஆனால் புத்தரிடம் நீங்கள் தேடமுடியாது; ஆம். ஏசுவிடம் தேடலாம், பல உள்ளன. அதுபோல்! -ஏனென்றால், நம்புகிறார், விசுவாசிக்கிறார், ஆழ்நம்பிக்கை கொள்கிறார். அவர் குழந்தை போன்று எளிமையானவர். அவரிடத்தில் 'விவாதம்' காணப்படவில்லை. நிரூபணம் இருக்கிறது; ஆனால் அதற்கான விவாதம் இல்லை; அவருடைய முழு வாழ்க்கையே அவருடைய நிரூபணம் ஆகும்.

ஆனால் இப்படி இல்லை புத்தர்; அவருடைய இதயத்தோடு இணக்கம் இல்லாதவராக நீங்கள் இருக்கலாம்; அடியோடு அவரை நீங்கள் நம்பாதவராக இருக்கலாம். அவரது நிரூபணத்தை நீங்கள் பார்க்காதவராகவும் இருக்கலாம். ஆனால் அவரது விவாதத்தை நீங்கள் கவனிக்க வேண்டும். அவரிடம் நிரூபணமும் உள்ளது விவாதமும் உள்ளது. அவர் கூறுவதற்கு அவரே நிரூபணம். அதுவே எல்லாம் ஆகிவிடாது. நீங்கள் அவரைக் காணத் தயாராக இல்லையென்றால், அவரால் உங்களை வற்புறுத்த முடியும், உங்களை இணங்கச் செய்ய முடியும். அவர் ஒரு பகுத்தறிவாளர்.

நாத்திகராகவும் முற்றிலும் தர்க்கவாதியாகவும் இருந்த பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் போன்ற மனிதர் கூடக் கூறுகின்றார்: "புத்தருக்கு முன்பு நான் தயக்கம் கொள்ளத்

தொடங்கினேன்; இயேசுவிடம் என்னால் போராட முடியும்." "நான் ஏன் கிறிஸ்துவன் இல்லை" என்று அவர் ஒரு புத்தகம் எழுதியுள்ளார். அது மகத்தான விவாதங்கள் அடங்கிய புத்தகம். கிறிஸ்துவர்களால் இதுவரை பதிலளிக்கப்படவில்லை. அவரது விவாதம் இன்னும் நிலைக்கிறது; ஆனால் புத்தரின் முன்பு அவர் திடீரென்று தயக்கம் உள்ளவராக- தன் ஆதாரம் பற்றி அவ்வளவு நிச்சயம் அற்றவராக- ஆகிவிடுகிறார். ஏனென்றால் புத்தரால் அவரை இணங்க வைக்க முடியும். அவரிடம் உள்ள சொந்த ஆதாரத்தால்! பெர்ட்ரண்ட் ரஸ்ஸலைப் போலவே புத்தரும் ஒரு பகுப்பாய்வாளர்!

புத்தரால் இணங்க வைக்கப்பட வேண்டுமென்றால் அவர் ஒரு சமயவாதியாக இருக்க வேண்டிய கட்டாயம் இல்லை. அது தான்அவரது 'அருமை!'

நீங்கள் நம்பவே தேவையில்லை. நீங்கள் கடவுளை நம்பத் தேவையில்லை, நீங்கள் ஆத்மாவை நம்பத் தேவை யில்லை, நீங்கள் எதையுமே நம்பத் தேவையில்லை- இருப்பினும் நீங்கள் புத்தரோடு இருக்கலாம், மெல்ல மெல்ல நீங்கள் ஆத்மாவைப் பற்றியும்-கடவுளைப் பற்றியும்கூடத் தெரிந்து கொள்வீர்கள். ஆனால் அவை அனுமானங்கள் அல்ல.

புத்தருடன் பயணம் செய்ய நம்பிக்கை தேவைப்படாது. நீங்கள் எந்த அளவு முடியுமோ அந்த அளவு சந்தேகங் களோடு வரலாம். அவர் ஏற்கிறார், வரவேற்கிறார்! என்னோடு வாருங்கள்' என்று கூறுகிறார்.

முதலில் அவர் உங்கள் மனதை இணங்க வைக்கிறார்; உங்கள் மனம் இணங்கிய பின்பு அவரோடு பயணத்தைத் தொடங்குகிறீர்கள். வெகுவிரைவில் 'மனதிற்கு அப்பாற் பட்ட செய்தியொன்று அவரிடம் உள்ளது' என்று உங்களால் புரிந்துகொள்ள முடியும். எந்தக் காரணமும்

அவரது செய்தியைக் கட்டுப்படுத்த முடியாது. ஆனால் முதலில் அவர் உங்கள் காரணத்தை இணங்க வைக்கிறார்.

புத்தரது சமயம் பகுத்தறிவுக்கு அப்பாற்பட்டது. ஆனால் காரணத்திற்கு எதிரானது இல்லை. எடுத்த எடுப்பிலேயே இதுபற்றி நன்றாகப் புரிந்து கொண்டுவிட வேண்டும். அப்பாற்பட்டதோடு செய்வதற்கு ஏதோ ஒன்று உள்ளது; பகுத்தறிவுக்கு அப்பாற்பட்டது; ஆனால் பகுத்தறிவுக்கு எதிரானது அல்ல; அதோடு இணங்கியது தான் இதுவும்; ப குத்தறிவும், பகுத்தறிவுக்கு அப்பாற்பட்ட தன்மையும், ஒரு தொடர்ச்சி. தொடர்ந்து கொண்டுள்ளது. இதுதான் புத்தருடைய 'அருமை' ஆகும்! கிருஷ்ணர் அர்ஜுனனிடம் "என்னைச் சரணடை" என்று கூறுகிறார். புத்தர் இதை ஒருபோதும் கூறவில்லை; அவர் உங்களைச் சரணடைவதற்கு இணங்க வைக்கிறார். கிருஷ்ணர் "என்னைச் சரணடை; பிறகு நீ இணங்கிவிடுவாய் என்று கூறுகிறார். "முதலில் இணங்குங்கள்; பிறகு சரணடைதல் நிழலாகப் பின்தொடரும். நீங்கள் அதைப் பற்றியெல்லாம் கவலைப்பட வேண்டாம். அதைப்பற்றி பேசவேண்டிய தில்லை" என்று புத்தர் கூறுகிறார்.

இந்தப் பகுத்தறிவு சார்ந்த அணுகுமுறையினால், நிரூபிக்கப்பட முடியாத எந்தக் கோட்பாட்டையும் அவர் கொண்டு வருவதில்லை. அவர் ஒருபோதும் கடவுள் பற்றிப் பேசுவதில்லை. H.G வெல்ஸ், புத்தர் பற்றி இவ்வாறு கூறுகிறார்: "மனிதவரலாறு முழுவதிலும் அவர் ஒருவரே அதிகபட்சக் கடவுள்தன்மையும், அதிகபட்சக் கடவுள் அற்ற தன்மையும் உடைய மனிதர் ஆவார்; ஆம் அது அப்படித்தான்; "அதிகபட்சக் கடவுள் தன்மையும் அதிகபட்சக் கடவுள் அற்ற தன்மையும்!

புத்தரைக் காட்டிலும் ஓர் அதிகபட்சக் கடவுள் தன்மை உடைய நபரை உங்களால் காண முடியாது; மற்ற

அனைத்து நபர்களும் அவர் முன்னால் மங்கி மறைந்து விடுகிறார்கள்; அவரது பிரகாசம் அற்புதம்! அவரது வாழ்வு ஒப்புவமை அற்றது; ஆனால் அவர் கடவுள் பற்றிப் பேசவில்லை. அவர் கடவுளைப் பற்றிப் பேசாத காரணத் தால், அவரை நாத்திகர் என்று பலர் எண்ணுகின்றனர்- அவர் அப்படியில்லை! அவர் கடவுளைப் பற்றிப் பேசாததற்குக் காரணமே, கடவுளைப் பற்றிப் பேசுவதற்கு எந்த வழியும் இல்லை என்பதனால் தான்!

கடவுள் பற்றிய பேச்சு அனைத்தும் முட்டாள்தனம்.

கடவுள் பற்றி நீங்கள் என்ன சொன்னாலும் அது பொய்யாகப் போகிறது; சொல்லப்படமுடியாத ஏதோ ஒரு விஷயம் தான் அது!

மற்ற ஞானிகளும் கூடக் கடவுள் பற்றி எதுவும் சொல்ல முடியாது என்று தான் கூறுகின்றனர். ஆனால் இந்த அளவுக்காவது அவர்கள் கூறுகின்றனர். 'அதாவது கடவுள் பற்றி எதுவும் சொல்லமுடியாது' என்றாவது கூறுகின்றனர்.

புத்தர் உண்மையிலே தர்க்க ஞானி. அதைக்கூட அவர் கூறமாட்டார். ஏனென்றால் அவர் "கடவுள் பற்றி எதுவும் சொல்ல முடியாது" என்று கூறுவது கூட, ஏதோ ஒன்று கூறியதுபோலத் தானே.

நீங்கள் 'கடவுளை விளக்க முடியாது' என்று கூறினால், நீங்கள் கடவுளைப் பற்றி எதிர்மறையாக விளக்கிவிட்டீர் கள். 'அதாவது அவரைப்பற்றி விளக்க முடியாது என்று நீங்கள் "எதுவுமே சொல்ல முடியாது" என்று சொன்னால், அதுவும் நீங்கள் 'சொல்கிறீர்கள்'.

புத்தர் கண்டிப்பான தத்துவஞானி. அவர் ஒருவார்த்தை கூட உச்சரிக்க மாட்டார்.

இக்காலத்தின் மகத்தான சிந்தனையாளர்களில் ஒரு வரும் ஏன்-அனைத்துக் காலங்களின் மகத்தான சிந்தனை யாளர்களில் ஒருவரும் ஆகிய லட்விக் விட்ஜென்ஸ்டீன் கூறியுள்ளார். சொல்ல முடியாததைப் பற்றி சொல்லக் கூடாது. "சொல்ல முடியாததைப் பற்றி மௌனம் சாதிக்க வேண்டும். ஏனென்றால் சொல்ல முடியாததைப் பற்றி ஏதாவது சொல்வது அபச்சாரம்.

புத்தர் ஒரு நாத்திகரில்லை; ஆனால் அவர் ஒருபோதும் கடவுள் பற்றிப் பேசுவதில்லை. அதனால் தான் நான் கூறுகிறேன். அவர் ஓர் 'அருமை' என்று! அவர், கடவுளி டம் பல மக்களைக் கொண்டு வருகிறார். பிறர் எவரையும் விட அதிகமாக அவர் அதிக மக்களைக் கடவுளிடம் கொண்டு வந்தார். அவர் முன்னிலையில் லட்சக்கணக் கான மக்கள் கடவுள் தன்மையுடையவராக மாறினார்கள். ஆனால் அவர் ஒருபோதும் அந்த வார்த்தையைக் கூறவில்லை.

கடவுள் மட்டுமில்லை, ஆனால் ஆத்மா கூட, சுயம்கூட இதுபற்றி எந்தக் கொள்கையும் அவரிடம் இல்லை. அவர் வெறுமனே சொல்கிறார். "நீங்கள் உள்ளே செல்வதற்கான பாதையை நான் காட்ட முடியும்; நீங்கள் உள்ளே சென்று பாருங்கள்" அவர் கூறுகிறார்: "எப்படிப் போக வேண்டும் என்று பாதையைச் சுட்டிக் காட்டத் தான் புத்தர்களால் முடியும்; அவர்களால் உங்களுக்குத் தத்துவத்தைத் தரமுடியாது. அங்கே நீங்கள் இருக்கிறீர்கள். உள்ளே செல்லுங்கள்; பாருங்கள்."

புத்தரிடம் ஒரு மனிதர் வந்தார். அவர் ஒரு மகத்தான மேதை; அவர் ஒருவகையான பேராசிரியர்; பல புத்தகங் கள் எழுதியுள்ளார், நாடு முழுவதும் அறியப்பட்டிருந்தார். அவரது பெயர் மவுலிங்க புட்டா! அவர் புத்தரிடம் கூறினார்: "நான் பன்னிரண்டு கேள்விகளுடன் வந்துள்

ளேன்; அவற்றுக்குத் தாங்கள் பதில் அளிக்க வேண்டும்." புத்தர் கூறினார்: "நான் பதில் சொல்வேன். ஆனால் நீங்கள் என் வேண்டுகோளை நிறைவேற்ற வேண்டும். ஒரு வருடத்திற்கு நீங்கள் என்னோடு முழு மௌனத்தில் இருக்கவேண்டும்; அதன் பிறகு உங்களுக்குப் பதில் கூறுவேன்- அதற்கு முன்பாக இல்லை; இப்போதே நான் உங்களுக்குப் பதில் கூறிவிடுவேன்; நீங்கள் அந்தப் பதில்களை வாங்கிக்கொள்ள மாட்டீர்கள்; ஏனென்றால் நீங்கள் தயாராக இல்லை; பற்பல வியாக்கியானங்கள் தங்கள் மனதில் மண்டிக்கிடக்கின்றன; ஆகவே நான் சொல்வதைத் தவறாகப் புரிந்து கொள்வீர்கள். நான் என்ன கூறினாலும் அது உங்கள் மனதிற்குள் செல்லவேண்டும் அல்லவா? ஒரு வருடத்திற்கு நீங்கள் மௌனம் கடைப் பிடிப்பதன் மூலமாகப் பழைய அறிவை நீங்கள் விட்டு விடுவீர்கள்; நீங்கள் காலியாய் இருக்கும்போது, நீங்கள் என்ன கேட்டாலும் நான் பதில் சொல்வேன்; நான் உறுதி மொழி தருகிறேன்.

அவர் இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும்போது புத்தரின் சீடர்களில் இன்னொருவன் சரிபுத்தா, மரத்தின் அடியில் உட்கார்ந்து கொண்டிருந்தவர் சிரிக்கத் தொடங் கினார்- அது ஒரு பயங்கரச் சிரிப்பு, மௌலிங்கபுட்டா வுக்கு மிகவும் தர்மசங்கடமாக இருந்திருக்க வேண்டும். "என்ன விஷயம்? ஏன் சிரிக்கிறீர்கள்" என்று அவர் கேட்டார்.

அவர் கூறினார்: "உங்களைப் பார்த்து நான் சிரிக்க வில்லை. நான் என்னைப் பார்த்துச் சிரித்துக் கொள் கிறேன். ஒரு வருடம் போயிற்று; இந்த மனிதர் என்னையும் ஏமாற்றிவிட்டார். நான் பல கேள்விகளோடு வந்தேன். அவர் கூறினார், "ஒரு வருடம் காத்திருங்கள்" என்று. நானும் காத்திருந்தேன்; இப்போது நான் ஏன் சிரிக்கிறேன் என்றால் என் கேள்விகள் அனைத்தும் மறைந்துபோய்

விட்டன; அவரோ என்னைக் கேட்டுக் கொண்டே இருக்கிறார் “இப்போது உங்கள் கேள்விகளைக் கொண்டு வாருங்கள்'' என்று; ஆனால் அந்தக் கேள்விகளை என்னால் கொண்டு வர முடியவில்லை; அவை மறைந்து போய் விட்டன; ஆகவே மவுலிங்கப்புட்டா, நீங்கள் கேள்விகளுக்குப் பதில் உண்மையில் பெறவேண்டு மென்றால், இப்போதே கேட்டுவிடுங்கள். ஒரு வருடம் காத்திருக்காதீர்கள்; இந்த மனிதர் ஏமாற்றுக்காரர்.

புத்தர் பல மக்களை-பல லட்சக்கணக்கான மக்களை-உள் உலகத்திற்கு அறிமுகப்படுத்தினார்-ஆனால் மிகவும் பகுத்தறிவான வழியிலே! இது சுலபம்-நீங்கள் முதலிலே வாங்குபவராக மாறவேண்டும்! முதலில் நீங்கள் ‘மௌனத்தை’ அடையவேண்டும்! அப்போது தான் தொடர்பு சாத்தியம்- அதற்கு முன்பு இல்லை.

‘புலன் கடந்த இயல்’ பற்றிய கேள்விகளுக்குப் புத்தர் ஒருபோதும் பதிலளிப்பதில்லை. முறைகள் பற்றிய கேள்வி களுக்கு எப்போதும் பதிலளிக்க அவர் தயார்; ஆனால் புலன்கடந்த இயல் பற்றிய கேள்விகளுக்குப் பதிலளிக்க அவர் ஒருபோதும் தயாரில்லை. இதுதான் அவரது அறி வியல் அணுகுமுறை. அறிவியல் “முறைகளை” நம்புகிறது; அறிவியல் ‘ஏன்’ என்பதற்குப் பதிலளிப்பதில்லை. “எப்படி’ என்று மட்டுமே எப்போதும் பதிலளிக்கிறது.

‘உலகம் ஏன் இருக்கிறது இங்கே’ என்று ஒரு விஞ்ஞானியிடம் கேட்டால் அவர் ‘எனக்குத் தெரியாது’ என்றுதான் பதில் சொல்வார். ‘ஆனால் உலகம் எப்படி இங்கு இருக்கிறது’ என்று என்னால் கூறமுடியும் என்பார்.

‘நீர் ஏன் இருக்கிறது’ என்றால் விஞ்ஞானியால் பதில் கூறமுடியாது. அவர் தோள்களைக் குலுக்குவார், தெரியாது என்பதற்கு அடையாளமாக. ஆனால் அவரால் “நீர் எப்படி இருக்கிறது; ஆக்ஸிஜன் எவ்வளவு, ஹைடிரஜன்

எவ்வளவு, எது எது எவ்வளவு இருந்தால் நீர் உருவாக முடியும்" என்றெல்லாம் கூறமுடியும். அவரால் "முறை" யைச் சொல்ல முடியும், எப்படி, பொறியியல் மூலமாக நீரை உருவாக்குவது எப்படி என்று அவரால் கூறமுடியும், ஆனால் அவரால் 'ஏன்' என்று காட்ட முடியாது!

புத்தர் ஒருபோதும் 'ஏன்' ரகக் கேள்விகளைக் கேட்பதில்லை. அதனாலேயே அவர் ஒரு நாத்திகர் என்று கூறமுடியாது; அவரது அணுகுமுறை, மற்ற நாத்திகர் களிடமிருந்து வேறுபட்டது.

ஆத்திகர்கள், நம்பவேண்டும் என்கின்றனர்; விசுவாசம் வேண்டும் என்கின்றனர்; மிக்க விசுவாசம் வேண்டும் என்கின்றனர்.

புத்தர் கூறுகிறார்: 'ஒருவன் எப்படி நம்பமுடியும்? நடக்க முடியாததைக் கேட்கிறீர்கள்' என்று; அவரது விவாதத்தைக் கவனியுங்கள்.

'சந்தேகப்படும் ஒருவர் எப்படி நம்பமுடியும்?' என்று கூறுகிறார் அவர்; ஏற்கெனவே சந்தேகம் எழுந்து விட்ட தென்றால் எப்படி அவர் நம்பமுடியும்? சந்தேகத்தை அடக்கி வைக்க முடியும். நம்பிக்கையை அவர் நடை முறைப்படுத்தலாம், ஆனால் அடி ஆழத்தில், இதயத்தை ஒரு புழுவைப் போல் சந்தேகம் அரித்துக் கொண்டே இருக்கும்.

விரைவாகவோ தாமதமாகவோ, அந்த நம்பிக்கை நொறுங்கிப்போய் விடும். ஏனென்றால் அதற்கு அஸ்தி வாரம் இல்லை. நம்பிக்கைக்கு அஸ்திவாரம் இல்லை; அஸ்திவாரத்திலேயே சந்தேகம் இருக்கிறது. சந்தேகத்தின் அஸ்திவாரத்தில் நீங்கள் உங்கள் முழுமையான நம்பிக்கைக் கட்டத்தையும் கட்டியுள்ளீர்கள். நீங்கள் கவனித்தீர்களா? எப்பொழுதெல்லாம் நீங்கள் நம்பிக்கை கொள்கிறீர்களோ,

அடி ஆழத்தில் சந்தேகம் உள்ளது; எந்த வகையான நம்பிக்கை இது?

புத்தர் கூறுகிறார். சந்தேகம் இல்லாத பொழுது நம்பிக்கை பற்றிய கேள்வியே இல்லை; அப்போது ஒருவர் முற்றிலும் நம்புகிறார். அதற்குக் கிருஷ்ணர் போன்ற யாரும் தேவைப்படமாட்டார். 'சரணடை, நம்பு" –இதில் சாரமில்லை. அர்ஜுனனுக்கு நம்பிக்கை இருந்தால் அவர் நம்பிக்கை உடையவர்; அவருக்கு நம்பிக்கை இல்லையென்றால் அதைக் கொண்டுவர ஒரு வழியும் இல்லை. அப்போது பெரும்பாலும், உச்சபட்சமாக, அர்ஜுனன் நம்பிக்கை இருப்பதுபோல் விளையாட்டுக் காட்டலாம்; பாசாங்கு செய்யலாம்; ஆனால் நம்பிக்கையை நடைமுறைப்படுத்த இயலாது.

இயற்கையாகவே ஆழ்நம்பிக்கை உடையவர்களுக்கு, இயல்பாகவே, ஆழ்நம்பிக்கை பற்றிய கேள்வியே இல்லை; அவர்கள் சும்மா நம்புகிறார்கள். 'நம்பிக்கை' என்றால் என்ன என்று. அவர்கள் அறியாதவர்களாய் இருக்கலாம். சிறு குழந்தைகள் சும்மா நம்புகிறார்கள். ஆனால் ஒரு தடவை சந்தேகம் நுழைந்துவிட்டால், நம்பிக்கை அசாத்தியமாகி விடுகிறது. சந்தேகம் நுழைந்தாக வேண்டும். ஏனென்றால் அது வளர்ச்சியின் அங்கம்! சந்தேகம் ஒருவனைப் பக்குவப்படுத்துகிறது.

உங்கள் ஆத்மாவை சந்தேகம் ஊடுருவும் வரை நீங்கள் குழந்தைத்தனம் உள்ளவராகவே தங்கி விடுகிறீர்கள். சந்தேகத் தீ சுடர் வீசி எரியத் தொடங்காவிட்டால் நீங்கள் பக்குவமற்றவராகவே தங்கி விடுகிறீர்கள். உங்களுக்கு வாழ்க்கை என்றால் என்னவென்றே தெரிவதில்லை. நம்பிக்கையற்றவராக இருப்பதன்மூலம், கேள்விகளை எழுப்புவதன் மூலம் சந்தேகப்படுவதன் மூலம்தான் நீங்கள் வாழ்க்கையை அறிகிறீர்கள்.

புத்தர் கூறுகிறார், ஆழ்நம்பிக்கை வருகிறது. ஆனால் சந்தேகத்திற்கு எதிராக அல்ல, நம்பிக்கையாக அல்ல; நம்பிக்கை வருகிறது, சந்தேகத்தை வாதத்தின் மூலம் அழிப்பதனால்! சந்தேகத்தை, அதிகச் சந்தேகத்தால் அழிப்பதனால், சந்தேகத்தைச் சந்தேகத்தின் மூலமாகவே வேரறுப்பதனால்! விஷம் விஷத்தால் மட்டுமே அழிக்கப்பட முடியும்! -அதுதான் புத்தரின் முறை. அவர் 'நம்புங்கள்' என்று சொல்லவில்லை. 'உங்கள் சந்தேகத்தின் ஆழத்திற்குச் செல்லுங்கள், முடிவுவரை செல்லுங்கள், அச்சமின்றிச் செல்லுங்கள்' என்று அவர் கூறுகிறார்; அடக்கி வைக்காதே. 'சந்தேகத்தின் முடிவு வரை பயணம் சென்றுவிடு!' என்கிறார் அவர்.

அந்தப் பயணமே உங்களை அதற்கும் அப்பால் எடுத்துச் சென்றுவிடும். ஏனென்றால் ஒருகட்டத்தில் சந்தேகம் 'தன்னையே' சந்தேகப்படத் தொடங்கும். அதுதான் முடிந்த முடிவான சந்தேகம்-சந்தேகம், சந்தேகத் தையே சந்தேகிக்கிறது! நீங்கள் முடிவின் ஆழத்திற்குச் சென்றுவிட்டால் அது வந்தே தீரும். முதலில் நீங்கள் நம்பிக்கையை சந்தேகப்படுகிறீர்கள். நீங்கள் இதையும் சந்தேகப்படுகிறீர்கள்.

ஒருநாள், ஒவ்வொன்றையும் சந்தேகப்பட்டு முடித்தபின், திடீரென்று, ஒருபுதிய, முடிந்த முடிவான சந்தேகம் எழுகிறது-நீங்கள் சந்தேகத்தையே சந்தேகப்படத் தொடங்குகிறீர்கள்.

இது சமய உலகத்திலேயே மிகப்பெரிய விஷயம். அதன் பின்பு சந்தேகம் சந்தேகத்தைக் கொல்கிறது; சந்தேகம் சந்தேகத்தை அழிக்கிறது; ஆழ்நம்பிக்கை கிடைக்கப் பெறுகிறது. இந்த ஆழ்நம்பிக்கை சந்தேகத்திற்கு எதிரான தல்ல. இந்த ஆழ்நம்பிக்கை சந்தேகத்திற்கு அப்பாற்பட்டது; இந்த ஆழ்நம்பிக்கை சந்தேகத்தின் எதிர்ப்பதம் அல்ல-இந்த

ஆழ்நம்பிக்கை சந்தேகம் இல்லாமல் போவதாகும்! புத்தர் கூறுகிறார், நீங்கள் மீண்டும் குழந்தைகள் ஆகவேண்டும். ஆனால் அந்தப் பாதை உலகத்தின் வழியாக, சந்தேகங்கள் நிரம்பிய பல காடுகளின் வழியாக, விவாதங்களின் வழி யாக, காரணகாரியங்களின் வழியாகச் செல்ல வேண்டும்.

ஒரு நபர் வீடு திரும்பும்போது, தன் அசல் ஆழ் நம்பிக்கையை மீண்டும் அடைகிறார் அவர்; அது முழுமை யாக வித்தியாசமானது; அவர் ஒரு குழந்தையல்ல; அவர் வயதான மனிதர்; பக்குவப்பட்ட, அனுபவம் வாய்ந்த, ஆயினும் குழந்தை போன்ற மனிதர் அவர்.

இந்த வாய்பாடு 'நாற்பத்திரண்டு அத்தியாயங்களின் வாய்பாடு" இந்தியாவில் ஒருபோதும் இருந்ததில்லை; இது ஒருபோதும் சமஸ்கிருதத்திலோ புத்தர்காலத்தில் மக்கள் பேசியமொழிகளில் ஒன்றான பாலிமொழியிலோ இருந்த தில்லை. ஆனால் இந்த வாய்பாடு, சீனமொழியில் உள்ளது. ஹான்வம்சத்தின் ஒரு குறிப்பிட்ட சக்கரவர்த்தி மிங் கி.பி.67ல் சில புத்தத் துறவிகளைச் சீனாவிற்கு அழைத்து, புத்தர் பற்றிய செய்தியைக் கொடுக்கச் சொன்னார். அந்தப் புத்தத் துறவிகளின் பெயர்களை ஒருவரும் அறிந்திலர்; ஆயினும் ஒரு குழு சீனாவிற்குச் சென்றது. சக்கரவர்த்தி, புத்தர் பொன்மொழிகளின் சிறு தொகுப்பொன்றைச் சீனமக்களுக்கு முதல் அறிமுகம் செய்து வைக்க விரும்பினார்.

புத்த மறைநூல்கள் மிகப்பெரியவை: புத்த இலக்கியம் ஒரு தனி உலகம்; ஆயிரக்கணக்கான மறைநூல்கள் இருக்கின்றன. அவை மிகவும் விளக்கமாக இருக்கின்றன. ஏனென்றால் புத்தர் தர்க்கரீதியான பகுப்பாய்வை நம்புகிறார். அவர், ஒவ்வொரு விஷயத்தின் அடிவேர் வரைக்கும் செல்கிறார். அவரது பகுப்பாய்வு சிறந்தது, சரி

யானது. அதனால், அவர் மிக ஆழமான விளக்கங்களுக்கும் செல்கிறார்.

அது மிகக் கடினமானது. புத்தர் போன்ற எவருமே இருந்திராத ஒரு புதிய நாட்டில், எதை மொழிபெயர்த்துச் சொல்வது? ஆகவே இந்தப் புத்தத் துறவியர் நாற்பத் திரண்டு அத்தியாயங்கள் கொண்ட ஒரு சிறு தொகுப்பைத் தொகுத்தனர். அங்கும் இங்குமிருந்து மறைநூல்களிலிருந்து, சொற்பொழிவுகளிலிருந்து பொன்மொழிகளைத் தொகுத் தனர்.

இந்தப் புத்தகம், கன்பூஸியஸ் தொகுப்புகளின் பாணியில் தொகுக்கப்பட்டது; கன்பூசியஸ் நாட்டிற்கு இது அறிமுகப்படுத்தப் படப்போகிறது; கன்பூசியஸின் பேச்சு களோடு, மறைநூல்களோடு, தொகுப்பு நூல்களோடு மிக வும் பழக்கப்பட்டவர்கள், சீன நாட்டு மக்கள்- 'கன்பூசியஸ்' ஸோடு மக்கள் எந்த அளவுக்குப் பழக்கப்பட்டுள்ளார் களோ அந்த அளவுக்கு நெருக்கமாக- அதே வழிகளில் இந்த வாய்பாடும் தொகுக்கப்பட்டது, புத்தத் துறவிகளால்.

கன்பூஸியஸின் தொகுப்பு நூல்கள் ஒவ்வொன்றும் 'ஆசான் கூறுகிறார்...' ஒவ்வொரு வரியும், ஒவ்வொரு பத்தியும் இந்த வாய்பாடு... 'புத்தர் கூறுகிறார்'... எனத் தொடங்குகிறது. ஒவ்வொரு பொன்மொழியிலும் "புத்தர் கூறுகிறார்" என்று தொடங்குகிறது.

இந்த இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்த நூலின் மூலம் சமஸ்கிருதத்திலாவது பாலியிலாவது இருந்திருக்க வேண்டும்; பின்னால் அது மறைந்திருக்க வேண்டும்' என்றுநினைத்தனர். மேலும் இந்த வாப்பாடு ஒரு சீனமொழிபெயர்ப்பே என்று கருதினர். ஆனால் அது முற்றிலும் தவறு; இந்த வாய்பாடு ஒருபோதும் இந்தியாவில் இருந்ததில்லை. இதே நிலையில் அது ஒருபோதும் இங்கு இருந்ததில்லை. உண்மையாக, ஒவ்வொரு பொன்மொழி

யும் புத்தருடையதுதான், ஆனால் முழுவதும் புதிய புத்தகம், புத்தம் புதிய தொகுப்பு; அதனால் இதை நீங்கள் நினைவில் கொள்ளவேண்டும்.

அதனால் தான் புத்தர் உலகத்தின் முதல் அறிமுகமாக உங்களுக்காக- நான் இதைத் தேர்ந்தெடுத்துள்ளேன். இது மிகவும் எளியது; எல்லாவற்றையும் மிக எளிய வழியில் இது கொண்டிருக்கிறது. இது மிக நேரடியானது; முழுச் செய்தியின் சாராம்சமாக இது உள்ளது; ஆனால் மிகவும் சிறியது; மற்ற புத்த இலக்கியங்களைப்போல் நீண்டு நெடியது அல்ல.

புத்தர் கூறுகிறார்:

ஆசைகளிலிருந்து விடுதலை பெற்று
அமைதி அடைதலே பேசற்கரிய மிகச் சிறந்த வழியாம்!

அவர் எப்போதும் வழியைப் பற்றித்தான் பேசுகிறாரே தவிர, ஒருபோதும் இலக்கைப் பற்றிப் பேசுவதில்லை. ஏனென்றால் அவர் கூறுகிறார்: "இலக்கைப் பற்றிக் கூற என்ன இருக்கிறது? அதைப் பற்றிப் பேசுவது அற்பமானது; நீங்கள் அறிந்திருந்தால் நீங்கள் அறிவீர்கள்; நீங்கள் அறியவில்லையென்றால், நீங்கள் அதை அடையும்வரை அறியப்போவதில்லை. அவர் வழியைப் பற்றி மட்டுமே பேசுகிறார். இலக்கிற்காக அவரிடத்தில் ஒரு வார்த்தை கூட இல்லை; கடவுள், பிரம்மா, உண்மை, முழுமை, கடவுளின் அரசாங்கம் இல்லை. இலக்குக்காக ஒரு வார்த்தை கூட இல்லை அவரிடம்! அவர் பேசுவது அனைத்தும் "வழி"யைப் பற்றி மட்டுமே!

ஆசைகளிலிருந்து விடுதலை பெற்று
அமைதி பெறுதலே மிக உன்னதமான வழியாம்.

இந்த ஓர் எளிய வாக்கியத்தில் அவரது முழு போதனையும் உள்ளது;

ஆசைகளிலிருந்து விடுதலை அடைதல்
மற்றும் அமைதி அடைதல்.

இவை ஒரு விஷயத்தின் இரு அம்சங்கள்; ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள்; 'நீங்கள் ஆசைகளிலிருந்து விடுதலை பெறவில்லையென்றால், அமைதியாக இருக்க முடியாது; நீங்கள் அமைதியாக இல்லையென்றால் ஆசைகளிலிருந்து விடுதலை பெற முடியாது. அவை ஒன்றோடொன்று பிணைந்துள்ளன; இரண்டிற்காகவும் ஒரே நேரத்தில் நாம் வேலை செய்தாக வேண்டும்.

மனிதன் ஏன் அவ்வளவு பதட்டத்தில் உள்ளான்? அவனுக்கு ஏன் இத்தனை ஏக்கமும் வேதனையும்? ஏன் மனிதன் அமைதியாகவும், ஒருங்கிணைந்தும், மையப்பட்டும் இல்லை? பற்பல ஆசைகள் உங்களை அங்கும் இங்கும் அலைக்கழிக்கின்றன; இங்கும் அங்கும் பிடித்துத் தள்ளுகின்றன. பல திசைகளில் நீங்கள் இழுக்கப்படுகிறீர்கள்!

அதனால் நீங்கள் பின்னப்பட்டுப் போகிறீர்கள், நீங்கள் வகுக்கப்படுகிறீர்கள்! நீங்கள் பிளக்கப்படுகிறீர்கள். உங்கள் மையத்தை இழக்கின்றீர்கள். நீங்கள் யார் என்று முழுமையாகவே மறந்து போகிறீர்கள்.

கவனியுங்கள்; நீங்கள் பணத்திற்காகப் பேராசைப் படும்போது நீங்கள் யார்? நீங்கள் ஒரு 'பணப்பேராசை' மட்டும் தான்; வேறு எதுவுமில்லை. நீங்கள் கோபங் கொள்ளும்போது, உங்கள் 'தான்' உலுக்கப்படுகிறது; நீங்கள் யார்! நீங்கள் வெறும் கோபம், 'காயப்பட்ட 'தான்' வேறெதுவுமில்லை.

நீங்கள் முழுமையாகப் பாலுணர்ச்சி ஆசையோடு இருக்கும்போது நீங்கள் யார்! நீங்கள் வெறும் பாலுணர்வு மட்டுமே-வேறெதுவுமில்லை-பாலுணர்ச்சித்தூண்டல்! நீங்கள் ஆசை மிக்கவராக இருக்கிறீர்கள்- உங்களுக்கு

அதிகாரம் வேண்டும், கௌரவம் வேண்டும், மதிக்கப்படும் தன்மை வேண்டும், நீங்கள் யார்? நீங்கள் வெறும் ஆசையே தவிர வேறெதுவும் இல்லை!

கவனியுங்கள்; மேலும் அதிகமான ஆசைகளை நீங்கள், உங்களுக்குள் கண்டுபிடிப்பீர்கள். ஆனால் நீங்கள் யாரென்று உங்களால் கண்டுபிடிக்க முடியாது-எல்லா ஆசைகளும் உங்களைத் தனித்தனியாகப் பிரித்து இழுத்துச் செல்லும். ஒவ்வோர் ஆசையும் தன் சொந்த வழியில் செல்லும்! உங்களுக்குப் பணம் தேவைப்பட்டால், அப்போது, பணத்திற்காக உங்கள் மற்ற தேவைகளைத் தியாகம் செய்தாக வேண்டும்.

ஒரு மனிதன் பணத்தில் பைத்தியம் பிடித்தவனாய் இருந்தால் அவன் பாலுணர்ச்சி பற்றியெல்லாம் மறந்தே போய்விடுவான். "பிரம்மச்சரியம்" காப்பது கருமிக்கு மிக எளிதான வேலை; உண்மையில், கருமித்தனத்தின் ஒருவகை தான் பிரம்மச்சரியமும்! உங்கள் சக்தியைப் பிறருடன் பகிர்ந்துகொள்ள விரும்பவில்லை. நீங்கள் யாருடனும் உங்கள் பாலுணர்வுச் சக்தியைப் பகிர்ந்து கொள்ள விரும்பவில்லை; நீங்கள் ஒரு கருமி. அரசியல் ஆசை உள்ள ஒரு நபர், பிரம்மச்சரியம் உள்ளவராக எளிதில் ஆகலாம். ஏனெனில் அவரது முழு ஆசையும் ஒரே வழியில் அவரை இயக்குகிறது. தன் தேடுதலில் மிக அதிக நாட்டமுள்ள ஒரு விஞ்ஞானி பெண்களைப் பற்றியே மறந்துவிட முடியும்! அது மிக எளியது. ஏதாவது ஓர் ஆசை உங்களை முழுமையாக ஆக்கிரமித்திருந்தால், மற்ற அனைத்தையும் நீங்கள் மறந்துவிட முடியும்.

விஞ்ஞானிகள் அனைவரும் மிகவும் மறதியுள்ளவர்கள் என்பது அனைவரும் அறிந்த உண்மை. அவர்களது முழு மனமும் ஒரே திசையில் செல்கிறது; ஆனால் அப்போது அவர்கள் மிக மிக மிக ஏழைகளாகவும் ஆகிவிடுகிறார்கள்.

அவர்களது களம், அவர்களது பார்வை மிகக் குறுகலாக, மிகக்குறுகலாக, மிகக்குறுகலாக மாறிவிடுகிறது. அதுதான் 'சிறப்பியல்' எனப்படும். ஒரு பேராசை நபர், மிகக் குறுகலாக, மிகக் குறுகலாக, மிகக்குறுகலாக ஆகிவிடுகிறார். அவர் சிந்திக்கிறார், தியானிக்கிறார், பணத்தைப் பற்றி மட்டுமே! அவர் பணத்தை எண்ணிக் கொண்டே செல்கிறார். அவரது முழு மனமும் ஒரே இசையைத்தான் அறியும்; அதுதான் பணம் பற்றிய இசை; ஒரே ஒரு காதல், அது பணத்தைப் பற்றித் தான்!

ஒரு வழியில், ஒரே ஆசை உடைய மக்கள், ஒருவகையில், ஒருங்கமைப்பு உடையவர்கள்; அவர்கள் செல்வந்தர்கள் இல்லை, அவர்கள் வாழ்க்கையில் பல பரிமாணங்கள் இல்லை, அவர்களுக்கு ஒரே ஒரு சுவைதான் உள்ளது. ஆனால் ஒரு குறிப்பிட்ட 'ஒருங்கமைப்பு' அவர்களிடம் உள்ளது. அவர்களிடம் பிளவு இல்லை; அவர்கள் பைத்திய மாக மாட்டார்கள். அவர்கள் ஒரே திசையில் பைத்திய மாய் இருப்பார்கள்; அவர்களிடம் பிளவு இல்லை; இது மிக அரிதாகத் தான் ஏற்படுகிறது. சாதாரணமாக ஒரு மனிதன், எல்லாத் திசைகளிலும் ஓடுகிறான்.

நான் கேட்டிருக்கிறேன்.

ஒரு விஞ்ஞானியும், ஒரு கொரில்லாவும் விண்வெளிக்கு ஒன்றாக அனுப்பப்பட்டார்கள். சிறப்பு அறிவுரைகளை உடைய ஓர் உறை கொரில்லாவின் விண்வெளி உடையின் முற்பகுதியில் குத்தப்பட்டிருந்தது. ஆர்வ மிகுதியால், விஞ்ஞானி, கொரில்லா தூங்கும் வரை காத்திருந்து அந்த உறையில் உள்ள வார்த்தைகளைப் பார்க்கத் துடித்துக் கொண்டிருந்தார்.

மிகவும் ஜாக்கிரதையாக, அந்த உறையைப் பிரித்து உள்ளே இருந்த சிறிய தாளைப் பார்த்துப் படித்தார்.

"விஞ்ஞானிக்கு உணவூட்ட மறந்துவிடாதே" என்று அதில் அச்சிடப்பட்டிருந்தது.

ஒரு விஞ்ஞானி ஒருமுனை உடையவராக ஆகிவிடுகிறார். அவருடைய வாழ்க்கையே "ஒருமுகப்பாடு" தான்! ஓர் ஒருமுகப்பட்ட நபர் ஒற்றுமையின் பொய்யான வகையை அடைகிறார்! சாதாரணமாக மக்கள் ஒருமுகப்பட்டவர்கள் அல்லர். தியானம் மிகத் தொலைவில் உள்ளது. அவர்கள் ஒருமுகப்பட்டவர்களே அல்லர். அவர்கள் வாழ்க்கை அல்லோலகல்லோலம்!-ஒரு குழப்பம்! அவர்களது ஒரு கை வடக்கு நோக்கிச் செல்லும்; ஒரு கால் தெற்கு நோக்கிச் செல்லும்; ஒரு கண் கிழக்கு நோக்கிச் செல்லும்! மறுகண் மேற்கு நோக்கிச் செல்லும். அவை எல்லாத் திசைகளிலும் போய்க் கொண்டிருக்கின்றன. இந்த இழுத்தலும் தள்ளலும் பல திசைகளிலும் நிகழ்வதால் அவர்கள் சின்னாபின்னம் ஆகிறார்கள்; அவர்கள் பின்னங்கள் ஆகிறார்கள். முழுமையை இழக்கிறார்கள்; எப்படி நீங்கள் மௌனமாக இருக்க முடியும்? எப்படி நீங்கள் அமைதியாக இருக்கமுடியும்?

ஒருமுகப்பட்ட மனிதன் கூட அமைதியாக இருக்க முடியாது. ஏனென்றால் அவரது வாழ்க்கை வீங்கிப் போய்விட்டது. அவர் ஒரே திசையில் மட்டுமே நகர்ந்து கொண்டிருக்கிறார். வாழ்விசை மற்றப் பகுதிகள் அனைத்தும் பட்டினி போடப்படுகின்றன.

ஒரு விஞ்ஞானி ஒருபோதும் அழகென்றால் என்ன என்று அறிய மாட்டார்; காதல் என்றால் என்ன என்றும் அறியமாட்டார். கவிதை என்றால் என்ன என்று அவருக்குத் தெரியாது. அவர் தன்னுடைய கணக்கு உலகத்திற்குள் அளவுக்கதிகமாகச் சிறைப்படுத்தப்பட்டு விட்டார். அவர் வீங்கியவர் ஆகிவிட்டார்; அவரது பல பகுதிகள் பட்டினி போடப்படுகின்றன; அவை பசியோ

டிருக்கின்றன. அவர் அமைதியாக இருக்க முடியாது; நீங்கள் பட்டினியோடிருந்தால் நீங்கள் எப்படி அமைதியாக இருக்க முடியும்?

பல திசைகளிலும் நகர்கின்ற ஒரு நபர், ஒரு சிறிதளவு, சிறப்பியலாளரை விடச் செல்வம் படைத்தவர் எனலாம்; ஆனால் அவரது செல்வம் 'மனப்பிளவு' நோய் உடையதாகும்; அவர் பிளவாகிவிடுகிறார். உங்களை, உங்கள் பல்வேறு எஜமானர்கள், பல்வேறு திசைகளில் இழுத்தடிக்கும்போது, நீங்கள் எப்படி மௌனமாகவும் அமைதியாகவும் இருக்கமுடியும்?

சாதாரணமாக இவர்கள் இருவகையான மக்கள், இருவகையினரும் குழப்பம் உள்ளவர்கள், கொந்தளிப்பின் ஆழத்தில் உள்ளவர்கள்!

புத்தர் கூறுகிறார்:

**ஆசைகளிலிருந்து விடுதலை பெற்று அமைதி அடைதலே பேசற்கரிய மிகச் சிறந்த வழியாம்!**

அவரது வழி என்ன?

**பெற்றோரை விட்டுச் செல்வோர், வீட்டை விட்டுச் செல்வோர் மனம் பற்றிப் புரிந்து கொள்வோர், ஆதாரம் அடைவோர், பொருளல்லாததை உணர்வோர்—ஆகியோர் சிரமணர்கள் என்று அழைக்கப்படுவோர்.**

இந்த வார்த்தை நன்றாகப் புரிந்து கொள்ளப்பட வேண்டும். இது அடிப்படையானது- 'சிரமணா'- இந்தியாவில் இரண்டு பாதைகள் இருந்திருக்கின்றன. ஒன்று பிராமணருடையது; இன்னொன்று சிரமணருடையது; பிராமணரின் பாதை அருள்பாதை; உங்கள் முயற்சியால் நீங்கள் இலக்கை அடைய முடியாது என்று பிராமணர் நம்புகிறார். உங்கள் முயற்சி சிறியது; நீங்கள் மிகவும் சின்னஞ் சிறியவர்; உங்கள் முயற்சியாலேயே உண்மையை

அறிவதை எப்படி ஏற்கமுடியும்? கடவுளின் உதவி தேவைப்படும்; அருள் தேவைப்படும்.

பிராமணரின் அருள் பாதை; ஆகவே நீங்கள் பிரார்த்தனை செய்யவேண்டும்; கடவுள் உங்களுக்கு உதவினால் தான் நீங்கள் அந்தப் பாதையில் நகர முடியும். அவர் விரும்பாவிட்டால் நீங்கள் அடைய முடியாது;

கடவுள் தேவை, அவரது உதவி தேவை, அவரது கை தேவை; அவரே இந்த உலகத்திலிருந்து உங்களை எடுக்கும் வரை, நீங்கள் வீணே போராடிக் கொண்டே இருப்பீர்கள். ஆகவே பிரார்த்தனையே வழி; பிராமணர் பிரார்த்தனையை நம்புகிறார்.

சிரமணர் முழுமையாக அப்படியே எதிரானவர். "சிரமணர்" என்ற வார்த்தையின் அடிச்சொல் "சிரமம்" (ச்ரம்) 'சிரமம்' என்பது பாடுபடுவது, உழைப்பது; "சிரமம்" என்றால் (ச்ரம்) உழைப்பு என்று பொருள். எந்த அருளுக்கும் சாத்தியம் இல்லை; ஏனென்றால் புத்தர் கடவுள் பற்றியே பேசுவதில்லை. புத்தர் கூறுகிறார்: உங்களுக்குக் கடவுளைத் தெரியாது- நீங்கள் எப்படிப் பிரார்த்தனை செய்ய முடியும்? யாருக்கு நீங்கள் பிரார்த்தனை செய்யப் போகிறீர்கள்? அந்தப் பிரார்த்தனை ஆழமான அறியாமையுடையது; நீங்கள் அறியாத கடவுளிடம்- நீங்கள் ஒருபோதும் பார்த்திராத கடவுளிடம்- நீங்கள் எப்படிப் பிரார்த்தனை செய்ய முடியும்? எத்தகைய தொடர்பு உங்களுக்குள் சாத்தியம்? நீங்கள் வானத்திடம் பேசிக் கொண்டிருப்பீர்கள்; வெற்று வானத்திடம்! உங்களுக்கு நீங்களே பேசிக் கொள்ளலாம். அது பைத்தியக்காரத்தனம்.

தனியாக உட்கார்ந்து கொண்டு தங்களுக்குத் தாங்களே பேசிக்கொள்ளும் பைத்தியக்காரர்களைப் பார்த்திருக்கிறீர்கள் அல்லவா? அவர்கள் யாரிடமோ பேசுகின்றார்கள்:

ஆனால் அங்கே ஒருவருமில்லை. ஒவ்வொருவரும் அறிவர். அவர்கள் தங்களுக்குத் தாங்களே பேசிக் கொள்கிறார்கள்.

புத்தரின் பகுத்தறிவு அணுகுமுறைப்படி, கடவுளிடம் மனிதன் பிரார்த்தனை செய்வது பைத்தியக்காரத்தன மானது; பித்துக்குளித்தனமானது. நீங்கள் என்ன செய்கிறீர் கள்? கடவுள் இருக்கிறார் என்று நீங்கள் அறிவீர்களா? நீங்கள் அறிந்திருந்தால் அப்போது பிரார்த்தனைக்குத் தேவை இல்லை. நீங்கள் சொல்கிறீர்கள். கடவுளை அறி வதற்குப் பிரார்த்தனை செய்வதாக! பிராமணர் கூறுகிறார்.

அவருடைய உதவியால், அவருடைய அருளால், அவரிடம் பிரார்த்தனையால் மட்டுமே அவரை அறிய முடியும்!

இப்போது இது மிகத்தவறு! தர்க்கரீதியாகத் தவறானது. நீங்கள் ஒரு வட்டத்தில் நகர்கிறீர்கள். நீங்கள் சொல்கிறீர் கள் "நாங்கள் கடவுளைப் பிரார்த்தனையால் மட்டுமே அறிய முடியும்" என்று; அப்படி என்றால் நீங்கள் எப்படிப் பிரார்த்தனை செய்ய முடியும்? ஏனென்றால் நீங்கள் கடவுளை அறியமாட்டீர்களே. நீங்கள் சொல்கிறீர்கள், "பிரார்த்தனையின் மூலம் மட்டுமே நாங்கள் அவருடைய அருளை அடைய முடியும்." இது ஒரு விஷச்சக்கரம். இது தர்க்க விரோதமானது; இந்தத் தவறு மிகவும் தெளிவானது; இந்தச் சந்துபொந்து மிகவும் வெளிப்படையானது. இது ஒரு சாதாரண சமயவாதிகள் பிரச்சினை- அவனால் வாதிட முடியாது. உங்கள் முழு வாதத்தையும் ஒரு நொடியில், ஒரு நாத்திகனால் அழித்துவிட முடியும். சமய மக்கள் விவாதத்தைத் தவிர்க்கின்றனர். ஏனென்றால் அவர்களுக்கு நன்றாகத் தெரியும், அவர்களுக்கு எந்த அடிப்படையும் இல்லை வாதிடுவதற்கு என்று! நீங்கள் சொல்கிறீர்கள். 'நாங்கள் கடவுளைத் தேடிக்கொண்டிருக் கிறோம்' என்று; அதே நேரத்தில் அப்போதே நீங்கள்

சொல்கிறீர்கள் 'பிரார்த்தனையின் மூலமாகத்தான் நாங்கள் கடவுளைத் தேட முடியும்' என்று; நீங்கள் இன்னும் அறிய மாட்டீர்கள்- பிரார்த்தனை சாத்தியம் அல்ல; நீங்கள் அவரை அறிந்திருந்தால், பிரார்த்தனை தேவையில்லை.

புத்தர் கூறுகிறார், உங்கள் சொந்த முயற்சியால் மட்டுமே, உங்கள் சொந்த சிரமத்தினால் மட்டுமே நீங்கள் கடவுளை அடைய முடியும். இதில் எந்த "அருளுக்கும்" இடமில்லை. ஒருவழியில் இது மிகவும் கடினமாகத் தோன்றுகிறது; இன்னொரு வழியில் இது மிக மிக விஞ்ஞானபூர்வமானதாகத் தோன்றுகிறது.

நீங்கள் தனியாக இங்கே இருக்கிறீர்கள், உலகக் காட்டில் தொலைந்து போய்விட்டீர்கள். மரத்தின் அடியில் அமர்ந்து கொண்டு பிரார்த்தனை செய்கிறீர்கள், யாருக்குப் பிரார்த்தனை செய்கிறீர்கள் என்று தெரியாது. எங்கே கடவுள் இருக்கிறார் என்று தெரியாது, அவர் இருக்கிறாரா இல்லையா என்றும் தெரியாது. உங்கள் நேரத்தை வீணடித்துக் கொண்டிருப்பீர்கள். கடவுளே இல்லையென்றால், அப்புறம்?... பிரார்த்தனைக்காக நீங்கள் வீணாக்கிய நேரத்தை அவரைத் தேடுதலில் கண்டு பிடிப்பதில் பயன் படுத்தியிருக்கலாம் அல்லவா?

புத்தர் கூறுகிறார். நீங்கள் தொலைந்துபோய் விட்டீர்கள் என்றும் நீங்கள் உங்கள் வழியைக் கண்டுபிடித்துத்தான் ஆகவேண்டும் என்றும் உங்களுக்கு எந்த உதவியும் வரப் போவதில்லை என்றும் நீங்கள் புரிந்து கொண்டுவிட்டால், அப்போதே நீங்கள் பொறுப்புணர்ச்சி உடையவர் ஆவீர்கள்; பிரார்த்தனை என்பது பொறுப்புணர்ச்சியற்ற தன்மை; பிரார்த்தனை செய்வது தவிர்ப்பதற்காக; பிரார்த் தனை செய்வது சோம்பேறித்தனமாக இருப்பதற்காக; பிரார்த்தனை என்பது தப்பித்துக் கொள்வதற்காக; புத்தர் கூறுகிறார் முயற்சி தேவை என்று. மேலும் பிரார்த்னை

செய்வது என்பது அவமானப்படுத்துவதாகும்; புத்த அமைப்புகளில் பிரார்த்தனை போன்ற எதுவும் இல்லை; தியானம் மட்டுமே; நீங்கள் தியானம் செய்யலாம், நீங்கள் பிரார்த்திக்க முடியாது.

தியானத்திற்கும் பிரார்த்தனைக்கும் இடையே உள்ள வித்தியாசம் இது தான். பிரார்த்தனைக்குக் கடவுள் நம்பிக்கை வேண்டும்; தியானத்திற்கு அது தேவையில்லை. தியானம் முற்றிலும் விஞ்ஞான பூர்வமானது. அது கூறுகிறது சிலமன நிலைகள் உள்ளன; அங்கே சிந்தனையே நின்றுவிடுகிறது. சிந்திப்பதை நிறுத்த வழிகள் உள்ளன; சிந்தனையை விட்டு விடும் நிலையும் அமைதியான-சமாதானமான- மனநிலையும் தூய மனநிலையும் தியானத் தின் மூலம் கிடைக்கலாம். அந்த மனநிலை உங்களுக்கு உண்மைபற்றியும், உண்மையின் அம்சங்கள் பற்றியும் கதவைத் திறந்து விடுகிறது; ஆனால் அது உங்கள் சொந்த முயற்சியினால் மட்டுமே சாத்தியம்.

மனிதன் தனியாக உள்ளான். கடினமாக உழைக்க வேண்டி உள்ளது. நீங்கள் உழைக்கத் தவறினால் நீங்கள் மட்டுமே பொறுப்பாவீர்கள். நீங்கள் அடையவில்லை யென்றால், நீங்கள் யாரையும் குற்றஞ்சாட்ட முடியாது; ஏனென்றால் குற்றம் சாட்டப்பட யாருமே இல்லை.

புத்தரின் பாதை சிரமணரின் பாதை; தன் முயற்சியை நம்புகிறவன், இது மிகவும் கடுமையானதாக, கடினமான தாகத் தோன்றலாம்; பயம் வந்துவிடக் கூடும்; பயம் வந்தால் யாருடைய உதவியாவது தேவைப்படுகிறது; ஏதோ ஓரிடத்தில், ஏதோ ஒரு கடவுள் இருப்பதாக நம்புவது, நமக்கு ஒரு நிம்மதியை அளிக்கிறது. நான் கேட்டிருக் கிறேன்.

---

★ (கடல்நோய்-கடலில் கப்பலின் ஆட்டத்தால் ஏற்படும் ஒருவகைக் குமட்டல் நோய்)

கடல்நோய்ப்* பயணி ஒருவர் வெறுப்போடு கப்பலின் தளநாற்காலியில் அமர்ந்து கொண்டு, போகும் பணியாள் ஒருவனைத் தடுத்து நிறுத்தினான். தூரத்தில் கைகாட்டிக் கொண்டே அதோ அங்கே-நிலப்பகுதி; இல்லையா?" என்று கேட்டார்:

'இல்லை ஐயா; அது தொடுவானம்' -என்றார் பணியாள்.

"பரவாயில்லை" பயணி பெருமூச்சுவிட்டுக் கொண்டே சொன்னார்.

"ஒன்றுமில்லாததை விட அது பரவாயில்லை".

ஆனால் தொடுவானம் என்பது 'ஒன்றுமில்லை'. அது எப்படி 'ஒன்றுமில்லை'யை விடச் சிறந்ததாக இருக்க முடியும்? அது அப்படித் தோன்றுகிறது; ஆனால் அது அங்கே இல்லை. தொடுவானம் என்று ஒன்றும் கிடையாது. தொடுவானம் என்பது மாயத்தோற்றம். ஆனால் அதுகூட, ஒரு கடல்நோய்ப் பயணிக்கு நல்லதாகத் தோன்றுகிறது. ஏதோ ஒன்று குறைந்தபட்சம்-'ஒன்றுமில்லை'யைவிடச் சிறந்தது.

புத்தருக்கு, நம்பிக்கை என்பது தொடுவானம் போன்றது. உங்கள் கடவுளர் அனைவரும் தொடுவானங்கள், கானல் நீர்கள். நீங்கள் அவற்றை நம்புகிறீர்கள், ஏனென்றால் நீங்கள் தனித்திருப்பதாக உணர்கிறீர்கள். அவர்கள் இருக்கின்றனரா என்று நீங்கள் அறியமாட்டீர்கள். நீங்கள் படைக்கிறீர்கள், ஏனென்றால உங்களுக்கு அவர்கள் தேவைப்படுகிறார்கள். ஆனால் உங்களுடைய தேவை அவர்களுடைய உண்மைக்கு உத்தரவாதம் ஆக இருக்க முடியாது. அவர்களது உண்மைத் தன்மைக்கு உங்கள் தேவை உத்தரவாதமாக இருக்க முடியாது.

அடர்ந்த காட்டில் இருண்ட இரவை நீங்கள் கடந்து கொண்டிருக்கின்றீர்கள். நீங்கள் தனித்திருக்கிறீர்கள். அங்கு உங்கள் தேவை ஒரு தோழன். நீங்கள் ஒரு தோழனைக் கற்பனை செய்துகொள்ள முடியும். அந்தத் தோழனோடு நீங்கள் பேசத் தொடங்கலாம். தோழனிடமிருந்து வரும் கேள்விகளுக்கு விடையும் அளிக்கத் தொடங்கலாம். அங்கு யாரோ ஒருவர் இருப்பதாக ஒரு மாயத்தோற்றத்தை அளிக்க முடியும். நீங்கள் உங்கள் தோழனை நம்பலாம். அதனால் முழுமையாக வசியப்படுத்தப் படலாம்; ஆனால் அதனாலேயே நீங்கள் உங்கள் தோழனைப் படைத்துவிட முடியும் என்று பொருள் கொள்ளக்கூடாது.

மக்கள் தனித்திருக்கும்போது (சீட்டி அடித்தல், விசில் அடித்தல் என்றும் கூறுவர்) சீழ்க்கை அடிக்கத் தொடங்கு கின்றார்கள். இருண்ட இரவைக் கடக்கும்போது, அவர்கள் சீழ்க்கை அடிக்கத் தொடங்குகிறார்கள். அது உதவுகிறது. அது ஒன்றுமில்லையைவிடச் சிறந்தது. உங்கள் ஒலியை நீங்கள் கேட்கிறீர்கள்; வேறு யாரோ ஒருவர் இருக்கும் சிந்தனையை அது உங்களுக்கு அளிக்கிறது. மக்கள் பாடக் கூடத் தொடங்குகிறார்கள். தங்கள் குரலையே கேட்டு...

வேறு ஒருவர் கூட இருப்பது போன்ற உணர்வை அது அளிக்கிறது. ஏனென்றால் பிறர் பேச நீங்கள் எப்போதும் கேட்டிருக்கிறீர்கள். உங்களால் கேட்கப்படும் ஒலி மட்டுமே, உங்களுக்கு வேறொருவர் இருக்கின்ற உணர்ச்சியைத் தந்துவிடுகிறது.

ஆனால் புத்தர் கூறுகிறார்: உங்களுக்குத் தேவை இருக் கின்ற ஒரே காரணத்தினாலேயே, உண்மைத் தன்மைக்கு அதைப் பூர்த்தி செய்யத் தேவையில்லை.

உண்மைத்தன்மை, உங்கள் தேவையினால் மாறுவ தில்லை. உங்கள் தேவை உண்மையானதுதான்- நீங்கள் தனித்திருக்கிறீர்கள். உங்களுக்கு வானத்தில் ஒரு தந்தை

உருவம், ஒரு கடவுள் தேவை. கிறிஸ்துவர்கள் அதனால் தான் கடவுளைப் 'பிதா' என்று அழைக்கின்றனர். அது ஒரு தந்தை உருவம்.

உளவியலார் புத்தருடன் ஒத்துப் போவார்கள். உளவியலார் "கடவுள் என்பது தந்தை உருவத்தின் தேவை மட்டும்" என்கின்றனர். ஒவ்வொரு சிறுகுழந்தையும் ஒரு தந்தையைப் பெற்றுள்ளது; பாதுகாப்பும் உத்தரவாதமும் அளிக்கிறார் அவர். முழுமையாக நலத்தோடு இருப்பதாக ஒரு குழந்தை உணர்கிறது. தன் தந்தை கூட இருக்கும் போது. பிறகு நீங்கள் வளர்கிறீர்கள். அப்பொழுது பக்குவம் அடைகிறீர்கள்; அப்புறம் உங்கள் தந்தை உங்களுக்கு இனி எந்தப் பாதுகாப்பும் இல்லை. நீங்கள் எப்படியோ அப்படியே தந்தையும் பலவீனம் என்று அறிகிறீர்கள். உங்கள் தந்தையும் உங்களைப் போலவே ஓர் எல்லைக்குட் பட்டவர் என்பதை உணர்கிறீர்கள். மேலும், மெல்ல மெல்ல ஒவ்வொரு நாளும் முதுமையாகிக் கொண்டும் பலவீனமாகிக் கொண்டும் வருகிறார் உங்கள் தந்தை என்றும் உணர்கிறீர்கள்.

உங்கள் நம்பிக்கை போய்விட்டது; ஆனால் உங்கள் தேவை அப்படியே இருக்கிறது. உங்களுக்கு யாராவது ஒரு தந்தை உருவம் தேவை. எங்காவது சென்று உங்கள் தந்தையிடம் பேசவிரும்புகிறீர்கள், ஆனால் அவர் அங்கே இல்லை. போகட்டும்! நீங்கள் ஒரு கடவுளைப் படைக்கிறீர் கள், அல்லது நீங்கள் தாயைப் படைக்கிறீர்கள். காளி என்றும் அம்பாள் என்றும் அழைக்கிறீர்கள். ஆனால் நீங்கள் ஒரு தந்தை உருவம் அல்லது தாயின் உருவம் படைக்கிறீர்கள். அது உங்கள் தேவை, நிச்சயமாக- உளவியல் தேவை- ஆனால் இத்தேவை உங்களைப் பக்குவமற்றவராகவே வைத்திருக்கிறது.

புத்தரின் வழிகள் அனைத்தும் முற்றிலும் பக்குவத்திற் காகத்தான். இந்த அனைத்து உருவங்களையும் விட்டு விடுங்கள் என்று கூறுகிறார். அவை இருக்கவில்லை; அவை இருந்தாலும் கூட, இது அவற்றைக் கண்டுபிடிக்கும் வழி இது இல்லை; அமைதியாகவும் அடக்கமாகவும் ஆகி விடுவதே அதற்கான வழி. தனித்திருத்தலை எந்த அளவுக்கு நீங்கள் ஏற்றுக்கொண்டு தனித்திருக்க வேண்டுமென்றால், வேறு எவருடைய தயவும் தேவையில்லை என்று ஆகும் அளவுக்கு! அந்த அளவுக்கு மௌனமாகவும், தனித்திருக்க வும் முயலுங்கள்! உங்களுக்கு உங்களைத் தவிர வேறு யாரும் தேவைப்படவில்லை- நீங்களே உங்களுக்குப் போதுமானவர்- என்று உணருமளவுக்குத் தனித்திருங்கள்! அப்பொழுது நீங்கள் அமைதியாக இருப்பீர்கள். அப்போது ஓர் அருள் உங்களுக்கு நிகழத் தொடங்கும்; அது கடவுளிட மிருந்து வரும் அருள் அல்ல. உங்கள் மையப்புள்ளியி லிருந்து உங்கள் வட்டப் பரப்பை நோக்கிப் பரவுகின்ற அருள் ஆகும். நீங்களே அருள்மயமாக ஆகிவிடுவீர்கள்.

புத்தர் உட்கார்ந்து கொண்டிருக்கிறார், நின்று கொண் டிருக்கிறார், நடந்து கொண்டிருக்கிறார்-அருள் உருவகப் படுத்தப்பட்டுள்ளது. ஆனால் இந்த அருள் வேறெங்கோ இருந்து வரவில்லை. அவருடைய சொந்த உள்ளார்ந்த உச்சபட்ச ஆழங்களிலிருந்து வருகின்ற அருள் இது; அவருடைய சொந்த மையப்புள்ளியிலிருந்து குமிழியிட்டுக் கொண்டிருக்கிறது. அது ஒரு மரத்தில் மலர்ந்த மலர் போன்றது- அது மரத்திலிருந்து வெளிவந்துள்ளது; அது வேறெவருடைய நன்கொடையுமன்று; அது ஒரு வளர்ச்சி.

இதுதான் பிராமணரின் பாதைக்கும் சிரமணரின் பாதைக்கும் இடையில் உள்ள வித்தியாசம் ஆகும். பிராமணரின் பாதையில் உண்மை ஒரு நன்கொடை, கடவுளின் நன்கொடை. சிரமணரின் பாதையில் உங்கள் வாழ்விலிருந்து உங்களுக்கு ஏற்படும் ஒரு வளர்ச்சியே

உண்மையாகும். அது உங்களுடையது; உண்மை என்பது வெளியிலிருந்து ஏதோ ஒன்றைக் கண்டுபிடிப்பதன்று; அது உள்ளேயிருந்து ஏதோ ஒன்றை உணர்ந்துகொள்வது.

**பெற்றோரை விட்டுச் செல்வோர், வீட்டை விட்டுச் செல்வோர் மனம் பற்றிப் புரிந்து கொள்வோர். ஆதாரம் அடைவோர், பொருளல்லாததை உணர்ந்து கொள்வோர்— ஆகியோர் சிரமணர் என்றழைக்கப் படுவோர்.**

இப்போது சிரமணர் பற்றிய வரையறை; சிரமணர் எனப்படுபவர் யார் உண்மையாக உண்மையைத் தேடுபவர்? யார் உண்மையான முயற்சி செய்கிறார்? உண்மையைக் கண்டுபிடிக்க யார் ஆதாரபூர்வமான முயற்சி செய்கிறார்? முதல் விஷயம்- அவர்கள் தங்கள் பெற்றோர்களைப் பிரிகின்றார்கள்.

இது மிகவும் உருவகமானது; நேரடியாகப் பொருள் கொள்ளக்கூடாது; இது மிகவும் உருவகமானது; மிகவும் உளவியல் பூர்வமானது. ஒரு குழந்தை தன் தாயின் கருப்பையில் ஒன்பது மாதங்கள் தங்குகிறது. முழுமையாகப் பாதுகாக்கப்பட்டு, எவ்வளவு அழகான வெதுவெதுப்பான சூழ்நிலை என்றால் இத்தகைய வசதி மீண்டும் ஒருமுறை திரும்ப வரவே வரப் போவதில்லை. கவலை இல்லை; பொறுப்புணர்ச்சி இல்லை; மூச்சுவிடக்கூட! அவன் தானே மூச்சுவிடவேண்டாம்; தாய் அவனுக்கு மூச்சு விடுகிறாள். அவனுக்குக் கவலை இல்லை தனக்குப் பசிக்கு மென்றோ அல்லது பசியில் கைவிடப்படுவோம் என்றோ! தாய் அவனுக்கு உணவூட்டிக் கொண்டே இருக்கிறாள். அவன் அவ்வளவு பாதுகாப்போடு உத்தரவாதத்தோடு உள்ளான்.

உளவியலாளர் கூறுகின்றனர், சமயத்தேடலில் மக்கள் அதே கருப்பையை மீண்டும் தேடுகின்றனர் என்று. அவர் களது சொர்க்கக் கோட்பாடுகள் அனைத்தும் பெரிதாக்கப்

பட்ட கருப்பைகள், முழுமையான வசதியுடன். இந்துப் புராணத்தில் அவர்கள் சொல்கிறார்கள் சொர்க்கத்தில் கற்பக மரம் என்று ஒரு மரம் உள்ளது; நினைத்ததை நிறைவேற்றும் மரம். நீங்கள் அதன் அடியில் உட்காருங்கள். எந்தக் கணத்தில் ஆசை தோன்றுகிறதோ அதே கணத்தில் அது நிறைவேற்றப்படும். உணவைப் பற்றிச் சிந்தியுங்கள்; உணவு அங்கே இருக்கும்; உடனடியாக, நீங்கள் தூக்கம் வருவது போல் இருப்பதால் படுக்கை பற்றி நினைக்கிறீர்கள். உடனடியாக அதோ அங்கே படுக்கை இருக்கிறது.

இதுதான் கருப்பையும். கருப்பைதான் கற்பக மரமாக நினைத்ததை நிறைவேற்றும் மரமாக உள்ளது. குழந்தை ஒருபோதும் எந்தத் தேவை பற்றியும் நினைக்கவில்லை. தனக்கு இதுவேண்டும் என்று நினைப்பதற்குள் நிறைவேற்றப்பட்டு விடுகிறது. இது முழுமையாகத் தானாகவே இயங்குகிறது. ஆனால் குழந்தை கருப்பையை விட்டு வெளியே வரவேண்டும். அவன் வளர்ச்சிக்கு அது தேவைப்படுகிறது. ஏனென்றால் வசதி மட்டுமே உனக்கு ஒருபோதும் வளர்ச்சிக்கு உதவாது. ஏனென்றால் அங்கே சவாலில்லை!

குழந்தை கருப்பையை விட வேண்டியுள்ளது. கருப்பையை விட்டு வெளியே வந்தவுடன் குழந்தை செய்ய வேண்டிய முதல் விஷயம் உயிர்வாழ்க்கைக்கு அடிப்படையானது- சொந்தமாக மூச்சுவிட வேண்டும். சொந்தமாக அவன் முயற்சி செய்தாக வேண்டும். அவன் சிரமணனாகிறான்.

அன்னையின் கருவில் அவன் ஒரு பிராமணனாய் இருந்தான்; எல்லாம் அருளால் நடந்தன; ஒவ்வொன்றும் நடந்தது; அவன் எதுவுமே செய்யவில்லை; ஆனால் ஒவ்வொருவரும் தங்கள் கருப்பையிலிருந்து வெளிவந்துதான் ஆகவேண்டும். ஒவ்வொரு பிராமணனும் சிரமணனாக

மாறித்தான் ஆகவேண்டும்; புத்தர் கூறுகிறார் சிரமணனாக இருப்பதன் மூலமாக வளர்ச்சி சாத்தியம்.

அப்புறம் குழந்தை மெல்ல மெல்ல மேலும் தொலைவில் மேலும் தொலைவில், தாயிடமிருந்து விலகி வளர்ச்சி பெறுகிறது. பிறந்த பின்பு தாயின் மார்பகத்தைச் சார்ந்துள்ள நிலை உள்ளது. அதற்குப்பின் ஒரு கணத்தில், தாயின் மார்பகம் தேவைப்படாது. ஆனால் தாய் தான் உணவு ஊட்ட வேண்டிய நிலை! அப்புறம் அவன் பள்ளிக்குச் செல்கிறான்; தன் தாயை விட்டு மேலும் விலகிச் செல்கிறான் அவன்; அவன் மேலும் மேலும் சுதந்திரமானவனாக மாறுகிறான். மேலும் மேலும் அவன் ஒரு தனிமனிதனாக உருவாகிறான். பிறகு ஒருநாள் வேறொரு பெண்ணிடம் காதல் கொள்கிறான்; தன் தாயிடமிருந்து முழுமையாகத் துண்டிக்கப்பட்டு விடுகிறான்.

அதனால்தான், தன் பிள்ளையை அப்படியே எடுத்துக் கொண்ட பெண்ணை எந்தத் தாயும் எப்போதும் மன்னிப்பதேயில்லை. தன் மகனைத் தன்னிடமிருந்து அபகரித்துக் கொண்ட பெண்ணை ஒரு தாயால் மன்னிக்கவே முடிவதில்லை- ஒருபோதும்! ஓர் ஆழமான பிணக்கு! ஆனால் ஒரு மனிதன், ஒரு பெண்ணிடம் காதல் கொள்ளும் பொழுதுதான் உண்மையாகப் பக்குவம் உடையவனாகிறான். ஏனென்றால் அவன் தன் தாயிடமிருந்து முழுமையாகத் தன் முதுகைத் திருப்பியவனாகிறான்.

இப்போது அவன் தன் தாயிடமிருந்து 180° திரும்பிவிட்டவன் ஆகிறான்.

புத்தர் கூறுகிறார், உளவியல் உலகில் இன்னும் பல வேர்கள் வெட்டப்பட வேண்டும். உங்கள் தாயிடமிருந்து மிகமிகத் தொலைவில் வந்துவிட்டதாக நீங்கள் முழுமையாக உணர்வீர்கள்; ஆனால் அப்போது உளவியல் தாய்களை நீங்கள் உருவாக்கிக் கொள்கிறீர்கள். நீங்கள்

உங்கள் தந்தையிடமிருந்து வெகுதூரம் வந்துவிட்டிருக்கலாம்; ஆனால் அப்போது நீங்கள் சொர்க்கத்தில் தந்தை உருவத்தைப் படைத்துக் கொள்கிறீர்கள். அனைத்துலகையும் ஆள்கின்ற கடவுள்- முழுமுதல் இறையாண்மை! அவரைத் தந்தை என்று அழைக்கிறீர்கள். மீண்டும் நீங்கள் பிறரைச் சார்ந்து வாழ முயல்கின்றீர்கள்-உங்கள் சுதந்திரத்தைக் கண்டு உங்களுக்கு அச்சம் வந்துவிட்டதுபோல- இவையனைத்தும் வேர்கள்; இந்த வேர்கள் அனைத்தும் வெட்டப்பட வேண்டியவை.

இயேசு ஓரிடத்தில் கூறுகிறார்... நான் சந்தேகப்படுகிறேன். இந்தச் சிந்தனைகளை அவர் புத்த ஆதாரங்களிலிருந்துதான் பெற்றிருக்கவேண்டும், ஏனென்றால்/ இயேசு புத்தருக்கு ஐந்நூறு ஆண்டுகள் பின்னர்தான் வந்தார். புத்த மனப்பான்மைகள் பரவலாக மத்தியக் கிழக்கில் எல்லாம் பரவியிருந்தன. அவை ஆசியாவின் மத்தியப் பகுதிக்குள்ளும் ஊடுருவியிருந்தன; அவை எகிப்து நாட்டிலும் ஆழமாக நுழைந்து விட்டன. இயேசு எகிப்தில் வளர்க்கப்பட்டவர். அவர் அறிந்திருக்க வேண்டும். அவர் மீண்டும் எருசலேம் சென்று போதிப்பதற்கு முன்பு அவர் இந்தியாவிற்கு வந்திருப்பதற்கான ஒவ்வொரு சாத்தியக் கூறும் உள்ளது. நாளந்தாவில் உள்ள புத்த பல்கலைக் கழகத்திற்கு அவர் வருகை தந்துள்ளார் என்பதற்கான ஆதாரங்கள் உள்ளன. சிரமணா பாதைபற்றி அவர் அறிந்திருக்க வேண்டும். அவர் கூறுகின்ற போதனைகளில் சில விஷயங்கள் யூதக் கொள்கைகளின் பரம்பரை ஆதாரங்களில் காணப்படவில்லை. உதாரணமாக அவர் கூறுகிறார்: 'உங்கள் தந்தையையும் தாயையும் நீங்கள் வெறுக்காத வரைக்கும் நீங்கள் என் சீடர்கள் ஆக முடியாது'. கிறிஸ்துவர்கள் எப்போதும் தர்மசங்கடப் படுவார்கள் இதைக் கூறும்போது. என்ன விதமான போதனை இது? 'உங்கள் தந்தையையும் தாயையும்

வெறுக்கும் வரை'.. நீங்கள் சொல்கிறீர்கள் இயேசு என்றால் அன்பு, உலகத்திற்கு அவர் அன்பைப் போதிக்க வந்தார் என்று? நீங்கள் சொல்கிறீர்கள் கடவுள் அன்பாயிருக்கிறார் என்று; இந்தப் போதனை மிகவும் வெறுப்பு நிறைந்ததாகத் தோன்றுகிறது- 'உங்கள் தாயையும் தந்தையையும் வெறுங்கள்'. அனைத்து மகத்தான ஆசான்களும் கூறியுள்ளனர் 'உங்கள் தந்தையையும் தாயையும் மரியாதை செய்க" என்று தானே! இதென்ன முட்டாள் தனம்-இயேசு வெறுக்கச் சொல்கிறார்! அவர் அதை வேறு ஆதாரங்களிலிருந்து கேட்டிருக்க வேண்டும்.

அந்த ஆதாரங்கள் புத்த ஆதாரங்களாகத்தான் இருக்க முடியும். ஏனென்றால் புத்தர் கூறுகிறார்.

"பெற்றோரைவிட்டுச் செல்வோர்
வீட்டை விட்டுச் செல்வோர்..."

அப்படியே பொருள் கொள்ளாதீர்கள்; இயேசுவையும் அப்படியே பொருள் கொள்ளாதீர்கள்; அவர் உங்களைத் தாய் தந்தையரை வெறுக்கச் சொல்லவில்லை. அவர் சொல்கிறார். தாயிடமிருந்தும், தந்தையிடமிருந்தும் உங்களை நீங்களே முழுமையாகத் துண்டித்துக் கொள்ளுங்கள். உத்தரவாதத்திலிருந்து உங்களை நீங்களே துண்டித்துக் கொள்ளுங்கள். உத்தரவாதமற்றவராக ஆகுங்கள். எல்லாச் சார்பு நிலைகளிலிருந்துப் உங்களைத் துண்டித்துக் கொள்ளுங்கள். சுதந்திரம் ஆகுங்கள். தனி மனிதர் ஆகுங்கள். அதைத்தான் அவர் சொல்கிறார்.

அவர் கரடுமுரடான மொழியைப் பயன்படுத்துகிறார். புத்தர் மிகவும் நாகரிகமான மொழியைப் பயன்படுத்துகிறார். இயேசு மிகப் பெரிய கல்வி பெற்றவரல்லர்; அவர் ஒரு கரடுமுரடான மனிதர், ஒரு தச்சரின் மகன். யூதப் பாரம்பரியம் மிகவும் கரடுமுரடானது. தீர்க்கதரிசிகள் நெருப்பு மொழியில் பேசுகிறார்கள்; அவர்களது மொழி

சமயத்தை விட அரசியல் சார்புடையதாக இருக்கிறது. புத்தர் ஓர் அரசரின் மகன்; -மிக நன்றாகக் கல்வி கற்றவர், மிக்க பண்பாடுள்ளவர். அவர்களின் சொல்லமைப்புகள் வித்தியாசமாக இருக்கின்றன, ஏனென்றால் அவர்கள் வித்தியாசமான நபர்கள். ஆனால் பொருள் ஒன்றுதான்.

ஒருவன் தன் பெற்றோரை விட்டுவிட வேண்டும்; ஒருவன் வீட்டை விட்டு வெளியேற வேண்டும், ஒருவன் கடந்த காலத்தை விட்டு வெளியேற வேண்டும். ஒருவன் முழுமையான சுதந்திரம் உடையவனாக மாறவேண்டும். தனித்திருந்து... தனித்திருத்தலில் நடு நடுங்கி-ஆனால் ஒருவன் தனித்திருக்க வேண்டும்.

ஒருவன் தனக்குத்தானே முழுமையான பொறுப் புணர்ச்சி உள்ளவனாக மாறவேண்டும். அப்புறம் தான் நீங்கள் மனம் பற்றிப் புரிந்துகொள்ள முடியும். ஏனென் றால் பிறரைச் சார்ந்து கொண்டே போனால், உங்கள் சொந்தச் சார்புநிலையே, நீங்கள் யார் என்பதைப் புரிந்துகொள்ள உங்களை அனுமதிக்காது.

எல்லா ஆதாரங்களையும் துண்டித்து விடுங்கள், எல்லா உறவுகளிலிருந்தும் உங்களைத் துண்டித்துக் கொண்டு விடுங்கள்.

நீங்கள் தனித்திருக்கிறீர்கள். இப்போது உங்களுக்கு ஒருவரும் இல்லை.

உங்கள் ஆத்மாவிற்குள் நீங்களே பார்த்துக்கொள்ள வேண்டும்.

உங்களை நீங்களே சந்தித்து வாதாட வேண்டும்; உங்களை நீங்களே சந்தித்து வாதாட அதுதான் ஒரே வழி. பிறகு உங்கள் வாழ்வின் அடி ஆதாரத்தை அடையுங்கள். உங்கள் மனத்தைப் புரிந்துகொள்வதன் மூலம்...

பொருளல்லாததை உணர்ந்து கொள்ளுங்கள்.

பாருங்கள், புத்தர் 'ஆன்மிகத்தை உணர்ந்து கொள்ளுங் கள்' என்று கூறவில்லை. அவர் கூறுகிறார் 'பொருளல்லாத வற்றை உணர்ந்துகொள்ளுங்கள்' என்று. இது தான் வேறுபாடு. அவரது அணுகுமுறை அவ்வளவு பகுத்தறி வுடையது. உங்களால் சந்துபொந்து காணக் கூடியவற்றை அவர் வலியுறுத்திக் கூறமாட்டார். அவர் 'ஆன்மிகம்' என்று கூறமாட்டார்; அவர் வெறுமனே சொல்கிறார் "பொரு ளல்லாததை" என்று.

பௌதிகவாதியைக் கேளுங்கள், அவர் புத்தரின் மொழியைப் புரிந்து கொள்வார். அவர் கூறுகிறார் 'அணுவைப் பகுப்பாய்வு செய்ததன் மூலம் மின்னணுக் களுக்கு வந்தோம்' மின்னணுக்கள் வெறும் மின் பகுதிகள், பெரும்பாலும் பொருளல்லாதது; பொருள் மறைந்து விடுகிறது; சக்தி மட்டும் தான் உள்ளது. அதை நீங்கள் பொருள் என்று அழைக்க முடியாது; நீங்கள் 'பொருளல்லா தது' என்று தான் அழைக்கலாம். மின்னணுவைப் பகுப் பாய்வு செய்வதன் மூலம் அவர்கள் ஒரு- பெரும்பாலும் வெற்றுநிலைக்கு வந்துவிட்டார்கள்-அதாவது பொருளற்ற வெற்றுநிலை, பௌதிகவாதி புத்தரின் சொற்களைப் புரிந்து கொள்வார். மனத்தைப் பகுப்பாய்வு செய்ததன் மூலம் புத்தர் ஏறத்தாழ இதே முடிவுக்கு வந்தார். மனதைப் பகுப்பாய்வு செய்தபோது எண்ணமே அற்ற ஒரு நிலைக்கு வந்துவிட்டார்; அதாவது வெறுமை நிலை. அவர் அதைப் 'பொருளல்லாதது' என்று அழைக்கிறார். எண்ணம் என்பது உள்-பொருள்; நீங்கள் எண்ணத்தையும் விலக்கி விடும் போது வெளி தங்குகிறது; அதுதான் பொருளல்லாதது.

நவீன பௌதிகத்திற்கும் இதே நிலை ஏற்பட்டுள்ளது. அவர்கள் வெளி உலகத்தில் உள்ளே பொருளைப் பகுப் பாய்வு செய்து 'பொருளல்லாததற்கு' வந்து சேர்ந்தனர்.

புத்தர் தன் உள்நோக்கிய பயணத்தில் பொருளல்லாததை அடைந்தார். அறிவியல் வெளியுலகத்தில் வெளிப்பயணத்தில் 'பொருளல்லாததை' அடைந்துள்ளது. இருவரும் 'பொருளல்லாததைத்' தான் அடைந்துள்ளனர். அறிவியலாளர்களும் அதனை ஆன்மிகம் என்று அழைக்க மாட்டார்கள். அறிவியலாளர் இந்த அளவு மட்டும் சொல்வார்- எது பொருளாக இருந்ததோ அது இப்போது இல்லை. அங்கே என்ன இருக்கிறது என்று அவர் கூறமாட்டார். இந்த அளவு சொல்லமுடியும்-நாம் பொருள் என்று எதை வழக்கமாகச் சொல்வோமோ அது இப்போது இங்கு இல்லை. நாம் கூறுவது அனைத்தும் ஒரு மறுப்பேயாகும்!

புத்தர் கூறுகிறார்:

**பொருளல்லாததை உணர்ந்து கொள்வோர்**
**—ஆகியோர் சிரமணர் என்றழைக்கப் படுவோர்.**

சிரமணர்களின் வகைகள் இப்போது!

**தர்மத்தின் கட்டளைகளைக் கடைப்பிடிப்போர்,**
**தங்கள் நடத்தையில் அப்பழுக்கற்ற தூயோர்,**
**முனிவர் நிலையின் கனிகளை அடைந்திடக்**
**கடுமையாய்த் தமக்குத் தாமே உழைப்போர்,**
**இவர்கள் 'அர்கத்கள்'' எனப்படுவோர்.**

'மனம்-அற்ற-நிலை'யின் மிக உயர்ந்த நிலையே 'அர்கதி' ஆகும். 'அர்கதி' என்றால் 'தன் பகைவர்களை வென்றவர்' என்று பொருள். அரி-என்றால் பகைவன். அர்கத் என்றால் 'பகைவனை வென்றவன்' என்று பொருள். யார் பகைவன்? அவர்கள் உங்களுக்கு வெளியே இல்லை. ஆசைகள், கவனமாற்றங்கள், விருப்புகள், வெறுப்புகள், பொறாமை, சொந்தவுணர்ச்சி, கோபம், பாலுறவு- இவையே பகைவர்கள்.

ஒருவகையில் உங்கள் மனம், உங்கள் பகைவன் மூலப் பகைவன்; மனதை வெற்றி கொண்டவன் 'அர்கத்' என்று அழைக்கப்படுவான். இதுதான் மிக உயர்ந்த நிலை. அனைத்து மேகங்களுக்கும் மேலே வந்தவன். எப்போதாவது சில சமயம், விமானத்தில் செல்லும்போது, மேகங்களுக்கும் மேலே விமானம் செல்வதைக் கவனித்துள்ளீர்களா? எல்லா மேகங்களும் உங்களுக்குச் சற்றுக்கீழே உள்ளன. நீங்கள் தூய நீலவானில் பறந்து செல்கிறீர்கள். அதுதான் நிலை; அர்கத்தின் உள்ளார்ந்த நிலை அது. ஒருவன், மனதை ஊடுருவிக் கொண்டே செல்கிறான். மெல்ல மெல்ல ஆசை மேகங்கள் அங்கே காணப்படவில்லை. அவை மிகவும் தொலைவில் விடப்பட்டுவிட்டன. நீங்கள் உயரே, உயரே தூய விண்வெளியில், பொருளல்லாத விண்வெளியில் சீறிக்கொண்டே செல்கின்றீர்கள். இதுதான் அர்கத்தின் நிலை.

புத்தரின் சொல்லியலில் அதுதான் மிக உயர்ந்த நிலை. கிறிஸ்தவர்கள் 'கிறிஸ்து' என்று அழைப்பதைத் தான் புத்தர் 'அர்கத்' என்று அழைக்கிறார். சமணர்கள் அரிஹந்தா என அழைப்பதும் இதே பொருளில்தான்! இந்துக்கள் அவதாரம்-இராமர்-கிருஷ்ணர்-என்று அழைப்பதும் இதே நிலைதான்-அர்கத் நிலை அதுதான்!

ஆனால் புத்தர் மிகவும் விஞ்ஞானபூர்வமானவர். அதிலும் கூட, அவர் அதை அவதாரம் என்று அழைக்கவில்லை. ஏனென்றால் அவதாரம் என்பது 'கடவுள் உலகிற்கு இறங்கி வருவது'. நீங்கள் கடவுளை நம்ப வேண்டும். அவர் அப்படிச் சொல்லவில்லை... எந்த வழியிலும் அப்படி ஒரு சொல்லைப் பயன்படுத்தவில்லை... முன்னனுமானம் இல்லாத சொற்களை-எளிமையான சொற்களை மட்டுமே- அவர் பயன்படுத்துகிறார்.

அடுத்து வருவது அனாகமின்.

அர்கத் மிக உயர்ந்த நிலை; அதற்கடுத்த நிலை அனாக மின். அனாகமின் என்றால் 'மீண்டும் திரும்ப வாரான்.' எந்த ஒருவன்....

தனது வாழ்க்கை முடிவில்
'திரும்பவாரானின் ஆவி ஏறும் சொர்க்கத்தில்...
அடைவான் அங்கே 'அர்கத் தன்மை'.

அர்கத் நிலைக்குச் சற்றுக் கீழே அடுத்த நிலை இது.

அனாகமின்... சொல்லின் பொருள் 'மீண்டும் திரும்ப வாரான்'. போனவன்; போனவன்தான்; போய்விட்டான்; எப்போதைக்கும் போயே போய்விட்டான். திரும்பி வரவே மாட்டான்; அர்கத் நிலைக்கு மிகவும் நெருக்கமாக உள்ளவன்; அவன் மேகங்களைக் கடந்து விட்டான்; அந்த எல்லைக் கோட்டில் நிற்கிறான்; அர்கத் நிலை என்னும் முற்றத்தில் நின்று கொண்டிருக்கிறான், ஒருவேளை சிறு பற்றுதல் அவனுக்குத் தங்கியிருக்கலாம். அதைப் பற்றுதல் அவனது உடலில் ஒட்டிக் கொண்டிருக்கலாம். அதனால் அவன் இறக்கும்போது அந்தப் பற்றும் மறைந்துவிடுகிறது. அவன் திரும்பவும் வரவே மாட்டான்.

அடுத்து வருவது ஸ்கிருதாகாமின்.

ஸ்கிருதாகாமின் என்றால் 'திரும்ப வருவோன்' என்று பொருள்.

மரணத்தின் பின்னர்த் 'திரும்ப வருவோன்'
சொர்க்கத்தில் ஏறுகிறான் வருகிறான்,
பூமிக்கு ஒருமுறை மீண்டும்!

ஒரே தடவை... அவனிடம் சில பற்றுதல்கள் இன்னும் உள்ளன; மிகக் குறைவாக- ஆனால் சில வேர்கள் அவனுக்குள் உள்ளன. அவை அவனை மீண்டும் இன்னொரு கருப்பைக்கு இழுத்துவிடக் கூடும். அர்கத் முற்றிலும் விருப்பற்றவன்; ஸ்கிருதாகாமினிடம் மிகப்பெரிய விருப்பு

கள் எவையும் இல்லை. ஆனால் நுட்பமான விருப்புகள் இன்னும் இருக்கின்றன.

பெரிய விருப்புகள் என்னென்ன? பணவிருப்பு, அதிகார விருப்பு, கௌரவ விருப்பு-இவையெல்லாம் பெரிய விருப்புகள், சுதந்திரமாக இருக்க விருப்பு, அமைதியாக இருக்க விருப்பு, அர்கத் நிலையை அடையும் விருப்பு- இவையெல்லாம் நுட்பமான விருப்புகள்; ஆயினும் அவை விருப்புகளே; அவன் மீண்டும் ஒரே ஒரு முறை திரும்பிவர வேண்டியிருக்கும்.

அடுத்து வருவது ஸ்ரோதபன்னா.

ஸ்ரோதபன்னா என்னும் சொல்லின் பொருள் 'ஓடையில் நுழைந்தவன்' என்பதாகும். ஸ்ரோத- என்றால் ஓடை, அபன்னா என்றால் 'நுழைந்தவன்' 'ஸ்ரோதபன்னா' என்றால் 'ஓடையில் நுழைந்தவன்' என்று பொருள்.

அவன், பாதையில் இப்போதுதான் தன் பயணத்தைத் தொடங்கியுள்ளான். அவன் உலகியலைச் சார்ந்தவன் அல்லன்; அவன் ஒரு துறவியாகி விட்டான். அவன் ஆற்றில் புகுந்து விட்டான்; கடல் மிகவும் தொலைவில் உள்ளது. ஆனால் நதியில் நுழைந்து விட்டான். அவன் தொடங்கி விட்டான்.

பயணம் தொடங்கி விட்டபோது, அது நிச்சயம் முடியும். எவ்வளவு தொலைவாய் இருந்தாலும், அது தொலைவே இல்லை. உண்மையான பிரச்சினை யாருக்கு என்றால், இதுவரை ஓடையில் நுழையவே நுழையாதவர் களுக்குத்தான். அவர்கள் கரையில் நின்று கொண்டிருக் கிறார்கள். இவர்கள் உலகியல் மக்கள், கரையில் நின்று கொண்டிருக்கின்றனர். துறவி- பிக்கு- நதியில் நுழைந்த வன்- நன்றாக அறிவான் கடல் மிகத் தொலைவில் உள்ளது

என்று- ஆனால் பாதிப்பயணம் முடிந்தது- நுழைந்தத னாலேயே!

அடுத்து வருவது ஸ்ரோதபன்னா.

ஸ்ரோதபன்னா இறக்கிறான் ஏழுதடவை!
மேலும் பிறக்கிறான் ஏழுதடவை
அர்கத் நிலையை அவன் இறுதியாய் அடையும்போது.

இவை அனைத்தும் உருவகங்கள் மட்டுமே! வார்த்தைக்கு வார்த்தை அர்த்தம் காணாதீர்கள்; இவையனைத்தும் உருவகங்கள். ஏழு என்பது சரியாக ஏழு அல்ல; அதன் பொருள் பலதடவை அவன் இறப்பான், பல தடவை அவன் பிறப்பான்; ஆனால் அவன் நோக்கம் கடலை நோக்கி திரும்பிவிட்டது. அவன் கங்கையில் குதித்துவிட்டான்; பயணம் தொடங்கிவிட்டது.

ஆசைகளைத் துண்டித்தல் என்பதன் பொருள்
அங்கங்களைத் துண்டித்தது போல...
அவற்றை ஒருபோதும் மீண்டும் பயன்படுத்த முடியாது.

புத்தர் சொன்னார், ஆசைகளை விடுதல் என்பதன் மூலம் சொல்ல விரும்புவது இதைத்தான். 'யாரோ உங்கள் கையை வெட்டிவிடுவது போல'; அப்புறம் அதை நீங்கள் பயன்படுத்த முடியாது. அல்லது யாரோ உங்கள் கண்களை வெளியே எடுத்து விடுகிறார்கள்; அவற்றால் நீங்கள் பார்க்க முடியாது அல்லவா? ஓடையில் நுழைந்திட ஆயத்தமாய் இருக்கின்ற மனிதன், தானே சொந்தமாகத் தன் விருப்பத்தின் பேரிலேயே தன் ஆசைகளை விட்டு விடுகிறான். அவன் சொல்கிறான், 'நான் அவற்றை மீண்டும் பயன்படுத்தமாட்டேன்' என்று!

நினைவு கொள்ளுங்கள், இது 'அடக்கிவைத்தல்' அல்ல பிராய்டு சொல்கின்ற பொருளில்; அவன் அதை அடக்கி வைக்கவில்லை; அவன் வெறுமனே அதிலிருந்து சக்தியைத்

திரும்பப் பெறுகிறான்; பாலுணர்ச்சி இருக்கிறது. அதை அவன் அடக்கி வைக்கவில்லை; அவன் அதோடு இனி மேல் ஒத்துழைக்கவில்லை. அவ்வளவுதான்.

இந்த வேறுபாடு மகத்தானது. 'பால் உணர்ச்சி' இருக்கும்போது அதை நீங்கள் அடக்கி வைத்தால், நீங்கள் அதனுடன் போராடுகிறீர்கள். நீங்கள் அதற்கும் மேலே செல்லவில்லை; நீங்கள் அதனோடு தங்கிவிடுகிறீர்கள்; நீங்கள் அதனோடு சண்டை போட்டால் அதோடு ஒட்டிக் கொண்டே தங்கி விடுகிறீர்கள். நீங்கள் சண்டை போட்டால் அதற்குப் பயந்து கொண்டு அப்படியே தங்கிப் போய்விடுகிறீர்கள்.

புத்தர் கூறுகிறார் ஒருவன் அதனுடன் ஒத்துழைக்காமல் சும்மா இருக்கிறான். ஒரு விருப்பு-ஒரு பாலுணர்ச்சி விருப்பு எழுகிறது- நீங்கள் என்ன செய்வீர்கள்? புத்தர் கூறுகிறார். நீங்கள் சும்மா கவனியுங்கள். அது அங்கே இருக்கட்டும். அது வரும். அது போகும் அது உங்கள் மனதில் மினுக்கல்; உங்களைக் கவர நினைக்கும். முழுக் கவனத்தோடு தங்கியிருங்கள். எந்த நனவிலி நிலையையும் அனுமதிக்காதீர்கள்; இல்லையென்றால் அது உங்களுக்குள் நுழைந்துவிடும். நீங்கள் சும்மா கவனியுங்கள். கூறுகிறார் புத்தர். 'ஒரு மனிதன் கவனத்தோடு மட்டும் இருந்தால் போதும். அப்போது அந்த மனிதன் எல்லா விளக்குகளும் எரிகின்ற ஒரு வீட்டைப் போன்று விளங்குகிறான். விளக்குகள் எல்லாம் எரிகின்றன; திருடர்கள் வீட்டில் நுழைய அஞ்சுகின்றனர். விளக்குகள் எரியாதபோது, வீடு இருட்டாய் இருக்கும்போது, திருடர்கள் மிக எளிதில் நுழைந்து விடுகின்றனர். கவனத்தோடு உண்மையாகவே உள்ள மனிதன் எத்தகையவன்? அவன் ஒரு வீட்டைப் போன்றவன்; அந்த வீட்டின் வாசலில் வாயில் காப்போன் இருக்கிறான்; முழுவதும் விழிப்போடு; அனைத்து விளக்குகளும் எரிகின்றன. திருடர்களுக்கு நுழைவது

மிகவும் கடினம்; அவர்கள் தைரியத்தை வரவழைத்துக் கொள்ளமுடியாது. அதே நிகழ்ச்சி நீங்கள் விழிப்புணர் வோடு இருக்கும்போது நிகழ்கிறது. உங்களுக்கு ஒரு காவலன் உள்ளான். நீங்கள் விழிப்புணர்வோடு உள்ளபோது உங்கள் வீட்டில் உள்ள எல்லா விளக்குகளும் எரிகின்றன. ஆசைகள் உங்களுக்குள் நுழைய முடியாது; அவை வரலாம்; அவை அங்குமிங்கும் திரியலாம். அவை உங்களைத் தூண்ட முயலலாம்; ஆனால் சும்மா கவனித்துக் கொண்டே இருந்தால், தாமே தம் விருப்பத் துடனேயே மறைந்து போய்விடும்; ஏனெனில் அவை உங்கள் ஒத்துழைப்புடன் தான் வாழமுடியும். அவற்றோடு சண்டை செய்ய வேண்டாம். சரணடைய வேண்டாம். சும்மா விழிப்புணர்வுவோடு அசையாமல் அப்படியே தங்கியிருங்கள். பிறகு மெல்ல மெல்ல, துண்டிக்கப்பட்ட அங்கங்களைப் போல அவை விடுபட்டுப் போகும்.

நீங்கள் சண்டை போட்டால், இன்னுமொரு பிரச்சி னையை உருவாக்குகிறீர்கள். சரணடையும் மனிதனாக இருப்பதற்குப் பதிலாக நீங்கள் ஒரு அடக்கி வைக்கும் மனிதராக ஆகிவிடுகிறீர்கள். உங்கள் பிரச்சினை தீர்க்கப் படவில்லை; பெயர் மாற்றப்பட்டுள்ளது.

நான் கேட்டிருக்கிறேன்.

ஒரு டாக்டர், குடிகாரன் ஒருவனுக்குச் சிகிச்சையளித் தார்.

"இந்த நோயாளி பச்சைப் பாம்புகளை மீண்டும் பார்த்தால் இந்த மருந்தைக் கொடுக்கவும்" என்று நர்ஸிடம் கூறினார்.

பிறகு டாக்டர் திரும்பி வந்தபோது நோயாளி, குடிவெறி யில் உளறிக் கொண்டேயிருந்தான். மருந்து அவனுக்குக் கொடுக்கப்படவில்லை. "மீண்டும் ஒருமுறை பச்சைப்

பாம்புகளை அவன் பார்த்தால் மருந்தைக் கொடுக்க வேண்டும் என்று நான் சொல்லவில்லையா'' என்று கோபத்தோடு டாக்டர் கேட்டார்.

'ஆனால் அவன் பச்சைப் பாம்புகளைப் பார்க்க வில்லை' நர்ஸ் பதிலளித்தாள்.

'ஓ?'

'இல்லை. அவன் பழுப்புத் தவளைகளைப் பார்த்துக் கொண்டிருக்கிறான்!'

இப்போது நீங்கள் பச்சைப் பாம்புகளைப் பார்க்கிறீர் களா பழுப்புத் தவளைகளைப் பார்க்கிறீர்களா என்பதல்ல பிரச்சினை- நீங்கள் குடித்துள்ளீர்கள். அதுதான் பிரச்னை. ஆசைகளோடு ஒத்துழைக்கும் மக்களும் உண்டு, சண்டை யிடும் மக்களும் உண்டு; இருவருமே ஆசைகளோடு தான் தங்கியுள்ளனர். ஒருவர் நட்பு முறையில் உள்ளார்; ஒருவர் பகைமையோடு உள்ளார். ஆனால் இருவருமே ஆசை களோடுதான் தங்கியுள்ளனர். இரண்டுமே ஒத்துழைப்பின் நுட்பமான வழிகள்தாம். உறவுமுறையை ஒருவன் விட்டுவிட வேண்டும்; வெறும் பார்வையாளனாக, கவனிப் பாளனாக மாறவேண்டும்.

ஒரு தடவை நீங்கள் கவனிக்க ஆரம்பித்துவிட்டால் நீங்கள் ஆசைகளின் அடுக்குகளுக்கு மேல் அடுக்குகளை அறியத் தொடங்கிவிடுவீர்கள். ஏராளமான அடுக்குகள் உள்ளன. பெரிய ஆசைகள் விடுபட்டபின், அதிகப்படி யான நுட்ப அடுக்குகள் கண்டுபிடிக்கப்படும்.

நம் முழுவாழ்க்கையும் வெங்காயம் போன்றது; நீங்கள் உரியுங்கள் அதை; இன்னோர் அடுக்கு, அதை உரியுங்கள், இன்னோர் அடுக்கு... புதிதாக இளசாக- உயிர்த்துடிப்புள்ள தாக. ஆனால் நீங்கள் தொடர்ந்து உரித்துக்கொண்டே இருந்தால், ஒரு கணம் வரும். அப்போது உங்கள் கைகளில்

வெற்றிடம் தான் இருக்கும். வெங்காயம் இருக்கவே இருக்காது. அதனைத்தான் புத்தர் 'நிர்வாணா' என்கிறார். வெறுமை நிலை. எல்லா அடுக்குகளும் போய்விட்டன.

நான் கேட்டிருக்கிறேன்.

பாப் குழுவில் கிடார் வாசிப்பவன் ஒருவர் கார் விபத்தில் காயமடைந்தான். தலையில் பயங்கரக் காயம். காயம் எந்த அளவுக்குக் கண்ணுக்குத் தென்படுகிறதோ அந்த அளவுக்கு அவரது நீண்ட முடியை வெட்டித் தள்ளுங்கள் என்று டாக்டர், நர்ஸிடம் கட்டளையிட்டார். இது பற்றி விளக்கமாகத் தெரிந்து கொண்ட நர்ஸ் பெரிய கத்திரிக்கோலைக் கொண்டு வேலையைத் தொடங்கினாள்.

பத்து நிமிடங்களுக்குப்பின் அவள், அந்த இளைஞனிடம் "நீங்கள் வடக்கு லங்காஸ்டர் ஸ்கூலுக்குச் சிறிய வயதில் சென்றிருந்தீர்கள் இல்லையா? "ஆமாம் சென்றிருந்தேன்" பதிலளித்தான் இளைஞன். "அங்கே இருந்தீர்களா" என்றான்; "இல்லை" என்றாள் நர்ஸ்; "நான் லண்டனைச் சேர்ந்தவள்" என்றாள் அவள். "நல்லது இந்த உலகில் நான் படித்த பள்ளிக்கூடத்தைச் சரியாகச் சொன்னீர்கள்?" இளைஞன் கேட்டான். "நான் தங்கள் குல்லாய் வரை வந்துவிட்டேன்" என்றாள் அவள், தன் முடிவெட்டும் வேலையைத் தொடர்ந்து கொண்டே. அடுக்குகள் மேல் அடுக்குகள்... எவ்வளவு ஆழமாக வெட்டுகிறீர்களோ அவ்வளவு உங்களால் கண்டுபிடிக்க முடியும். பல விஷயங்கள் நீண்ட காலம் இல்லாதவை, பல ஆண்டுகள் காணாதவற்றைக் காணலாம். உங்கள் குல்லாயை நீங்கள் கண்டுபிடிக்கலாம். மனதிற்குள் எவ்வளவு ஆழமாக நீங்கள் செல்கிறீர்களோ, அவ்வளவு ஆழமாக உங்கள் குழந்தைப் பருவத்திற்குள் செல்லலாம். பல விஷயங்கள் மறந்து விட்டன. காணாமற் போய் விட்டன- மீண்டும். அவை

அங்கே! ஏனென்றால் எதுவும் எப்போதும் இடுப்பதில்லை. ஒவ்வொன்றும் குவிந்துகொண்டே செல்கிறது.

நீங்கள் எதையுமே கண்டுபிடிக்க முடியாத கட்டத்திற்கு வரும்போது, உங்கள் இருத்தலிடம் நீங்கள் வந்துவிட்டீர்கள். அடுக்குப் போன்றதன்று; இருத்தல் ஒருவெற்றுவெளி; தூயவெளி; இருத்தல் என்பது சும்மா இருத்தல். ஒரு வெற்று நிலைதான்.

புத்தர் இருத்தலை *(அல்+திணை: அஃறிணை அல்லாத திணை என்பது போல் அல் இருத்தல் வந்தது) 'அல்-இருத்தல்' என்கின்றார். அவர் அதை அனட்டா என்று அழைக்கிறார். புத்தர் கூறுகிறார். நீங்கள் உங்களையே கண்டுகொண்டால் அங்கு ஏதோ ஓர் அடுக்கு விடுபட்டிருக்கவேண்டும். நீங்கள் உங்களையே காணமுடியாத கட்டத்திற்கு நீங்கள் வந்துவிட்டால்- நீங்கள் இருக்கிறீர்கள். ஆனால் உங்களைக் கண்டுபிடிக்க முடியவில்லை- அப்படியானால் உங்கள் காரியம் சித்தி ஆகிவிட்டது என்று பொருள். இது உங்கள் முயற்சியால் மட்டுமே முடியும்.

இது அவரது வரிச்சட்டம். நாளை முதல் அவரது முறையியல் நோக்கி நாம் நகரத் தொடங்குவோம். தியானத்தின் வழிகள், உள்ளார்ந்த கட்டுப்பாட்டின் வழிகள், 'தானை'க் கடந்து செல்லும் வழிகள், எல்லாவற்றுக்கும் அப்பால் கடந்து செல்வது எப்படி என்னும் வழிகள். அதனால் தான் இந்தத் தொடர் சொற்பொழிவுக்கு நான் கடந்து செல்லலின் கட்டுப்பாடு என்று பெயர் கொடுத்துள்ளேன். ஆனால் இது அவரது வரிச்சட்டம்.

சாதாரணமாக நீங்கள் கரைமீது நின்று கொண்டிருக்கிறீர்கள். அப்பொழுது ஒரு நம்பிக்கையற்ற நிலையில் நீங்கள் இருப்பதாக உங்களால் நம்ப முடியாது. நீங்கள் ஒரு ஸ்ரோதபன்னாவாக ஆகிவிட்டால்- அதாவது நீங்கள் ஓடையில் நுழைந்தவன் ஆகிவிட்டால், அதைத்தான்

'துறவு' என்று அழைக்கிறேன். துறவின் மூலம் நீங்கள் ஸ்ரோதபன்னா ஆகிவிட்டால், அதைத்தான் 'துறவு' என்று அழைக்கிறேன். துறவின் மூலம் நீங்கள் ஸ்ரோதபன்னா ஆகிவிட்டீர்கள்- நீங்கள் ஓடையில் நுழைகிறீர்கள். நீங்கள் தைரியம் கொள்கிறீர்கள், நீங்கள் குதித்து விடுகிறீர்கள். கரையிலிருந்து ஓடைக்கு ஒரு மொத்தத் தாண்டுதல் அது. அவை மிகவும் நெருக்கமானவை; ஆனால் முற்றிலும் வேறுபட்டவை. கரை ஒருபோதும் எங்கும் செல்வதில்லை; 'அதற்கு வளர்ச்சி இல்லை; அது ஒருபோதும் நகர்வதில்லை. அது நிலையானது, தேங்கிப்போனது, அழுகியது, இறந்தது. ஆனால் அதன் பக்கத்திலேயே ஓடிக்கொண்டிருக்கும் ஓடை ஏதோ ஓரிடத்திற்குச் சென்று கொண்டிருக்கிறது. உங்கள் வாழ்க்கை எங்காவது செல்லவில்லை என்றால் நீங்கள் கரைமீது நின்றுகொண்டிருக்கிறீர்கள். ஓடையில் நுழையுங்கள். தொடங்குங்கள் பயணத்தை; உங்கள் வாழ்க்கை மாறத் தொடங்குகிறது. உருமாறத் தொடங்குகிறது. புறமாற்றம் தொடங்குகிறது, அகமாற்றம் நிகழ்கிறது; ஒவ்வொரு கணமும் புதிய பார்வைகள் அவற்றின் கதவுகளை உங்களுக்குத் திறக்கின்றன. ஒரு நாள் ஓடை கடலை அடைகிறது. அந்நாள் நீங்கள் அர்கத் ஆகிறீர்கள். நீங்கள் கடலில் கரைகிறீர்கள். முதலில் ஸ்ரோதபன்னா, பிறகு ஸ்கிருதா காமின், அடுத்து அனாகாமின், இறுதியாக அர்கதா. இவையே நிலைகள். இது ஒரு விஞ்ஞானபூர்வமான வரிச்சட்டம். உலகியல் மனதினனாக இருத்தலிலிருந்து ஸ்ரோதபன்னா ஆகிப் பிறகு உங்கள் பயணம் தொடங்கிவிட்டது!

*ஜென் குரு ஒருவரிடம், யாரோ ஒருவர் கேட்டார்: 'இந்த உலகின் மகத்தான அற்புதம் யாது'. குரு பதிலளித்தார்: "நான் என்னுடன் இங்கே தனித்து அமர்ந்து கொண்டிருக்கிறேன்" இந்த உவமையின் பொருள் என்ன?*

இது ஓர் உவமையன்று; இது ஓர் உண்மை; நேரடியாக அதற்குள் பாருங்கள். பொருளைத் தேடத் தேவையில்லை; இது ஒரு ரோஜா மலர்போல- ஓர் எளிய சொற்றொடர். அர்த்தத்தைத் தேடி அலைந்தால் அர்த்தத்தை இழந்து விடுவீர்கள். அர்த்தம் தெளிவாக, இதோ இருக்கிறது. அதைத் தேட வேண்டிய அவசியமே இல்லை. இந்த எளிய உண்மைகளின் அர்த்தத்தைத் தேடத் தொடங்கும் அந்தக் கணத்திலேயே நீங்கள் தத்துவங்களை நெசவு செய்கிறீர்கள், புலன் கடந்த இயலைப் படைக்கின்றீர்கள். பிறகு, மேலும் மேலும் சென்று கொண்டே இருக்கிறீர்கள். ஆம், உண்மை யைத் தாண்டியே வெகுதூரம் சென்று விடுகிறீர்கள்.

இது ஓர் எளிய வாக்கியம். ஜென் ஆசான் சொன்னார்: "நான் என்னுடன் இங்கே தனித்து அமர்ந்து கொண்டிருக்கிறேன்" இது மிகப் பெரிய அற்புதம். தனித்திருத்தல் என்பது மிகப்பெரிய சாதனை. ஒருவர்க்கு எப்போதுமே இன்னொருவர் தேவைப்படுவதாக உணர்கிறார். பிறருக்கான தேவை மகத்தானதாக இருக்கிறது. ஏனென்றால் நமக்குள்ளே ஏதோ ஒரு குறை உள்ளது. நம் இருத்தலில் பொந்துகள் உள்ளன. பிறருடைய இருத்தலின் மூலம் நாம் அந்தப் பொந்துகளை அடைக்கிறோம். அந்தப் பிறர் நம்மை முழுமையாக்குகிறார், இல்லையேல் நாம் அரை குறை.

பிறர் இல்லையென்றால் நாம் யார் என்று நமக்கே தெரியாது. நாம் நம் அடையாளத்தை இழக்கிறோம். பிறர் நமக்குக் கண்ணாடியாகிறார்; நம் முகங்களை அதில் பார்த்துக்கொள்ள முடியும். பிறர் இல்லையென்றால், திடீரென்று நாம், நம்மிடமே தூக்கி எறியப்படுகிறோம். மகத்தான அசௌகரியம், வசதிக்குறைவு எழுகிறது, ஏனெனில், நமக்குத் தெரியாது, நாம் யார் என்று. நாம் தனித்திருக்கும்போது நாம் முற்றிலும் புதிய நட்புடன் உள்ளோம்; மிகவும் தர்மசங்கடமான நட்பு அது. நாம் யாரோடு இருக்கிறோம் என்று நாம் அறியோம்.

பிறருடன், விஷயங்கள் தெளிவாக, வரையறுக்கப் பட்டவையாக உள்ளன. நாம் பெயர் அறிவோம், வடிவம் அறிவோம், மனிதனை அல்லது மனுஷியை நாம் அறிவோம். இந்து, கிறிஸ்தவர், இந்தியர், அமெரிக்கர்- பிறரை வரையறுக்கச் சில வழிகள் உள்ளன. உங்களை வரையறுப்பது எப்படி?

ஆழத்தில்- அடிஆழத்தில்- ஓர் அதள பாதாளம்... வரையறுக்கப்பட முடியாத அதளபாதாளம் உள்ளது; சூன்ய நிலை. நீங்கள் அதனோடு தொடங்குகிறீர்கள். அது அச்சத்தை உருவாக்குகிறது. நீங்கள் திகில் அடைகின்றீர்

கள். பிறரை நோக்கிப் பாய்கிறீர்கள். உங்களிடமிருந்து வெளியே இருக்கப் பிறர் உதவுகிறார்; நீங்கள் வெளியில் தங்கியிருக்கப் பிறர் உதவுகிறார். யாரும் உங்களுடன் இல்லையென்றால் நீங்கள் வெறுமனே வெற்று நிலையில் விடப்படுகிறீர்கள்.

யாரும் தனித்திருக்க விரும்பவில்லை. உலகிலேயே மகத்தான அச்சம் எதுவென்றால் தனித்திருக்க விடப்படுவது தான். மக்கள், தாங்கள் தனித்து விடப்படாமல் இருப்பதற்காக ஆயிரக்கணக்கான விஷயங்களைச் செய்கிறார்கள். அண்டை வீட்டுக்காரர்கள் போல நடிக்கிறீர்கள், அதனால் அவர்களைப் போல் அப்படியே இருக்கிறீர்கள்; நீங்கள் தனித்திருக்க விடப்படவில்லை. நீங்கள் உங்கள் தனிநபர்த் தன்மையை இழக்கிறீர்கள், உங்கள் தனித்தன்மையை இழக்கிறீர்கள், நீங்கள் வெறும் நடிப்பவர்களாக மாறுகிறீர்கள், நீங்கள் நடிக்கவில்லையென்றால் நீங்கள் தனித்து விடப்படுவீர்கள்.

நீங்கள் கூட்டத்தின் ஒரு பகுதியாக ஆகிறீர்கள். மாதாகோயிலின் ஒரு பகுதியாக, ஒரு சங்கத்தின் பகுதியாக ஆகிறீர்கள், எப்படியோ ஒரு கூட்டத்தில் உங்களை இணைத்துக் கொள்ள விரும்புகிறீர்கள், உங்களுக்குச் சௌகரியமான கூட்டத்தில் இணைகிறீர்கள். அதனால் நீங்கள் தனித்திருப்பதில்லை, பற்பல மக்கள் உங்களைப் போல் இருக்கிறார்கள்- மிகப்பல முகம்மதியர்கள் உங்களைப் போல், மிகப்பல இந்துக்கள் உங்களைப் போல், மிகப்பல கிறிஸ்துவர்கள், லட்சக்கணக்கானவர்கள்... நீங்கள் தனித்திருக்கவில்லை.

தனித்திருப்பது என்பது மகத்தான அற்புதம். அதாவது இப்போது நீங்கள் எந்த மாதா கோயிலுக்கும் சொந்தமில்லை. நீங்கள் எந்தச் சங்கத்திற்கும் சொந்தமில்லை, நீங்கள் எந்தக் கடவுள்கொள்கைக்கும் சொந்தமில்லை. நீங்கள் எந்தக் கருத்தியலுக்கும் சொந்தமில்லை- சமதர்மம்,

பொதுவுடைமை, பாசிசம், இந்து, கிறிஸ்துவம், சமணம், பௌத்தம்-எதற்கும் நீங்கள் சொந்தமில்லை. நீங்கள் சும்மா இருக்கிறீர்கள். உங்களால் வரையறுக்கப்பட முடியாததை எப்படி நேசிப்பது என்று இப்போது கற்றுக்கொண்டு விட்டீர்கள். சொற்களால் விளக்க முடியாத உண்மைத் தன்மையை நேசிக்கக் கற்றுக் கொண்டு விட்டீர்கள் இப்போது. உங்களுடன் நீங்கள் எப்படி இருப்பது என்று அறிய வந்து விட்டீர்கள்.

பிறருக்கான உங்கள் தேவைகள் மறைந்துவிட்டன. எந்த சந்துபொந்துகளும் உங்களிடம் இல்லை. நீங்கள் எதையும் இழக்கவில்லை, உங்களிடம் எந்தப் பிழைகளும் இல்லை- சும்மா நீங்கள் சந்தோஷமாக இருக்கிறீர்கள், உங்களுடன் இருந்து கொண்டே!

உங்களுக்கு எதுவும் தேவைப்படவில்லை. உங்கள் ஆனந்தம் நிபந்தனையற்றது. ஆம், உலகத்தின் மகத்தான அற்புதம் இது.

ஆனால் நினைவு கொள்ளுங்கள், குரு கூறுகிறார்: 'நான் இங்கே என்னுடன் தனித்திருக்கிறேன்'. நீங்கள் தனித்திருக்கையில் நீங்கள் தனித்திருக்கவில்லை, நீங்கள் சும்மா தனிமையில் இருக்கிறீர்கள். தனிமைக்கும் தனித் திருத்தலுக்கும் மிகப்பெரிய வித்தியாசம் உள்ளது. நீங்கள் தனிமையில் இருக்கும்போது, பிறர்பற்றி நினைக்கிறீர்கள். பிறர் இல்லை என்று ஏங்குகிறீர்கள். தனிமை என்பது எதிர்மறை நிலை. பிறர் உங்களுடன் இருந்தால் நன்றாக இருந்திருக்கும் என்று உணர்கிறீர்கள். உங்கள் நண்பர், உங்கள் மனைவி, உங்கள் தாய், உங்கள் அன்பர், உங்கள் கணவர், பிறர் இருந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும்; ஆனால் பிறர் இல்லை.

தனிமை என்பது பிறர் இல்லாதிருத்தல்; தனித்திருத்தல் என்பது ஒருவரின் இருத்தல். தனித்திருத்தல் என்பது மிகவும் நேர்மையானது; அது ஓர் இருத்தல், பொங்கி

வழியும் இருத்தல். நீங்கள் எந்த அளவு முழுமையாக இருக்கிறீர்கள் என்றால் முழுப்பிரபஞ்சத்தையும் உங்களால் நிரப்பமுடியும். உங்கள் இருத்தலுக்கு வேறெவரும் தேவைப்படவில்லை.

இந்த முழு உலகமே மறைந்தாலும் ஜென் குரு எதனையும் இழக்க மாட்டார். திடீரென்று, ஏதோ ஒரு மந்திர வித்தையினால் முழு உலகமும் மறைந்து விடுகிறது. ஜென் குரு தனித்திருக்க விடப்பட்டிருக்கிறார். எப்போதும் போல அவர் இப்போதும் மகிழ்ச்சியாய் இருப்பார். எதையும் அவர் இழக்கமாட்டார். அந்த மாபெரும் வெற்று நிலையை அவர் நேசிப்பார். அதுதான் தூய எல்லையற்ற தன்மை. அவர் எதையுமே இழக்க மாட்டார். ஏனென்றால் அவர் 'வீடு' அடைந்து விட்டார். அவருக்கு அவர் போதுமானவர் என்று அவர் அறிவார். ஞானம் பெற்று 'வீடு' வந்து சேர்ந்தவர் பிறருடன் வாழ மாட்டார் என்பது இதன் பொருள் ஆகாது. உண்மையிலே, அவர் மட்டுமே பிறருடன் இருக்கும் தகுதியையும் பெற்றவர். ஏனென்றால் அவர் அவருடன் இருக்கும் தகுதி பெற்றவர். அதனால் பிறருடன் இருக்கும் தகுதியையும் பெற்றவர் ஆகிறார். நீங்கள் உங்களுடன் இருக்கும் தகுதியைப் பெறாவிட்டால் பிறருடன் இருக்கும் தகுதியை எப்படிப் பெறுவீர்கள்? நீங்கள் உங்களுக்கு நெருக்கமான இருப்பிடத்தில் இருக்கிறீர்கள். உங்களுடனேயே கூட நீங்கள் ஆழமான நேசமும் மகிழ்ச்சியும் கொள்ளும் தகுதியைப் பெறவில்லை என்றால்-பிறருடன் எப்படி நீங்கள் இருப்பீர்கள்; பிறர் வெகுதொலைவில் இருக்கிறார்கள். தன், தனித்திருத்தலை நேசிக்கும் மனிதன் நேசத்திற்குத் தகுதி பெற்றவன். தனிமையை உணர்கின்ற மனிதன், நேசத்திற்குத் தகுதியற்றவன். தன்னுடன் மகிழ்ச்சியோடிருக்கும் மனிதன் முழுநேசம் பொங்கி வழிபவன். வேறு யாருடைய நேசமும் அவனுக்குத் தேவைப்படவில்லை. அதனால் அவன் கொடுக்க முடியும். உங்களுக்குத் தேவை

இருந்தால், நீங்கள் எப்படிக் கொடுக்கமுடியும்? நீங்கள் ஒரு யாசகர். நீங்கள் கொடுக்க முடியும்போது உங்களைத் தேடி அதிக நேசம் வருகிறது. இது ஒரு மறுசெயல்; இயற்கையின் மறுசெயல்; நேசத்தின் முதல் பாடம், தனித்திருத்தல் எப்படி என்று கற்றுக் கொள்வதுதான். இது ஒரு குறிப்பிடத்தக்க வாக்கியம். அது ஓர் உவமை இல்லை. 'உடனடியாக- நேரடியாக உள்ளது. இது உங்களை ஒரு ரோஜா மலர் சந்திப்பது போன்றது.

நீங்கள் ஒருபோதும் கேட்பதில்லை "இந்த ரோஜா மலரின் உவமை என்ன" என்று! நீங்கள் கேட்கமாட்டீர்கள். "இந்த ரோஜா மலரின் பொருள் என்ன" என்று!

குரு ஒரு ரோஜா மலரைப் போன்றவர். நீங்கள் பார்க்க முடிந்தால் பாருங்கள்; பார்க்க முடியாவிட்டால் மறந்து விடுங்கள். நீங்கள் அதன் பொருளை ஒருபோதும் அறியமாட்டீர்கள். ஏனென்றால் அதன் பொருள் அதோ உங்கள் முன்னால்தான் உள்ளது. அதிலிருந்து ஓர் உவமை காண எண்ணாதீர்கள். உவமைகள் என்றாலே நீங்கள் உங்கள் வியாக்கியானத்தை ஆரம்பித்து விட்டீர்கள் என்று பொருள். நீங்கள் என்ன வியாக்கியானம் செய்தாலும் அது உங்கள் வியாக்கியானம்.

நான் கேட்டிருக்கிறேன்.

இங்கு மீன் பிடிக்கக் கூடாது என்னும் பெரிய அறிவிப்புப் பலகை இருந்த இடத்தில் முல்லா நசிருதீன் மீன் பிடித்து மாட்டிக் கொண்டார். அவரைப் பிடித்த காவலர் கேட்டார்: "நசிருதீன், அறிவிப்புப் பலகையை நீங்கள் பார்க்கவில்லையா? உங்களுக்குப் படிக்கத் தெரியாதா?" என்று அறிவிப்புப் பலகையைச் சுட்டிக் காட்டினார். முல்லா நசிருதீன் சொன்னார். "நான் படிப்பேன். ஆனால் நான் ஒப்புக்கொள்ளவில்லை. இங்கே நன்றாக மீன்பிடிக்க முடிகிறது. இங்கு மீன் பிடிக்கக் கூடாது என்று யார்

கூறினார்கள். இங்கே பாருங்கள். இன்று எவ்வளவு மீன் களைப் பிடித்திருக்கிறேன் என்று. இங்கு நன்றாக மீன் பிடிக்கலாம்; யார் இந்தப் பலகையை வைத்தார்களோ அவர்கள் பைத்தியமாக இருக்க வேண்டும்" என்று.

இது இப்போது உங்கள் விளக்கவுரை. இது ஒரு சாதாரண அறிவிப்பு-இங்கு மீன் பிடிக்கக்கூடாது. பொருள் கண்டுபிடிக்க வேண்டியதில்லை; தெளிவாக இருக்கிறது.

ஜென் குரு ஒரு விஷயத்தைச் சொல்லும்போது, அல்லது யாராவது குரு ஏதாவது சொல்லும்போது அவரது அர்த்தம் முற்றிலும் தெளிவாக வெளிப்படையாக இருக்கிறது. அது உங்கள் முன்பு தான் இருக்கிறது. அதைத் தவிர்க்க முயலாதீர்கள். நீங்கள் அர்த்தத்தைப் பார்க்கத் தொடங்கினால் இடப்பக்கம், வலப்பக்கம் பார்ப்பீர்கள். உங்கள் முன்பு இருப்பதைக் கோட்டை விட்டு விடுவீர்கள். இது ஓர் எளிய வாக்கியம். 'நான் இங்கே என்னுடன் தனித்து உட்கார்ந்திருக்கிறேன்.'

முயலுங்கள், உணர்ச்சிபெறுவதற்கு. சும்மா, சிலசமயங் களில் தனித்து உட்காருங்கள். அதுதான் தியானம் பற்றி எல்லாம்; சும்மா தனித்து உட்கார்ந்து கொண்டு, எதுவும் செய்யாமல். சும்மா முயலுங்கள். நீங்கள் தனிமையில் இருப்பதாக உணர்ந்தால், உங்களின் இருத்தலில் ஏதோ ஒன்று காணப்படவில்லை. அப்படியானால் நீங்கள் யார் என்று உங்களால் புரிந்து கொள்ள முடியவில்லை, இன்னும். இங்குமங்கும், இப்புறத்திலிருந்து அப்புறத்திற்கும், இந்த நபரிடமிருந்து அந்த நபருக்கும் பாய்ந்து கொண்டிருப் பதால் நீங்கள் உங்களைப் புரிந்துகொள்ளப் போவதில்லை. தனிமையின் ஆழத்திற்குச் செல்லுங்கள். அங்கு உங்கள் தனிமை அடுக்கு மறையும். தனித்திருத்தல் அடுக்காக அது உருமாறும். இது இந்த விந்தையின் எதிர்மறை அம்சம். தனிமை என்பது தனித்திருத்தலின் எதிர்மறை அம்சம். ஆழமாகச் சென்று கொண்டே இருங்கள். இறுதியில் அதன்

நேர்மறை அம்சத்தை உணர்வீர்கள். ஏனெனில் இரண்டு அம்சங்களும் ஒன்றாக இருக்கின்றன, எப்போதும்.

எனவே தனிமையில் இருங்கள், தனிமையில் துன்புறுங் கள். அது கடினம். தியானம் கடினம். மக்கள் என்னிடம் வந்து கேட்கிறார்கள். 'ஆம், நாங்கள் உட்காரத் தயார். ஆனால் ஒரு மந்திரம் கொடுங்கள். மந்திரம் இருந்தால் ஜெபிக்கலாம் அல்லவா! அவர்கள் என்ன கேட்கிறார்கள்? அவர்கள் தனித்திருக்க விரும்பவில்லை என்று சொல் கிறார்கள்; தனிமையை எதிர்கொள்ள அவர்கள் விரும்ப வில்லை. அவர்கள் ஒரு மந்திரம் சொல்வார்கள். அந்த மந்திரம் அவர்களுக்குத் தோழன் ஆகிவிடும். அவர்கள் சொல்வார்கள் ராம், ராம், ராம். இப்போது அவர்கள் தனித்திருக்கவில்லை. இப்போது இந்த ஒலி தொடர்ந்து ஒலிக்கப்பட்டு அவர்களது தோழன் ஆகிவிடும்.

அவர்கள் முழு விஷயத்தையும் இழக்கிறார்கள். கடந்து செல்லும் தியானம். அது ஒரு தியானமே அல்ல. தியானம் என்றாலே அர்த்தம் தனித்திருத்தல், எதுவும் செய்யாதிருத் தல் மந்திரம் கூட ஜெபிக்காமல் இருத்தல். ஏனெனில் இது மனதின் ஒரு தந்திரம். எப்போதும் மனம் செய்து கொண்டிருப்பது அதுதான். நீங்கள் தனித்து உட்காரும் போது எவ்வளவு விநோதங்கள் தங்களைத் தாங்களே வெளிப்படுத்திக் கொள்கின்றன? முடிவில்லாத விநோதங் கள், பகற்கனவுகள், நீங்கள் தனித்திருக்கும் போதெல்லாம் நீங்கள் பகற்கனவு காணத் தொடங்குகிறீர்கள். எதுவும் செய்ய வேண்டாத பொழுதெல்லாம், சலிப்படையும் பொழுதெல்லாம், உடனடியாக நீங்கள் பகற்கனவுகளில் தப்பித்து விடுகிறீர்கள்.

அதனால்தான் ஒரு மனிதன் பாலைவனத்திற்குச் சென்றால்- அராபியப் பாலைவனத்திற்கு- சகாராபாலை வனத்திற்குச் சென்றால் அங்கு உட்கார்ந்து கொண்டே கற்பனைக் குதிரையைத் தட்டிவிடுகிறான். காட்சிகள் பல

வருகின்றன அவனுக்கு. ஏனெனில் பாலைவனம் என்பது மிகவும் சலிப்பூட்டுகிற விஷயம். எதுவும் கவனிக்கும் அளவுக்கு இல்லை- அதே சலிப்புத் தட்டுகிற விஷயம்- எங்கும் மணல்! எதிலும் மணல்... மணல்! மணல்! அது தவிர எதுவுமில்லை-கவனமாற்றத்திற்கு எதுவுமில்லை- புதிதாக எதுவுமில்லை-எல்லாம் சலிப்பு! அலுப்பு! -மனிதன் கனவு காணத் தொடங்குகிறான், புதிது புதிதாகப் பிரதிநிதித்துவப்படுத்திப் பார்க்கிறான். வெளியில் எதுவும் புதியது இல்லையென்றால், புதியன படைத்துக் கொள்கிறான். சொந்தக் கற்பனை உலகத்தில் இஷ்டப்படியெல்லாம் புகுந்து விளையாடுகிறான்.

இமயமலைக்குச் சென்று குகைகளில் தியானம் செய்யும் மக்களுக்கு-அதுதான் ஏற்படுகிறது-அவர்கள் கற்பனை பறக்கிறது. அதையும் அவர்கள் கற்பனை செய்வார்கள். கடவுள்கள்- பெண் கடவுள்கள்-அப்சரஸ்கள்-தேவதைகள்- கிருஷ்ணர் புல்லாங்குழல் வாசிக்கிறார்-ராமர் தன் வில்லுடன் நிற்கிறார்- இயேசு- இப்படி உங்கள் கற்பனை பறக்கிறது-ஏற்கெனவே உங்கள் 'கட்டுப்படுத்தப்பட்ட மனதின்படி! நீங்கள் கிறிஸ்துவனாகக் கட்டுப்படுத்தப் பட்டிருந்தால் விரைவாகவோ, தாமதமாகவோ இமயமலை குகைகளில் நீங்கள் இயேசுவைச் சந்திப்பீர்கள். இது முழுவதும் கற்பனையே. வெளியில் உங்கள் கவனத்தை மாற்ற எதுவுமில்லாதபொழுது, உங்கள் மனம் உள்ளுக்குள், தங்கள் கனவுகளைப் படைக்கத் தொடங்கி விடுகிறது. நீங்கள் தொடர்ந்து கனவு காணும்போது, அவை மிக மிக உண்மையாகத் தோன்றும். மேலை நாடுகளில் பல பரிசோதனைகள் 'புலன் இழப்பைப்' பற்றிச் செய்யப் பட்டுக் கொண்டிருக்கின்றன. ஒரு மனிதன் தன் அனைத்துப் பதிவுகளையும் இழந்து விட்டால்-அவன் கண்கள் மூடப்படுகின்றன. அவர் ஒரு பெட்டியில் வைக்கப்படுகிறார். அவர் காதுகள் மூடப்படுகின்றன, அவரது முழு உடலும் ஃபோம் ரப்பரால் சுற்றப்பட்டு

ஒரே விதமான தொடுதல் உணர்வுக்குள்ளாகிறார், கண்களில் இருள் ஒரே விதம், காதுகளில் ஒலியின்மை ஒரேவிதம், ஒவ்வொன்றும் ஒரேவிதம் தான், சலிப்பூட்டும் வகையில்- இரண்டு மூன்று மணி நேரத்திற்குள் அவர் கனவு காணத் தொடங்குகிறார்- அருமையான விநோத மானகனவுகள்- மிகவும் உண்மை- உண்மையைக் காட்டிலும் மிகமிக உண்மையானதாக! இருபத்தொரு நாட்களுக்கு இதுபோல் ஒரு மனிதன் புலன்களை இழந்தால் அவன் எப்பொழுதும் சாதாரண மனநிலைக்குத் திரும்பவே முடியாது. அவன் பைத்தியம் ஆகிவிடுவான். ஏனெனில் அவனுடைய கற்பனை அவனை முழுமையாக ஆக்கிரமித்துக் கொள்ளும்.

ஆனால் மனம் ஏன் பகற்கனவு காணத் தொடங்குகிறது?/மனம் தன்னோடு தனியாக வாழ முடியாது என்பது விஞ்ஞான விளக்கம். ஆகவே உண்மையில் அதற்கு யாரேனும் வேண்டும், அல்லது உண்மையில் யாரும் இல்லையென்றால் அது விநோதத்தைப் படைக்கிறது. விநோதம் என்பது பிரதிநிதி. மனம் தனித்திருக்க முடியாது.

அதனால்தான், இரவில், நீங்கள் கனவு காண்கிறீர்கள்- ஏனென்றால் தூக்கத்தில் நீங்கள் தனித்திருக்கிறீர்கள். உலகம் மறைகிறது. உங்கள் கணவன் அங்கில்லை, உங்கள் குழந்தைகள் அங்கில்லை, உங்கள் மனைவி அங்கே இல்லை. நீங்கள் வெறுமனே தனித்திருக்கிறீர்கள்-அதோடு நீங்கள் தனித்திருப்பதற்கு தகுதி அற்றவர் ஆகிவிட்டீர்கள். உங்கள் மனம் இன்னோர் உலகத்தை- கனவுலகத்தைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறது. கனவுகள், முழு இரவும் கனவுகளின் சுழற்சி. ஏன் கனவுகள் தேவைப்படுகின்றன. ஏனென்றால் நீங்கள் தனித்திருக்க முடியாது.

இந்த முழு மாயத்தோற்றமும் உங்களைச் சுற்றி இருப்பதற்குக் காரணம்- நீங்கள் ஒரே ஒரு அடிப்படை விஷயத்தைக் கற்றுக் கொள்ளவில்லை-'தனித்திருத்தல்'

என்பது தான் அந்த விஷயம். ஜென் குரு சரியாகச் சொன்னார். 'இது மகத்தான அற்புதம் நான் இங்கே என்னுடன் தனித்து உட்கார்ந்திருக்கிறேன்'. ஒருவர் தன்னுடன் விருப்பது. அதுவும் தன்னுடன் ஆனந்தமாக இருப்பது, தன்னுடன் பரமானந்தமாக இருப்பது, விநோதக் கற்பனைகளுக்குத் தாவாமல் இருப்பது... அப்புறம் திடீரென்று 'வீட்டில்' இருப்பது, தன் சொந்த அதள பாதாள ஆழத்தில் தானே நுழைவது.

நீங்கள் நுழையும்போது அது வெறுமை நிலையாகத் தோன்றுகிறது. ஆனால் ஒருமுறை நீங்கள் நுழைந்து விட்டால், அதுதான் இருத்தலின் மிக்க முழுமை, நிறைவேற்றம், மலர்ச்சி, உச்சகட்டம், உச்சஸ்தாயி!

அது வெறுமைநிலை அன்று. அது வெறுமை நிலை போல் தோன்றுகிறது. காரணம், இதுவரை நீங்கள் பிறருடன் வாழ்ந்தீர்கள். இப்போது திடீரென்று பிறரை விட்டுவிட்டீர்கள். அதனால்தான் அதை நீங்கள் வெறுமை நிலை என்று விளங்கிக் கொள்கிறீர்கள். பிறர் இல்லை, நீங்கள் மட்டுமே இருக்கிறீர்கள்– ஆனால் இப்போதே நீங்கள் உங்களைப் பார்க்க முடியாது, நீங்கள் சும்மா பிறரை இழக்காதீர்கள்.

நீங்கள் மிகவும் பழக்கதோஷம் உள்ளவராகி விட்டீர்கள்! 'பிறர்' என்னும் கருத்து உங்கள் அடி ஆழ்மனதில் ஆழமாகப் பதிந்துவிட்டது. அது ஒரு இயந்திரத்தனமான பழக்கமாக மாறிவிட்டது. அதை நீங்கள் இழக்கும்போது நீங்கள் வெறுமை நிலை, தனிமை, அதளபாதாளத்தில் வீழ்ச்சி போன்றவற்றை உணர்கிறீர்கள். ஆனால் உங்களை நீங்களே அனுமதித்துக்கொண்டு அதளபாதாளத்தில் வீழ்ந்தால், விரைவில் அது மறைவதை உணர்வீர்கள், அந்த அதள பாதாளத்தின் மறைவோடு அதோடு தொடர்புடைய மாயப்பற்றுதல்களும் மறைந்துவிட்டன. அப்புறம் தோன்றுகிறது அந்த மகத்தான அற்புதம்– எந்தக் காரண

மும் இல்லாமல்- நீங்கள்- சும்மா- ஆனந்தமாக இருக் கிறீர்கள்.

நினைவு கொள்ளுங்கள், உங்கள் மகிழ்ச்சி பிறரைச் சார்ந்து இருக்கும்போது, உங்கள் மகிழ்ச்சியின்மையும் பிறரைச் சார்ந்து தானே இருக்கும். ஒரு பெண் உன்னைக் காதலிக்கிறாள் என்ற காரணத்தால் நீ மகிழ்ச்சியாய் இருந்தால், அவள் காதலிக்கவில்லையென்றால் மகிழ்ச் சியை இழந்துவிடுவாய். எந்தக் காரணத்திற்காகவாவது நீ மகிழ்ச்சியாக இருந்தால், என்றாவது அந்தக் காரணமும் இல்லாமல் போனால், அதுபற்றி மகிழ்ச்சியும் உனக்கு இல்லாமல் போய்விடும்.

உங்கள் மகிழ்ச்சி எப்போதுமே ஆட்டம் கண்டு கொண்டுதான் இருக்கும். நீங்கள் எப்போதுமே சூறாவளிப் புயலில் தான் சிக்கித் தவிப்பீர்கள். ஒருபோதும் நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கிறீர்களா அல்லது மகிழ்ச்சி இல்லாமல் இருக்கிறீர்களா என்று நிச்சயமாக இருக்க முடியாது. ஒவ்வொரு கணமும் உங்கள் காலின் கீழ் உள்ள பூமி மறைந்துவிடக் கூடும். எந்தக் கணமும் அது மறையலாம். ஒருபோதும் நீங்கள் நிச்சயமாக இருக்க முடியாது. இப்போதுதான் அந்தப் பெண் உங்களைப் பார்த்துப் புன்னகைத்தாள். இதோ இப்போது அவளே கோபம் கொண்டுவிட்டாள். கணவன் மிக இனிமையாகப் பேசிக்கொண்டிருந்தான்; ஆனால் திடீரென்று அவன் அமைதியிழந்து கத்தத் தொடங்கிவிட்டான்.

பிறரைச் சார்ந்திருந்தால், சார்ந்திருத்தல்-கொத்தடிமை மனம்-பராதீனம்-உண்மையான ஆனந்தத்தை ஒருபோதும் இதன் மூலம் அடையவே முடியாது.

பரமானந்தம் என்பது முழுமையான, நிபந்தனையற்ற சுதந்திரத்தில்தான் சாத்தியம். அதனால்தான் வழக்கில் நாம் அதை 'மோட்சம்' என்று அழைக்கிறோம். மோட்சம்

என்பது முழுமையான சுதந்திரம். ஒருவர் தன்னோடிருத்தல் தான் மோட்சம். காரணம், இப்போது நீங்கள் எவரையும் சார்ந்தில்லை. உங்கள் மகிழ்ச்சி முற்றிலும் உங்களுக்கே சொந்தம்! நீங்கள் யாரிடமிருந்தும் இரவலாகப் பெறத் தேவையில்லை. எவருமே அதை எடுத்துக்கொள்ள முடியாது-மரணத்தால்கூட எடுத்துக் கொள்ளமுடியாது!

நினைவில் கொள்ளுங்கள். மரணம் உங்களைப் பிறரிடமிருந்து தான் உங்களைப் பிரிக்கிறதே தவிர-ஒருபோதும் உங்களிடமிருந்து உங்களை அல்ல. மரணம் ஏன் அவ்வளவு பயங்கரமாக இருக்கிறது? அது உங்களைப் பிறரிடமிருந்து பிரித்துவிடுகிறது-மனைவி இனிமேல் கணவனுடன் இருக்கமாட்டாள், தாய் தன் குழந்தைகளோடு இனிமேல் இருக்கமாட்டாள்; மரணம் பிறரிடமிருந்து மட்டுமே உங்களைப் பிரிக்கிறது. ஆனால் உங்களை உங்களிடமிருந்து பிரிக்க முடியாது. உங்களை உங்களிடமிருந்து பிரிக்க எந்த வழியும் இல்லை.

ஒரு தடவை உங்களோடு நீங்கள் இருக்கக் கற்றுக் கொண்டுவிட்டால், மரணம் அர்த்தமற்றதாகி விடும். அப்போது மரணமே இருக்காது. நீங்கள் மரணமற்றவர் ஆகிவிடுவீர்கள். மரணம் உங்களிடமிருந்து எதையும் எடுக்க முடியாது. மரணத்தால் எதை உங்களிடமிருந்து எடுக்க முடியுமோ அதை நீங்களே மனமுவந்து சரண் அடையச் செய்து விட்டீர்கள்.

அதுதான் தியானம்-உங்களிடமிருந்து மரணத்தால் எடுக்கப்படக்கூடிய முக்கியமல்லாததைச் சரணடையச் செய்வதுதான் தியானம். மரணம் செய்யப்போவதை- தியானி-தன் சொந்த விருப்பத்தில் சுயமாகவே செய்கிறார். 'இது எடுக்கப்பட்டு விடும்' என்று நன்றாகத் தெரிந்து கொண்டு முன்கூட்டியே-அவர் அதைச் சரணடையச் செய்கிறார். தனித்திருத்தல் என்பது மகத்தான அளவில் அழகானது. அதற்கு ஈடு இணை எதுவும் கிடையாது.

அதன் அழகுதான் உச்சபட்ச அழகு; அதன் மகிமைதான் உச்சபட்ச மகிமை. அதன் சக்திதான் உச்சபட்ச சக்தி.

வீட்டிற்குத் திரும்ப வாருங்கள். வழி இதோ இருக்கிறது. முதலில் நீங்கள் தனிமைத் துயர் அடைய வேண்டும். துயரடையுங்கள். அதன்மூலம் செல்லுங்கள். உங்கள் பரமானந்தத்திற்கான விலையை நீங்கள் கொடுக்க வேண்டும். ஆம், நீங்கள் விலை கொடுக்க வேண்டும். உங்கள் தனிமைத்துயரம் தான் அதன் விலை. நீங்கள் மிகப் பெரிய அளவில் நன்மை அடைவீர்கள்.

**துறவிகளிடம் நீங்கள் சொல்கிறீர்கள் அவர்களைப் பற்றித்தான் அவர்கள் கவலைப்படவேண்டும் என்று— அவர்களும் அப்படியே செய்கின்றனர். ஆப்பிரிக்காவில் 'குழு ஒற்றுமை' என்ற ஒன்று இருக்கிறதீ. விதி இதுதான். மிகவும் இழிந்த உறுப்பினர்கள் உள்ள குழுவே உயர்ந்த குழு; நமது பரிணாமப் பரஸ்பரத் தொடர்புடையது. மனித இனம் ஓர் உடல். உலகத்தன்மையைக் காட்டிலும் தனிநபர்த் தன்மைக்கு அதிக மதிப்பு ஏன்?**

ஆம். நாம், ஒவ்வொரு பிறரின் பகுதி ஆவோம். மனித இனம் மட்டுமல்ல ஒன்று, வாழ்க்கையே ஒன்று. இந்த ஒருமை இரண்டு நிலைகளில் உணரப்படும். ஒன்று ஆழமான நனவிலி மனத்தில்; இன்னொன்று மேல் நனவு மனத்தில். ஒன்று நீங்கள் மரமாக வேண்டும். அப்போது நீங்கள் முழுமையுடன் ஒன்றியிருக்கிறீர்கள். இந்த இரண்டுக்கும் இடையில், முழுமையுடன் ஒன்றுதல் உங்களால் முடியாது.

நனவு-தனி நபர்; நனவிலி முழுமை; மேல் நனவு நிலை முழுமை, நனவு-தனிநபர். ஆகவே எங்கோ ஆப்பிரிக்காவில் அல்லது வேறு ஏதோ ஓரிடத்தில் நீங்கள் குழுவில் ஒருவராக இருப்பதற்குக் கற்றுக் கொடுக்கிறார்கள். நீங்கள் நனவிலியாக ஆவீர்கள்; அதிகபட்ச சாத்தியக் கூறு என்ன

வென்றால் நீங்கள் உங்கள் நனவு நிலையிலிருந்து கீழே விழுந்து விடுவீர்கள். நீங்கள் புத்தராக ஆகாத வரைக்கும் நீங்கள் முழுமையில் ஒன்றாக ஆக முடியாது, உண்மை ஒருமையை முழுமையுடன் உங்களால் அறிய முடியாது.

முழுமையுடனான உண்மையான ஒருமை இருவழி களில் மட்டுமே அறிய முடியும். நனவிலியாக ஆகுங்கள்– நனவு நிலையை இழந்துவிடுங்கள்; தனிநபர்த் தன்மை இழந்தாகி விட்டது; அல்லது நனவு நிலைக்கும் அப்பால் கடந்து செல்லுங்கள். அப்போதும் தனிநபர்த் தன்மையை இழந்தாகிவிட்டது.

அதனால்தான் மக்களுக்கும் கூட்டம் மிகவும் பிடிக்கிறது. கூட்டத்தில் உள்ள மக்களைப் பார்த்திருக்கிறீர் களா? எவ்வளவு மகிழ்ச்சியாக அவர்கள் காட்சியளிக் கிறார்கள். ஒரு கோயிலை அழிக்கச் செல்லும் முகம்மதியர் கள், முகம்மதியர்களைக் கொல்லச் செல்லும் இந்துக்கள், அவர்களைப் பாருங்கள், எவ்வளவு மகிழ்ச்சியுடன் இருக்கிறார்கள். குமிழியிடும் சக்தி, பிரகாசம் மிக்க சக்தி அவர்களிடம்! மந்தமான மக்கள், இதற்குமுன் அவர் களைப் பார்த்திருக்கிறார்கள். தெருக்களில் நடக்கும்போது– மந்தமாக– இறந்தது போல! இப்போது திடீர் என்று அவர்கள் மிகுந்த உயிர்த்துடிப்புடன்– ஆரவாரத்துடன், ஆர்ப்பாட்டத்துடன் பாய்ந்து சென்றுகொண்டு, ஏதோ ஒரு அழகான ஒன்று ஏற்படப் போவது போல!

மக்கள், கூட்டத்தில் இருக்கும்போது ஏன் மகிழ்ச்சியை உணர்கிறார்கள்? கூட்டத்தில் மகிழ்ச்சி ஏன் அவ்வளவு தொற்றுகிறது? காரணம், கூட்டத்தில் அவர்கள் கீழே விழுகிறார்கள். அவர்கள் நனவிலி ஆகிவிடுகிறார்கள். அவர்கள் தங்கள் தனிநபர்த் தன்மையை இழந்து விடுகிறார்கள். அவர்கள் தங்கள் தனிநபர்த் தன்மைகளை இணைத்துக் கொள்கிறார்கள். தங்கள் நனவு நிலைகளை விட்டுவிடுவதனால், அவர்கள் தங்கள் தனிநபர்த் தன்மை

களையும் விட்டுவிடுகிறார்கள். அப்புறம் அவர்கள் மகிழ்ச்சியாய் இருக்கிறார்கள். அவர்களுக்குக் கவலை இல்லை. அவர்களுக்குப் பொறுப்புணர்ச்சி இல்லை.

/தனி நபர்கள் யாரும் உலகத்தில் பெரிய பாவங்கள் செய்வதில்லை என்கிற உண்மையை நீங்கள் கவனித்தீர் களா? எல்லாப் பெரிய பாவங்களும் கூட்டங்களால் செய்யப்பட்டவையே தவிர, ஒருபோதும் தனிநபர்களால் அல்ல. ஒரு சேனை லட்சக்கணக்கான பாவங்களைச் செய்ய முடியும்; அந்தச் சேனையின் தனி நபர்களைக் கேளுங்கள். அவர்கள் அதற்குப் பொறுப்பேற்றுக் கொண்டு உணரத் தொடங்குவார்கள். அவர்களைக் கேளுங்கள். 'நீங்கள் தனித்திருந்து அதே செயலைச் செய்ய முடியுமா?' அவர்கள் சொல்வார்கள், 'இல்லை. நான் எப்படித் தனித்திருந்து அந்த விஷயத்தைச் செய்ய முடியும்? அது ஒரு கூட்டம். நான் என்னையே இழந்திருந்தேன். என்னை நான் மறந்தேன். கூட்ட உணர்ச்சி, கும்பல், மிக அதிகம். நான் என்வசம் இல்லை. கூட்டம் எதையோ செய்து கொண்டிருந்தது. நான் வெறுமனே ஒரு பகுதி ஆகிவிட் டேன். நான் அதைச் செய்யவில்லை. ஒற்றை முகம்மதி யனைக் கேளுங்கள். 'கோயிலை நீங்கள் எரிப்பீர்களா? இந்துக்களை நீங்கள் கொல்ல முடியுமா?' இந்துக்களைக் கேளுங்கள். 'முகம்மதியர்களை உங்களால் கொல்ல முடியுமா? தனி நபராக?'

இது ஓர் அற்புதம். ஆனால் நாம் கவனிக்கவில்லை. ஒரு முகம்மதியத் தனி நபரும் கெட்டவரில்லை. ஓர் இந்துத் தனி நபரும் கெட்டவரில்லை. தனிநபர்கள் அழகான மக்கள், எப்போதும் மக்கள் அழகானவர்கள் தாம் அதேபோல். கூட்டத்தில் திடீரென்று அவர்கள் தங்கள் முகங்களை மாற்றிக் கொள்கிறார்கள். ஒரு உருமாற்றம்– உள்ளார்ந்த உருமாற்றம்– நிகழ்கிறது. அவர்கள் இனிமேலும் தனிநபர்கள் அல்லர். அவர்கள் இனிமேலும் நனவு மனிதர்

கள் அல்லர்; அவர்கள் காணாமற்போய் விட்டார்கள். பிறகு அந்தக் கூட்டம் தன் வழியே செல்கிறது. யாரும் அதைக் கட்டுப்படுத்த முடியாது.

அப்படியானால், உண்மையில் ஆப்பிரிக்கா சரிதான்- விதி இதுதான்; குழு தன் இழிந்த உறுப்பினர் கொண்டு உயர்வு பெறுகிறது. அதனால்தான் சொல்கிறேன். குழுவின் உறுப்பினர் ஆகாதீர்கள். இல்லையேல், இழிந்த உறுப்பினர் போல் நீங்களும் இழிந்தவராய் விடுவீர்கள். தனி நபர்கள் ஆகுங்கள். ஒரு குழுவில் நீங்கள் மிகக் குறைந்த எண்ணால் தான் வகுக்கப்படுவீர்கள். இது இயற்கையானது; இது மிகவும் விஞ்ஞானபூர்வமானது. நீங்கள் நூறுபேர் கொண்ட குழுவோடு நடந்து கொண்டிருந்தீர்கள் என்றால் மிக மெதுவாகச் செல்பவன் தான் வேகத்தை நிர்ணயிப்பான். ஏனென்றால் மிக மெதுவாகச் செல்பவன் வேகமாகச் செல்ல முடியாது; அவனுக்கு அவனுடைய எல்லை உண்டு. குழுகுழுவாக இருக்க வேண்டுமென்றால் மிக மெதுவானவனுடன் நகரவேண்டும். வேகமானவன் குறைக்கலாம்; வேகம் குறைந்தவன் கூட்ட முடியாது. அவனுக்கு எல்லைகள் உள்ளன.

குழு எப்போதுமே முட்டாள் மனிதனால் தான் ஆளப் படுகிறது. முட்டாள் அறிவாளி ஆக முடியாது. அறிவாளி மிக எளிதில் பழைய நிலைக்குத் திரும்பி முட்டாள் ஆகலாம். நீங்கள் எங்காவது எந்த முட்டாளாவது புத்தி சாலித்தனமாக எதையாவது செய்து பார்த்திருக்கிறீர்களா? ஆனால் நீங்கள் பார்த்திருப்பீர்கள். பல அறிவாளியான மக்கள் முட்டாள்தனமான செயல்களைச் செய்து கொண் டிருப்பதை. நீங்கள் எந்தக் கணத்திலும் முட்டாள்தனமாக ஆகலாம். ஆனால் எந்தக் கணத்திலும் அறிவாளி ஆவது அவ்வளவு சுலபம் அல்ல. முட்டாள் மனிதன் மிகவும் நிலையானவன்- அவன் முட்டாள்தனத்தில் தங்கிவிடு கிறான். அவன் சில நேரங்களில் புத்திசாலியாவது அசாத்

தியம். ஆனால் ஓர் அறிவுள்ள மனிதன் நிலையானவன் அல்லன். முட்டாள்தனமான கணங்கள் உள்ளன. அவன் கொஞ்சம் தளர்வாகவோ, அறிவு பற்றிய அக்கறை பரிணாமத்தில் உங்களைவிட இழிந்த ஒருவருடன் நீங்கள் கட்டப்பட்டு விட்டால், அந்த மனிதரோடு தான் நீங்கள் நடந்தாக வேண்டும். உண்மையில் அவர் உங்களோடு நடக்க முடியாது. ஆகவே நான் சொல்கிறேன். இந்த விதியைக் கூட நம்புகிறேன்-ஆனால் நான் வித்தியாசம் உள்ள அர்த்தம் கொள்கிறேன். இந்த விதி உண்மை மிகச் சரியாக. குழு தன் இழிந்த உறுப்பினர் போன்ற உயர்வைப் பெறுகிறது. ஆகவே/ நீங்கள் உயர்வு பெற விரும்பினால் தயவுசெய்து நினைவு கொள்ளுங்கள். ஒருபோதும் எந்தக் குழுவிலும் உறுப்பினர் ஆகாதீர்கள். நினைவு கொள்ளுங் கள். தனி நபர்களாகத் தங்கியிருங்கள். பிறகு உங்கள் சொந்த வேகத்தில் நடைபோட உங்களுக்கு எந்தத் தடையும் இல்லை./ பிறகு தனித்திருந்து நகர்வதற்கு உங்களுக்கு முழுமையாக சுதந்திரம் உள்ளது. ஆனால் குழுவிலோ நீங்கள் கட்டப்படுகிறீர்கள்.

உண்மையில், அறிவற்ற மக்கள் குழுக்களை உருவாக்க ஆசை கொள்வார்கள். காரணம், தனித்திருந்து தங்களைத் தாங்களே சார்ந்திருக்க அவர்களால் முடியாது. அவர்கள் அஞ்சுகிறார்கள். ஆகவே மாதாகோயில் தெரியும். அவர்கள் குழுக்கள் அமைக்க, கூட்டம் கூட்ட ஆசைப்படுகிறார்கள். ஆகவே மாதாகோயில் உள்ளவரை, ஒரு பிரிவு இருக்கும் வரை 99% அது முட்டாள்களைக் கொண்டிருக்கும். அப்படித்தான் அது இருக்கும். அவர்கள் தீர்மானிக்கிறார் கள், சமயக்கொள்கைகளை, அரசியலை மற்றும் ஒவ்வொரு விஷயத்தையும். கும்பலாட்சி ஜாக்கிரதை! உஷார்! விழிப்போடிருங்கள்! ஏனென்றால் உங்களுக்குள்ளும் தளர்வான கணங்கள் இருக்கக்கூடும்-அவை அறிவற்ற கணங்கள். அப்போது நீங்கள் பொறுப்பற்றவர். எந்தக் கவலையும் இல்லாதவர். அப்பொழுது உங்கள் பொறுப்

புணர்ச்சியை அப்படியே குழுவின்மீது தூக்கிப் போட்டு விடலாம். நீங்கள் எப்போதும் சொல்லலாம். நான் என்ன செய்ய முடியும்? நான் குழுவோடு நடக்கிறேன். என் குழு மெது; நானும் மெது. இழிந்த உறுப்பினர் எல்லாவற்றையும் தீர்மானிக்கிறார்.

உண்மையில் நீங்கள் வளரவிரும்பினால், தனித்திருங்கள். நீங்கள் உண்மையில் சுதந்திரமாக இருக்க விரும்பினால், பொறுப்புணர்ச்சியோடு இருங்கள். அதனால் நான் தனிநபர்த் தன்மையை வலியுறுத்துகிறேன். அதனாலேயே நான் இந்தப் பிரபஞ்சம் ஒன்று என்று உணராதவன் என்று பொருள் ஆகாது. ஆனால் அவற்றை அறிய இரண்டு வழிகள் உள்ளன. நனவு மனத்தை விட்டுக் கீழே இறங்கு. அப்போது பிரபஞ்சம் ஒன்றுதான்; ஆனால் நீங்கள் அதை உணர மாட்டீர்கள். ஏனெனில் நீங்கள் உங்கள் நனவு மனத்தின் கீழே விழுந்து விட்டீர்கள். அல்லது நனவு நிலையின் மேலெழும்பிச் செல்லுங்கள்; மேல் நனவுக்கு மாறுங்கள், ஞானம் பெற்றவர் ஆகுங்கள், புத்தர் ஆகுங்கள். அப்பொழுது நீங்களும் உணர்வீர்கள் முழுமை ஒன்று என்று; ஆனால் அப்போது முழுமை உங்களைக் கீழே இழுக்கமுடியாது. புத்தர் முழுமையையும் மேலே தூக்கப் பார்க்கிறார்.

நனவிலிநிலையில் இழிந்த நிலை வளர்ச்சி விகிதத்தை நிர்ணயிக்கிறது. மேல்-நனவு நிலையில் மிக உயர்ந்தது. மிகப் பெரியது நிர்ணயிக்கிறது. ஒருபுத்தர் உங்களை மேலே இழுக்கிறார். நீங்கள் கனவு காணமுடியாத, நீங்கள் இதுவரை அறியாத உயரங்களுக்கெல்லாம் உயர்த்தப்படுகிறீர்கள். அவரது வெறும் இருப்பின் மூலமாகவே இங்கு மிக உயர்ந்தது தீர்மானிக்கும் காரணி ஆகிறது.

அதனால் தான் கிழக்கில் நாம் எப்போதும் தனிநபர்த் தன்மையை வலியுறுத்துகிறோம். தனி நபராகிய ஆசானைக் கண்டுபிடியுங்கள் என்றும் நாம் எப்போதும் வலியுறுத்தி

வந்திருக்கிறோம். குழுவில் பகுதியாவதைவிட அதைத்தான் வலியுறுத்தி வந்துள்ளோம். ஓர் ஆசானிடம் தனிப்பட்ட முறையில் உறவு கொள்ளுங்கள். அப்போது மிக உயர்ந்தது உங்கள் வாழ்க்கையைத் தீர்மானிக்கிறது. அப்புறம் நீங்கள் அவரால் இழுத்துக் கொள்ளப்படுவீர்கள். குழுவில் மிக இழிந்தது உங்கள் வாழ்க்கையைத் தீர்மானிக்கும்.

/இந்துவாக இருக்காதீர்கள். கிருஷ்ணனை உங்களால் கண்டுபிடிக்க முடியுமானால் நிச்சயமாகக் கிருஷ்ணனைப் பின்பற்றுங்கள்- ஆனால் இந்துவாக இருக்காதீர்கள். கிறிஸ்துவராக இருக்காதீர்கள். எங்காவது இயேசுவைக் கண்டுபிடித்தால் பாய்ந்து செல்லுங்கள். எல்லாரையும் மறந்துவிடுங்கள். ஆனால் உங்களால் இயேசுவைக் கண்டு பிடிக்க முடியாவிட்டால், கிறிஸ்துவராக இருக்காதீர்கள். காரணம் கிறிஸ்துவமதம் ஒரு கூட்டம். இயேசு ஒரு மேனிலைத் தனிநபர். ஆசானைக் கண்டுபிடித்து, ஆசானின் நல்லுறவில் வாழுங்கள். ஆசானில் இருப்பின் முன்பு வாழுங்கள். அது தனிப்பட்ட தொடர்பாக இருக்கட்டும்!/

நான் உங்களுக்குத் துறவு அளிக்கிறேன். நீங்கள் எந்த ஒரு தேவாலயத்தின் பகுதியாகவும் ஆகவில்லை. நீங்கள் எந்தக் கூட்டத்திலும் ஒரு பகுதி ஆகமாட்டீர்கள். உங்கள் உறவு என்னுடன் தனிப்பட்டது. இங்கே ஆயிரக்கணக்கான துறவிகள் இருக்கிறார்கள். ஆனால் ஒவ்வொரு துறவியும் என்னோடு தனிப்பட்ட உறவு கொண்டவர். நீங்கள் இன்னொரு துறவியோடு எந்த வகையிலும் உறவற்றவர். நினைவு கொள்ளுங்கள். உங்கள் உறவு என்னுடன்... தனிப்பட்ட முறையில், அந்தரங்கமாக.

நீங்கள் ஒரு குழுவாகப் பிற துறவிகளுடன் உறவாட வேண்டாம். அதற்குத் தேவை இல்லை. நீங்கள் அனைவரும் என்னோடு தனிப்பட்ட முறையில் உறவுடையவர்கள். ஆம். நிச்சயமாக ஒருவகையில் ஒருவரோடொருவர்

குறிப்பிட்ட வழியில் உறவுடையவர்களே; ஆனால் அது என்னால் தான். அந்த உறவுமுறை நேரடியானது அல்ல. அது என் மூலமானது.

நீங்கள் மேலும் மேலும் அதிகமாகத் தனி நபராவதை நான் விரும்புகிறேன். ஒருநாள் நீங்கள் உலகளாவியவர் ஆவீர்கள். ஆனால் அது ஒரு நம்பிக்கை; அது இன்னும் உண்மைத்தன்மை இல்லை. உங்களுக்கில்லை. நீங்கள் உண்மைத்தன்மை ஆக்க விரும்பினால், நீங்கள் மேலும் மேலும் நனவுள்ளவராக, மேலான நிலையில் நனவுள்ள வராக, ஒருநாள் கனவே தேவைப்படாத நிலை வரும் அளவுக்கு ஆக வேண்டும்.

நீங்கள் எந்த அளவுக்கு நனவு நிலை அடைந்து விட் டீர்கள் என்றால், இனிமேல் உங்களுக்கு நனவுநிலையே தேவைப்படாது என்னும் அளவுக்கு! அந்நிலையில் அதை ஒரு பக்கத்தில் வைத்துவிடலாம்.

குடிகாரன் ஒருவன், தெருவில் நடந்து செல்வதைச் சென்று பாருங்கள். அவன் என்ன செய்துவிட்டான். அவன் புத்தரைப்போல் அதே விஷயத்தைச் செய்துவிட் டான். ஒரு புத்தரைக் கவனியுங்கள். ஒரு குடிகாரனையும் கவனியுங்கள். அவர்கள் இருவரும் ஒரே விஷயத்தைச் செய்திருக்கிறார்கள். குடிகாரன் நனவிலியின் உள்ளே விழுந்துவிட்டான், பிரபஞ்சத்தின் ஒரு பகுதியாக ஆகிவிட்டான்/ அவன் சாராயம் குடித்திருக்கிறான். தன் நனவையும், கவலைகளையும், தனிநபர்த் தன்மையையும் மூழ்கடிக்க அதைக் குடித்திருக்கிறான். கூட்டு நனவிலியின் பகுதியாக அவன் ஆகிவிட்டான்.

இப்போது இதோ புத்தர் வருகிறார். அவரது அழகோடு, அவரது மகிமையோடு நடக்கிறார். அவரும் மறைந்து விட்டார்-குடிகாரனைப் போன்றில்லை. அவர் மனித இனத்தின் கீழே விழவில்லை, அவர் மனித இனத்திற்கு

அப்பால் சென்றுவிட்டார். இருவரும் ஒருவகையில் ஒரே மாதிரியானவர்கள்தாம். ஏனெனில் இருவருமே தனி நபர்கள் அல்லர். எனவே ஒரு குடிகாரன் ஏதோ ஒரு விஷயத்தில் புத்தரோடு ஒத்திருக்கிறான்-இருவருமே தனி நபர்கள் அல்லர். இருப்பினும் இருவரும் இந்த அளவுக்கு இடைவெளி உள்ளவர்களாக இருப்பினும்-இந்த இரு துருவங்கள்- இருப்பினும் அவர்களுக்கு இடையிலே ஏதோ ஓர் ஒற்றுமை!

அல்லது, இன்னோர் உதாரணம். பதஞ்சலி கூறுகிறார். தூக்கமும் சமாதியும் ஒரே மாதிரியானவை என்று. ஆழ்ந்த தூக்கத்திலும், சமாதியிலும் தனிநபர் மறைந்துவிடுகிறார். ஆழ்ந்த தூக்கத்தில் நனவிலியின் ஒரு பகுதி-கூட்டு நனவிலி யின் ஒரு பகுதி- ஆகிறீர்கள். சமாதியில் கூட நீங்கள் கூட்டு மேல்நிலை நனவின் பகுதி ஆகிறீர்கள். அவர்கள் ஒரே மாதிரியானவர்கள். இருந்தும் அவர்கள் துருவங்கள்-எதிர் எதிர்த் துருவங்கள். ஒற்றுமை ஒன்றே ஒன்றுதான்-இரண்டி லும் 'தான்' மறைந்துவிடுகிறது. ஆனால் அது கீழ்க்காணும் வித்தியாசமான வழிகளில் மறைகின்றன. தூக்கத்தில் நீங்கள் திரும்பவும் தாவரம் போல் ஆகிறீர்கள். தாவரம் போல்-பாறைபோல்-உங்களுக்கென்று தனிநபர்த்தன்மை இல்லை.

சமாதியில் 'தான்' விடப்படுகிறது. எதுவும் உங்களுக்கு இல்லை. வரையறையும் இல்லை. நீங்கள் முழுமையுடன் இணைந்திருக்கிறீர்கள்- ஆனால் முழுமையுடன் இணைந் தது மாபெரும் விழிப்புணர்வுடன். நீங்கள் உறங்கிப் போகவில்லை. கவலைகள் மறைந்துவிட்டன. ஏனெனில் 'தான்' இருந்தால் தான் கவலைகள் இருக்கும். ஆகவே கவலைகள் நீக்க இரு வழிகள்-குழுவின் பகுதியாதல் அல்லது மேல்நிலை நனவுத் தளத்தின் பகுதியாதல். ஆப்பிரிக்கர்கள் உண்மையான ஏதோ ஒரு விஷயம் கூறுகிறார்கள். ஆனால் என்ன செய்கிறார்களோ அது முழுக்கமுழுக்கத் தவறு.

துறவிகளிடம் நீங்கள் சொல்கிறீர்கள்
அவர்களைப் பற்றிக் கவலைப்பட வேண்டுமென்று—
அவர்களும் அப்படியே செய்கின்றனர்.

ஆம். நான் அவர்களிடம் சொல்கிறேன். அவர்களைப் பற்றியே கவலைப்பட வேண்டுமென்று. ஏனென்றால் இப் போதிருந்தே அது ஒன்றில் தான் அவர்கள் அக்கறையாக இருக்க வேண்டும். அவர்கள் அனைத்து உலகத்தையும் பற்றிக் கவலை கொள்ளத் தொடங்கினால் அவர்களால் எதுவுமே செய்ய முடியாது. தன்னைப் பற்றிக் கவலைப் படுவது என்பதே மிக அதிகப்படியானது. இந்தக் கவலை களை விட்டு விலகுவதே மிகமிகக் கடினம். மிகமிக அதிகம். இந்த முழு உலகத்தைப் பற்றியும் கவலை கொண்டால் அவ்வளவுதான்- வெளியேவர- வழியே இல்லை. அப்படி யென்றால் நீங்கள் நிச்சயமாக இருக்கலாம். நீங்கள் எப்போதும் கவலையுடன் தான் தங்கியிருப்பீர்கள். ஆனால் ஒன்று; நீங்கள் /இந்த உலகத்தைப் பற்றிக் கவலைப் படுவதாலேயே இந்த உலகத்திற்கு உதவுவதாக ஒரு கணம் கூட-ஆம்-ஒருகணம் கூட-எண்ணிவிடாதீர்கள். நீங்கள் கவலைப்படுவதன்மூலம்,/இந்த உலகத்திற்கு எந்த உதவியும் செய்யவில்லை. ஏனென்றால், ஒரு கவலையாளன் பிறர் எவர்க்கும் உதவ முடியாது. அவன் ஓர் அழிவு சக்தி. /

ஆகவே, முதலாவதாகக் கவலைகளைக் குறைந்தபட்ச மாகக் குறைத்துக் கொள்ளுங்கள். அதாவது உங்கள் கவலைகளை, உங்கள் வரைக்கும் பார்த்துக்கொள்ளுங்கள். அதுபோதும். முழுமையாகச் சுயநலமாக இருங்கள். ஆம் அதைத்தான் நான் சொல்கிறேன்-முழுமையாகச் சுயநலமாக இருங்கள். என்றாவது ஒருநாள் யாருக்காவது நீங்கள் உதவ நினைத்தால்! என்றாவது ஒருநாள், உண்மை யிலே நீங்கள் பொதுநலத்தோடு இருக்க நினைத்தால், சுயநலத்தோடு இருங்கள்.

உங்கள் இருத்தலை முதலில் மாற்றுங்கள். முதலில் உங்கள் இதயத்திற்குள் ஓர் ஒளியைப் படையுங்கள். சுயம்பிரகாசமாக மாறுங்கள். அப்புறம் நீங்கள் பிறர்க்கு உதவலாம். கவலை இல்லாமல் பிறருக்கு உதவ அப்போது உங்களால் முடியும். ஏனென்றால்/ கவலை ஒருவருக்கும் ஒருபோதும் உதவுவதில்லை. யாரோ ஒருவர் இறந்து கொண்டிருக்கிறார். அவர் அருகில் அமர்ந்து நீங்கள் கவலைப்படுகிறீர்கள். இது எந்த வகையில் உதவப் போகிறது. நோயாளி இறந்து கொண்டிருக்க டாக்டர் கவலைப்பட்டால் அது எந்த வகையிலும் உதவப் போவ தில்லை. எவ்வளவு அதிகம் அவர் கவலைப்படுகிறார் என்பது பிரச்சினையில்லை. அவர் ஏதாவதொன்று செய்ய வேண்டும். இறந்து கொண்டிருக்கும் நோயாளியைப் பார்க்கத் தேவையான டாக்டர், கவலைப்படாமலிருக்க அறிந்தவராக இருக்கவேண்டும். அப்போதுதான் அவர் நோயாளிக்கு உதவிகரமாக இருப்பார். ஏனென்றால் அப்போது நோயை அவர் பிழையின்றிக் கண்டுபிடிப்பார். சரியான மருந்தும் கொடுப்பார். அதனால் தான் மனைவி நோயாளியாக இருந்தால் சொந்தக் கணவன் டாக்டராய் இருந்தால் அவரால் உதவி அதிகமாய் இருக்காது. மனைவி பற்றி மிகவும் கவலைப்படுவார். விருப்புவெறுப்பற்ற வேறு ஒரு டாக்டர் தேவைப்படுகிறார்.

ஒரு குழந்தைக்கு அறுவைச் சிகிச்சை தேவைப்படுகிறது. அவர் தந்தை மிகப்பெரிய சர்ஜன். ஆனாலும் அக்குழந் தைக்கு அறுவைச்சிகிச்சை செய்ய அவர் அனுமதிக்கப்பட முடியாது. ஏனென்றால் அவர் அதிகமாகக் கவலைப் பட்டுக் கொண்டிருப்பார். அவர் கைகள் நடுங்கிக் கொண் டிருக்கும்-அவர் சொந்தக் குழந்தை. அவரால் வெறும் பார்வையாளராய் இருக்க முடியாது. அவர் மிகவும் ஈடுபட்டவர். அவர் அந்தக் குழந்தையைக் கொன்று விடுவார். வேறு ஒருவர் தேவைப்படுகிறார்- அவர் விருப்பு வெறுப்பற்றவராக இருக்க வேண்டும். அவர் தொலைவில்-

தனித்து, தூரமாக-எந்தக் கவலையுமின்றி உள்ளவராக இருக்க வேண்டும்.

/எனவே நீங்கள் மனித இனத்திற்கு உண்மையாகவே உதவ விரும்பினால் முதலில் நீங்கள் கவலையற்றவராக ஆகவேண்டும். கவலையற்றவராக ஆவதற்கு முதலில் நீங்கள் தேவையில்லாத கவலைகளை விட்டுவிட வேண்டும். உலகத்தைப் பற்றி நினைக்காதீர்கள். உலகம் ஒரே மாதிரி தொடர்ந்து செல்கிறது; ஒரேமாதிரி தொடர்ந்து செல்லப்போகிறது. முட்டாள்தனமாக இருக்காதீர்கள். எல்லாக் கற்பனை உலகவாதிகளும் ஒரு சிறிது முட்டாள்தனம் உள்ளவர்கள்- ஒருபோதும் நடக்காத ஒன்றை, ஒருபோதும் இதுவரை நடக்காத ஒன்றை அவர்கள் எதிர்பார்க்கிறார்கள்./

/நடக்கக் கூடியதெல்லாம்-யதார்த்தமாக இருங்கள், விஞ்ஞானபூர்வமாக இருங்கள்-நடக்கக் கூடியதெல்லாம். உங்கள் கவலைகளை நீங்கள் செல்ல முடியும். அதனால், சும்மா உங்களைப் பற்றி மட்டுமே கவலைப்படுங்கள். அவற்றிற்கு மேலே செல்ல ஒரு வழி கண்டுபிடியுங்கள். அவற்றைக் கடந்து செல்லும் வழி வகையைக் காணுங்கள். உங்கள் கவலைகளுக்கு அப்பால் நீங்கள் கடந்து சென்று விட்டால், உலகத்திற்கு மகத்தான ஆசிர்வாதமாக இருப்பீர்கள்/

பெரும்பாலான நேரங்களில் பிறர் கண்களுக்கு மட்டும்தான் நான் இருப்பதாக உணர்கிறேன். அவர்களின் எதிர்பார்ப்பிற்கேற்ப நான் மறுசெயல் செய்வதாக உணர்கிறேன், நான் என் 'ஆணவத்தை'க் கடந்து சென்றதாக உணரவில்லை. ஆனால் எனக்குத் 'ஆணவம்' இல்லாதது போல், இருத்தல் இல்லாததுபோல், சாரம் இல்லாததுபோல் உணரவில்லை; நான் மிகவும் உண்மையல்லாத நிலையை உணர்கிறேன். நான்

எங்கிருக்கிறேன். நான் என்ன செய்ய முடியும்? அல்லது செய்யாமல் இருக்க முடியும்?

முதல் விஷயம், பிறர் கண்களுக்கு முன்னால் இருத்தல் என்பது நீங்கள் மட்டுமல்ல-ஒவ்வொருவரும் அந்த வழியில்தான் இருந்து கொண்டிருக்கிறார்கள். அதுதான் இருத்தலின் சாதாரண வழி. நீங்கள் பிறரை ஒரு கண்ணாடி போல் பயன்படுத்துகிறீர்கள். பிறரது கருத்துகள் மிக முக்கியமாக ஆகின்றன. மிகப்பெரிய மதிப்புள்ளதாக ஆகின்றது-ஏனென்றால் அவர்கள் உங்களை வரையறுக்கிறார்கள்; அவைகள் உங்களை வரையறுக்கின்றன.

யாரோ ஒருவர் நீங்கள் மிக அழகாக இருக்கிறீர்கள் என்று சொல்கிறார். அதே கணத்திலேயே நீங்கள் அழகானவர் ஆகிறீர்கள். யாரோ ஒருவர் நீங்கள் முட்டாள் என்று சொல்கிறார். அதே கணத்திலேயே நீங்கள் சந்தேகப்படத் தொடங்குகிறீர்கள். ஒருவேளை நீங்கள் முட்டாளாய் இருக்கலாம். நீங்கள் கோபம் கொள்ளலாம். நீங்கள் மறுக்கலாம். அடி ஆழத்தின் கீழே நீங்கள் உங்கள் நுண்ணறிவு பற்றிச் சந்தேகிக்கத் தொடங்கி விட்டீர்கள். யாரோ ஒருவர், நீங்கள் மிகவும் புனிதமானவர் என்கிறார். உடனே நீங்கள் ஒரு புனிதமான மனிதர்போல் நடக்கத் தொடங்குகிறீர்கள். ஏனென்றால் நீங்கள் உங்கள் பிம்பத்தைக் காக்க வேண்டுமே.

ஒருமுறை இந்தச் சமூகம் உங்களைக் குற்றவாளி என்று தீர்மானித்து விட்டால், நீங்கள் குற்றவாளி போலவே நடக்கத் தொடங்குகிறீர்கள். ஏனென்றால் இப்போது வேறு வழி என்ன? அவர்கள், ஏற்கெனவே நீங்கள் குற்றவாளி என்று தீர்மானித்து விட்டார்கள். நீங்கள் குற்றவாளியா இல்லையா என்பது பெரிய விஷயம். ஏன் இருக்கக் கூடாது? ஒருமுறைக்குச் சென்றவன், தொடர்ந்து அங்குச் செல்பவன் ஆகின்றான். மீண்டும் மீண்டும் அங்குச் செல்கிறான். ஒருமுறை அவனைக் குற்றவாளி என்று

முத்திரை குத்தித் தண்டித்துவிட்ட பின்பு அவன் தீர்மானிக்கிறான். 'இப்போது, வேறு என்ன செய்வது? 'குற்றவாளியாகவே தொடர்ந்து விடுகிறான். உளவியலாளர் கள் கூறுகிறார்கள்./ குடும்பத்தில் உங்களை முட்டாளா கவோ கோமாளியாகவோ நடத்தினார்கள் என்றால் மெல்ல மெல்ல நீங்கள் அதே பாத்திரத்தை வகிக்கத் தொடங்குகிறீர்கள். நீங்கள் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும் அதை. ஏனென்றால் நீங்கள் யார் என்று உங்களுக்குத் தெரியாது. குறைந்தபட்சம் மக்கள் உங்களை முட்டாள் என்றாவது அழைக்கிறார்கள். அவர்கள் யார் என்று உங்களுக்குத் தெரியாது. அவர்கள் குறிப்பிட்ட வரையறை கொடுத்திருக்கிறார்கள், உங்களுக்கு! நீங்கள் அவர்களை நம்பலாம். ஒரு தடவை, ஒரு சிறுபையனிடம் அவன் முட்டாள் என்று சொல்லப்படுகிறது-வீட்டில், பள்ளியில்- முட்டாள்தனமாக அவன் நடக்கத் தொடங்கு கிறான். அது அவன் வரையறை ஆகிறது. இல்லை யென்றால் அவன் யாரென்று அவன் அறியான்.

புரிந்து கொள்ள வேண்டிய /முதல் விஷயம்-பிறர் கண்களில் மட்டும் இருப்பது நீங்கள் மட்டும் அல்ல, ஒவ் வொருவரும் பிறர் கண்களில் தான் இருந்து கொண்டிருக் கிறார்கள். இதுதான் உலகம். இதைத்தான் இந்தியாவில் சொல்கிறோம். மாய உலோகம், மாயத் தோற்றம். நீங்கள் பிறர் கண்களில் இருக்கிறீர்கள்; பிறர் உங்கள் கண்களில் இருக்கிறார்கள். இது ஒரு பரஸ்பர ஏமாற்று வேலை. அவர்கள் யார் என்று அவர்களுக்குத் தெரியாது; நீங்கள் யார் என்று உங்களுக்குத் தெரியாது. நீங்கள் அவர்களை வரையறுக்கிறீர்கள். அவர்கள் உங்களை வரையறுக்கிறார் கள். இது ஒரு பரஸ்பரத் தந்திரம். அவர்கள் உங்களை வரையறுக்கும் விளையாட்டை விளையாடுகிறார்கள். நீங்கள் அவர்களை வரையறுக்கும் விளையாட்டை விளையாடுகிறீர்கள். எல்லா வரையறைகளும் பொய்.

ஏனென்றால் உங்கள் ஆத்மா எவர் கண்களிலும் பிரதி பலிப்பதில்லை.

நீங்கள் யாரென்று நீங்கள் அறிய விரும்பினால் நீங்கள் உங்கள் கண்களைக் கூட மூடவேண்டியிருக்கும். நீங்கள் உங்களுக்குள்ளே உள்ளார்ந்து செல்ல வேண்டியிருக்கும். இந்த முழு உலகத்தையும் நீங்கள் மறக்க வேண்டியிருக்கும். அவர்கள் உங்களைப் பற்றி என்ன சொல்கிறார்கள் என்பதை மறக்க வேண்டியிருக்கும். நீங்கள் உங்களுக்கு உள்ளே ஆழமாகச் செல்ல வேண்டியிருக்கும். நீங்கள் உங்கள் உண்மைத் தன்மையை நேருக்கு நேர் சந்திக்க வேண்டியிருக்கும்.

அதைத்தான் இங்கே நான் சொல்லிக் கொடுக்கிறேன்- பிறரைச் சாராமல் இருப்பதற்கு, அவர்கள் கண்களில் பார்க்காமல் இருப்பதற்குச் சொல்லிக் கொடுக்கிறேன். அவர்களின் கண்களில் எந்தக் குறிப்புகளும் இல்லை. அவர்கள், உங்களைப் போலவே, ஏதுமறியாதவர்கள். அவர்கள் எப்படி உங்களை வரையறுக்க முடியும்? நான் கேட்டிருக்கிறேன்.

இரண்டு சோதிடர்கள். ஒரு நகரத்தின் குறிப்பிட்ட சந்தைத் திடலில் ஒவ்வொரு நாளும் காலைதோறும் அவர்கள் விஜயம் செய்து மக்களின் வருங்காலம் பற்றிக் கூறுவர். காலையில் அவர்கள் வருவார்கள். ஒருவர் கையை மற்றவரிடம் காட்டி, அந்த நாள் எப்படி, பணம் வருமா, வராதா என்று தெரிந்து கொள்வார்கள்; இவர் அவருக்கும், அவர் இவருக்குமாகச் சோதிடம் கூறிக்கொண்டு- இலவசமாகத்தான்- மகிழ்வாக இருப்பார்கள். அப்புறம் இருவரும் சேர்ந்து பிறரின் எதிர்காலத்தைப் பிட்டுப் பிட்டு வைத்துக் கொண்டிருந்தனர்.

ஒருதடவை இப்படி நிகழ்ந்தது. நான் ஒரு நகரத்தில் தங்கியிருந்தேன். என்னுடைய சில நண்பர்கள் மிகப் புகழ்

வாய்ந்த ஒரு சோதிடரை, என்னைப் பார்க்க அழைத்து வந்திருந்தார்கள். அவருக்கு ஆயிரத்தொரு ரூபாய் கொடுத்தால் தான் அவர் உங்கள் கையைப் பார்ப்பார்.

அவருக்குப் பணம் கிடைக்கும் என்று அவர் எதிர் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் என் கையைப் பார்த்தார். கட்டணம் கேட்டார். நான் சொன்னேன். 'நான் தங்களுக்குக் கட்டணம் தரப்போவதில்லை என்று நீங்கள் பார்க்கவில்லையா? இந்த அளவு கூட நீங்கள் பார்க்க முடியவில்லையா? நீங்கள் உண்மையான சோதிடராக இருந்து என் வருங்காலத்தை அறிபவராக இருந்தால், குறைந்தபட்சம் உங்களுடையதைப் பற்றியாவது அறிந்திருக்க வேண்டுமே!

பிறர் ஒவ்வொருவரின் கண்களிலும் பார்த்து நீங்கள் யார் என்று கண்டுபிடித்துக் கொள்கிறீர்கள். ஆம். சில எதிரொளிகள் இருக்கின்றன. உங்கள் முகம் எதிர் ஒளிர்கிறது. ஆனால் உங்கள் முகம் நீங்கள் அல்ல. நீங்கள் உங்கள் முகத்திற்கு அப்பால் மிகவும் பின்னால் இருக்கிறீர் கள். உங்கள் முகம் நீங்களாக இருக்க முடியாத அளவுக்கு உங்கள் முகம் எவ்வளவோ மாறிக்கொண்டே வந்திருக் கிறது.

உங்கள் தாயின் கருப்பையில் நீங்கள் முதல் நாள் நுழைந்தபோது உங்கள் முகம் எப்படி இருந்தது என்று உங்களுக்கு நினைவிருக்கிறதா? உங்களுக்கு முகமே அப்போது இல்லை. நீங்கள் இருந்தீர்கள். ஆனால் உங்கள் முகம் அங்கே இல்லை. நீங்கள் உங்கள் சாதாரணக் கண்களால் அதைப் பார்த்திருக்க முடியாது. ஒரு நுண்பெருக்காடி பார்க்க உதவியிருக்கக் கூடும். அப்போது அங்கு முகம் இல்லை; நீங்கள் ஓர் உருவாயிருந்தீர்கள். ஓர் உயிரணுவாய் இருந்தீர்கள். ஆனால் நீங்கள் அங்கு இருந்தீர்கள்.

பிறகு நீங்கள் வளரத் தொடங்கினீர்கள். பல முகங்கள் கடந்தன. அதன்பின்பு நீங்கள் பிறந்தீர்கள். நீங்கள் பிறந்த அன்று இருந்த உங்கள் படத்தை யாராவது கூறினால் உங்கள் தாயும் தந்தையும் அது நீங்கள் என்றால் நீங்கள் நம்பலாம். ஆனால் அது நீங்கள்தான் என்று உங்களால் அடையாளம் காணமுடியாது. நிறைய மாற்றம். உங்கள் முகம் ஒரு தொடர்மாற்றம். ஒவ்வொரு நாளும் அது மாறிக் கொண்டே இருக்கிறது. ஒவ்வொரு கணமும் மாறிக் கொண்டே இருக்கிறது.

நீங்கள் முகம் அல்ல. எங்கோ ஓரிடம் ஆழத்தில் உங்கள் நனவு மனம் ஒளிந்திருக்கிறது. அது ஒருபோதும் எவருடைய கண்களிலும் எதிரொளிர்வதில்லை. ஆம் சில விஷயங்கள் பிரதிபலிக்கின்றன. உங்கள் செயல்கள் நீங்கள் ஏதோ ஒன்று செய்கிறீர்கள். அது பிறர் கண்களில் பிரதிபலிக்கிறது. ஆனால் உங்கள் செயல் நீங்கள் அல்ல. உங்கள் செயல்களைக் காட்டிலும் மிகமிகப் பெரியவர் நீங்கள்.

செயல்கள் என்பவை மரத்திலிருந்து விழுந்த உலர்ந்த இறந்த இலைகள் போன்றவை.செயல் என்பது உங்களிடமிருந்து விலகி விழுந்துபோன, இறந்த, உலர்ந்த இலை-அது நீங்கள் அல்ல. உங்கள் செயல்களில் உங்களுக்கான வரையறை இல்லை. நீங்கள் ஒரு மரத்தின் கீழே செல்கிறீர்கள். அங்குள்ள உதிர்ந்த இலைகளை எல்லாம் திரட்டுகிறார்கள். நீங்கள் அந்த மரத்தைப் பற்றி அறிந்து விட்டதாக நினைக்கிறீர்கள். இதுபோன்றதுதான் அது. மரம் மிகமிகப் பெரியது. உயிர்த்துடிப்புள்ளது. எந்தச் செயலும், முடிந்த கணத்திலிருந்து, இறந்த கணத்திலிருந்து, இறந்தது தான். அது இறந்த காலத்தின் பகுதி. அது உயிரோடில்லை. அது ஓர் இறந்த இலை.

ஆம். பல செயல்கள் உங்களுக்கு நிகழ்கின்றன, மரத்திற்கு இலைகள் போல. ஆனால் அவை நிகழ்ந்து கொண்

டிருக்கின்றன. எல்லா இலைகளுமே போய்விடுகின்ற கணங்களும் உள்ளன; அப்போது மரம் நிர்வாணமாய்த் தங்குகிறது; விண்ணுக்கும் எதிரே இலைகளே இல்லாமல்-மரம் காட்சி தருகிறது. அதனால் இலைகள் மரத்தை வரையறுக்க முடியாது. அவை வருகின்றன. போகின்றன. விழும்போது மறைகின்றன. வசந்தகாலத்தில் அவை மீண்டும் தோன்றுகின்றன. பெரிய இலைகள் வருகின்றன. பெரிய பசுமை வருகின்றது. பெரிய மலர்கள் வருகின்றன- ஆனால் மரம் வேறு ஏதோ ஒன்று.

நீங்கள் அந்த உயிர்- மரம். செயல்கள் வருகின்றன. போகின்றன. செயல்கள் உங்களை வரையறுப்பதில்லை. அவைகள் பிரதிபலிக்கப்படுகின்றன. உண்மையில் மக்கள் உங்கள் செயல்களைப் பற்றிப் பேசுவதில்லை. அவர்கள் உங்கள் செயல்களைப் பற்றிய தங்கள் விளக்கங்களைப் பற்றிப் பேசுகின்றனர். 'நீங்கள் என்ன செய்தீர்கள்' என்று சொல்வதில்லை, அவர்கள். உடனடியாக அவற்றை மதிப்பிடுகிறார்கள். உதாரணமாக, நீங்கள் கோபமாக இருந்தால், நீங்கள் ஏதோ கெட்டதைச் செய்வதாக அவர்கள் நினைக்கிறார்கள். உங்கள் கோபத்தை அவர்கள் பிரதிபலிக்கவில்லை. அவர்கள், கோபத்தைப் பற்றிய தங்கள் மனப்பான்மையைப் பிரதிபலிக்கிறார்கள்.

இப்போது நவீன ஆராய்ச்சி மனித மனம் பற்றிக் கூறுகிறது. அதன்படி கோபம் அழகியது; அது கெட்டதில்லை. உண்மையில் கோபத்தை அடக்கி வைப்பது கெட்டது- இது புதிய விளக்கம். நீங்கள் கோபத்தை அடக்கி வைத்தால் அது வெறுப்பாக ஆகிறது. வெறுப்பு என்பது நீண்ட நாட்களாக அடக்கி வைக்கப்பட்ட கோபமே. சும்மா உங்கள் கோபத்தை அப்படியே வெளிப் படுத்திவிட்டால் நீங்கள் வெறுப்பைப் படைக்கும் அளவுக் குப் போதுமான கோபத்தைக் குவித்து வைப்பதில்லை.

ஒரு சிறுகுழந்தையைப் போல்-ஒரு கணத்தில் அவனுக்கு மிகக் கோபம், நெருப்பு, இந்த முழு உலகையே அவன் அழித்து விடுவான் என்பது போன்ற கோபம். ஆனால் அடுத்த கணமே, அதே பையனிடம் விளையாடிக் கொண்டிருக்கிறான் அல்லது உங்கள் மடியில் உட்கார்ந்து கொண்டு சிரித்துக் கொண்டு, திடீர் திடீரென்று சிரித்துக் கொண்டு- அவன் முழுமையாக மறந்துவிட்டான். அவனிடம் கெட்ட எண்ணச் சுமையில்லை-அவன் வெறுப்பைக் கொள்ளவில்லை. எது வந்தாலும் அது கடந்து விடுகிறது. கோபம் வருகிறது தென்றலைப் போல், அது கடந்து விடுகிறது.

உங்கள் கோபத்தை நீங்கள் அடக்கி வைத்தால், நீங்கள் அதைக் குவித்துக் கொண்டே போகிறீர்கள். உள்ளுக்குள் அது குவிந்து கொண்டே போகிறது. அது பிறகு ஒருநாள் வெறுப்பாக வெடிக்கிறது. மிக எளிதில் கோபப்படுகிற மனிதன் ஒருபோதும் கொலை செய்ய முடியாது. ஒரு போதும் கோபம் கொள்ளாத, எப்போதும் கட்டுப்பாட்டில் இருக்கும் மனிதனிடம்- ஜாக்கிரதையாக இருங்கள். அவன் யாரையாவது கொலை செய்யக்கூடும். ஏனென்றால், அவன் குவித்துக் கொண்டிருக்கிறான்.

இப்போது இது ஒரு புதிய விளக்கம். இது சரியா தவறா என்று நான் கூறவில்லை. நான் என்று நான் கூறவில்லை. நான் சொல்ல வருவது விளக்கங்கள் மாறுகின்றன. இறந்த காலத்தில் கோபம் கெட்டது; கோபக்காரன் ஒரு கெட்ட மனிதன். இப்போது மனித நேயசக்தி இயக்கம் புதிய விளக்கம் தந்துள்ளது. அவர்கள் சொல்கிறார்கள். கோபம் நல்லது. அது சும்மா உயிர்த்துடிப்பை வெளிப் படுத்துகிறது. அது தூயசக்தி. அது ஒரு செய்தித் தொடர்பு, அது இயற்கையானது. அது மனிதத் தன்மையுடையது. எந்தத் தவறும் அதில் இல்லை. அடக்கிவைக்காதீர்கள்; அனுபவியுங்கள். புதிய உளவியல் கூறுகிறது; நீங்கள்

கோபத்தை அனுபவித்தால் காதலை அனுபவிக்கும் தகுதி அதிகம் படைத்தவர்கள் ஆவீர்கள். பழைய உளவியல் பொதுவாகக் கூறியது:

நீங்கள் கோபம் கொண்டால் எல்லா அன்பையும் இழந்து விடுவீர்கள். உங்கள் அன்பு அப்புறம் மறைந்து விடும். இப்போது புதிய விளக்கம் முழுமையாக மாறிவிட்டது. இப்போது நீங்கள் கோபத்தை அடக்கினால், வெறுப்புள்ளவராக ஆவீர்கள். வெறுப்பு குவிக்கப்படும். கோபத்தை வெளிப்படுத்தி விட்டால், அது ஒன்றுமில்லை, அன்பின் வெளிப்பாடு தான்.

உண்மையில் யார்மீது உங்களுக்குக் கோபம் வருகிறது. நீங்கள் அதிகமான அக்கறை கொண்டுள்ள நபரிடம் தான். இல்லையென்றால் நீங்கள் கவலைப்பட மாட்டீர்கள். உங்கள் மகன் ஏதோ ஒன்று செய்கிறான். நீங்கள் கோபம் கொள்கிறீர்கள். ஏனென்றால் நீங்கள் அக்கறை செலுத்து கிறீர்கள். நீங்கள் நேசிக்கிறீர்கள். உங்கள் மனைவி ஏதோ ஒன்றைச் செய்கிறாள். நீங்கள் மிகவும் கோபிக்கிறீர்கள், நீங்கள் அவளை நேசிக்கிறீர்கள். அக்கறையுடன் இருக்கிறீர் கள். அண்டைவீட்டுக்காரரின் மனைவி அதே விஷயத் தைச் செய்கிறாள். செய்யட்டும். யாருக்கென்ன? உங் களுக்கு ஒருபோதும் கோபம் வருவதில்லை. ஏனென்றால் எந்த உறவுமில்லை. கோபம் என்பது உறவு.

மீண்டும் நினைவுபடுத்துகிறேன், யார் சரி யார் தவறு என்று நான் கூற வரவில்லை. விளக்கங்கள் மாறுகின்றன என்று தான் நான் சொல்ல வருகிறேன். மக்கள் உங்களு டைய செயல்களையோ அல்லது உங்களையோ பிரதி பலிப்பதில்லை. அவர்கள் தங்கள் விளக்கங்களைதான் பிரதிபலிக்கிறார்கள். இப்போது ஒரு வயதான, மரபு வாதியான மனிதர் நீங்கள் கோபிப்பதைப் பார்க்கிறார், திடீர்க் கோபத்தில் குதிக்கிறீர்கள். கூத்தாடுகிறீர்கள். பொருள்களைத் தூக்கியெறிகிறீர்கள். அவர் சொல்வார்

நீங்கள் பைத்தியம் என்று. புதிய மனித நேயவாதி சொல்வார், நீங்கள் மனிதத்தன்மையுள்ளவர் என்று.

நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அப்போது தான் பயிற்சி முடித்து வந்த ஒரு புது நர்ஸ். முதல் நாளிலேயே கடினமான முரட்டு நோயாளியைக் கவனித்துக்கொள்ள வேண்டிய துரதிர்ஷ்டச் சூழ்நிலை. அவன் ஒவ்வொன்றைப் பற்றியும் குறை கூறினான்; ஒரு சிறிது தாமதம் கூட இன்றி அனைத்தும் உடனுக்குடன் அப்படி அப்படியே நடக்க வேண்டும் என்று எதிர்பார்த்தான்; ஆனால் அவன் அங்கிருந்தது அனைவருக்குமே 'இடைஞ்சல்'தான்.

பாவம்! புது நர்ஸ். சகிப்புத்தன்மைக்கு அப்பாற்பட்டும், நர்ஸ்-நோயாளி உறவு பற்றிய சொற்பொழிவுகளை நினைவு படுத்திக் கொண்டும் எவ்வளவோ பொறுத்துப் பார்த்தாள். இறுதியாகக் கட்டுப்பாட்டை இழந்தாள். கோபமாக முணுமுணுத்தாள் "ஆ, நீங்க. நீங்க மனுஷன்!"

இப்போது 'மனுஷன்' என்ற சொல் கண்டிக்கும் பொருளில் "ஆ-நீங்க-நீங்க... மனுஷன்!" உங்கள் விளக்கத்தைப் பொருத்துப் பொருள் மாறுபடுகிறது.

உங்கள் இருத்தல் ஒருபோதும் பிறர் கண்களில் பிரதி பலிக்கப்படுவதில்லை. உங்கள் இருத்தலை நீங்கள் ஒரே ஒரு வழியில் தான் அறியமுடியும்-எல்லாக் கண்ணாடி களுக்கும் சேர்ந்து உங்கள் கண்களை மூடிக் கொண்டுவிட வேண்டும். நீங்கள் உங்கள் சொந்தமான உள்ளார்ந்த இருத்தலை நேரடியாகப் பார்க்க-நுழைந்துவிட வேண்டும். யாரும் எந்த ஆலோசனையும் அது என்ன என்று-கொடுக்க முடியாது! நீங்கள் அதை அறிய முடியும். ஆனால் பிறரிடமிருந்து அல்ல. அது இரவல் அறிவாக இருக்க முடியாது. நேரடி அனுபவமாகத் தான் அது இருக்கமுடியும். உடனடியான நேரடியான அனுபவித்தல்.

ஆகவே அதுபற்றி எந்தக் கவலையும் படவேண்டாம்.

**நான் என் ஆணவத்தைக் கடந்து சென்றதாக நினைக்கவில்லை. ஆனால் எனக்குத் ஆணவம் இல்லாததுபோல், இருத்தல் இல்லாதது போல், சாரம் இல்லாதது போல் உணர்கிறேன். மிகவும் உண்மையற்றதாக உணர்கிறேன். நான் எங்கே இருக்கிறேன்?**

இந்த இரண்டு உலகங்களுக்கும் இடையில் நீங்கள் இருக்கிறீர்கள். ஒவ்வொரு தியானிக்கும் இது நிகழ்கிறது. ம்? பிறரிலிருந்து திரட்டிய ஓர் அடையாளம் நீங்கள் பெற்றிருந்தீர்கள். அது பிறர் கருத்துகளிலிருந்து தொகுக்கப் பட்டது. பிறகு உள்ளே நகர்வதற்கு ஆரம்பிக்கிறீர்கள். அந்த அடையாளம் சிறிது சிறிதாக மறையத் தொடங்கிவிடுகிறது. உங்களுக்குத் தெரியாது நீங்கள் யாரென்று, உங்களைப் பற்றி நீங்கள் அறிவதெல்லாம் மறைந்து கொண்டே வருகிறது, ஒருநாள் இரண்டிற்கும் இடையில் நிற்கிறீர்கள்.

இது கடந்து செல்வது நிகழும் கணம். நீங்கள் உள்ளே வரவில்லை. இல்லாமையை மிகத் தொலைவில் விட்டு விட்டீர்கள். முற்றத்தில் நீங்கள் நின்று கொண்டுள்ளீர்கள். உலகம் இனிமேல் இல்லவே இல்லை. இன்னும் நீங்களும் கூட இல்லை. இந்தக் கணத்தில் மிகவும் உண்மையற்ற தாகத் தோன்றுகிறது. ஒரு பொய்த்தோற்றம் தான் அது. ஏனென்றால் ஒருவர் யார் என்னும் எண்ணம் எதுவும் இல்லை. ஒருவர் கொண்டிருந்த எண்ணங்கள் எல்லாம் காணாமற் போய்விட்டன.

உண்மையில் யாரும் ஆணவத்தைக் கடந்து செல்ல முடியாது; ஏனென்றால் ஆணவம் என்று ஒன்று இருக்க வில்லை. 'ஆணவத்தைக் கடந்து செல்லுங்கள்' என்று நாம் சொல்லும்போது, நாம் சொல்ல வருவது ஆணவம் என்று ஒன்று இல்லை என்பதை அறிந்து கொள்வதுதான். இது ஓர் உண்மையல்ல. கடந்து செல்லவோ, விட்டுவிடவோ. இது ஒரு பொய்யான எண்ணம். அதை நீங்கள் சும்மா

புரிந்துகொள்ள வேண்டும். அந்தப் புரிந்து கொள்ளலே கடந்து செல்லல்.

இப்போது நான் மீண்டும் ஒருமுறை முழுக் கேள்வியையும் திருப்பிச் சொல்கிறேன்.

**பெரும்பாலான நேரங்களில் பிறர் கண்களுக்கு மட்டும்தான் நான் இருப்பதாக உணர்கிறேன். அவர்களின் எதிர்பார்ப்பிற்கேற்ப நான் மறு செயல் செய்வதாக உணர்கிறேன். நான் என் 'ஆணவ'த்தைக் கடந்து சென்றதாக உணரவில்லை. ஆனால் எனக்குத் ஆணவம் இல்லாதது போல், இருத்தல் இல்லாதது போல், சாரம் இல்லாதது போல், உணரவில்லை. நான் மிகவும் உண்மையல்லாத நிலையை உணர்கிறேன். நான் எங்கிருக்கிறேன்? நான் என்ன செய்ய முடியும்? அல்லது செய்யாமல் இருக்க முடியும்?**

நீங்கள் இப்போது நுழைவாயிலில் இருக்கிறீர்கள். நீங்கள் புரிந்து கொண்டு விட்டீர்கள். பிறர் கண்களில் தெரியும் உங்கள் அடையாளம் பொய்யானது என்று. ஆகவே நீங்கள் உங்கள் ஆணவத்தைப் படைக்க முடியாது. ஆணவத்தின் ஒரே உணர்வு மறைந்துவிட்டது. நீங்கள் உண்மையற்றதை உணர்கிறீர்கள். நீங்கள் உண்மைத் தன்மையாக இப்போது வரை இருந்து கொண்டிருக்கிறீர்கள் என்று உங்களுக்குத் தெரியாது. ஆனால், நான் அறிகிறேன். நீங்கள் எங்கே இருக்கிறீர்கள் என்று. நீங்கள் இரண்டு உலகங்களுக்கும் நடுவில் இருக்கிறீர்கள். இந்த உலகமும் அதுவும். நீங்கள் இல்லறத்திற்கும் துறவறத்திற்கும் இடையில் கடந்து செல்லும் கணத்தில் இப்போது இருக்கிறீர்கள். அதாவது உலகத்திற்கும்– உண்மைத் துறவறத்திற்கும் இடைவெளியில் நீங்கள் இருக்கிறீர்கள். இப்போது, இந்தக் கணம் நீங்கள் எதையுமே செய்ய வேண்டும் என்று எதிர் பார்க்கப்படவில்லை. ஏனென்றால் எதைச் செய் தாலும் மீண்டும் இந்த உலகில் எடுத்துச் செல்லப்பட்டு

விடுவீர்கள். 'செய்தல்' மக்களை உலகத்திற்கு இட்டுச் செல்கிறது. செய்யப்பட வேண்டும் என்று உங்களிடம் எதிர் பார்க்கப்படுவது ஒன்றுமில்லை. நீங்கள் எதையும் செய்யா மல் இருப்பதற்காக இருக்கிறீர்கள். நீங்கள் காத்திருக்க வேண்டும். கவனிக்க வேண்டும். எதுவும் செய்யாமல் இருக்க வேண்டும். செய்யாதிருத்தல் உதவும்.

எதையும் செய்யாதீர்கள். சூழ்நிலையை மாற்ற முயலாதீர்கள். ஏனென்றால் மாற்ற முயன்றால் மீண்டும் உங்கள் சொந்த, அறிந்த பழகிய உலகத்திற்கே சென்று விழுந்து விடுவீர்கள். மீண்டும் உங்கள் பழைய அடை யாளத்துடன் ஒட்டிக் கொண்டு விடுவீர்கள். சும்மா காத்திருங்கள். சும்மா காத்திருத்தலால், மெல்ல மெல்ல நீங்கள் உள்முக உலகத்தில் நழுவி விடுவீர்கள். இதற்காக எதையும் செய்யத் தேவையில்லை. செய்யாதிருத்தல் உதவுகிறது.

ஓடை ஒன்றில் தூர் சேர்ந்துவிட்டது போன்றது தான் இது. அதைச் சுத்தம் செய்ய நீங்கள் என்ன செய்வீர்கள். நீங்கள் சும்மா கரைமீது உட்கார்ந்து கொள்ளுங்கள். மெல்ல மெல்ல தூர்படிந்து கொள்கிறது. மீண்டும் ஓடை தெளிவாக ஓடுகிறது. பளிங்கு போலத் தெளிவாக ஓடுகிறது. சற்றுக் காத்திருங்கள். இந்த இரண்டு உலகங்களுக்கு இடையில் அமர்ந்து கொள்ளுங்கள். நான் அறிவேன், இது மிகவும் அசௌகரியமானதென்று, மிகவும் வசதிக்குறை வானது என்று, ஒருவர் ஏதாவது உண்மைத்தன்மையை விரும்புகிறார்; இது மிகவும் உண்மையற்றது. ஆனால் காத்திருங்கள்.

இதுதான்-பாதையில்-கடுந்தவம்-தபஸ்சர்யா என்று அழைக்கப்படுகிறது. இதுதான் கடினச் செயல், உண்மை யான கடினச் செயல். பழசை ஒருவன் இழந்து கொண் டிருக்கிறான்; புதுசு எதுவும் வரவுமில்லை. பழசிலிருந்து ஒரு தாண்டு தாண்டியாகிவிட்டது. ஆனால் எங்குத்

தரையிறங்க வேண்டும் என்று தெரியவில்லை. அந்தரத்தில் அங்குமின்றி இங்குமின்றித் தொங்கலில்- திரிசங்கு சொர்க்கம். இது மிகவும் வசதிக் குறைவானது தான். ஆனால் சற்றுக் காத்திருங்கள். விஷயங்கள் தாமாகவே சரியாகும்.

உள்முக உலகத்தில் செயல் தேவைப்படவில்லை. செயலற்ற தன்மையே உதவிகரம். செயலின்மையே உள்முக உலகத்தின் செயல். லா வோட்சூ, இதைப் 'பூ வேய்' என்று அழைக்கிறார். செயலற்ற செயல், செய்யாத செயல். நீங்கள் எதுவும் செய்யாதீர்கள். நீங்கள் சும்மா காத்திருங்கள். உங்கள் காத்திருத்தலினால் செயல்கள் நடைபெறும்.

பிறரது அபிப்பிராயங்களிலிருந்து நீங்கள் சுதந்திரம் பெற்றால் நல்லது. பொய்யாக உண்மையாக இருப்பதை விடச் சிறந்தது உண்மையற்றவராக இருப்பது. உங்கள் உண்மையற்ற தன்மைக்குள்ளே உண்மைத்தன்மை இருக்கிறது. பிறர் கண்களில் நீங்கள் உண்மையாகக் காட்சியளிக்கையில் நீங்கள் பொய்யாக உண்மையாய் இருக்கிறீர்கள். நீங்கள் உண்மையாக இருப்பதாகத் தோற்ற மளிக்கிறீர்கள். நீங்கள் உண்மையாய் இல்லை. இப்போது நீங்கள் புரிந்துகொண்டு விட்டீர்கள். ஜாக்கிரதை கண்ணி பெரியது. உங்களைச் சுற்றிலும் உள்ளது. கண்ணியில் உங்களை விழவைக்க, பலவந்தமாகப் பிடித்துத் தள்ளத் தயாராக இருக்கின்றனர். ஏனென்றால் தங்கள் கண்ணியி லிருந்து நீங்கள் தப்பிப்பதை யாருமே விரும்பவில்லை. தந்தை தன் வழியில் விஷயங்களைச் செய்து அவர் எண்ணும்படி உங்களை நடக்கச் செய்யத் தயாராகக் காத்திருக்கிறார். தாய் தன் விருப்பப்படி நீங்கள் செயல்பட வேண்டும் என்று விரும்புகிறார்; மனைவி தனக்கென்று சில யோசனைகளைக் கொண்டுள்ளாள். உங்கள் குழந்தை கள், அவர்களும் தங்கள் சொந்த எண்ணங்களைக் கொண்டுள்ளார்கள். ஒவ்வொருவரும் எண்ணுகிறார்கள்.

தங்களிடம் தான் சரியான குறிப்பு உள்ளது என்று; அவர்கள் அனைவரும் உங்களைப் பைத்தியமாக்கத் துரத்திக் கொண்டுள்ளார்கள்.

நான் கேட்டிருக்கிறேன்.

அந்த வழக்கமான திரை போடப்பட்டது, நோயாளியின் படுக்கையைச் சுற்றிலும். அளக்கும் நாடாவைக் கையில் எடுத்துக் கொண்டு நர்ஸ் உள்ளே வந்தாள். நோயாளி அமைதியாக இருந்தான். நோயாளியை நர்ஸ் உச்சி முதல் உள்ளங்கால் வரையும் அந்தத் தோள் இந்தத் தோள் வரையும் துல்லியமாக அளந்தாள். இதுவரை நோயாளி எதுவும் எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை. ஆனால் நோயாளியின் பெரிய தொப்பையை மெத்தையிலிருந்து நீளவாக்கில் அளந்தாள்.

'என்ன செய்து கொண்டிருக்கின்றீர்கள், கொஞ்சம் சொல்லிவிட்டுத்தான் செய்யுங்களேன்' பலவீனமாக உரைத்தான் நோயாளி நர்ஸிடம்; 'உங்களை நான் அளக்கிறேன், உங்களுக்குச் சவப்பெட்டி செய்வதற்காக' நர்ஸ் தெளிவாகக் கூறினாள். 'ஆனால் நான் சாக வில்லையே' இது நோயாளி.

'சும்மா இருங்கள். நம்ம டாக்டரை அப்போ முட்டாளாக்கப் பார்க்கிறீர்களா?' நர்ஸ் உறுதியாகக் கூறினாள்.

நீங்கள் எதைச் செய்தாலும், நீங்கள் தவறாக இருப்பீர்கள். ஏனென்றால் யாராவது ஒருவரது விருப்பத்துக்கு, எண்ணத்திற்கு மாறாக நீங்கள் சென்று கொண்டிருப்பீர்கள். எல்லாரையும் திருப்திப்படுத்துவது எவருக்கும் கடினமான காரியம். எல்லாரையும் திருப்திப்படுத்திக் கொண்டே சென்றால், உங்கள் வாழ்க்கையையே சும்மா வீணாக்கிவிடுவீர்கள். யாரும் மகிழ்வடைய மாட்டார்கள். யாரையும் மகிழ்விக்க முடியாது. யாரையும் மகிழ்விப்பது என்பது அசாத்தியம்.

பிறர் எதிர்பார்ப்புகளை நிறைவேற்றிக் கொண்டிருப் பதை நிறுத்துங்கள். அதுதான் நீங்கள் தற்கொலை செய்து கொள்ளக்கூடிய ஒரே வழி. நீங்கள் எவருடைய எதிர் பார்ப்புகளை நிறைவேற்றுவதற்காகவும் இங்கே இல்லை; அதே நேரத்தில் உங்கள் எதிர்பார்ப்புகளை நிறைவேற்று வதற்கு வேறொருவரும் இல்லை. பிறரது எதிர்பார்ப்பு களுக்கு ஒருபோதும் நீங்கள் பலியாகாதீர்கள். எவரையும் உங்கள் எதிர்பார்ப்புகளுக்கு நீங்கள் பலியாக்காதீர்கள்.

இதைத்தான் நான் தனிநபர்த்தன்மை என்கிறேன். உங்கள் சொந்தத் தனிநபர்த் தன்மையை மதியுங்கள். அடுத்தவர்களுடைய தனிநபர்த்தன்மையையும் மதியுங்கள். ஒருபோதும் எவருடைய வாழ்விலும் குறுக்கிடாதீர்கள். வேறெவரையும் உங்கள் வாழ்வில் குறுக்கிட விடாதீர்கள். அப்போதுதான் என்றாவது ஒருநாள் ஆன்மிகத்தில் நீங்கள் வளரமுடியும்.

இல்லையென்றால் தொண்ணூற்றி ஒன்பது மக்கள் சும்மா தற்கொலை செய்து கொள்வார்கள். அவர்களது முழு வாழ்க்கையும் வேறெதுவுமில்லை- மெதுவான தற்கொலை. அந்த எதிர்பார்ப்பு... இந்த எதிர்பார்ப்பு... என்று நிறைவேற்றிக் கொண்டே ஒருநாள் தந்தை, ஒருநாள் தாய், ஒருநாள் மனைவி, கணவன், பிறகு வருகிறார்கள் குழந்தைகள். அவர்களும் எதிர்பார்க்கிறார்கள். நீங்கள் அவர்களது எதிர்பார்ப்புகளைப் பூர்த்தி செய்யவேண்டும். பிறகு சமூகம், குரு, அரசியல்வாதி, சுற்றியுள்ள அனைவரும் எதிர்பார்த்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். முழு உலகமும் உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது, அதைச் செய்ய, இதைச் செய்ய. நீங்கள் அவர்களது எதிர்பார்ப்புகளைப் பூர்த்தி செய்யவில்லையென்றால்... நீங்கள் அவர்களது எதிர்பார்ப்புகளைப் பூர்த்தி செய்ய முடியாது. ஏனென்றால் அவை ஒன்றுக்கொன்று முரண்பட்டவை.

நான் ஒரு குடும்பத்தில் தங்கிக் கொண்டிருந்தேன். சிறிய பையனைக் கேட்டேன். 'நீ என்ன ஆகப்போகிறாய்' என்று. அவன் சொன்னான். "எனக்குத் தெரியாது. நான் நினைக்கிறேன், பைத்தியமாகிவிடுவேன்" என்று. 'என்ன சொல்கிறாய்' இதுநான். அவன் சொன்னான். நான் என்ஜினியர் ஆக வேண்டுமென்கிறார் தந்தை. டாக்டர் என்கிறார் தாய். வியாபாரி என்கிறார் மாமா. ஏனென்றால் அதுதான் எளிதான வேலையாம். அதெல்லாம் எனக்குத் தெரியாது. ஆனால் ஒன்று மட்டும் எனக்கு நன்றாகத் தெரியும். இந்த எல்லா ஆசைகளும் நிறைவேற்றப்பட்டால் நான் பைத்தியமாகி விடுவேன்!'

இப்படித்தான் பலர் பைத்தியமாகியிருக்கிறார்கள். இப்படிச் சொல்லும்போது உங்களை விதிவிலக்காக்கிக் கொள்ளாதீர்கள். ஒவ்வொருவருடைய எதிர்பார்ப்புகளையும் நிறைவேற்றிக் கொண்டு நீங்கள் பைத்தியமாகியிருக்கிறீர்கள். ஆனால் ஒருவருடைய எதிர்பார்ப்பையும் பூர்த்தி செய்யவில்லை. ஒருவரும் மகிழ்ச்சியாய் இல்லை. இதுதான் அழகு. நீங்கள் இழந்தீர்கள். முழுமையாக அழிந்து விட்டீர்கள். ஆனால் ஒருவருக்கும் மகிழ்ச்சி இல்லை.

ஏனென்றால் தங்களோடு தாங்களே மகிழாத மக்கள் எந்த வழியிலும் மகிழமுடியாது. நீங்கள் என்ன செய்தாலும் உங்களோடு மகிழாமல் இருக்க வழி தேடுவார்கள் அவர்கள். ஏனென்றால் அவர்கள் மகிழ முடியவில்லை அல்லவா? மகிழ்ச்சி என்பது ஒரு கலை. அதை ஒருவர் கற்றுக்கொள்ள வேண்டும். உங்கள் செயலிலோ செய்யாமையிலோ அது சிறிதும் இல்லை.

**கல்யாணத்தில், காதல் அழிவடைகிறது என்றால் கல்யாணம் இன்றி நாளுக்கு நாள் அடிப்படையில் நம் காதலைப் பகிர்ந்துகொள்ள விரும்பி வாழும்போது குழந்தைகளைப் பெற்றுத் தாய் தந்தையராக எப்படி வாழப்போகிறோம்?**

நான் ஒருபோதும் கூறவில்லை காதல் கல்யாணத்தில் அழிகிறது என்று. எப்படிக் கல்யாணம், காதலை அழிக்கும்? ஆமாம். அது கல்யாணத்தில் அழிக்கப்படுகிறது. அது அழிக்கப்படுகிறது. உங்களால், கல்யாணத்தால் அல்ல, அது அழிக்கப்படுகிறது துணைவர்களால் (கணவன்-மனைவியால்) கல்யாணம் எப்படிக் காதலை அழிக்க முடியும்? அது உங்களால் அழிக்கப்படுகிறது. ஏனென்றால் உங்களுக்குக் காதல் என்றால் என்ன என்று தெரிய வில்லை. நீங்கள் அறிந்தது போல் பாசாங்கு செய்கிறீர்கள். நீங்கள் அறிந்த தாக நீங்கள் நம்புகிறீர்கள். நீங்கள் கனவு காண்கிறீர்கள், நீங்கள் அறிந்ததாக. ஆனால் காதல் என்ன என்று உங்களுக்குத் தெரியாது. காதல் கற்றுக் கொள்ளப் பட வேண்டும். காதல்தான் மகத்தான கலை, உலகிலேயே.

மக்கள், ஆடிக்கொண்டிருக்கிறார்கள். யாரோ, உங்களை, வாருங்கள் 'ஆடுங்கள்' என்று அழைக்கிறார். 'எனக்குத் தெரியாது' என்கிறீர்கள் நீங்கள். நீங்கள் சும்மா மேலும் கீழும் குதித்துவிட்டுக் கையைக் காலை ஆட்டினால் அதனை நடனம் என்று யாரும் ஏற்பதில்லை; உங்களைக் கோமாளி என்று தான் நினைப்பார்கள், நீங்கள் உங்களுக்கு நடனம் தெரியும் என்று நிரூபித்தது அர்த்தமில்லை. நடனம் ஒரு கலை. அதற்கென்று ஒரு நளினம் உள்ளது; குறிப்பிட்ட பாவனைகள், அசைவுகள் உள்ளன. அதைக் கற்றுக் கொண்டு உங்கள் உடலுக்கும் பயிற்சி அளிக்க வேண்டும்.

தூரிகை இருக்கிறது. வரைய துணி இருக்கிறது. வண்ணம் இருக்கிறது. நீங்கள் உடனே ஓவியம் வரைந்து விட முடியுமா? எல்லாம் இருக்கிறது. நான் ஏன் வரையக்கூடாது எனச் சொல்லமாட்டீர்கள்; அப்படியே வரைந்தாலும் அது ஓவியம் ஆகாது. அது ஒரு கலை. கற்க வேண்டும். பின் வரைதல் சிறந்தது.

நீங்கள் ஒரு பெண்ணைச் சந்திக்கிறீர்கள். வரைதுணி. நீங்கள் உடனே காதலர் ஆகிறீர்கள்; வரையத் தொடங்கு

கிறீர்கள். அவளும் உங்கள் மீது வரையத் தொடங்குகிறாள். நீங்கள் இருவரும் நிரூபிக்கப்பட்ட முட்டாள்கள். வண்ண முட்டாள்கள். விரைவாகவோ, தாமதமாகவோ என்ன நிகழ்கிறது என்று புரிந்து கொள்கிறீர்கள். நீங்கள் காதல் கலை என்று ஒருபோதும் எண்ணவில்லை. நீங்கள் அந்தக் கலையுடன் பிறக்கவில்லை. உங்கள் பிறப்பிற்கும் அதற்கும் தொடர்பில்லை. நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டும். அது ஒரு தலையாய நுண்கலை. நீங்கள் உள்ளாற்றலோடு பிறந்திருக்கிறீர்கள். நீங்கள் ஒரு நடனக்காரனாகலாம், ஏனெனில் உங்களுக்கு உடம்பிருக்கிறது. நீங்கள் உடலை அசைக்கலாம்; அதனால் நடனக்காரன் ஆகலாம். ஆனால் நடனம் கற்றுக்கொள்ள வேண்டும். நடனம் கற்க மிக்க முயற்சி தேவை. நடனம் அவ்வளவு கடினம் இல்லை. ஏனெனில் ஒருவர் மட்டும் ஈடுபட்டால் போதும். காதல் மிகமிகக் கடினம். இது வேறொருவரோடு சேர்ந்து நடனம் ஆடுவது போன்று. மற்றவரும் நடனம் பற்றி அறிந்து கற்றவராக இருக்க வேண்டும். ஒருவரோடு பொருந்துவது ஒரு மிகப் பெரிய கலை. இரண்டு நபர்களுக்கு இடையில் இணக்கம் ஏற்படுத்துவது... இரண்டு நபர்கள் என்றால் இரண்டு வித்தியாசமான உலகங்கள். இரண்டு உலகங்கள் நெருங்கி வரும்போது மோதல் நிச்சயம். அது நிகழாமல் லிருக்க எப்படி இணக்கம் செய்வது, பிணக்கின்றி என்று நீங்கள் அறிந்திருக்க வேண்டும். காதல் என்பது இணக்கம். மகிழ்ச்சி, ஆரோக்கியம், இணக்கம் எல்லாம் காதலிலிருந்து நிகழ்கிறது. காதலிக்கக் கற்றுக் கொள்ளுங்கள். கல்யாணத் திற்கு அவசரப்படாதீர்கள். கற்றுக் கொள்ளுங்கள். காதலிக்க முதலில் மகத்தான காதலன் ஆகுங்கள்.

அதற்கான தேவை என்ன? பெரிய காதலன் காதலை அளிக்கத் தயாராய் இருக்கிறான். அது திரும்ப வருகிறதா இல்லையா என்று அவன் அக்கறை கொள்வதில்லை. அது எப்போதும் திருப்பி அளிக்கப்படுகிறது. இது விஷயங்களின் இயற்கை.

நீங்கள் மலைகளுக்குச் செல்கிறீர்கள். பாடுகிறீர்கள். பள்ளத்தாக்குகள் பதிலளிக்கின்றன. மலைகளில் எதிரொலிப் புள்ளியைப் பார்த்து இருக்கிறீர்களா? குன்றுகளில்? நீங்கள் கத்துங்கள். ஒவ்வோர் இதயமும் ஒரு பள்ளத்தாக்கு. அதில் காதலை ஊற்றினால், பதிலளிக்கும்.

காதலின் முதல்பாடம் காதலைக் கேட்பது அல்ல. காதலைக் கொடுப்பது. கொடுப்பவர் ஆகுங்கள். மக்கள் நேர் எதிராகச் செய்கிறார்கள். கொடுக்கும்போது கூட அது திரும்பவேண்டும் என்னும் எண்ணத்துடன் தான் கொடுக்கப்படுகிறது. இது ஒரு பேரம். அவர்கள் பகிர்ந்து கொள்வதில்லை. தங்கு தடையின்றிப் பகிர்ந்து கொள்வதில்லை. அவர்கள் நிபந்தனையோடு பகிர்ந்து கொள்கின்றனர். ஒருமூலையில் கவனித்துக் கொண்டே இருக்கின்றனர். அது திரும்பவருகிறதா இல்லையா என்று மிகப் பாவப் பட்ட மக்கள்! காதலின் இயற்கையான இயக்கம் என்ன என்று அவர்களுக்குத் தெரியவில்லை. நீங்கள் பொழியுங்கள், அதுவரும்.

அப்படி வரவில்லையா? எதற்கும் கவலைப்பட வேண்டாம். ஏனென்றால் காதலன் அறிவான் காதலிப்பது மகிழ்ச்சியாக இருப்பதற்கு என்று. அது வருகிறதா? நல்லது. மகிழ்ச்சி பன்மடங்கு ஆகிறது. ஒருபோதும் திரும்பி வரவில்லையென்றாலும் கூட, காதலித்தல் என்ற செயலி லேயே நீங்கள் மிகுந்த மகிழ்ச்சி அடைவீர்கள், பரவசம் கொள்வீர்கள், யார் கவலைப்படுகிறார்கள், வருகிறதா இல்லையா என்று?

காதல் தனக்கே உரித்தான சொந்த உள்ளார்ந்த மகிழ்ச்சியைப் பெற்றிருக்கிறது. நீங்கள் காதலிக்கும்போது அது நிகழ்கிறது. பலனை எதிர்பார்த்துக் காத்திருக்கத் தேவையே இல்லை. மெல்ல மெல்ல மிகுதியாகக் காதல் உங்களை நோக்கித் திரும்ப வருவதை நீங்கள் காணலாம். ஒருவன் காதலிக்கிறான். காதலைப் பற்றி அறிந்து கொள்

கிறான், காதலிப்பதன் மூலம். நீந்துவதன் மூலம் நீச்சல் கற்பதுபோல், காதலிப்பதன் மூலம் காதல் கற்கப்படுகிறது.

மக்கள் மிகவும் கஞ்சத்தனமானவர்கள். யாராவது பெரிய காதலி கிடைப்பதற்காக அவர்கள் காத்திருக்கிறார் கள். அப்புறம் அவர்கள் பின்வாங்கி விடுகிறார்கள். அவர்கள் சும்மா காத்திருக்கிறார்கள். எங்கிருந்தாவது ஏதாவது கிளியோபாட்ரா வருவாள். அப்புறம் தங்கள் இதயத்தைத் திறக்கலாம் என்றிருக்கிறார்கள். ஆனால் நாளடைவில் அவர்கள் எப்படி அதைத் திறப்பது என்று முற்றிலும் மறந்து போய் விடுகிறார்கள்.

காதலின் ஒரு வாய்ப்பைக் கூட இழக்காதே. தெருவில் செல்லும்போது கூட நீங்கள் காதலிக்க முடியும். பிச்சைக் காரனைக் கூடக் காதலிக்க முடியும். அவனுக்கு ஏதாவது நீங்கள் கொடுத்துத்தான் ஆக வேண்டும் என்று கட்டாய மில்லை. குறைந்தபட்சம், நீங்கள் சிரிக்கலாமே. அதற்குச் செலவில்லையே. ஆனால் உங்கள் அந்தப் புன்சிரிப்பே உங்கள் இதயத்தைத் திறக்கிறது. உங்கள் இதயம் அதிக உயிர்த்துடிப்புப் பெறுகிறது. யாராவது ஒருவரின் கையைப் பிடியுங்கள். நண்பர் அல்லது புதியவர். சரியான ஆள் கிடைத்தால் தான் அன்பு செய்ய முடியும் என்று காத்திருக் காதீர்கள். அப்படியானால் சரியான ஆள் கிடைக்கவே கிடைக்க மாட்டான். அன்பு செய்து கொண்டே செல்லுங்கள். எவ்வளவு அதிகமாக நேசிக்கிறீர்களோ, அவ்வளவு அதிகமாக, சரியான ஆள்கிடைப்பது சாத்தியம் ஆகும். ஏனென்றால் உங்கள் இதயம் மலரத் தொடங்கு கிறது. மலரும் இதயம் ஏராளத்தேனீக்களை, அன்பர்களைக் கவர்கிறது. நீங்கள் மிகத் தவறான வழியிலே பயிற்சி கொடுக்கப்படுகிறீர்கள். முதலில், ஒவ்வொருவரும் தான் ஏற்கனவே ஒரு காதலன் என்கிற தவறான பதிவோடு வாழ்கிறீர்கள். நீங்கள் பிறந்தவுடனேயே நீங்கள் உங்களைக் காதலர் என்று எண்ணுகிறீர்கள். அது அவ்வளவு எளிது

அன்று. ஆம் அதில் ஒரு உள்ளாற்றல் உள்ளது. அந்த உள்ளாற்றல் பயிற்சி கொடுக்கப்பட வேண்டும். கட்டுப் படுத்தப்பட வேண்டும். ஒரு விதை இருக்கிறது. அது பூவாக வேண்டும். நீங்கள் உங்கள் விதையை எடுத்துக் கொண்டே செல்லலாம். ஒரு தேனீ கூட வராது. எப்போதாவது விதை களை நோக்கித் தேனீக்கள் வருவதைக் கண்டிருக்கிறீர் களா? அவைகளுக்கு, விதைகளிலிருந்து தான் பூக்கள் வருகின்றன என்று தெரியாதா? ஆனால் பூக்களாக ஆகும் போது அவை வருகின்றன. பூவாக ஆகுங்கள். விதையாகத் தங்கி விடாதீர்கள்.

இரண்டு பேர்கள் தனித்தனியே மகிழ்ச்சியற்றவர்கள், ஒன்றாகச் சேரும்போது ஒருவருக்கொருவர் அதிக மகிழ்ச்சியின்மையைப் படைத்துக் கொள்கிறார்கள். அது கணக்கு. நீங்கள் மகிழ்ச்சியற்றவர், உங்கள் மனைவி மகிழ்ச்சியற்றவர்; நீங்கள் இருவரும் ஒன்றுசேர்ந்து மகிழ்ச்சியாயிருக்க முடியும் என்று நம்புகிறீர்களா? இது.... இது.. சாதாரண கணக்கு; இரண்டும் இரண்டும் சேர்ந்தால் நான்கு என்பது போல் எளிய கணக்கு. ஓது ஒன்றும் உயர்கணிதத்தின் பகுதி இல்லை. உங்கள் விரல்களால் எண்ணி விடலாம். நீங்கள் இருவரும் மகிழ்ச்சி அற்றவர்கள் ஆவீர்கள்.

நீங்கள் என்னை இனிமேல் காதலிக்கவே மாட்டீர்களா? முல்லா நசிருதீன் மனைவி கேட்டாள். நீங்கள் என்னைக் காதலிக்கும்போது பேசிய நல்ல வார்த்தைகளில் ஒன்று கூட இப்போதெல்லாம் நீங்கள் பேசுவதே இல்லையே! கண்ணீரைத் துடைத்தாள் தன் ஆடையின் முனையால்.

நான் காதலிக்கிறேன்! நான் காதலிக்கிறேன்! முல்லா நசிருதீன் கடுப்படித்தார். இப்போ வாயை மூடிக்கிட்டுத் தயவு செய்து போ. நான் நிம்மதியா பீர் குடிக்கணும்.

கல்யாணத்துக்கு முன்னால் பேசுவது ஒரு விஷயம். கல்யாணத்துக்கு முந்திய பேச்சைச் சார்ந்து விடாதீர்கள்; உண்மையில் கல்யாணம் செய்வதற்கு முன்னால், முன் பேச்சை விலக்கி விடுங்கள்.

என் ஆலோசனை, கல்யாணம் என்பது தேனிலவுக்குப் பின்னால் தான் நடக்கவேண்டும். ஒருபோதும் அதற்கு முன்பு அல்ல. எல்லாம் சரியாகப்போனால் தான் கல்யாணம் நிகழ வேண்டும். கல்யாணத்திற்குப் பின் தேனிலவு மிக ஆபத்தானது. எனக்குத் தெரிந்த வரை, 99 சதவிகிதக் கல்யாணங்கள் தேனிலவு முடியும் போதே முடிந்து விடுகின்றன. ஆனால் பிறகு நீங்கள் மாட்டிக் கொள்கிறீர்கள். உங்களால் தப்பிக்கவே முடிவதில்லை. முழுச் சமூகம், சட்டம், நீதிமன்றம் எல்லாம் உங்களுக்கு எதிராக உள்ளன. நீங்கள் உங்கள் மனைவியைப் பிரிந்தாலோ, உங்கள் மனைவி உங்களைப் பிரிந்தாலோ! தருமம், மதம், குரு, ஒவ்வொருவரும் உங்களுக்கு எதிராகி விடுகின்றனர். உண்மையில் இந்தச் சமுதாயம் எல்லாத் தடைகளையும் கல்யாணத்திற்கு விதிக்கவேண்டுமே தவிர விவாகரத்துக்கு எந்தத் தடையும் இருக்கக் கூடாது. அவ்வளவு எளிதாகத் திருமணத்திற்கு இந்தச் சமூகம் அனுமதி தரக்கூடாது. நீதிமன்றம் தடைகள் போட வேண்டும். குறைந்தது இரண்டாண்டுகளாவது அந்தப் பெண்ணுடன் வாழ்ந்தால் தான் கல்யாணத்திற்கு அனுமதி கிடைக்கும் என்று சொல்ல வேண்டும்.

இப்போது அவர்கள் செய்வதெல்லாம் தலைகீழாக. நீங்கள் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்றால் நீங்கள் தயார்தானா அல்லது வெறும் சபலமா என்றெல் லாம் கேட்பதில்லை. ஒரு பெண்ணின் மூக்கு பிடித்தால் கல்யாணம். என்ன முட்டாள்தனம். நீள மூக்கினால் மட்டும் ஒருவன் குடும்பவாழ்க்கை செய்ய முடியுமா? இரண்டு நாள் கழித்து மூக்கு மறக்கப்படும். தன் மனைவி

யின் மூக்கை ஒரு கணவன் எவ்வளவு நாள் பார்த்துக் கொண்டிருப்பான்? நான் கேட்டிருக்கிறேன்.

ஒரு குறிப்பிட்ட 'வார்டில்' இருந்த நர்ஸ்கள் அனைவரும் உலக அழகிப்போட்டியில் கடைசிப் போட்டியாளர்கள் போன்ற அவ்வளவு அழகிகள். அவர்களைப் பார்க்கின்ற ஒவ்வொரு தடவையும், நோயாளிகளில் ஒருவன், வேண்டுமென்றே 'குப்பை' என்று சொல்லிக் கொண்டிருந்தான். பக்கத்துப் படுக்கைக்காரனால் இதைப் புரிந்து கொள்ள முடியாமல், அவனிடம் கேட்டே விட்டான்.

இவ்வளவு அழகான பெண்கள் நர்ஸ்களாக இருந்தும் கூட, இவர்களெல்லாம் நன்றாக உன்னைக் கவனித்தும் கூட, நீ சொல்வது 'குப்பை' என்றுதானா? •ஏன்? அவன் சொன்னான் சோகமாக, 'நான் இந்த நர்ஸ்களைப் பற்றி நினைக்கவில்லை. என் மனைவியை நினைத்துக் கொண்டிருந்தேன்!'

மனைவி எப்பொழுதுமே அழகாகக் காட்சியளிப்பதில்லை. கணவன் ஒருபோதும் எழிலாய் இருப்பதில்லை. பழகிவிட்டால் அழகு மறைந்துவிடுகிறது.

இரண்டு பேர்கள் ஒன்றாக வாழ்வதற்கு நீண்ட நாட்கள் நன்றாக ஒருவருக்கொருவர் பழகிப் புரிந்துகொள்ளும் அளவுக்கு- அனுமதிக்கப்பட வேண்டும். அவர்கள் திருமணம் செய்ய விரும்பினால் கூட- அவர்களை அனுமதிக்கக்கூடாது. அப்போது விவாகரத்துகள் நிகழக் காரணமே திருமணங்கள் தவறாகவும் பலவந்தமாகவும் நடப்பதால் தான். விவாகரத்துகள் நிகழக் காரணம், திருமணங்கள் இன்பியல் உணர்ச்சியில் நடத்தப்படுதல்.

இன்பியல் உணர்ச்சி நல்லது தான், நீங்கள் கவிஞராய் இருந்தால் - கவிஞர்கள் நல்ல கணவர்களாகவோ நல்ல மனைவிகளாகவோ அறியப்படவில்லை. உண்மையில்

கவிஞர்கள் பெரும்பாலும் எப்போதும் பிரமச்சாரிகள். அவர்கள் சுற்றி முட்டாளாக்குவார்கள். ஆனால் ஒருபோதும் மாட்டிக்கொள்ள மாட்டார்கள். அதனால் இன்ப உணர்வு உயிர்த்துடிப்போடு தங்கிவிடுகிறது. அவர்கள் கவிதைகள் எழுதிக் கொண்டே செல்கிறார்கள். அழகிய கவிதைகள் அவை.

கவிதை உணர்ச்சியில் ஒரு நபர், ஆணை அல்லது பெண்ணைத் திருமணம் செய்தலாகாது. 'உரை நடை' உணர்ச்சி வரட்டும். அப்போது செய்து கொள்ளலாம். ஏனென்றால் அன்றாட வாழ்க்கை என்பது கவிதையை விட உரைநடை போன்றது தான். ஒருவன் அதற்கேற்ற பக்குவத்தோடு இருக்க வேண்டும்.

பக்குவம் என்பது என்னவென்றால், அவன் இன்பியல் முட்டாளாக அதற்கு மேலும் இருக்கக்கூடாது. அவன் வாழ்க்கையைப் புரிந்துகொள்ள வேண்டும். வாழ்வின் பொறுப்புணர்ச்சியைப் புரிந்துகொள்ள வேண்டும். ஒரு நபரோடு இணைந்து வாழ்ந்தால் எழும் பிரச்சினைகளைப் புரிந்துகொள்ள வேண்டும். எல்லாக் கஷ்டங்களையும் ஏற்றுக்கொள்ள வேண்டும். இருந்தும் அந்த நபரோடு சேர்ந்து வாழத் தீர்மானிக்க வேண்டும்.

எல்லாமே ரோஜாக்கள் சொர்க்கம் தான் வேறெதுவும் இல்லை என்று நம்பாமல் இருக்க வேண்டும். முட்டாள் தனமாக நம்பக்கூடாது. உண்மைத் தன்மை கடுமையானது என்று தெரிந்திருக்க வேண்டும். அது கரடுமுரடு! ரோஜாக் கள் உள்ளன. ஆனால் அங்கும் இங்கும் ஏராளமான முட் களுக்கு இடையில்தான் உள்ளது என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டும். ஏற்றுக்கொள்ள வேண்டும்.

இவ்வளவு பிரச்சினைகளையும் நன்கு அலசி ஆராய்ந்து அதன் பின்பு அந்த நபரோடு வாழ்வது சிறந்தது. தனித்திருப்பதைவிட என்று நிறைவான முடிவுக்கு வந்தால்

அப்புறம் திருமணம் செய்து கொள்ளலாம். அப்போது திருமணங்கள் காதலைக் கொல்லாது. ஏனென்றால் இந்தக் காதல் எதார்த்தமானது. கல்யாணம் உணர்ச்சிவசப்பட்ட காதலைத்தான் கொல்லும். உணர்ச்சி வசப்பட்ட காதலை மக்கள் 'நாய்க்குட்டிக்' காதல் என்கின்றனர். அதைச் சார்ந்திருத்தல் ஆகாது. அதை ஒரு வளர்ச்சியாக நினைக்கக் கூடாது. அது ஓர் ஐஸ்கிரீம் போலத்தான். சில சமயம் சாப்பிடலாம். ஆனால் அதையே சார்ந்திருக்கக் கூடாது. வாழ்க்கை மிகவும் எதார்த்தமாக இருக்க வேண்டும். அதிக உரைநடை.

மேலும் திருமணம் அதுவாக எதையும் ஒரு போதும் அழிப்பதில்லை. திருமணம் உனக்குள் என்ன மறைந்திருக் கிறதோ அதை வெளியே கொண்டு வருகிறது. உனக்குப் பின்னால், உனக்குள் அன்பு மறைந்திருந்தால் திருமணம் அதை வெளியே கொண்டு வருகிறது. அன்பு வெறும் நடிப் பாக, வெறும் தூண்டில் புழுவாக இருந்தால், அப்போது விரைவிலோ அல்லது தாமதமாகவோ அது மறைந்து விடத்தான் செய்யும். அப்போது உனது உண்மை தன்மை, உனது அசிங்கமான தன்மை வெளியே வருகிறது. திருமணம் ஒரு வெறும் சந்தர்ப்பமே, அப்போது நீ எதை கொண்டிருக்கிறாயோ அது வெளி வருகிறது.

கல்யாணத்தால் அன்பு அழிந்து விடுகிறது என்று நான் சொல்லவில்லை. காதலிக்கத் தெரியாதவர்களால் காதல் அழிக்கப்படுகிறது. ஏனெனில் அங்கு காதலே இல்லை. நீங்கள் கனவுலகில் வாழ்கிறீர்கள். உண்மைத்தன்மை கனவை அழித்து விடுகிறது. இல்லாவிட்டால் காதல் அழியாதது. அழியாமையின் பகுதி. நீங்கள் அந்தக் கலையை அறிந்தால், காதல் வாழ்க்கையின் எதார்த்தங் களை ஏற்றுக் கொண்டால், ஒவ்வொரு நாளும் அது வளர்ந்து கொண்டே போகும். திருமணம், காதலில் வளர்வதற்கான ஒரு மாபெரும் வாய்ப்பாக ஆகிறது.

காதலை எதுவும் அழிக்க முடியாது. அது இருந்தால் அது வளர்ந்து கொண்டே இருக்கும்.

என் உணர்ச்சி என்னவென்றால் முதலில் அது அங்கு இல்லை என்பதே. நீங்கள் உங்களைத் தவறாகப் புரிந்து கொண்டு விட்டீர்கள். வேறு ஏதோ ஒன்று அங்கு இருந்தது. ஒருவேளை பால் உணர்ச்சி இருந்திருக்கலாம். பால் கவர்ச்சி இருந்திருக்கலாம். அப்படியென்றால் அது அழிக்கப்படப் போகிறது. ஒரு தடவை நீங்கள் ஒரு பெண்ணைக் அனுபவித்த பின்பு பால் கவர்ச்சி மறைந்து விடுகிறது. ஏனெனில் பால் கவர்ச்சி என்பது தெரியாத வரை மட்டும் தான். ஒரு தடவை ஒரு பெண்ணின் அல் லது ஓர் ஆணின் உடலைச் சுவைத்து விட்டால் அப்புறம் பால் கவர்ச்சி மறைந்து விடுகிறது. காதல் வெறும் பால் கவர்ச்சி என்றால் அது கட்டாயம் மறைந்துவிடும்.

எனவே ஒருபோதும் காதலை வேறு எதனோடாவது இணைத்துத் தவறாகப் புரிந்து கொள்ளாதீர்கள். காதல் உண்மையான காதல் என்றால்... உண்மையான காதல் என்று நான் சொல்வதன் அர்த்தம் என்னவென்றால், 'ஒருவர் உங்களுடன் இருந்தாலே உங்களுள் திடீர் மகிழ்ச் சியை உருவாகிறது என்றால், கூட இருந்தால் நீங்கள் பரவச நிலை கொள்கிறீர்கள் என்றால், உங்கள் இதயத்தின் ஆழத்தில் மற்றொருவரின் முன்னிலை ஏதோ ஒன்றை நிரப்புகிறது என்றால், உங்கள் இதயத்தில் பாடலைத் தொடங்குகிறது என்றால், இணக்கத்தில் விழுந்து விடுகிறீர்கள் என்றால், பிற நபர் இருப்பதே உங்களை ஒன்றுபடுத்துகிறது என்றால் உங்கள் தனித்தன்மை, மையம் அடித்தளம் ஆகியவை வளர்கிறது என்றால், அதிக மையம், அதிக அடித்தளம், அப்போது அது காதல்.

காதல் என்பது ஆசை அல்ல. காதல் என்பது உணர்ச்சி அல்ல. காதல் என்பது புரிந்துகொள்ளல். யாரோ ஒருவர் ஏதோ ஒரு விதத்தில் உங்களை முழுமைப்படுத்துகிறார்.

யாரோ உங்களை முழுவட்டம் ஆக்குகிறார். பிறரின் இருத்தல் உங்கள் இருத்தலை விரிவுபடுத்துகிறது. நீங்கள் நீங்களாக இருக்கக் காதல் சுதந்திரம் அளிக்கிறது. அது ஆக்கிரமிப்புப்புணர்ச்சி இல்லை.

ஆகவே கவனியுங்கள். ஒருபோதும் பாலுணர்ச்சியைக் காதல் என்று எண்ணாதீர்கள். இல்லாவிட்டால் நீங்கள் ஏமாந்து போவீர்கள். விழிப்புணர்வோடு இருங்கள். வேறு ஒருவரின் இருத்தலே உங்களுக்கு வேறெதுவும் தேவையில்லாத அளவுக்கு நிம்மதியையும் மகிழ்ச்சியையும் தருமானால், உள்ளுக்குள்ளேயே மலர்தலைப் போன்ற உணர்வு தோன்றுமானால், அது ஒன்றே போதும் என்ற மனநிலை இருக்குமானால் நீங்கள் காதலில் இருக்கிறீர்கள். எதார்த்தத்தில் வரும் எந்தக் கஷ்டத்தையும் நீங்கள் எதிர்கொள்வீர்கள். பல ஏக்கங்கள் பல வேதனைகள் - எல்லாவற்றையும் உங்களால் கடந்துவிட முடியும். உங்கள் காதல் மேலும் மேலும் மலரும். எல்லாச் சூழ்நிலைகளும் சவால்களாகும். அவைகளைத் தாண்டி வருவதன் மூலம் உனது காதல் மேலும் மேலும் அதிக வலிமை கொண்டதாகும்.

காதல் அழிவில்லாதது. அது இருந்தால் அது வளர்ந்து கொண்டே போய்க்கொண்டிருக்கிறது. காதல் ஆரம்பத்தை அறியும், ஆனால் முடிவை அறியாது.

புத்தர் கூறினார்:

வீடற்ற சிரமணர் வெட்டுகிறார் ஆசைகளை,
விடுதலை பெறுகிறார் பற்றுகளில் இருந்து,
புரிந்துகொள்கிறார் சொந்த மன ஆதாரம்!
ஊடுருவுகின்றார் புத்தரின் கொள்கை ஆழம்!
பொருள்ளலாத தருமத்தின் பொருளுணர்கின்றார்!
அவரிதயத்தில் வெறுப்பே இல்லை!
அவருக்கெந்த ஏக்கமும் இல்லை!
சிந்தனை வழியில் குழப்பம் இல்லை!
செயலின் சிறையில் சிக்கிட இல்லை!
ஒருதலைபட்சம் இல்லை! வற்புறுத்தலில்லை!
ஒழுக்கம் இல்லை! ஞானமில்லை!
படிநிலை எதுவும் உயிர்ந்திடவில்லை!
இருப்பினும் எல்லாப் பெருமையும் உண்டதில்!
இதனை அழைப்பர் வழி என்றே!

புத்தர் கூறினார்:

சிரம், முகம் மழித்துக் கொள்வோர்
சிரமணர் ஆகின்றார்.
வழியில் அறிவுரை பெற்றிடுவோர்
வைய ஆசைகள் சரண் செய்வார்!
பிச்சையேற்றுப் பெறுவதிலே
பெருமன நிறைவே அடைந்திடுவார்.
ஒரு நாள், ஒரு வேளை உணவு கொள்ளல்
ஒரு நாள் ஒரு மர நிழலில் தாங்கள்
திருப்பி எதனையும் செய்திடக் கூடாது!
ஆசைகள், பற்றுகள் அனைத்துமே
முட்டாள் மூடன் ஆக்கிடுமே!

புத்தர் கூறினார்:

அனைவரும் கருதும் நல்லவை பத்து
தீயவை பத்து, அவையே
உடலைச் சார்ந்தவை ஒருமூன்று
வாயைச் சார்ந்தவை ஒரு நான்கே
எண்ணம் சார்ந்தவை மறு மூன்றே!
உடலைச் சார்ந்த மூன்றைப் பார்ப்போம்!
கொலை களவு விபச்சாரம்!
வாயைச் சார்ந்த நான்கைக் காண்போம்!
பழித்தல், சபித்தல், பொய்யுரை, முகஸ்துதி!
எண்ணம் சார்ந்த மூன்றைச் சொல்வோம்!
பொறாமை கோபம் புன் மோகம்
இவை எல்லாமே புனித வழியின் எதிரிகளாம்!
இவை எல்லாமே இதனால் தீதுகளாம்!
இந்தத் தீமைகள் செய்யா விட்டால்
நல்லவை பத்துச் செயல்கள் உண்டாம்!



முதல் விஷயம்: 'வீடற்ற நாடோடி' என்னும் கருத்தைப் புத்தர் மிகவும் வலியுறுத்துகிறார். 'வீடற்ற தன்மை' கருத்து. நேரடியாகப் பொருள் கொள்ள வேண்டாம். ஆனால் இந்தக் கருத்து பேரளவில் முக்கியத்துவம் உடையது. நீங்கள் ஒரு வீடு கட்டினால், உங்களைச் சுற்றி நீங்கள் ஒரு வீடு கட்டினால், பொருள்களின் இயற்கையில் சாத்தியம் இல்லாத ஏதோ ஒரு செயல் நீங்கள் செய்கிறீர்கள். இந்த வாழ்க்கை ஒரு நிலையில்லாத மாற்றம். இவ்வாழ்க்கை கணத்தை விட அதிகமானதல்ல. இது நிலையானதல்ல. உறுதியானதல்ல. நாம் இங்கே இருக்கப்போவது சிறிது நேரம் மட்டும்தான். சாவு தொடர்ந்து அணுகிக் கொண்டிருக்கிறது. நாம் வாழ்கின்றபோது ஒவ்வொரு கணமும் நாம் இறந்து கொண்டிருக்கிறோம்.

இந்த இடத்தை வெளியே வீடாக்குவது அபத்தம். வீடு இங்கே சாத்தியம் இல்லை. வீடு அழியாமையில் மட்டுமே சாத்தியம். காலம் வீடாக்கப்பட முடியாது. நீங்கள் இங்கே வீடு அமைக்க விரும்பினால் நிலையாகத் துயரத்தில் இருப்பீர்கள். ஏனெனில் நீங்கள் இயற்கையை எதிர்த்துப் போராடிக் கொண்டிருப்பீர்கள். புத்தர் கூறிய தம்மாவிற்கு எதிராக நீங்கள் சென்று கொண்டிருப்பீர்கள்.

'தம்மம்'

தம்மம்- தர்மம்

தர்மம் என்றால் தாவோ என்று பொருள். அதாவது பொருள்கள் உள்ள நிலை. நீங்கள் கனவை நிலையானதாக்க விரும்பினால் நீங்கள் துன்பப்படுவீர்கள். ஏனென்றால் கனவு நிலையாக இருக்க முடியாது. அதன் சொந்த இயல்பே நிலையாமைதான். உண்மையில், ஒரே கனவை மீண்டும் காண்பது கூடக் கடினம். கனவு மாயை; நீங்கள் அதில் நிலையாக வாழ முடியாது.

இந்தக் கடற்கரையில், காலத்தின் கடற்கரையில், நிலையான வாழ்க்கையை நினைத்துப் பார்ப்பது முட்டாள் தனம். நீங்கள் கொஞ்சம் புத்திசாலியாய் இருந்தால், நீங்கள் கொஞ்சம் விழிப்புணர்வோடு இருந்தால், உங்களைச் சுற்றி நடந்து கொண்டிருப்பதை உங்களால் பார்க்கமுடிந்தால்... ஒரு நாள் இங்கே நீங்கள் இல்லாமல் இருந்தீர்கள். மீண்டும் ஒரு நாள் நீங்கள் இங்கே இல்லாமல் இருக்கப் போகிறீர்கள். எப்படி இங்கே நீங்கள் ஒரு வீட்டை அமைக்க முடியும்?

ஒரே ஓர் இரவு, ஓர் இரவு விடுதியில் தங்குவது போல் நீங்கள் இங்கே தங்கலாம். காலை வந்ததும், நீங்கள் போய் விட வேண்டும். ஆம். நீங்கள் இங்கே கூடாரம் போடலாம். ஆனால் நீங்கள் வீடு அமைக்க முடியாது. நீங்கள் தங்குமி டம் கொள்ளலாம்; ஆனால் அதில் பற்று வைக்கக்கூடாது. நீங்கள் அதை என்னுடைய, என்னுடையது என்று கூறக்

கூடாது. எந்தக் கணத்தில் எதையாவது 'என்னுடையது' என்று சொல்கிறீர்களோ- நீங்கள் முட்டாள்தனத்தில் வீழ்கின்றீர்கள். எதுவும் உங்களுக்குச் சொந்தமில்லை; எதுவும் உங்களுக்குச் சொந்தமாக முடியாது.

ஒருவரின் இயல்பான தன்மைகளில் ஒன்று வீடற்ற நாடோடியாக இருப்பது. காலம் என்பதே நிலையில்லாதது. காலத்தின் பொருள் தற்காலிகம். காலம், தன்னுள்ளே, எந்த அழியாத வீட்டையும் அடைய முடியாது. காலத்தில் வீடு அமைப்பது, மணலில் இல்லம் கட்டுவது போன்றது. அல்லது நீரில் கையெழுத்திடுவது போன்றது- நீங்கள் அமைத்துக் கொண்டே இருக்கின்றீர்கள். அது மறைந்து போய்க் கொண்டே இருக்கிறது.

புத்தர் கூறுகிறார்: வீடற்ற தன்மையைப் புரிந்து கொள்ளத் துறவி ஆக வேண்டும். வீட்டை விடத் தேவையில்லை. உங்களுக்கு அந்த வழி நல்லதென்று பட்டால் விடலாம். உங்கள் இயல்புக்கு அது பொருந்துமானால் நீங்கள் வீட்டை விடலாம். நீங்கள் நேரடிப் பொருளிலேயே நாடோடி ஆகலாம். அது கட்டாயம் இல்லை. நீங்கள் வீட்டிலேயே தங்கலாம். ஆனால் அது இனிமேல் உங்களுக்கு வீடு இல்லை. நீங்கள் அதற்குச் சொந்தமில்லை என்று அறியுங்கள். நீங்கள், சிறிது காலத்திற்கு அதைப் பயன்படுத்தலாம். ஆனால் நாளை நீங்கள் செல்ல வேண்டும்.

அதனால் எங்குமே வீடு அமைக்காதீர்கள். உடலிலும் கூட. ஏனெனில் அந்த உடல் கூடத் தொடர்ந்து மறைந்து கொண்டே இருக்கிறது. நீங்கள் எங்குமே வீடு அமைக்கவில்லையென்றால் நீங்கள் ஒரு துறவி. உணர்வில் துறவி, ஒருபோதும் துக்கப்படுவதில்லை. உங்கள் பற்றுதல்கள் நீங்கள் விரும்பிய விதத்தில் நிறைவேறாவிட்டால், உங்கள் எதிர்பார்ப்புகள் பூர்த்தியாகவில்லையென்றால், விரக்தி உதிக்கிறது. விரக்தி ஒரு துணைவிளைபொருள்.

நீங்கள் எதிர்பார்க்காவிட்டால் ஒருவரும் உங்களை விரக்தியாக்க முடியாது, இங்கே நீங்கள் ஒரு வீட்டை அமைக்க விரும்பவில்லையென்றால், மரணத்தால் கூட உங்களை மிரட்ட முடியாது. எதுவும் உங்களை மிரட்ட முடியாது. நீங்கள் எதனோடும் ஒட்டிக் கொள்ளவில்லை யென்றால், நீங்கள் எப்படித் துக்கப்பட முடியும்? உங்கள் ஒட்டுதல் உருவாக்குகிறது துக்கத்தை. நீங்கள் ஒட்டிக் கொள்ள விரும்புகிறீர்கள். ஆனால் பொருள்களின் சொந்த இயல்புகளின்படி அவை மாறிக் கொண்டிருக்கின்றன. நீங்கள் ஒட்ட முடியாது. அவை நிலையாக நழுவிக் கொண் டிருக்கின்றன, உங்கள் கரங்களைவிட்டு! அவற்றோடு ஒட்டிக்கொள்ள ஒரு வழியும் இல்லை.

நீங்கள் மனைவியிடம் ஒட்டுகிறீர்கள். கணவனுடன் ஒட்டுகிறீர்கள். குழந்தைகளிடம், பெற்றோர்களிடம், நண்பர்களிடம் ஒட்டுகிறீர்கள். நபர்களிடம் ஒட்டுகிறீர்கள், பொருகளிடம் ஒட்டுகிறீர்கள். ஆனால் ஒவ்வொன்றும் எப்பொழுதும் மாறிக்கொண்டே இருக்கிறது. நீங்கள் ஆற்றை உங்கள் கைகளில் பிடிக்க முயற்சி செய்கிறீர்கள். ஆறோ வேகமாக ஓடிக் கொண்டிருக்கிறது. ஏதோ ஓர், அறியாத இலக்கை நோக்கி அது பாய்ந்து கொண்டிருக் கிறது. நீங்கள் விரக்தி அடைந்து விட்டீர்கள்.

மனைவி வேறொருவரிடம் காதலில் விழுந்து விட்டாள். நீங்கள் விரக்தி அடைந்து விட்டீர்கள். கணவன் தப்பிக்கிறான். நீங்கள் விரக்தி அடைகிறீர்கள். குழந்தை இறக்கிறது. விரக்தி. வங்கி தோற்கிறது. திவால் ஆகிறது- விரக்தி! உடல் நோய்வாய்ப்படுகிறது. பலவீனம், மரணம் கதவைத் தட்டத் தொடங்குகிறது. விரக்தி. இந்த விரக்திகள் அனைத்துக்கும் காரணம் உங்கள் எதிர்பார்ப்புகள். நீங்கள் தான் அவற்றுக்குப் பொறுப்பு.

இந்த இடம் உங்கள் வீடு அன்று என்று நீங்கள் புரிந்து கொண்டால், இங்கு நீங்கள் ஒரு வீடற்ற நாடோடி என்று

புரிந்து கொண்டால், அறியாத நாட்டில் உள்ள புதிய மனிதர் என்று நீங்கள் புரிந்து கொண்டால், நீங்கள் விடத்தான் வேண்டும். நீங்கள் போகத்தான் வேண்டும் என்பதைப் புரிந்து கொள்வீர்கள்.

நீங்கள் அந்தக் கருத்தை நன்றாக ஊடுருவிவிட்டால், நீங்கள் அதைப் புரிந்து கொண்டுவிட்டால் நீங்கள் எந்த இடத்திலும் வீட்டை அமைக்க மாட்டீர்கள்.

நீங்கள் வீடில்லாத நாடோடியாக... பரிவிராஜகராக ஆவீர்கள். நேரடிப் பொருளிலேயே அவ்வாறு ஆகலாம். அது உங்களைப் பொருத்தது. நீங்கள் உண்மையாகவே ஒரு நாடோடியாகலாம், அல்லது ஆன்மிகத்தில் நீங்கள் ஒரு நாடோடியாகலாம்.

என்னுடைய சொந்த வலியுறுத்தல் நாடோடியாக நேரடிப் பொருளில் ஆவது பற்றியல்ல. ஏனென்றால் அதில் சாரமில்லை. புத்தரின் வலியுறுத்தல் அப்படிப் பட்டது அல்லது; அது உங்களுக்குத் தெளிவாகட்டும். என்ன செய்ய வேண்டும் என்று புத்தர் கூறவில்லை. அவரை நேரடிப் பொருளில் பின்பற்ற வேண்டுமா வேண்டாமா என்று எதுவும் கூறவில்லை. லட்சக்கணக் கானோர் அவரை நேரடிப் பொருளில் பின்பற்றினார். அவர்கள் வீட்டைவிட்டு வெளிவந்தார்கள். குடும்பங்களை விட்டு வெளியே வந்தார்கள், நாடு முழுவதும், உண்மை யாகவே பிக்குகளாக மாறிப் பிச்சையெடுத்துக் கொண்டு திரிந்து கொண்டிருந்தார்கள். நான் அதை வலியுறுத்த மாட்டேன்.

நீங்கள் இதை நன்றாகப் புரிந்து கொண்டு விட்டீர்கள் என்றால் அப்படி ஒரு அப்பட்டமான வழியில் போகத் தேவையில்லை. என்னைப் பொருத்தவரை ஒருவன் முழுமையாகப் புரிந்து கொள்ளாத காரணத்தால் தான் நேரடிப் பொருளில் நாடோடியாக ஆகிறான். இல்லை

யென்றால் அதற்கான வேலையே இல்லை. நீங்கள் வீட்டிலேயே இருக்கலாம். நீங்கள் உங்கள் மனைவியோடும் குழந்தைகளோடும் இருக்கலாம். ஆயினும், எதுவும் உங்களுக்குச் சொந்தமில்லை என்னும் விழிப்புணர்வோடு நீங்கள் தங்கியிருக்கலாம். விழிப்புணர்ச்சியோடு தங்கியிருங் கள். அதனால் நீங்கள் எந்தப் பற்றுதல்களிலும் விழுந்துவிட மாட்டீர்கள். விழிப்போடு தங்கியிருங்கள். விஷயங்கள் மாறினால் மாற்றத்தை ஏற்றுக்கொள்ள நீங்கள் ஆயத்தமாக இருக்கிறீர்கள்.

சிந்திவிட்ட பாலுக்காக நொந்து கெட்டு அழமாட்டீர் கள் நீங்கள்.

ஓலமிட மாட்டீர்கள் நீங்கள். வெறி பிடித்துப் போக மாட்டீர்கள்; பைத்தியமாக மாட்டீர்கள்.

என்னைப் பொருத்தவரை இது அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதுகிறேன், உண்மையாகவே நாடோடி ஆவதைக்காட்டிலும்! ஏனெனில் அது எளியது.

உங்களுக்கு வீடு இல்லை; உங்களுக்குச் சொந்தமாக எதுவுமில்லை. நீங்கள் எப்படித் துறப்பீர்கள்? துறத்தல் என்னும் கருத்தே. ஏதோ ஓர் இடத்தில் நனவிலி மனத்தின் ஆழத்தில் நீங்கள் அதைச் சொந்தம் கொண்டாடுவதை மிகவும் தெளிவாக காட்டுகிறது. ஏனென்றால் உங்களுக்குச் சொந்தமான எதையாவது தான் நீங்கள் துறக்க முடியும்.

எப்படித் துறக்க முடியும், உங்கள் மனைவி உங்களுடை யவள் இல்லை, நீங்கள் எப்படித் துறக்கமுடியும்? உங்கள் குழந்தைகள் உங்களுடையவர்கள் இல்லை, நீங்கள் எப்படித் துறக்க முடியும்? அவர்கள் உங்களுக்குச் சொந்தம் அல்லரே. இப்படியிருக்கும் போது துறப்பது என்பதில் விஷயமில்லையே. நீங்கள் சும்மா புரிந்து கொள்ளலாம் அவர்கள் உங்களுக்குச் சொந்தம் அல்லர் என்று. நாம்

அனைவரும் புதியவர்கள் என்று நீங்கள் புரிந்து கொள்ளலாம்.

நாம், வழியில் சந்தித்திருக்கிறோம் அவ்வளவுதான். அல்லது சில நாட்கள் ஒரே மரத்தின் கீழே நாம் தங்கியிருக்கிறோம்.

ஆனால் நாம் புதியவர்கள் தாம்.

இதை ஆழமாக, உங்கள் விழிப்புணர்வில் புரிந்து கொண்டால், போதுமானது.

என் வலியுறுத்தல், 'ஆன்மிக நாடோடியாக' ஆவது பற்றித்தான்.

உங்கள் உடலைப் பிச்சைக்காரனுடையது போல ஆக்கிக்கொள்ளத் தேவையில்லை. சும்மா உங்கள் உணர்வு ஒரு நாடோடியுடையதாக இருக்கட்டும். அதுவே போதும். உங்கள் உணர்வுக்கு எந்தக் கொத்தடிமைத்தனத்தையும் சுமத்தி விடாதீர்கள்.

புத்தர் கூறுகிறார்:

**வீடற்ற சிரமணர் வெட்டுகிறார் ஆசைகளை**

ஆசைகள் நமது கனவுகள். ஆசைகள், நம் எதிர்காலத்தின் கனவுகள், எதிர்காலத்தின் விருப்புகள், விஷயங்கள் எப்படி இருக்கவேண்டும் என்பது பற்றிய விருப்புகள்.

அடி ஆழத்தில் நாம் அதிருப்தி உடையவர்கள். எதுவாயினும் நமக்குத் திருப்தியாய் இல்லை. நாம் தொடர்ச்சியாகக் கனவுகள் நெசவு செய்கிறோம், விஷயங்களை மாற்றுவதற்கு. நல்ல இல்லம் அமைக்க சிறந்த மனைவி அமைய, சிறந்த கல்வி பெற, அதிகபணம் பெற, அதைப் பெற இதைப் பெற! நாம் தொடர்ச்சியாக, வாழ்க்கையை எவ்வாறு மேலும் சிறந்ததாக்குவது என்று

சிந்தித்துக் கொண்டே இருக்கிறோம். இல்லாத எதிர்காலத்தில் வாழ்கிறோம்.

எதிர்காலத்தில் வாழ்வது கனவு. ஏனெனில் அது இல்லை. எதிர்காலத்தில் வாழ்வது என்பதே நிகழ்காலத்தின் மீது ஏற்பட்ட ஆழமான அதிருப்தியை அடிப்படையாகக் கொண்டது தான்.

ஆகவே, ஆசைகள் பற்றி இரண்டு விஷயங்களைப் புரிந்து கொள்ள வேண்டும். ஒன்று, நாம் எதைப் பெற்றிருந்தாலும் அதனுடன் ஒட்டிக் கொள்கிறோம். முரண்பாட்டைப் பாருங்கள். நம் மீது எது இருந்தாலும் அதோடு ஒட்டிக் கொள்கிறோம். இருந்தும் கூட அதோடு நாம் திருப்தியுடன் இல்லை. நாம் அதனோடு துக்கத்தில் இருக்கிறோம். அதனால் நாம் அதைச் சீரமைக்க நினைக்கிறோம், அலங்கரிக்க நினைக்கிறோம், மேலும் சிறந்ததாக்குவதற்காக.

நாம் பெற்றிருப்பவற்றோடு தொடர்ந்து ஒட்டிக் கொண்டிருக்கிறோம். அதே நேரத்தில் நம்மிடம் இல்லாதவைகளுக்காகத் தொடர்ந்து விரும்பிக் கொண்டிருக்கிறோம். இந்த இரண்டிற்கும் இடையில் நாம் நசுக்கப்படுகிறோம்.

இது இப்படியே எப்போதும், எப்போதும் இருக்கப் போகிறது. நேற்று இப்படி இருந்தது, இன்று இப்படி இருக்கிறது, இது இப்படி இருக்கப் போகிறது நாளை... உங்கள் வாழ்க்கை முழுவதும்.

எதை நீங்கள் பெற்றிருந்தாலும் அதனோடு ஒட்டிக் கொண்டு விடுவீர்கள், அதனால் உங்களிடமிருந்து யாரும் எடுத்துவிட முடியாது. ஆயினும் நீங்கள் துக்கத்தோடு இருப்பீர்கள். இருப்பினும் இன்றில்லாவிட்டால், நாளை என்றேனும் ஒரு நாள் விஷயங்கள் சிறப்பாக நடக்கும் என்று நம்புவீர்கள். ஆசைகளில், விருப்புகளில் வாழும் மனிதன் அற்பமான வாழ்வு வாழ்கிறான். எப்போதும்

துக்ககரமாக, எப்போதும் கனவு கண்டு கொண்டு வாழ்கிறான்.

உண்மைத்தன்மையோடு துக்கம்; உண்மையில்லாத விஷயங்கள் பற்றிக் கனவு காணுதல். நான் கேட்டிருக்கிறேன்.

பாலத்தின் முடிவில், மீன் பிடித்துக் கொண்டிருந்த வயதான முல்லா நசிருதீனிடம் அப்பக்கம் சென்ற வழிப்போக்கன் கேட்டான், "நீங்கள் எத்தனை மீன்கள் பிடித்துள்ளீர்கள்" என்று. "நல்லது" என்று சிந்தனை நிரம்பியவராக, முல்லா கூறினார். இப்போது தூண்டில் முள்ளில் சிக்கிக் கொண்டுவிடுவதற்குத் தயாராக இரையைக் கொறித்துக் கொண்டிருக்கும் மீனோடு இன்னும் இரண்டு அதிகமாகச் சேர்த்து, மொத்தம் நான் மூன்று மீன்கள் பிடித்துவிடுவேன்" என்று.

அவரிடம் ஒன்றுமில்லை. இப்படித்தான் மனிதமனம் கனவு கண்டு கொண்டே செல்கிறது. நம் வாழ்க்கை சிறியது, மிகச்சிறியது, ஆனால் நம் கனவுகள் மிகப் பெரியவை.

ராக்கவே கடற்கரையில் சீமஸும் பிரிட்ஜெட்டும் சந்தித்துக் கொண்டார்கள். படகுப் பாதையில் ஒரு போர்வையின் மேல் படுத்துக் கொண்டனர்.

சீமஸ் ரகசியமாகக் கூறினான்: 'பிரிட்ஜெட் நான் உன்னைக் காதலிக்கிறேன்.'

பிரிட்ஜெட் கூறினாள்: 'ஆனால், நாம் இப்போது தானே சந்தித்துக் கொண்டோம்.'

'எனக்குத் தெரியும். ஆனால் வார முடிவைக் கழிப்பதற்காகத் தான் இங்கே இருக்கிறேன்' என்றான் சீமஸ் விட்டுக் கொடுக்காமல்.

ஆனால் ஒவ்வொருவரும் இங்கே வார முடிவைக் கழிக்கத் தான் உள்ளார்கள். வாழ்க்கை மிகவும் சிறியது. காதல் எப்படிச் சாத்தியம்? எப்படி இங்கே வீட்டை அமைக்க முடியும்? எப்படி எதையாவது சொந்தம் கொண்டாட முடியும்? ஒவ்வொரு விஷயமும் தொடர்ச்சியாக மறைந்து கொண்டிருந்தது. நீங்கள் நிழல்களைத் துரத்துகிறீர்கள்.

புத்தர் கூறுகிறார்:

வீடற்ற சிரமணர் வெட்டுகிறார் ஆசைகளை விடுதலை
பெறுகிறார் பற்றுகளிலிருந்து.

பற்றுதல்கள் என்றால் உறவுகள்- உண்மையில்- இருக்கவில்லை அவை! அவை இருப்பதாக நீங்கள் நம்புகிறீர்கள். நீங்கள் ஒரு கணவர். உங்களுக்கும் உங்கள் மனைவிக்கும் இடையில் ஒரு குறிப்பிட்ட உறவு இருப்பதாக நீங்கள் நம்புகிறீர்கள். ஆனால் அது உண்மையில் ஒரு நம்பிக்கை மட்டுமே. ஒரு பெண்ணுடன் நாற்பது ஐம்பது ஆண்டுகள் வாழ்ந்தாலும், நீங்கள் அவருக்கும், அவர் உங்களுக்கும் அன்னியராகவே தான் இருந்திருக்கிறீர்கள் என்ற உண்மையைக் கவனித்திருக்கிறீர்களா?

பல நூற்றாண்டுகளாக ஆண்கள், பெண்ணை- மனத்தை- பெண்மனதைப் புரிந்துகொள்ள முயன்று கொண்டே வந்திருக்கிறார்கள். இதுவரை மனிதன் அதைப் புரிந்துகொள்ள முடியவில்லை. பெண், ஆண்மனதைப் புரிந்துகொள்ள முயன்று வந்திருக்கிறாள். அதுவும் இன்னும் மர்மமாகவே இருக்கிறது. ஆயினும் மனிதனும் மனுஷியும் நூற்றாண்டுகளாக ஒன்றுசேர்ந்து வாழ்ந்து கொர்ண்டிருக்கிறார்கள்.

நன்கு கவனியுங்கள். எவருக்காவது எப்படி நீங்கள் உறவாவீர்கள். அடுத்தவர் உங்களால் புரிந்துகொள்ள முடியாதவராக இருக்கிறார். அடுத்தவர் அடுத்தவருக்கு

அப்படியிருக்கிறார்... அடைய முடியாதது. நீங்கள் வட்டப் பரப்பைத் தொடலாம். மற்றவரும் பாசாங்கு செய்யலாம். ஆம். நீங்கள் உறவு கொண்டிருக்கிறீர்கள். ஆம் தனித் திருக்கிறோம். அப்படியே தங்கிவிட்டோம். உறவு ஒரு நம்பச் செய்யும் கற்பனை! அது உதவுகிறது. ஒரு வகையில், நாம் தனித்திருக்கவில்லை என்று நாம் உணர்வதற்கு அது அனுமதிக்கிறது. இது வாழ்க்கையைச் சிறிது அதிக வசதியுடையதாக ஆக்குகிறது. ஆனால் அந்த வசதி மாயை. பிறர் பிறராகவே தங்குகிறார். பிறரது மர்மத்தை ஊடுருவ வழியே இல்லை. நாம் தனித்திருக்கிறோம். "வீடற்ற சிரமணர் விடுதலை பெறுகிறார் பற்றுகளிலிருந்து" என்று புத்தர் கூறும்போது, இங்கே 'பற்றுதல் சாத்தியமில்லை. என்று அவர் பார்க்கிறார்" என்று பொருள் ,கூறுகிறார்.

பற்றுதலும் சாத்தியமே. உறவும் சாத்தியமே. எல்லா உறவும் ஒரு முட்டாள்தன முயற்சிதான். நீங்கள் பிறரை அடைய முடியாது. பிறரது இருத்தலின் மையத்தை உங்களால் தொட முடியாது. எப்படி நீங்கள் உறவாட முடியும்? பிறரது ஆன்மாவை நீங்கள் அறிய மாட்டீர்கள். மையத்தை தொடாதவரை உங்களால் எப்படி உறவாட முடியும்? அவரது ஆன்மாவை நீங்கள் அறியமாட்டீர்கள். நீங்கள் உடலை மட்டும்தான் அறிவீர்கள். செயல்களை, மனப்பான்மையை அறிவீர்கள். அவர்கள் வட்டப்பரப்பில் உள்ளார்கள். நாம் வட்டப் பரப்பில் சந்திக்கிறோம்.

இதுதான் உறவின் துயரம். நாம் வட்டப்பரப்பில் தங்குகிறோம். நாம் தொடர்ந்து, ஆசையை நம்புகிறோம், என்றாவது ஒருநாள் உறவு சாத்தியம், மையம் மையத்தைச் சந்திக்கும், இதயம் இதயத்தைச் சந்திக்கும், நாம் மறைந்து விடுவோம் என்று நம்புகிறோம். ஆனால் இது ஒருபோதும் நடப்பதில்லை. அது நடக்க முடியாது.

மிகவும் துன்புறுத்தக்கூடிய இந்த உண்மைத் தன்மை யைப் பற்றிய விழிப்புணர்வு கொள்வது மிகவும் கடினம்.

ஏனெனில் இது உங்கள் காலடியில் உள்ள பூமியே சரிவது போன்ற உண்மை. நீங்கள் மீண்டும், பழைய கனவுகள், உறவுகள், இது, அது... போன்றவற்றில் நம்பிக்கை கொள்ள வேண்டிய அளவுக்குத் தனிமையில் விடப்படுகிறீர்கள். நீங்கள் மறுபடியும் பாலங்களை உருவாக்கத் தொடங்கு கிறீர்கள். ஆனால் நீங்கள் ஒருபோதும் வெற்றி பெற வில்லை- ஒருபோதும் வெற்றி பெற்றதில்லை. நீங்கள் போதுமான முயற்சி என்று பொருளல்ல. உங்களுக்குத் திறமை போதாதது என்பதல்ல. ஆனால் இயல்பாகவே விஷயங்களின் தன்மைகளின்படி பற்றுதல் என்பது ஓர் அசாத்தியம். உண்மைத்தன்மை அனுமதிக்காத ஏதோ ஒரு விஷயத்தை நீங்கள் செய்ய முயல்கிறீர்கள்.

உங்கள் தனித்திருத்தல் அழியாத ஒன்று.

புத்தர்: பற்றுதல்களை விடுதல் என்பது தனித்திருத் தலைப் புரிந்து கொண்டு அதற்கு உண்மையாக நடந்து கொள்வது தான் என்று கூறுகிறார்.

உலகிலிருந்து நீங்கள் தப்பித்துக் கொள்ளவில்லை. ஆனால் சும்மா எல்லாப் பற்றுதல்களையும் விட்டு விடுகிறீர்கள். பாலங்கள் விடுபடுகின்றன.

இதுதான் அழகு.

பற்றுதல்களை விடும்போது நீங்கள் அதிகமாகப் புரிந்து கொள்ள முடிகிறது. பிறருடன் உங்கள் வாழ்க்கை அதிக அமைதிகரமாக ஆகிறது. ஏனெனில், நீங்கள் நம்பவில்லை. நீங்கள் அசாத்தியத்தை நம்பவில்லை. நீங்கள் எதிர்பார்க்க வில்லை. எது நடந்தாலும் நன்றியோடிருக்கிறீர்கள். எது நடக்கவில்லையோ, அது உங்களுக்குத் தெரியும், அது நடக்க முடியாதென்று. நீங்கள்- ஆழமான முறையில்- மிகவும் ஏற்பவராக மாறுகிறீர்கள். உங்கள் ஆசைகளுக் கேற்ப உண்மைத் தன்மையை நீங்கள் வலியுறுத்துவதில்லை. எப்படிப் போகவிடுவது என்பதை நீங்கள் கற்றுக்

கொள்ளத் தொடங்குகிறீர்கள். எதார்த்தத்தோடு ஒன்றி இணங்குவது எப்படி என்பதைக் கற்கத் தொடங்குகிறீர்கள்.

**புரிந்து கொள்கிறார் சொந்த மன ஆதாரம்**
**ஊடுருவுகின்றார் புத்தரின் கொள்கை ஆழம்!**

அது என்ன புத்தரின் ஆழமான போதனை! புத்தரின் மகத்தான செய்தியே சுயம்- இல்லை என்பதுதான். அனத்தா. அதுதான் அவரது- மிகவும் ஆழமான போதனை. முதலில் இங்கு வீடு அமைக் காதீர்கள் என்கிறார். பிறகு 'பற்று வைக்காதே' என்கிறார். பிறகு சொல்கிறார், 'உனக்குள் நீ பார்' என்று. நீ இல்லை என்கிறார்.

முதலில், உலகம் மாயை என்கிறார், இங்கே வீடு அமைக்காதே என்கிறார். பிறகு 'உன் பற்றுதல்கள் அனைத்தும் கனவுகள். அனைத்துப் பற்றுகளையும் விட்டுவிடுங்கள், உங்கள் மனதிலிருந்து' என்கிறார். அதற்குப் பிறகு அவரது ஆழமான போதனைக்கு வருகிறார். அந்தக் போதனை இதுதான்! இப்போது உள்ளே பாருங்கள். நீங்கள் இல்லை!

நீங்கள் வீட்டுடன் மட்டும்தான் இருக்கமுடியும், உங்கள் சொத்துகளுடன் மட்டும்தான், உறவுகளுடன் மட்டும்தான் இருக்க முடியும். நான் என்பது வேறெதுவும் இல்லை. இந்த அனைத்துக் கனவுகளின் கலவை! கூட்டு விளைவு!

பொருள்களைச் சொந்தம் கொண்டாடும் கனவுகள், மக்களைச் சொந்தம் கொண்டாடும் கனவுகள்- உறவுகள், பற்று, காதல், ஆசை, எதிர்காலக்கனவுகள்- எல்லாம் குவிந்து குவிந்து ஆணவம் ஆகிறது. நீ இவை எல்லாவற்றையும் விடும்போது உடனடியாக நீங்கள் மறைந்து விடுகிறீர்கள். உங்கள் மறைவிலே சட்டம் மிகமிக உண்மையான வழியிலே இயங்கத் தொடங்குகிறது. இதைத்தான் புத்தர் தர்மம் என்றும் தாவோ என்றும் 'நிறைவுச் சட்டம்' என்றும் கூறுகிறார்.

ஆகவே ஆணவத்துக்கு மூன்று அடுக்குகள் உள்ளன. முதல் அடுக்கு: உலகம்- உங்கள் இல்லம், உங்கள் கார், உங்கள் வங்கியிருப்பு. இரண்டாவதாக உள்ள அடுக்கு: பற்றுகள்- உங்கள் உறவுகள், உங்கள் அலுவல்கள், உங்கள் குழந்தைகள், மனைவி, கணவன், நண்பர்கள், எதிரிகள். மூன்றாவதாக ஆழமான அடுக்கு: நீங்கள். இவை அனைத்தும் ஒன்றாக இணைந்துள்ளன. நீங்கள் ஆணவத்திலிருந்து உண்மையாகவே விலக வேண்டுமென்றால், நீங்கள் மிகவும் விஞ்ஞானபூர்வமான வழியில் இயங்க வேண்டும். அதைத்தான் புத்தர் செய்து கொண்டிருக்கிறார். முதலில் வீடு இல்லை. இரண்டாவது உறவு இல்லை. மூன்றாவது 'தான்' இல்லை. நீங்கள் முதலிரண்டு விஷயங்களை, ஆரம்ப விஷயங்களைச் செய்தால், மூன்றாவது விஷயம் தானாகவே ஏற்படும். நீங்கள் உள்ளே பார்க்கிறீர்கள். நீங்கள் இல்லை அங்கே. நீங்கள் இல்லை என்பதைப் பார்த்தவுடன்- உள்ளே அப்படி ஒரு பொருள் இல்லை- திடமான பொருள் இல்லையென்றால்- நீங்கள் உங்களையே 'நான்' என்று அழைத்துக்கொள்ள முடியாது- நீங்கள் சுதந்திரம் ஆகிவிட்டீர்கள். புத்தர் வழியில் இதுதான் விடுதலை! இதுதான் நிர்வாணம். தன்னைத் தவிர்த்தல், 'தானின்மை'யை எழுப்புதல், வெற்றுநிலை... பூஜ்ய அனுபவம். ஒன்றுமில்லை; ஒன்றுமில்லை மட்டுமே இருக்கிறது.

அப்புறம் உங்களை எப்படி இடைஞ்சல் செய்ய முடியும்? ஏனென்றால் இப்போது ஒருவரும் இல்லையே! இடைஞ்சல் எப்படிச் செய்ய முடியும்? அப்புறம் நீங்கள் எப்படிச் சாக முடியும்? சாவதற்குத்தான் ஒருவரும் அங்கே இல்லையே! நீங்கள் எப்படிப் பிறக்க முடியும்? பிறக்கத் தான் ஒருவரும் இல்லையே! இந்த எவருமின்மை மிகப் பெரிய அழகுடையது. இது திறந்து கொண்டிருக்கிறது, திறந்து கொண்டிருக்கிறது, வெளி, எல்லைகளில்லாத வெளி!

இது புத்தருடைய எதார்த்தத்தின் கோட்பாடு. இது புரிந்து கொள்ள மிகவும் கடினமானது. ஆணவத்தை விடமுடியும் என்று நாம் புரிந்து கொள்ள முடியும். ஆனால் ஆத்மா? அப்புறம் நாம் நுண்ணிய வழிகளில் ஆணவத்தை இன்னும் தக்கவைத்துக் கொண்டிருப்போம். அப்போது நாம் அதை ஆன்மா என்று அழைக்கிறோம். புத்தர் மிகவும் ஒத்துப் போகிறார். உங்களைப் பற்றி ஏதாவது கருத்து- எந்தக் கருத்து- இருந்தாலும் ஏதாவது ஒரு வழியில் நீங்கள் ஆணவகாரராய் இருந்துவிடக் கூடும்.

தற்கால இயற்பியலின் மூலமாக இதனை நான் விளக்க முயற்சி செய்கிறேன். ஏனென்றால் அதே முடிவுக்குத் தற்கால இயற்பியலும் வந்துள்ளது. தற்கால இயற்பியலாளரைக் கேளுங்கள். அவர் 'பொருள் இருப்பது போலத் தோற்றமளிக்கிறது; அது இல்லை' ஆழமாகப் பொருளில் போனால், வெறும் வெற்று நிலை மட்டுமே உள்ளது. ஆம்! ஒன்றுமில்லை. ஆனால் வெற்று நிலைதான்; முடிவாகப் பார்த்தால் தங்குவது வெற்றுநிலை மட்டுமே!... வெறும் வெளி மட்டுமே!... தூய வெளி மட்டுமே.

இதே பகுப்பாய்வை, புத்தர் 'தான்' என்ற உணர்வுடன் செய்கிறார். அறிவியலாளர்கள் பொருளுடன் செய்ததைப் புத்தர் மனதுடன் செய்கிறார். இருவருமே 'ஆழமாகச் சென்றால் இருப்பது எந்தப் பொருளுமில்லை, எல்லாப் பொருளும் மறைந்து விடுகிறது. இருத்தல்- சுயம்- இல்லை மட்டுமே மிஞ்சியுள்ளது.

புத்தர் இந்தியாவில் இருக்கவே முடியவில்லை. இந்தியா உலகத்திலேயே மிகப் பழமையான நாடு. சுயம் அல்லது- ஆன்மாவில் நம்பிக்கையுள்ளது இந்தியா; உபநிடதங்கள், வேதங்கள் பதஞ்சலி முதல் மகாவீரர் வரை- ஒவ்வொருவரும் சுயத்தில் நம்பிக்கை கொண்டவர்கள்.

அவர்கள் அனைவரும் ஆணவத்தின் எதிர்ப்பாளர்கள்; ஆனால் அவர்கள் ஒருபோதும், "சுயம் என்பது

வேறொன்றுமில்லை, ஆணவத்தின் தந்திரம்தான் அது" என்று கூறத் துணியவில்லை. புத்தர் இறுதியான உண்மையை அறுதியிட்டுச் சொல்ல உறுதி கொண்டார்!

அவர் உயிரோடு இருந்தபோது மக்கள் அவரைச் சகித்துக் கொண்டனர். அது அவ்வளவு சக்திவாய்ந்த இருத்தல்! அவரது இருத்தல், அவர்கள் மறுக்கமுடியாத அளவுக்கு இணங்கச் செய்வதாக இருந்தது.

அவர் சொல்வது மனித மனத்திற்கு எதிரானது என்றோ, முழுமையாக மனிதமனத்துக்கு எதிரானது என்றோ, அவர்களால் கூறமுடியாமல் இருந்தது. அங்கு மிங்கும் இதைப் பற்றி அவர்கள் விவாதித்திருக்கலாம். சிலசமயம் அவரிடம் விவாதிக்கக்கூடச் சிலர் வந்தார்கள்– என்ன சொல்கிறீர்கள் நீங்கள்? யாரும் அங்கு இல்லை என்று சொன்னால் விடுதலையாவதில் என்ன அர்த்தம் இருக்கிறது? நாங்கள் விடுதலை பெற நம்புகிறோம்! அதனால் விடுதலையை அடைவோம்.

புத்தரின் அழுத்தமான கருத்தின்படி உங்களுக்கு ஒருபோதும் விடுதலை கிடைக்காது. நீங்கள் இறந்தால் ஒழிய உங்களுக்கு விடுதலை கிடையாது. விடுதலை என்பது தானிலிருந்து, தான் விடுதலை அடைவதல்ல. விடுதலை என்பது சுயத்திலிருந்தே!

புத்தரின் இருத்தல் மிகவும் இணக்கமாக இருந்தது. அவர் என்ன சொன்னாலும் அது உண்மையாய் இருக்கவேண்டும். அவரது இருப்பு ஒரு நிரூபணமாக இருந்தது. அவருக்கு ஏற்பட்டிருந்த அருள், அவரைச் சுற்றியிருந்த இணக்கம், அவர் நடந்தபோதும், அசைந்த போதும், அவரைப் பின்தொடர்ந்த பிரகாசம் அவரது நிரூபணமாக அமைந்தது. மக்கள் பிரமித்தார்கள். இந்த மனிதர் 'சுயம்' என்பது இல்லை என்கிறார். மிகப்பெரிய

வெற்று நிலைதான் உள்ளது என்கிறார். அவர்களால் மறுக்க முடியவில்லை.

புத்தர் போய்விட்ட பின்பு, அவர்கள் விமர்சிக்கத் தொடங்கினார்கள். விவாதித்தார்கள்; மறுத்தார்கள். ஐந்நூறு ஆண்டுகள் கழித்துத்தான்- அதாவது புத்தர் உடலை விட்ட பின்பு- ஐந்நூறு ஆண்டுகள் கழித்துத் தான் பௌத்தம் இந்தியாவை விட்டு வேரறுக்கப்பட்டது. மக்கள் இத்தகைய துணிச்சலான மனப்பான்மையை நம்ப முடியவில்லை. ஒன்றுமில்லை. உலகம் மாயை, பற்றுகள், முட்டாள்தனம். இறுதிப் பகுப்பாய்வில் நீங்கள் இல்லை, அப்புறம் என்னதான் விஷயம் இருக்கிறது?

ஒவ்வொரு விஷயமும் கனவு என்றால், 'சுயம்' என்பதும் கனவு என்றால், பிறகு நாம் ஏன் அதற்குள் செல்ல வேண்டும்? அது கனவாகவே இருக்கட்டும். குறைந்தபட்சம் அதில் ஏதாவது இருக்கிறது. ஏன் இவ்வளவு அதிக முயற்சியும், 'கடினமான பற்பல முயற்சிகளும் செய்யவேண்டும், இந்த 'ஒன்றுமின்மை'யை அடைவதற்கு?

ஆனால் நீங்கள் நன்றாகப் புரிந்துகொள்ள வேண்டும். புத்தர் கூறும் ஒன்றுமின்மை என்பது, உங்கள் தரப்பி லிருந்து வரும் ஒன்றுமின்மை.

அவர் 'சூன்யம்' தான் அங்கிருந்து என்று கூறுகிறார். உங்களுடைய உலகம் ஒன்றுமின்மை, உங்கள் உறவுகள் இல்லாமை, நீங்களே இல்லாமை என்ற ஒன்றுமின்மைதான் அங்கிருக்கிறது என்று சொல்கிறார். உங்களுடைய பார்வை யில் அங்கு ஒன்றுமில்லை தான் இருக்கிறது. ஆனால் அங்கு இருப்பதை விளக்க முடியாது. அப்படித் தங்குகிற விஷயத்தை வார்த்தைகளால் சொல்ல முடியாது. விடு பட்ட ஒன்றை வார்த்தைகளில் வெளிப்படுத்த முடியாது. தொடர்பு கொள்ள முடியாது. ஏனென்றால் எப்படி சொன்னாலும் அது தவறாகப் புரிந்துகொள்ளப்படும்.

புத்தர் 'ஆம், ஆத்மா, சுயம் இருக்கிறது; ஆனால் அந்த 'சுயம்' என்பது ஆணவம் அற்ற நிலை என்று கூறினால், நீங்கள் தலையை ஆட்டி ஏற்றுக்கொள்ளக் கூடும். ஆம், நாங்கள் புரிந்து கொள்கிறோம். ஆனால், நீங்கள் புரிந்து கொள்ள மாட்டீர்கள். 'தான்' என்னும் அந்தக் கருத்தி லேயே ஆணவத்தின் ஏதோ ஒன்று இருக்கிறது. 'நான் இருக்கிறேன்.' எவ்வளவு தூய்மை இருந்தாலும், தான், பெரிய முதலெழுத்தை உடைய தான் எதுவுமே உருமாறிய ஆணவமே.

முல்லா நசிருதீனும், உள்ளூர் மதகுருவும் எப்போதும் சண்டை போட்டுக் கொண்டும், விவாதம் செய்து கொண்டும் இருந்தார்கள். கடைசியாக நீதிமன்றம் செல்ல நேர்ந்தது. இரண்டு தரப்பு சாட்சிகளையும் நன்றாக விசாரித்த நீதிபதி 'இது அமைதியாகத் தீர்க்கப்பட முடியும் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். இருவரும் கைகுலுக்கிக் கொள்ளுங்கள். உங்கள் நல்லெண்ணம் பற்றி ஏதேனும் தெரிவித்துக் கொள்ளுங்கள்' என்று கூறினார்.

மதகுரு, நசிருதீனின் கையைக் குலுக்கிக் கொண்டே கூறினார். 'நீங்கள் எதை எனக்கு விரும்புகிறீர்களோ நானும் அதையே உங்களுக்கு விரும்புகிறேன்.' உங்கள் விருப்பம் எதுவோ அதுவே என் விருப்பமும் பாருங்கள், நீதிபதி அவர்களே' மீண்டும் இவர் ஆரம்பிக்கிறார்.

அவர் எதுவும் சொல்லவில்லை. ஆனால் அவர் "உங்கள் விருப்பம் எதுவோ அதுவே என் விருப்பமும்" என்று தான் சொன்னார். தன் விருப்பம் பற்றி முல்லாவுக்கு நன்றாகத் தெரியும். "பாருங்கள், நீதிபதி அவர்களே! மீண்டும் இவர் ஆரம்பிக்கிறார்" என்று உங்களுக்கு எது சொல்லப் பட்டாலும் அது உங்களால் வண்ணம் பூசப்பட்டுவிடும்.

புத்தர் மிகவும் தூய்மையானவர். நீங்கள் அவரை மாசு படுத்த அவர் அனுமதிக்க மாட்டார். அவர் ஒரு சிறு

குறிப்புக் கூடக் கொடுக்கமாட்டார். அவர் மொத்தமாக முழுமையாக அனைத்தையும் ஒரேயடியாக மறுத்தார். 'நீங்கள் அறிவதெல்லாம் மறைகின்றது' என்று அவர் கூறுகிறார். உங்கள் உலகம், உங்கள் காதல், உங்கள் பற்று, உங்கள் விஷயங்கள், உங்கள் உறவுகள், நீங்கள் எல்லாம் மறைகின்றன" என்கிறார்.

நீங்கள் மையம், உங்கள் உலகம் உங்கள் வட்டம். அவை அனைத்தும் மறைகின்றன. உங்கள் உலகம் போனபின்பு நீங்கள் காப்பாற்றப்பட முடியும் என்பது அசாத்தியம்.

வட்டமும் சுற்றுப்பாதையும் போனபிறகு, மையமும் போய்விடும். அவை ஒன்றாகப்போகின்றன. ஒரு யானை நகருகிறது என்றால் வாலும் அதோடு சேர்ந்து நகருகிறது. உங்கள் முழு உலகமும் விடுபடுகின்ற போது நீங்களும் விடுபடுகிறீர்கள். நீங்கள் பகுதியாக இருக்கிறீர்கள். கனவின் அமைப்புறுப்பாக நீங்கள் இருக்கிறீர்கள்.

ஆனால் உங்களுக்கு நினைவூட்டுகிறேன். புத்தரைத் தவறாகப் புரிந்து கொள்ளாதீர்கள். தங்கியிருப்பதைப் பற்றிச் சொல்லாமல் இருப்பதில், அவர் மிகவும் தர்க்க ரீதியானவர். அவர் 'வாருங்கள், அனுபவியுங்கள்' என்கிறார். அவர் 'மொழியின் மூலமாக அதை நான் உறவுகொள்ள வைக்க என்னைக் கட்டாயப்படுத்தாதீர்கள்' என்கிறார். அது வாழ்க்கை அனுபவமாக இருக்கட்டும்.

நீங்கள் மறைகிறீர்கள். ஒருவகையில் முதல் தடவையாக நீங்கள் தோன்றுகிறீர்கள். ஆனால் அந்தத் தோற்றம் விரித்துரைக்கவே முடியாத அளவுக்கு முழுமையாக வித்தியாசமானதாகும். என்ன சொன்னாலும் தவறாகிவிடும். ஏனெனில் அதற்கு நீங்கள் உங்கள் வழியில் விளக்கம் கொடுக்கிறீர்கள்.

வீடற்ற சமணர் வெட்டுகிறார் ஆசைகளை!
விடுதலை பெறுகிறார் பற்றுகளில் இருந்து

**புரிந்து கொள்கிறார் சொந்த மன ஆதாரம்**
**ஊடுருவுகின்றார். புத்தரின் கொள்கை ஆழம்**
**பொருளல்லாத தருமத்தின் பொருளுணர்கின்றார்.**

இந்த அளவுக்குப் புத்தர் அனுமதிக்கிறார். தர்மம் என்று ஒன்று உள்ளது. அது இயற்கையான சட்டம். அதாவது 'பொருளல்லாதது. அவர் ஆன்மிகம் என்று கூறமாட்டார். அவர் பொருளல்லாதது' என்று சொல்கிறார். இந்தத் தர்மம் என்பது என்ன? இது என்ன சட்டம்?

லாவோத்ஸூவின் 'தாவோ' கோட்பாட்டை நீங்கள் புரிந்துகொண்டால் இது எளிதாக இருக்கும். அல்லது வேதக் கோட்பாடாகிய 'ரிடா'வைப் புரிந்து கொள்ள வேண்டும். எல்லாவற்றையும் ஒன்றாகப் பிடித்து வைத்திருக்கின்ற ஏதோ ஒரு சட்டம் போன்ற ஒன்று இருக்க வேண்டும். மாறுகின்ற பருவநிலைகள், நகரும் நட்சத்திரங்கள்... முழுப் பிரபஞ்சமும் மிகவும் மென்மையாகச் செல்கிறது. அதற்கு ஒரு குறிப்பிட்ட சட்டம் இருந்தாக வேண்டும்.

இந்த வித்தியாசத்தைப் புரிந்துகொள்ள வேண்டும். யூதர்கள், கிறிஸ்தவர்கள், முகம்மதியர்கள், இந்துக்கள் ஆகிய அனைவரும் அந்தச் சட்டத்தைக் 'கடவுள்' என்கின்றனர். அவர்கள் அதை உருவப்படுத்துகிறார்கள். புத்தர் அதற்குத் தயாரில்லை. ஏனெனில், அதைக் கடவுள் என்று உருவப் படுத்தினால் அதன் முழு அழகும் அழிந்து போய் விடுகிறது. ஏனென்றால் அது 'மனித உருவாக்கியல்' சார்ந்த தாகவும் 'மனிதமையமாக்கல்' சார்ந்ததாகவும் ஆகிவிடு கிறது. அந்த மனப்பான்மை தவறு. மனிதன் 'கடவுள் மனிதனைப் போல் இருப்பதாக' எண்ணுகிறான். பெரிது படுத்தப்பட்டு, அளவில் லட்சக்கணக்கான தடவைகள் பெரிதாக ஆயினும் மனிதனைப் போலக் கடவுள் இருப்பதாக எண்ணுகிறான்.

கடவுள் ஒரு நபர் இல்லை என்று புத்தர் கூறுகிறார். அதனால் தான் அவர் ஒருபோதும் 'கடவுள்' என்னும் சொல்லைப் பயன்படுத்தவில்லை. அவர் தர்மம் என்கிறார். அதாவது சட்டம். கடவுள் ஒரு நபர் இல்லை. ஆனால் அது ஒரு சக்தி. பொருளல்லாத சக்தி. அதன் இயல்பு சட்டத்தின் தன்மையுடையதாக உள்ளதே தவிர 'நபருடைய' தன்மையுடையதாக இல்லை.

அதனால் தான் பௌத்தத்தில் பிரார்த்தனை இடம்பெறவில்லை. நீங்கள் ஒரு சட்டத்தைப் பிரார்த்திக்க முடியுமா? அது அர்த்தமற்றதாக இருக்கும். நீங்கள் புவியீர்ப்புச் சட்டத்திடம் பிரார்த்தனை செய்ய முடியுமா? அது அர்த்தமற்றது. சட்டத்தால் உங்கள் பிரார்த்தனை கேட்க முடியாது. சட்டத்தைப் பின்பற்ற முடியும். சட்டத்துடன் மகிழ்ச்சியான இணக்கத்துடன் நீங்கள் இருக்கலாம். அல்லது சட்டத்திற்குக் கீழ்ப்படியாமல் இருக்கலாம். துன்பப்படலாம். ஆனால் எந்தவகையிலும் பிரார்த்தனை செய்வது அர்த்தமற்றது. புவியீர்ப்புச் சட்டத்திற்கு எதிராகப் போனால் உங்கள் சில எலும்புகளை உடைத்துக் கொள்ளக்கூடும். நீங்கள் சில முறிவுகளைப் பெறலாம். புவியீர்ப்புச் சட்டத்தை நீங்கள் பின்பற்றினால் நீங்கள் முறிவுகளைத் தடுக்கலாம். பிரார்த்தனை செய்வதில் என்ன பொருள் இருக்கிறது? ஒரு சிலைக்கு முன்னால் உட்கார்ந்து 'நான் பயணத் திற்காகச் சென்று கொண்டிருக்கிறேன். எனக்கு உதவு' என்று கடவுளைப் பிரார்த்தனை செய்வது பொருளற்றது.

புத்தர் கூறுகிறார்: இந்தப் பிரபஞ்சம் ஒரு சட்டத்தின் படி ஓடுகிறது; ஒரு நபரின் சொல்படி அல்ல. புத்தரின் மனப்பான்மை விஞ்ஞானபூர்வமானது. எப்படி என்றால் புத்தர் சொல்கிறார்: ஒரு நபர் விருப்பு வெறுப்புக்காளா கலாம். நீங்கள் கடவுளைப் பிரார்த்தனை செய்யலாம். அவரைத் தாஜா பண்ணலாம். ஆனால் அது மிகவும்

ஆபத்தானது. யாரோ ஒருவர் கடவுளைப் பிரார்த்திக்காத வராக இருந்தால் அவரால் தாஜா செய்ய முடியாது. ஆகவே கடவுளுக்கு இவரிடமும் வெறுப்பு வரலாம். ஒரு தனி நபரால் விருப்பு வெறுப்புக்காளாகாமல் இருக்க முடியாது.

இதைத்தான் எல்லாமதங்களும் சொல்கின்றன. 'நீங்கள் பிரார்த்தனை செய்தால் அவர் உங்களைக் காப்பாற்றுவார். நீங்கள் பிரார்த்தனை செய்தால் நீங்கள் தூக்கமாயிருக்க மாட்டீர்கள். நீங்கள் பிரார்த்தனை செய்யாவிட்டால், நரகத்திற்குள் தூக்கி எறியப்படுவீர்கள்.

இது போன்ற விதங்களில் கடவுளைப் பற்றிச் சிந்திப்பது மனிதத்தன்மையுடையது. ஆனால் மிகவும் விஞ்ஞான பூர்வமல்லாதது. அப்படியென்றால் கடவுள் உங்கள் முகஸ்துதியை நேசிக்கிறார். அதாவது உங்கள் பிரார்த் தனைகளை. நீங்கள் பிரார்த்திக்கின்ற நபராக இருந்தால், தொடர்ந்து தேவாலயத்திற்கு, ஆலயத்திற்குச் சென்று கொண்டிருந்தால், தொடர்ந்து கீதையும், விலிலியமும் படித்தால், குர்ஆன் ஒப்பித்தால், அப்போது அவர் உங் களுக்கு உதவுவார். இல்லையென்றால் அவர் உங்களால் மிகவும் தொல்லைப்படுவார். நீங்கள் 'நான் கடவுளை நம்பவில்லை' என்று கூறினால், அவருக்கு உங்கள் மீது மிகுந்த கோபம் வரும்.

புத்தர் இதை முட்டாள்தனம் என்கிறார். கடவுள் ஒரு நபர் அல்லர். அவரை நீங்கள் தொல்லைப்படுத்த முடியாது. அவருக்கு நீங்கள் முட்டுக் கொடுக்க முடியாது. அவரை நீங்கள் முகஸ்துதி செய்ய முடியாது. உங்கள் வழிக்கு அவரைத் தாஜா பண்ண முடியாது. நீங்கள் அவரை நம்பினாலும் நம்பாவிட்டாலும், அது பற்றிப் பிரச்சினையில்லை. ஒரு சட்டம் உங்கள் நம்பிக்கைக்கு அப்பால் இருக்கிறது. நீங்கள் அதைப் பின்பற்றினால்,

மகிழ்ச்சியாய் இருப்பீர்கள். நீங்கள் அதைப் பின்பற்றா விட்டால் நீங்கள் மகிழ்ச்சியற்று விடுகிறீர்கள்.

அந்தச் சட்டத்தின் கோட்பாடு எவ்வளவு கண்டிப்பான அழகு உடையது என்று பாருங்கள். அப்படியென்றால் முழுக் கேள்வியும் கட்டுப்பாடு பற்றியதே தவிர பிரார்த் தனை பற்றியது அல்ல. சட்டத்தைப் புரிந்து கொள்ளுங்கள். சட்டத்திற்கு இணக்கமாக இருங்கள். அதனோடு பிணங்கிக் கொள்ளாதீர்கள். அவ்வளவுதான். கோவில் தேவையில்லை. மசூதி தேவையில்லை. பிரார்த்தனை செய்யத் தேவை யில்லை. உங்களுடைய புரிந்துணர்வைப் பின்பற்றுங்கள்.

நீங்கள் எப்போதாவது துக்கம் அடைந்தால், நீங்கள் சட்டத்திற்கு முரணாகப் போயிருக்கிறீர்கள் என்பதற்கான அறிகுறியே அது. நீங்கள் சட்டத்தைக் கீழ்ப்படியவில்லை. துக்கத்தில் இருக்கும்போதெல்லாம் ஒரு விஷயத்தை நன்கு புரிந்து கொள்ளுங்கள். உங்கள் சூழ்நிலையைக் கவனியுங் கள். உற்றுப்பாருங்கள். அலசுங்கள். கண்டுபிடியுங்கள். நீங்கள் எங்கோ ஓரிடத்தில் சட்டத்திற்கு எதிராகப் போகி றீர்கள். நீங்கள் சட்டத்திற்கு எங்கோ முரண்பட்டிருக் கிறீர்கள். புத்தர் 'உங்களைச் சட்டம் தண்டிக்கவில்லை' என்கிறார். சட்டம்தான் தண்டிக்கிறது என்றால், அது முட்டாள்தனம். சட்டம் எப்படி உங்களைத் தண்டிக்க முடியும்? நீங்களை உங்களையே சட்டத்திற்கு எதிராக நடந்து தண்டித்துக் கொண்டீர்கள். நீங்கள் சட்டத்தோடு சேர்ந்து சென்றீர்கள் என்றால் சட்டம் உங்களுக்கு வெகு மதி அளிக்கவில்லை. சட்டம் எப்படி உங்களுக்கு வெகுமதி அளிக்கும்? நீங்களே உங்களுக்கு வெகுமதி அளித்துக் கொள்கிறீர்கள். முழுப் பொறுப்புணர்ச்சியும் உங்களுடை யது தான். கீழ்ப்படியுங்கள் அல்லது கீழ்ப்படியாமல் இருங்கள்.

நீங்கள் கீழ்ப்படிந்தால் சொர்க்கத்தில் வாழ்கிறீர்கள்; கீழ்ப்படியாவிட்டால், நீங்கள் நரகத்தில் வாழ்கிறீர்கள். நீங்கள் சட்டத்திற்கு முரணாக இருக்கும்போது உங்கள் சொந்த மனநிலை நரகம். நீங்கள் இணக்கத்தில் இருக்கும் போது உங்கள் சொந்த மனநிலை சொர்க்கம்.

புத்தர் கூறினார்:

சட்டத்தை நன்கு புரிந்து கொண்டவனுக்கு...
அவரிதயத்தில் வெறுப்பே இல்லை
அவருக்கு எந்த ஏக்கமும் இல்லை
சிந்தனை வழியில் குழப்பம் இல்லை
செயலின் சிறையில் சிக்கிடவில்லை
ஒரு தலைபட்சம் இல்லை வற்புறுத்தலில்லை
ஒழுக்கம் இல்லை ஞானமில்லை
பழநிலை எதுவும் உயர்ந்திடவில்லை
இருப்பினும் எல்லாப் பெருமையும் உண்டதில்!
இதனை அழைப்பர் வழி என்றே!

இது ஒரு மிகவும் புரட்சிகரமான கூற்று.

இது போன்ற ஒரு கூற்றை, கிருஷ்ணருடைய வாதங்களிலோ, இயேசுவின் வாதங்களிலோ, முகம்மதின் வாதங்களிலோ நீங்கள் காணமுடியாது. இது மிகப் பெரிய புரட்சி.

'புரிந்துணர்வு உடைய ஓர் உண்மையான மனிதன் ஞானத்திற்காக ஏங்குவது கூட இல்லை' என்று புத்தர் கூறுகிறார்.

ஏனென்றால் ஞானத்திற்காக ஆசைப்படுவது கூட ஆசைதான். ஆசை என்பது துக்கம். நீங்கள் பணத்திற்காக ஆசைப்பட்டாலோ, ஞானோதயத்திற்காக ஆசைப்பட்டாலோ, யாராவது ஒரு நபருக்காக ஆசைப்பட்டாலோ, ஞானத்திற்காக ஆசைப்பட்டாலோ, நீங்கள் கௌரவத்திற்காக, அதிகாரத்திற்காக, மரியாதைக்காக ஆசைப்பட்

டாலோ அல்லது தியானத்திற்காக, சமாதிக்காக, மன ஒருமைப்பாட்டிற்காக, ஞானத்திற்காக ஆசைப்பட்டாலோ எல்லாமே ஆசைதான்; 'ஆசை' என்பதில் மறுப்பில்லை, ஆனால் ஆசை என்பது எத்தகையதாயினும் அது 'துக்கம்' தான். என்ன ஆசைப்படுகிறீர்கள் என்பதைப்பற்றிக் கவலை இல்லை, நீங்கள் ஆசைப்படுகிறீர்கள், அது போதும் உங்களைத் துக்கமாக்குவதற்கும்.

ஆசை என்றாலே நீங்கள் எதார்த்தத்திலிருந்து விலகிச் சென்று விட்டீர்கள் என்று தான் பொருள். இருப்பதிலிருந்து நீங்கள் அப்பால் விலகிச் சென்று விட்டீர்கள். ஆசை என்றால் என்ன பொருள்? நீங்கள் கனவுக் கண்ணியில் விழுந்து விட்டீர்கள் என்று பொருள். ஆசை என்றால் நீங்கள் இங்கே இல்லை. நீங்கள் வேறெங்கோ எதிர்காலத்திற்குச் சென்று விட்டீர்கள் என்று பொருள். ஆசையின்மை என்பது ஞானம். ஆகவே நீங்கள் எப்படி ஞானத்தை ஆசைப்பட முடியும்? நீங்கள் ஞானத்திற்கு ஆசைப்பட்டால் உங்கள் ஆசையே அது உண்டாவதைத் தடுக்கிறது. நீங்கள் ஞானத்தை ஆசைப்படவே முடியாது. நீங்கள் ஆசையின் இயல்பைப் புரிந்து கொள்ளலாம். புரிந்துணர்வின் வெளிச்சத்தில் ஆசை மறைகிறது. இருட்டறைக்குள் விளக்கைக் கொண்டு வந்தவுடன், இருள் மறைகிறது.

ஆசை என்பது இருள். புரிந்துணர்வு என்னும் மெழுகு வர்த்தியை நீங்கள் ஏற்றும்போது ஆசை மறைகிறது. ஆசை இல்லையேல் ஞானம் இருக்கிறது. அதுதான் ஞானம்.

இதை நன்றாகப் புரிந்து கொள்ளுங்கள். உங்களுக்குத் தேவைப்படும் விஷயங்களில் இது ஒன்றாகும். உலகியல் ஆசைகளிலிருந்து, உலகியல் அல்லாத ஆசைகளுக்கு மாறுவது மிகவும் எளிதான விஷயம்.

நான் ஒரு குறிப்பிட்ட நகரத்தில் இருந்தேன். மாலை நடைக்காகச் சென்றிருந்தேன். தோட்டத்தில் அருகில்

நெருங்கிக் கொண்டிருந்தபோது ஒரு பெண் என்னிடம் வந்து சிறு புத்தகம் ஒன்றைக் கொடுத்தாள். அட்டையில் அழகான தோட்டம் ஒன்றும், ஊற்றுக்குப் பக்கத்தில் அழகிய மாளிகை ஒன்றும் அச்சிடப்பட்டிருந்தன. உயர்ந்த மரங்கள். தொலைதூரப் பின்னணியில் பனிமூடிய சிகரங்கள். நான் உள்ளே பார்த்தேன். அது ஒரு கிறிஸ்துவச் சமூகம் அச்சிட்ட பிரச்சாரத் துண்டுப் பிரசுரம் என்றறிந்து மிகவும் ஆச்சரியப்பட்டேன். 'ஆண்டவர் தோட்டத்தில் அழகிய மாளிகை வேண்டுமென்று நீங்கள் விரும்பினால், இயேசுவைப் பின்பற்றுங்கள். மறு உலகத்தில் இவ்வளவு அழகிய மாளிகையை விரும்பினால் இயேசுவைப் பின்பற்றுங்கள்!

இப்போது, இத்தகைய மனப்பான்மை மிக உலகியலாகத் தோன்றுகிறது. இது இப்படித்தான் இருந்து கொண்டிருக்கிறது. புத்தரின் மனப்பான்மையைத் தவிர மற்ற எல்லா மதங்களும், ஒருவகையில் அல்லது மறு வகை யில், ஆசையை விடச்சொல்லவில்லை. ஆனால் ஆசையின் இலக்கை மாற்றச் சொல்லியிருக்கிறார்கள். அதுதான் வித்தியாசம். 'உலகியல் விஷயங்களில் ஆசை வைக்காதீர் கள். சொர்க்கவியல் விஷயங்களில் ஆசை வைத்திடுங்கள். பணத்தை விரும்பாதீர்கள். பரம்பொருளை விரும்புங்கள்' என்று அவர்கள் கூறுகிறார்கள்.

இப்போது நீங்கள் வித்தியாசத்தைப் பார்க்கலாம்; புரட்சிகரமான மாற்றம். புத்தர் 'ஆசைப்படாதே' என்று எளிதாகச் சொல்கிறார். நீங்கள் எதை ஆசைப்படுகிறீர்கள் என்பதைப் பற்றி அவருக்கு அக்கறையே இல்லை. நீங்கள் ஆசைப்பட்டால் துக்கத்தில் ஆழ்வீர்கள். ஆசைப் படாதீர்கள், அவ்வளவுதான். ஆசையில்லாமல் இருங்கள். அவ்வளவுதான். நீங்கள் ஆசையில்லாமல் இருந்தால் அமைதியானவராகவும், மௌனமானவராகவும், ஒருங்கமைப்பு உடையவராகவும் இருக்கிறீர்கள். நீங்கள்

ஆசையில்லாமல் இருக்கும்போது ஆணவம் மறைகிறது. நீங்கள் ஆசையில்லாமல் இருக்கும்போது, துக்கம் மறைகிறது. நீங்கள் ஆசையில்லாமல் இருக்கும்போது சட்டத்துடன் இசைவாக இருக்கிறீர்கள்.

உங்கள் ஆசை எப்போதும் சட்டத்துடன் முரண் பட்டது. உங்கள் ஆசை தெளிவாகச் சொல்வது எதை? உங்களுக்குக் கொடுக்கப்பட்டிருப்பதில் உங்களுக்குத் திருப்தியில்லை என்பதைத்தானே! நீங்கள் அதிகமாகக் கேட்கலாம். அல்லது வேறொன்றைக் கேட்கலாம்.

ஆசையில்லாத மனிதன் அப்படியில்லை. என்ன இருக்கிறதோ அது இருக்கிறது. என்ன நடக்கிறதோ அது நடக்கிறது. அதை நான் ஏற்றுக் கொள்கிறேன். .அதோடு செல்கிறேன். எனக்கு வேறெந்த மனமும் இல்லை. இது நடந்து கொண்டிருக்கிறதென்றால், நான் இதில் சந்தோஷம் கொள்வேன். நான் அனுபவிப்பேன். நான் அதோடு கூடவே இருப்பேன்! என்று அவன் கூறுகிறான்.

இதைத் தான் நான் சரணாகதி என்கிறேன். சரணடைவது என்பது ஆசையில்லாமல் இருப்பது.

அவருக்குச் சிந்தனை வழியில் குழப்பம் இல்லை.

நீங்கள் கடவுளை, சொர்க்கத்தை ஆசைப்பட்டால்... உண்மையில், சொர்க்கம் (பாரடைஸ்) என்றால் 'சுவர்களை உடைய தோட்டம்' என்பதுதான் பொருள்... மறு உலகத்தில் சில அழகிய அரண்மனைகளுக்காக ஆசைப்பட்டால், அந்த வழிகூட, அந்தப் பாதைகூட, அந்த மதம் கூட, அந்தக் கீதைகூட உங்களுக்குக் குழப்பம் தரும் சுமையாய் இருக்கும். ஏனென்றால் ஆசைப்படும் மனம் எப்போதும் துன்புற்றிருக்கும், எப்போதும் அலைபாய்ந்து கொண்டிருக்கும். நடக்குமா நடக்காதா என்று எப்போதும் சந்தேகப் பட்டுக் கொண்டிருக்கும்.

'அதை விரும்பிக் கொண்டிருக்கும் நானென்ன முட்டாளா? அது உண்மையில் இருக்கிறதா? அதுதான். அந்த மறுவுலகம் இருக்கிறதா? கடவுள்? மகிழ்ச்சி? சொர்க்கம்? அல்லது அது ஒரு கட்டுக்கதையா? பொம்மைகள் தேவைப்படும் மக்களாகிய குழந்தைகளுக்கான ஒரு கதைதானா அது?' என்று மனம் சந்தேகப்பட்டுக் கொண்டே இருக்கும். அப்புறம் வழிகூட முறுக்கம் ஆகி விடுகிறது, அவன் தன் ஏதோ ஒரு இலக்கை அடைவதற்கு ஒவ்வொரு விஷயத்தையும் கருவியாகப் பயன்படுத்துகிற காரணத்தால்.

'ஆகவே புரிந்துணர்வு கொண்ட மனிதன் தன் சிந்தனை வழியிலும் கூடக் குழப்பம் அடைவதில்லை' என்று புத்தர் கூறுகிறார். ஏனென்றால் அவன் எங்கும் போய்க் கொண்டிருக்கவில்லை, அப்படியிருக்கும் போது வழியைப் பற்றிய பிரச்சினையே எழவில்லையே. இங்குத்தான் அவன் இருக்கிறான். நீங்கள் எங்காவது போய்க்கொண்டு இருக்கின்றீர்கள் என்றால் உங்களுக்கு ஒரு வழி தேவை. நீங்கள் புரிந்து கொண்டால், இங்கே இருப்பதை அனுபவிப்பீர்கள். இந்தக் கணமே போதுமானது. எங்கும் போக வேண்டியதில்லை. ஆகவே வழி என்பதன், பாதை என்பதன், கருவி என்பதன் அவசியம் தான் என்ன? அங்கு முடிவில்லை, இலக்கில்லை, எங்கும் போக வேண்டாம்!

நான் அதையே அழுத்தமாகச் சொல்கிறேன். எங்கும் போகவேண்டாம். சும்மா இங்கே இருங்கள். எவ்வளவு முழுமையாக முடியுமோ அவ்வளவு முழுமையாக இருங்கள். உங்கள் மனம் எங்கும் போக அனுமதிக்காதீர்கள். நீங்கள் எங்கும் போய்க் கொண்டிருக்காத அந்தக் கணத்தில் ஒவ்வொன்றும் அமைதி ஆகிவிடுகிறது. அதை அனுபவியுங்கள். இப்போதே, என்னிடம் கேட்டுக் கொண்டிருக்கும்போதே, அதை நீங்கள் அனுபவிக்கலாம்-

அதாவது- நீங்கள் எங்கும் போய்க் கொண்டிருக்கவில்லை யானால்.

நீங்கள் இரண்டு வழிகளில் நான் சொல்வதைக் கேட்கலாம். ஒரு வழி ஆசை கொண்ட மனிதனுடைய வழியாகும். ஞானம் பெறுவதற்கும் ஏதாவது தடயம் கிடைக்குமா என்று நீங்கள் பார்க்க என்னைக் கவனித்துக் கேட்கலாம். கடவுள் அரண்மனையில் நுழைவதற்கு ஏதாவது தடயம் கிடைக்காதா என்று கண்டுபிடிக்க முனையலாம். ஏதாவது ஒரு சாவி கண்டுபிடிக்க எண்ண லாம். அப்புறம் நீங்கள் கவலையானவர் ஆகிவிடுகிறீர்கள். நிம்மதியற்றவர் ஆகிவிடுகிறீர்கள்.

எங்காவது செல்ல வேண்டும் என்னும் எண்ணமில்லா மல் நான் சொல்வதைக் கேளுங்கள். நான் சொல்வதைச் சாதாரணமாக நீங்கள் கேட்கலாம். நீங்கள் என்னோடு இங்கேயே இருக்க முடியும்.

அந்த அமைதியில், நீங்கள் இங்கே இருக்கும்போது, என்னோடு மகிழ்ந்து கொண்டும், நான் சொல்வதைக் கேட்டுக் கொண்டும் இருக்க முடியும்.

நீர்வீழ்ச்சி ஒன்றினை நீங்கள் கேட்பதுபோல், மரங்களில் உள்ள பறவைகள் 'கிரீச்சிடும்' ஒலியைக் கேட்பது போல, பைன் மரங்களில் காற்று வீசுவதைக் கேட்பதுபோல் நீங்கள் தாவோவுடன் இசைந்து இருக்கும் கணத்தில்.

நீங்கள் தர்மத்துடன் இசைந்து இருக்கும் கணத்தில், நீங்கள் பிரபஞ்சத்துடன் இசைந்து இருக்கிறீர்கள்.

பிரபஞ்சம் வேறெங்கோ சென்று கொண்டிருக்கிறது. நீங்கள் அதனுடன் இசைந்து இருக்கிறீர்கள். நீங்கள் நதியுடன் நகர்கிறீர்கள். நீங்கள் நதியைத் தள்ளவில்லை. அப்புறம் உங்களுக்கென்று ஓர் இலக்கும் இல்லை. நீங்கள் இசைந்துள்ள முழுமையின் இலக்குதான் உங்கள் இலக்குமாக மாறிவிடுகிறது.

செயலின் சிறையில் சிக்கிடவில்லை.

புரிந்துணர்வுள்ள ஒரு மனிதன் செய்வதற்கு எதுவுமில்லை. அவன் இருக்க வேண்டும்- அப்படியே- இருக்க வேண்டும். அவன் சும்மா இருத்தலே அவனது எல்லாச் செயலும்; அவனது செயல் அவனது சந்தோஷம். அவன் அதை அனுபவிக்கிறான்.

நீங்கள் ஓர் ஓவியரைக் கேளுங்கள். அவர் உண்மையான ஓவியர் என்றால், அவர் தன் ஓவியத்தை அனுபவிக்கிறார். அதற்கு ஏதோ ஒரு பயன் இருக்கிறது என்பதனால் அல்ல. பயன் இருக்கலாம். இல்லாமலும் இருக்கலாம். அது பற்றிப் பிரச்சினையில்லை.

ஒருவர், 'உங்களது சிறந்த ஓவியம் எது?' என்று வான் கோக்கிடம் கேட்டார். அவர் ஏதோ ஓர் ஓவியம் வரைந்து கொண்டிருந்தார். 'இதுதான்? இதோ இப்போது வரைந்து கொண்டிருக்கிறேனே, இதுதான்' என்று பதிலளித்தார் அவர்.

மக்கள் வான் கோக் பற்றிப் பெரிதும் கவலைப் பட்டார்கள், ஏன்தான் அவர் ஓவியம் வரைகிறாரோ என்று. ஏனெனில் அவரது ஓவியங்கள் விற்பனை ஆகவில்லை. அவர் உயிரோடு இருந்தவரை ஓர் ஓவியம் கூட விற்பனை ஆகவில்லை. மரணப்படுக்கையில் இருந்தார். பட்டினி கிடந்து கொண்டிருந்தார்; உயிரோடு இருப்பதற்கான பணம்தான் அவரிடம் இருந்தது; அவரது சகோதரர் அவர் உயிர் வாழ்வதற்காக ஒரு குறிப்பிட்ட அளவு பணம் கொடுத்தார். ஆகவே மூன்று நாட்கள் அவர் சாப்பிடுவார். நான்கு நாட்கள் பட்டினியாக இருப்பார்; அந்தப் பணத்தைச் சேர்த்து வைத்து வண்ணங்கள், தூரிகைகள், வரைதுணிகள் இவற்றை வாங்கினார். அந்த மாதிரி வரைந்த ஓவியங்கள் விற்பனையே ஆகவில்லை. மக்கள் அவரைப் பைத்தியம் என்று நினைத்தார்கள்.

ஆனால் அவர் மிகப்பெரிய அளவில் மகிழ்ச்சியாய் இருந் தார். பாட்டிலியும் மகிழ்ச்சியும். அவரது மகிழ்ச்சி என்ன? ஓவியம் வரையும் செயலே அவரது மகிழ்ச்சி தான்!

நினைவு கொள்ளுங்கள். செயல் அடிமைத்தனம் ஆகிறது. உங்களுக்கு ஒரு குறிக்கோள் இருந்தாலோ, அதன்மூலம் வேறெங்கோ நீங்கள் செல்ல நினைத்தாலோ செயல் 'கர்மா' ஆகிவிடுகிறது.

உங்கள் செயல் சும்மா மகிழ்ச்சியாக இருக்குமானால் குழந்தைகள் விளையாடுவதுபோல், மணல்வீடுகள் கட்டுவது போல், அனுபவித்துக் கொண்டே, தங்கள் செய் கைக்கும் எந்த இலக்குமின்றி, விளையாடிக் கொண்டே, அந்தச் செயலிலேயே உள்ளார்ந்து விளையாடிக் கொண்டே இருப்பது- அப்படியென்றால் அது 'கர்மா' இல்லை; அதனால் அங்கே அடிமைத்தனமும் இல்லை. அப்போது, ஒவ்வொரு செயலும் அதிகமாக- இன்னும்- அதிகமாக-இன்னும்-அதிகமாக-சுதந்திரத்தை அள்ளித் தருகிறது.

**ஒருதலைபட்சம் இல்லை வற்புறுத்தலில்லை**
**ஒழுங்குமுறை இல்லை.**

புரிந்து கொள்ளும் மனிதனுக்கு ஒழுக்கம் கற்பித்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லை.

அவனது புரிந்துணர்வே அவனுக்கு ஒழுக்கம். உங்களுக்கு ஒழுக்கம் வேண்டும். ஏனென்றால் உங்கள் புரிந்துணர்வு போதுமானது அல்ல.

மக்கள் என்னிடம் வருகிறார்கள்... வேறோர் இரவு, ஒருவர் இருந்தார். 'தனக்கு எது சரி என்பது தெரியும் இருந்தாலும் தவறானதைச் செய்து கொண்டே போவதாக வும்' அவர் எனக்கு ஒரு கடிதம் எழுதினார். தவறு எது என்று அவர் அறிவார். இருந்தும் அதைச் செய்து

கொண்டே போகின்றார். 'ஆகவே நான் அதை எப்படி மாற்றுவது, பகவான்?' அவர் எழுதியிருக்கிறார். உண்மையிலேயே சரி என்பது எது என்று உங்களுக்குத் தெரிந்திருந்தால் நீங்கள் எப்படித் தவறு செய்ய முடியும்? எங்கேயோ உங்கள் அறிவு கடன் வாங்கப் பட்டிருக்க வேண்டும்! அது உங்களுடையதாக இருக்க முடியாது. நீங்கள் உண்மையாகவே எது தவறு என்று அறிந்திருந்தால் உங்களால் எப்படி அதைச் செய்ய முடியும்? அசாத்தியம் அது! நீங்கள் செய்தால், அது அப்பட்டமாகக் காட்டுகிறது நீங்கள் அறியவில்லை என்பதை.

சாக்ரடீஸ் சொல்வது வழக்கம், 'அறிவு புண்ணியம்' என்று. நீங்கள் ஒன்றை அறிந்தால் அது நிகழத் தொடங்கு கிறது. ஆனால் அந்த அறிவு உண்மையானதாக இருக்க வேண்டும். உண்மை என்பதன் மூலம் நான் சொல்ல விரும்புவது, அது உங்களுடையதாக இருக்கவேண்டும். உங்கள் சொந்த வாழ்க்கை மூலமாக அது வந்திருக்க வேண்டும். அது உங்கள் சொந்த அனுபவத்தின் சாறாக இருக்க வேண்டும். அது இரவலாக இருக்கக் கூடாது. அது கல்விசார்ந்ததாக இருக்கக் கூடாது. அது மறைகளில் இடம்பெற்றிருக்கக் கூடாது. அது ஒரு தகவலாக மட்டும் இருந்துவிடக் கூடாது.

அது உங்கள் சொந்த அனுபவமாக, அதிகாரபூர்வமாக வாழ்ந்ததாக இருக்க வேண்டும். அப்பொழுது அதை எதிர்த்து நீங்கள் செல்லமுடியாது. வழியே இல்லை.

நீங்கள் எப்படிச் சுவர் மூலம் கடந்து செல்லமுடியும், அது சுவர் என்று நன்கு தெரிந்துகொண்டே? நீங்கள் கதவு வழியாகச் செல்வீர்கள். நீங்கள் என்னிடம் ஒருபோதும் வரமாட்டீர்கள். 'பகவான், எனக்குத் தெரியும் கதவு எங்கே இருக்கிறது என்று. இருந்தாலும் நான் முதலில் சுவர் வழியாகப் போக முயன்றேன். அது என் தலையை எப்போதும் இடிக்கிறது. இப்போது என்ன செய்யட்டும்!'

என்று சொல்ல மாட்டார்கள். உங்களுக்குக் கதவு எங்கே இருக்கிறது என்று தெரிந்தால், அதன் வழியாகச் செல்லுங்கள். உங்களுக்குத் தெரியும். இருந்தாலும் நீங்கள் சுவர் வழியாகச் செல்ல முயல்கிறீர்கள் என்றால், அது அப்பட்டமாகக் காட்டுகிறது. நீங்கள் அறியவில்லை என்று. நீங்கள் கேட்டிருக்கலாம். யாராவது ஒருவர் உங்களுக்குச் சொல்லியிருக்கலாம். ஆனால் நீங்கள் நம்பவில்லை. நீங்கள் அறிவதை உங்கள் செயல் காட்டுகிறது.

உங்கள் அறிவின் நிரூபணம் உங்கள் செயல்தான். வேறெதுவும் இல்லை.

'புரிந்துணர்வு இருந்தால், ஒழுக்கம் தேவையில்லை' என்கிறார் புத்தர். புரிந்துணர்வு தன் ஒழுக்கத்தை தானே கொண்டு வருகிறது- உள்ளார்ந்தது. உள்முகமானது. இரண்டு வகையான அறிவு இருப்பது போல் இரண்டு வகையான ஒழுக்கம் இருக்கிறது. உங்கள் அறிவு வெளியி லிருந்து வருவதானால், நீங்கள் ஒழுக்கத்தை அமல்படுத்த வேண்டும். அறிவு ஊற்றெடுத்தால், உள்ளே இருந்து சுரந்தால், அப்போது ஒழுக்கத்தை அமல்படுத்த வேண்டிய எந்தத் தேவையும் இல்லை. ஒழுக்கம், அதன் நிழலாக வருகிறது. அது பின்பற்றுகிறது.

நற்பயிற்சியில்லை ஞானமில்லை
படி நிலை எதுவும் உயர்ந்திடவில்லை

படிநிலைகள் இல்லை என்று புத்தர் கூறுகிறார். மக்கள் என்னிடம் வந்து 'நான் முன்னேறி விட்டேன். ஆனால் அடையவில்லை' என்று சொல்பவர்கள் இருக்கிறார்கள்.

அதற்காக ஒரு நற்சான்றிதழ் வேறு கேட்கிறார்கள். அதனால் அவர்கள் எந்தப் படிநிலையில் உள்ளார்கள், எந்த அளவுக்கு முன்னேறியிருக்கிறார்கள் என்று சுட்டிக் காட்டலாம் அல்லவா?

'உண்மையில் எந்தப் படிநிலை அமைப்புகளும் இல்லை' என்று புத்தர் கூறுகிறார். இரண்டு வகை மக்கள் மட்டும்தான் இருக்கிறார்கள். ஞானம் பெற்றவர்கள், ஞானம் பெறாதவர்கள். அதற்கு இடைத்தரம் எதுவும் இல்லை. சிலபேர்கள் நடுத்தரத்தில் இருக்கிறார்கள் என்பதெல்லாம் இல்லை.

நீங்கள் உயிரோடிருக்கிறீர்கள். அல்லது இறந்துவிட்டீர் கள்; இடைப்பட்ட நிலை எதுவுமில்லை. ஒன்று அறிவீர்கள் அல்லது அறிய மாட்டீர்கள்; இடைப்பட்டு எதுவுமில்லை. படிநிலைகள் எவையும் இல்லை.

எல்லாப் படிநிலைகளும் ஆணவத்தின் தந்திரங்கள். "ஆம், நான் இதுவரை ஞானம் பெறவில்லை. ஆனால் நான் மிக மிக முன்னேறி இருக்கிறேன். தொண்ணூற்றி ஒன்பது டிகிரி. ஒரே ஒரு டிகிரி இருந்தால் நான் ஞானம் பெற்று விடுவேன். நான் மிகவும் பின்தங்கவில்லை. மிகவும் முன்னேறியுள்ளேன்" என்று கூறுகிறது ஆணவம்.

இந்த அறியாமையை எல்லாம் விட்டுவிடுங்கள். நீங்கள் ஞானம் பெறவில்லை என்றால்–அவ்வளவு தான்–நீங்கள் ஞானம் பெறவில்லை.

ஞானம் பெறாத அனைத்து மக்களும் ஒரேமாதிரி யானவர்தான்; ஞானம் பெற்ற அனைத்து மக்களும் ஒரே மாதிரியானவர்கள் தாம்.

அந்த வித்தியாசம் அப்படியே... தெளிவாகச் சொல்ல லாம். 'நீங்கள் தூங்குகிறீர்கள் என்றால் உங்கள் அருகில் சிலர் முழுவிழிப்புணர்வோடும், தயார் நிலையிலும் உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள்' என்று வைத்துக் கொள்ளுங்கள்.

ஒரே ஒரு வித்தியாசம் தான். நீங்கள் விழித்திருந்தால் நீங்கள் விழித்திருக்கிறீர்கள். "இல்லை. நான் இடையில்

இருந்தேன்" என்று நீங்கள் சொல்லமுடியாது. அப்படி ஒரு நிலை இல்லை. நீங்கள் தூங்கினால், நீங்கள் தூங்குகிறீர்கள். நீங்கள் விழித்துக் கொண்டிருந்தால், விழித்துக் கொண்டு இருக்கிறீர்கள்.

வித்தியாசம் சிறியது. இருப்பினும் மிகவும் பெரியது. முழுவதும் விழிப்புணர்வோடு உட்கார்ந்து கொண்டிருக்கின்ற ஒரு மனிதன், அவனருகிலேயே குறட்டைவிட்டுக் கொண்டிருக்கின்ற ஒரு மனிதன். இருவரும் ஒரேமாதிரியான மனித உயிர்கள். அதே நனவு நிலைகள். ஆனால் ஒன்று ஆழமான இருளில், தொலைந்து போய், தன்னைத் தான் மறந்து போய் உள்ளது. இன்னொன்று பிரகாசமாய், உயிர்த்துடிப்போடு, உள்ளார்ந்த சொந்த ஜ்வாலையைப் பெற்றுள்ளது.

ஏதாவது நிகழ்ந்தால், அவர்கள் இருவரும் வித்தியாசமான வழிகளில் மறுசெயல் புரிவார்கள். விழிப்புடையவர் வித்தியாசமான வழியில் தான் நிச்சயம் மறுசெயல் புரிவார். அவரது மறுசெயல், மறு வினையாக இருக்கும். தான் என்ன செய்கிறோம் என்று புரிந்துகொண்டு நன்றாக அறிந்து கொண்டுதான் அவரது மறுவினை அமைகிறது.

தூங்குகின்ற மனிதன் மறுசெயல் செய்தால், அவனுடையது எந்திரத்தனமாக இருக்கும், அவன் என்ன செய்கிறான் என்று அவனுக்கே தெரியாதிருக்கும்.

புத்தர் கூறுகிறார்.

நற்பயிற்சி இல்லை, ஞானமில்லை,
படிநிலை எதுவும் உயர்ந்திடவில்லை,
இருப்பினும் பெருமையும் உண்டதில்!
இதனை அழைப்பர் வழிஎன்றே!

நீங்கள் உங்கள் ஆணவத்தைச் சரணாகதி செய்து விட்டால், உங்களையே நீங்கள் சரணாகதி கொடுத்து

விட்டால் நீங்கள் சட்டத்துடன் இணக்கமாக மாறுகிறீர்கள். ஒவ்வொன்றும் இயல்பாக நடக்கத் தொடங்குகின்றன.

ஆனால், நீங்கள் சரணாகதி அடைந்துதான் ஆக வேண்டும்.

நீங்கள் மறையத் தயாராக இருந்தால், நீங்கள் முழுமையாகச் சட்டத்தோடு இருப்பீர்கள், சட்டம் பார்த்துக் கொள்ளும்.

நீங்கள் இதைக் கவனித்திருக்கிறீர்களா? நீங்கள் நதியை நம்பினால், மிதக்கலாம். எந்தக் கணத்தில் உங்கள் நம்பிக்கையை இழக்கிறீர்களோ, அப்பொழுது நீங்கள் மூழ்கத் தொடங்குகிறீர்கள். நீங்கள் நம்பினால், நதி, தன் கையில் ஏந்திக் கொள்கிறது.

நீங்கள் பயந்துவிட்டால், நீங்கள் மூழ்கத் தொடங்குகிறீர்கள்.

அதனால்தான் இறந்த உடல்கள் தண்ணீரின் மேற்பரப்பில் மிதக்கத் தொடங்குகின்றன. ஏனென்றால் இறந்த உடல்கள் சந்தேகப்பட முடியாது. இறந்த உடல்கள் பயப்பட முடியாது.

உயிரோடு இருந்தபோது, அதே நபர்கள் நதிக்குள் சென்று மூழ்கிவிட்டனர். இறந்தபொழுது, அவர்களின் உடல்கள் மேற்பரப்பிற்கு வருகின்றன; தண்ணீர்ப் பரப்பிலேயே மிதக்கத் தொடங்குகின்றன.

இப்போது, நதிக்கு அவைகளை மூழ்கடிக்க முடியாது. மிகக் கடினம். இந்தக் கணம் வரை எந்த நதியும் அப்படிச் செய்ய முடியவில்லை.

எந்த நதியாலும் இறந்த உடலை மூழ்கடிக்க முடியாது.

என்ன நடக்கிறது? என்ன நடக்கிறது? இறந்த மனிதனுக்கு ஏதோ ஒரு ரகசியம் தெரிந்திருக்க வேண்டும்.

அந்த ரகசியம் இதுதான். அவனால் சந்தேகப்பட முடியாது.

இயேசுவின் வாழ்க்கையில், அந்த அழகிய உவமை கதையை நீங்கள் நிச்சயம் கேட்டிருப்பீர்கள்-

கலிலி ஏரியை அவரது சீடர்கள் கடந்து கொண்டிருக்கிறார்கள். இயேசு மிகவும் பின்னால் விடப்படுகிறார். 'நான் விரைவில் வருவேன். என் பிரார்த்தனைகளை நான் சொல்ல வேண்டியிருக்கிறது' என்று கூறுகிறார்.

சீடர்கள் மிகவும் குழப்பத்தில் ஆழ்கிறார்கள். அவர் வருவதைப் பார்த்து- ஏரியின் மீது நடந்து வருவதைப் பார்த்து.

அவர்கள் அஞ்சுகிறார்கள். திகிலடைகிறார்கள்; பீதி கொள்கிறார்கள். அது ஏதோ கெட்ட சக்தியாக இருக்க வேண்டும் என்று நினைக்கிறார்கள். அவர் எப்படி நடக்க முடியும்?

அப்போது ஒரு சீடன் சொல்கிறார். இயேசுவே, 'அது நீங்கள் தானா?' இயேசு கூறுகிறார். 'ஆம்' என்று. அப்போது சீடர் கூறுகிறார். "நீங்கள் நடக்க முடியுமானால், நான் ஏன் முடியாது, உங்கள் சீடன் அல்லவா நான்! 'நீயும் கூட நடக்கமுடியும்-வா' என்று இயேசு கூறுகிறார். சீடன் வருகிறார்; சில அடிகள் நடக்கிறான். ஆச்சரியம் அடைகிறான், தன்னால் நடக்க முடிகிறது என்று. ஆனால் அப்புறம் வருகிறது சந்தேகம். 'என்ன நடக்கிறது நம்ப முடியாதது' என்று கூறுகிறார்.

'இது நம்பமுடியாதது. நான் கனவு காண்கிறேனா? அல்லது சாத்தானின் தந்திரமா? என்ன நடந்து கொண்டிருக்கிறது-' என்று எந்தக் கணத்தில் நினைத்தாரோ அதே கணத்திலிருந்து அவர் மூழ்கத் தொடங்கிவிடுகிறார். 'அற்ப விசுவாசியே! ஏன் நீ சந்தேகப்பட்டாய்? நீ நடந்தாய்.

உனக்குத் தெரியும் அது நடந்ததென்று. அதற்குப் பிறகுமா சந்தேகித்தாய்' என்று இயேசு கூறினார்.

இந்தக் கதை இப்படி நடந்திருக்குமா இல்லையா என்பது பிரச்சினையில்லை. ஆனால் நான் கூட அறிவேன். நீங்கள் கூட முயலலாம். நீங்கள் நம்பினால்- அப்படியே- நதியின் மீது தளர்வாக-நீங்கள் மிதப்பீர்கள். பிறகு வரும் சந்தேகம். அதே சந்தேகம், இயேசுவின் சீடருக்கு வந்த சந்தேகம்-"என்ன நடந்துகொண்டிருக்கிறது? எப்படி இது முடியும்? நான் மூழ்கவில்லையே" உடனடியாக- நீங்கள் மூழ்கத் தொடங்கிவிடுவீர்கள்.

நீச்சல் தெரிந்தவர்க்கும், நீச்சல் தெரியாதவருக்கும் இடையில் உள்ள வித்தியாசம் அதிகமில்லை. நீச்சல் தெரிந்தவர் எப்படி நம்புவது என்று கற்றுக் கொண்டிருக் கிறார். நீச்சல் தெரியாதவர் எப்படி நம்புவது என்று இன்னும் கற்றுக்கொள்ளவில்லை.

இருவரும் சமம்தான். நீச்சலாளர் அல்லாதவர் ஆற்றில் விழும்போது சந்தேகம் எழுகிறது. நதி அவரை மூழ்கடிக்கப் போகிறது என்று பயம் கொள்ளத் தொடங்குகிறார். உண்மையில் நதி பிறகே அவரை மூழ்கடிக்கிறது. தன் சந்தேகத்தால் தானே மூழ்கடித்துக் கொள்கிறார். நதி எதுவுமே செய்யவில்லை. நீச்சலாளர் நதியை அறிகிறார். நதியின் வழிகளை அறிகிறார். பல தடவைகள் அவர் நதியோடு இருந்து கொண்டிருக்கிறார். அவர் நம்புகிறார். அவர் சும்மா மிதக்கிறார். அவர் அஞ்சவில்லை. வாழ்க்கையும் அப்படியே அதே போலத்தான்.

புத்தர் கூறுகிறார்:

**இருப்பினும் எல்லாப் பெருமையும் உண்டதில்!**
**இதனை அழைப்பர் வழி என்றே.**

புரிந்துணர்வாளன் முழுமையாகப் போகிற வழியில் போகிறவன். சட்டம் இயங்க அவன் அனுமதிக்கிறான். நீங்கள் பழைய சமய மொழியை விரும்பினால், பௌத்தம் அல்லாத மொழியை விரும்பினால், கடவுளிடம் சரணாகதி என்று இதை அழைக்கலாம். பிறகு பக்தன் "இப்போது இனிமேல் நான் இல்லை. நீ மட்டும்தான் இருக்கிறாய். நான் உன் உதடுகளில் உள்ள ஒரு புல்லாங்குழல் மட்டுமே, ஒரு மூங்கில் குழாய் மட்டுமே. நீ பாடுகிறாய். பாடல் உன்னுடையதாய் இருக்கும். நான் ஒரு வழியாக மட்டும் இருப்பேன்" என்று கூறுகிறான்.

இது ஒரு பழைய சமயமொழியாகும். புத்தர் பழைய மொழியுடன் மகிழ்ச்சியடையவில்லை. புத்தர் கவிஞர் களின் மொழியில் மகிழவில்லை. புத்தர் விஞ்ஞான பூர்வமொழியை அதிகமாக விரும்புகிறார். ஆல்பர்ட் ஐன்ஸ்டீன், நியூட்டன், அல்லது எடிசன் ஆகிய விஞ்ஞானி களின் மொழியில் அவர் பேசுகிறார். அவர் சட்டம் பற்றிப் பேசுகிறார். இப்போது நீங்கள் தாம் தீர்மானிக்க வேண்டும். வித்தியாசம் மொழியில் தான்; அடிப்படை விஷயம், அப்படியே போகவிடுவது, முழுமையான சரணாகதி.

புத்தர் கூறினார்:

**சிரம், முகம் மழித்துக் கொள்வோர்**
**சிரமணர் ஆகிறார்.**
**வழியில் அறிவுரை பெற்றிடுவோர்**
**வைய ஆசைகள் சரண்செய்வார்!**
**பிச்சையேற்றுப் பெறுவதிலே**
**பெருமன நிறைவே அடைந்திடுவார்.**
**ஒருநாள் ஒருவேளை உணவுகொள்ளல்**
**ஒருநாள் ஒரு மரநிழலில் தங்கல்!**
**திருப்பி எதனையும் செய்திடக் கூடாது!**
**ஆசைகள் பற்றுகள் அனைத்துமே**
**முட்டாள் மூடன் ஆக்கிடுமே!**

சிரம்முகம் மழித்துக் கொள்வோர் சிரமணர் ஆகின்றார்.

நான் (ஆரஞ்சு நிற) உடைகள், கழுத்தைச் சுற்றி மாலை, பற்றி வலியுறுத்துவதுபோல், புத்தர், தன் துறவிகள் தலையையும், முகத்தையும் மழித்துக்கொள்ள வேண்டும் என்று வலியுறத்தினார். அவை சும்மா சாயல்களே! அவற்றை நேரடியான பொருளில் எடுத்துக்கொள்ள வேண்டாம். அவைகள், நீங்கள் சரணாகதிக்குத் தயார் என்று தெரிவிக்கும் சாயல்கள், அறிகுறிகள்! அவற்றுக்கு வேறெந்தப் பொருளும் கிடையாது. அதற்கு ஒரே பொருள் என்னவென்றால், அவர்கள் புத்தரோடு போகத் தயாராக இருக்கிறார்கள் என்பது தான்.

நீங்கள் துறவு கொள்கையில், துறவில் தீட்சை எடுக்கும் போது, நீங்கள் எனக்கு 'ஆம்' சொல்கிறீர்கள், அவ்வளவே. 'ஆம், பகவானே, நான் உங்களுடன் வருகிறேன். நீங்கள் ஏதேனும் பைத்தியக்காரத்தனமாகச் செய்யச் சொன்னாலும், நான் அதைச் செய்யத் தயாராய் இருக்கிறேன்' என்று நீங்கள் கூறுகிறீர்கள்.

இப்போது இது ஏதோ ஒரு பைத்தியக்காரத்தனம்-ஆரஞ்சு நிற ஆடை அணிவது! என்ன காரணம்? பிறரால் சிரிப்புக்கு ஆளாகும் கூட்டத்தில் ஒருவராக இருக்க நீங்கள் தயாராக இருக்கிறீர்கள் என்பதன் அடையாளமே அது. மக்கள் முட்டாளாக்கப்படத் தயார், நீங்கள் என்னோடு வரத் தயார், என்ன விலை கொடுத்தாலும் என்னோடு வரத் தயார்; இதுவே சரணாகதிக்கு அடையாளம்.

புத்தர் சொல்வது வழக்கம். 'சிரமணர் உத்தரவாதமின்மையில் தான் வாழவேண்டும்' என்று. அதனால் தான் அவர் சொன்னார் "பிச்சைக்காரர் ஆகுங்கள்". மீண்டும் சொல்கிறேன். நேரடிப் பொருளில் இதை எடுத்துக் கொள்ள வேண்டாம். அதன் உணர்வைப் புரிந்துகொள்ள முயலுங்கள். 'நீங்கள் எதுவும் சொந்தம் கொண்டாடக்

கூடாது. சொந்தமாக எதையும் வைத்திருப்பது அசாத்தியம். வாழ்க்கையே உத்தரவாதமின்மைதான்; உத்தரவாதம் ஏற்படுவதற்கு வழியே இல்லை.

மரணம் வரும். உங்கள் அனைத்து உத்தரவாதங்களை யும் அழித்துவிடும். எனவே எதற்கும் கவலைப்படாதீர்கள். நீங்கள் பிச்சைக்காரராக இருந்தால் கூட மகிழ்ச்சியாக இருங்கள்; பிச்சைக்காரராக மகிழ்ச்சியாய் இருங்கள். உங்கள் உத்தரவாதத்தைப் பற்றியெல்லாம் கவலைப்படுவது வேலைக்கு ஆகாது. வாழ்க்கையின் உத்தரவாதமின்மை பற்றி நன்றாகப் புரிந்து கொள்ளுங்கள். ஏற்றுக் கொள்ளுங் கள். அந்த ஏற்புடைமையிலேயே நீங்கள் உத்தரவாதம் உடையவர் ஆகலாம்.

ஒருநாள் ஒருவேளை உணவு கொள்ளல்
ஒருநாள் ஒருமர நிழலில் தாங்கள்
திருப்பி எதனையும் செய்திடக் கூடாது

என்று புத்தர் சொல்வது வழக்கம்.

ஏனென்றால், நீங்கள் ஏதாவது ஒரு விஷயத்தைத் திரும்பத் திரும்பச் செய்தீர்களென்றால் அது பழக்கமாக ஆகிவிடுகிறது. எந்திரத்தனமான பழக்கமாக மாறிவிடுகிறது. எந்திரத்தனமாக நீங்கள் மாறிவிட்டால் நீங்கள் விழிப்புணர்வை இழந்து விடுகிறீர்கள். நீங்கள் மறுபடியும் செய்யாதீர்கள். உங்கள் சூழ்நிலைகளை மாற்றிக் கொண்டே இருங்கள். அதனால் ஒவ்வொரு சூழ்நிலையி லும் நீங்கள் உஷாராக இருந்தாக வேண்டும். நகரை மாற்றிக்கொண்டே செல்லுங்கள். ஒரே கதவின் அருகே நின்று மீண்டும் பிச்சையெடுக்க வேண்டாம். ஒரே மரத்தின் அடியில் மீண்டும் உறங்க வேண்டாம்.

உங்களை உஷார்நிலையில் வைக்கும் அம்சங்கள் இவையெல்லாம்.

நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? நீங்கள் ஒரு புதிய இல்லத்திற்குச் சென்றால், சில நாட்கள் உங்களுக்கு, மிகவும் நிம்மதியில்லாமல் இருக்கும் இல்லையா? கொஞ்சம் கொஞ்சமாக அந்த வீடு உங்களுக்குப் பழக்கமானபின், நிம்மதி உங்களுக்கு வருகிறது.

கொஞ்சம் காலம் ஆகிறது; மூன்று நாட்களிலிருந்து மூன்று வாரங்களுக்குள், ஓர் இல்லத்தில் ஒருவன் பழகிப் போய் விடுகிறான். பிறகு அந்த இல்லம் அவனுக்குப் பழக்கமாக ஆகிறது.\'அது நடப்பதற்கு முன்பு நீ நகர்ந்து விடு' [ என்கிறார் புத்தர். ஒரே மரத்தின் கீழ் இரண்டு தடவை தங்குவதுகூட வேண்டாம்; தவறினால் மனம் அதையும் உரிமை கொள்ளும்.

பிச்சைக்காரர்களும் உரிமை கொள்கிறார்கள். ஒரு பிச்சைக்காரன் ஒரு மரத்தினடியில் உட்கார்ந்து பிச்சை யெடுக்கிறான். பிறகு வேறு பிச்சைக்காரர்கள் எவரையும் அந்த மரத்தினடியில் உட்கார அனுமதிக்க மாட்டான். 'வேறெங்காவது போங்கள். இது என் மரம்' என்று அவன் சொல்வான். பிச்சைக்காரர்களுக்குக் குடியேற்ற நாடுகள் உண்டு. ஒரு பிச்சைக்காரன், பிச்சையெடுக்க இங்கே பக்கத்து வீடுகளுக்கு வருகிறான். அவன் அடுத்த பிச்சைக் காரர்களை இங்கே வருவதற்கு அனுமதிப்பதில்லை. அவன் சண்டை போடுவான். அவனுடைய ஆட்சிப்பரப்பு அது.

உங்களுக்குத் தெரியாது. அவன் ஆட்சிப்பரப்பில் நீங்கள் இருக்கிறீர்கள். அவன் அடுத்த பிச்சைக்காரர்களை இங்கே நுழைய அனுமதிக்கவே மாட்டான்.

/ 'உங்கள் மனத்தைச் சோம்பேறி ஆக அனுமதிக்காதீர்கள், உங்கள் மனத்தை எந்திரத்தனமாக ஆக்காதீர்கள். கவனமாய் இருங்கள், நகர்ந்து கொண்டே இருங்கள். ஏனெனில் பற்றுகளும், ஆசைகளும் அனுமதிக்கப்பட்டால், ஒருவன் முட்டாளாகவும், மூடனாகவும் ஆகிவிடுகிறான்.

பற்றுள்ளவராக நீங்கள் ஆனால், முட்டாள் ஆகிவிடுவீர்கள், நுண்ணறிவை இழந்து விடுவீர்கள்' என்று புத்தர் கூறுகிறார்./

நீங்கள் எந்த அளவுக்கு அதிக உத்தரவாதம் உள்ளவராக ஆகிறீர்களோ, அந்த அளவுக்கு அதிக முட்டாள் ஆகிறீர்கள். அதனால்தான் பணக்காரக் குடும்பங்களிலிருந்து மிகவும் அரிதாகத்தான் நுண்ணறிவுடைய மக்கள் வருகிறார் கள். என்ன செய்வது?

ஏனென்றால் அவர்கள் உத்தரவாதம் உடையோர். வாழ்க்கையில் சவால்களே இல்லாதவர்கள். அவர்களுக்கு என்ன தேவையோ எல்லாம் இருக்கிறது. என்ன கவலை? மிகக் கூர்மை உடைய பணக்காரர்களை உங்களால் கண்டு பிடிக்க முடியாது. அவர்கள் எப்போதும் எல்லாவற்றிலும் பெரும்பாலும், ஒரு சிறிது மந்தம்தான். மெதுவானவர் களாய், மதிமயக்கம் உள்ளவர்களாக அவர்கள் இருப்பார்கள். வசதியாக மந்தம், சௌகரியமாக மந்தம், 'ரோல்ஸ்ராய்ஸ்' காரில் சென்று கொண்டு மந்தம்-ஆனால் மந்தம்தான், மெத்தனம்தான். வாழ்க்கை எந்தச் சவாலும் இல்லாததாகத் தோன்றுகிறது; ஏனென்றால் உத்தரவாத மின்மை அவர்களுக்கு இல்லை.

புத்தர் அதை ஒரு கருவியாகக் கொண்டார். 'உத்தர வாதம் அற்றவர் ஆகுங்கள். கூர்மையாக ஆகுங்கள்' என் கிறார். ஒரு பிச்சைக்காரக்காரன் மிகவும் கூர்மையாகவும், நுண்ணறிவு உள்ளவனாகவும் இருக்க வேண்டும். அவனிடம் எதுவுமில்லை. அவன் ஒவ்வொரு கணமும் வாழவேண்டும். கணத்திற்குக் கணம் வாழ்ந்தாக வேண்டும். அதனால் தான் தன் துறவிகளிடம் புத்தர், பிச்சைக் காரர்களாக ஆக வேண்டும் என்று வலியுறுத்தினார். அவர்களை அவர் பிக்குகள் என்று அழைத்தார்; பிக்கு என்றால் பிச்சைக்காரன். இது ஒரு தலைகீழ் மாற்றம்.

துறவிகள் அனைவரும் இந்தியாவில் 'சுவாமிகள்' என்று அழைக்கப்பட்டு வந்துள்ளார்கள். சுவாமி என்றால் எஜமான் என்பது பொருள்; மிகச் சரியான பொருள் சுவாமி என்றால் பிரபு.

புத்தர் இந்த முழுவிஷயத்தையுமே மாற்றினார். அவர் துறவிகளை பிக்குகள்-பிச்சைக்காரர்கள்-என்றே அழைத்தார். ஆனால் புதிய பிராமணம், புதிய அர்த்தம், புதிய சவாலை அதற்குக் கொண்டு வந்தார்.

கணத்திற்குக் கணம் வாழுங்கள் என்றார். எதையும் வைத்துக் கொள்ளாமல், நீங்கள் ஒருபோதும் உத்தரவாத மாக இருக்க மாட்டீர்கள். நீங்கள் ஒருபோதும் முட்டா ளாய் இருக்க மாட்டீர்கள். நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? உங்களிடம் பணம் இருக்கும்போது நீங்கள் சோம்பேறி ஆகிறீர்கள். உங்களிடம் பணம் இல்லாதபோது உஷார் ஆகிறீர்கள். திடீரென்று எல்லாவற்றையும் இழந்து விட்டால், மிகவும் உஷார் ஆவீர்கள். பிச்சையெடுப்பதன் மூலம்தான் உங்களை நீங்களே உயிரோடு வைத்திருக்க முடியும். நாளையைப் பற்றி நீங்கள் நம்பிக்கையோடு இருக்க முடியாது. என்ன நடக்கப் போகிறது என்பது எவருக்கும் தெரியாது. ஏதாவது உங்களுக்குக் கிடைக்குமா அல்லது கிடைக்காதா என்று உங்களுக்குத் தெரியாது. நாளைக்கு உங்களுக்குக் கொடுப்பதற்கு யாரையாவது கண்டுபிடிக்க முடியுமா, முடியாதா என்று உங்களுக்குத் தெரியாது. நாளை என்பது நிலையில்லை. நிச்சயமற்ற தன்மை. நிச்சயமற்ற தன்மையிலும், உத்தரவாதமின்மை யிலும் உங்கள் நுண்ணறிவு மிக மிகக் கூர்மை பெறுகிறது. நீங்கள் மேலும் அறிவாற்றல் உடையவர் ஆகிறீர்கள்.

புத்தர் கூறினார்:

**அனைவரும் கருதும் நல்லவை பத்து,**
**தீயவை பத்து; அவையே**

உடலைச் சார்ந்தவை ஒரு மூன்றே,
வாயைச் சார்ந்தவை ஒரு நான்கே
எண்ணம் சார்ந்தவை மறுமூன்றே

உடலைச் சார்ந்த மூன்றைப் பார்ப்போம்
கொலை களவு விபச்சாரம்.
வாயைச் சார்ந்த நான்கைக் காண்போம்
பழித்தல் சபித்தல் பொய்யுரை முகஸ்துதி
எண்ணம் சார்ந்த மூன்றைச் சொல்வோம்.
பொறாமை கோபம் புன்மோகம்
இவை எல்லாமே புனிதவழியின் எதிரிகளாம்.
இவை எல்லாமே இதனால் தீதுகளாம்!

வித்தியாசத்தைப் பாருங்கள். 'இவை புனிதவழியின் எதிரிகள்' என்று புத்தர் கூறுகிறார். இந்தப் பத்து விஷயங்களைச் செய்தால் நீங்கள் துக்கமாய் ஆகிவிடுவீர்கள். நீங்கள் தொடர்ச்சியாக வலி, ஏக்கம், வேதனை இவற்றில் இருப்பீர்கள். வன்முறையாக இருந்து துக்கமில்லாமல் இருப்பது மிகவும் கடினம். யாரையாவது நீங்கள் கொன்றால், நீங்கள் துக்கத்தில் குடியிருப்பீர்கள். நீங்கள் கொல்வதற்கு முன்னால், துக்கத்தில் இருப்பீர்கள். நீங்கள் கொல்லும்போது துக்கத்தில் இருப்பீர்கள்; நீங்கள் கொன்றபின்பும் துக்கத்தில் இருப்பீர்கள்.

அழிவுசக்தி மகிழ்ச்சியைக் கொண்டுவர முடியாது. அழிவு என்பது படைப்புச் சட்டத்தின் எதிரி ஆகும்.

படைப்புச் சட்டம் படைக்கும் தன்மை உடையதாக இருக்கவேண்டும். 'நீங்கள் அழிப்பவராக இருந்தால், நீங்கள் துக்கம் அடைவீர்கள்' என்கிறார் புத்தர். பொறாமை பிடித்தவராய் இருந்தால், புன்மோகம் கொண்டவராய் இருந்தால், போட்டியுடையவராய் இருந்தால் பேராசை கொண்டவராக இருந்தால், அசூயை உடையவராய் இருந்தால், ஆக்கிரமிப்புப் புணர்ச்சி உடையவராய் இருந்தால், நீங்கள் துக்கத்தில் இருப்பீர்கள்.

தவறு என்று அறிவதற்கு எது அளவுகோல் என்றால், எது உங்களைத் துக்கமாக்குமோ அது தவறு என அறியலாம்.

இது மிகவும் வித்தியாசமான மனப்பான்மை. 'இதைச் செய்யாதே' என்று கடவுள் கூறுகிறார் என்பதால் அல்ல. 'பத்துக்கட்டளைகள்' இருக்கின்றன என்பதனால் அல்ல. புத்தரும் சொல்கிறார்: 'பத்து விஷயங்களைத் தவிர்க்க வேண்டும்' என்று. சர்வாதிகாரி ஒருவர் இருக்கிறார் என்ற காரணத்தால் அல்ல. ஒருவர் அதிகாரம் செய்கிறார் என்பதற்காக அல்ல, அங்குத் தங்கசிம்மாசனத்தில் அமர்ந்துகொண்டு, அடால்ப் ஹிட்லர் அல்லது ஜோசப் ஸ்டாலின் போன்ற ஒருவர் அதைச் செய், இதைச் செய் யாதே என்று ஆணையிடுவதால் அல்ல- அப்படி யாருமே இல்லை. நீங்கள்தான் அதை முடிவு செய்ய வேண்டும்.

புத்தர் ஓர் அளவுகோல் தான் அளிக்கிறார். அதாவது துக்கம் தருவது தவறு; அது பாவம் என்று சொல்ல வில்லை. வலியுறுத்தலைக் கவனியுங்கள்; இது ஒரு தவறு என்றுதான் சொல்கிறார்-இரண்டும் இரண்டும் ஐந்து என்பது தவறு அல்லவா? அது போன்று தான் இதுவும் தவறு என்கிறார். நீங்கள் இரண்டும் இரண்டும் சேர்ந்து ஐந்து என்று கூறினால், ஆ! நீங்கள் பாவம் செய்து விட்டீர்கள் என்று யாரும் சொல்லமாட்டார்கள். அது ஒரு தவறு. பிழை. அவ்வளவே.

பௌத்தச் சொல் தொகுப்பில் 'பாவம்' என்ற சொல் கிடையாது. தவறுகள், பிழைகள் என்று மட்டுமே வார்த்தைகள் உள்ளன. சாபம் இல்லை. நீங்கள் உங்கள் பிழையைத் திருத்திக் கொள்ளலாம். தவற்றைத் திருத்திக் கொள்ளலாம். மிகவும் எளிது. இரண்டும் இரண்டும் நான்கு என்று எந்தக் கணத்தில் நீங்கள் உணர்ந்து கொள் கிறீர்களோ புரிந்து கொள்கிறீர்களோ அதே கணத்தில்

உங்களை நீங்கள் திருத்திக் கொண்டு விட்டீர்கள். அவ்வளவுதான்.

இவை எல்லாமே புனித வழியின் எதிரிகளாம்
இவை எல்லாமே இதனால் தீதுகளாம்!

அவற்றிக்குத் தீமை என்று சொல்வதற்கு வேறு எந்தக் காரணமும் இல்லை. சரியாகச் சொன்னால் அவை உங்களுக்குத் துக்கம் தருகின்றன. அதனால் தான் தீமைகள். உண்மையில் அவற்றை நீங்கள் தான் படைக்கின்றீர்கள், அவற்றைப் பின்பற்றுவதன் மூலம். நீங்கள் துக்கமாக இருக்க விரும்பவில்லையென்றால் இந்த மூன்று விஷயங் களைத் தடுத்து விடுங்கள்.

'இந்தத் தீமைகள் செய்யாவிட்டால்
நல்லவை பத்துச் செயல்கள் உண்டாம்'

இது மிக முக்கியமானது. இந்த வாக்கியத்தினை மீண்டும் கவனிக்கவும்.

இந்தத் தீமைகள் செய்யாவிட்டால்
நல்லவை பத்துச் செயல்கள் உண்டாம்.

பத்து நல்ல செயல்கள் பற்றிப் புத்தர் கூறவில்லை. நீங்கள் இந்தப் பத்துத் தீயசெயல்களைச் செய்யாவிட்டால் என்று மட்டுமே கூறுகிறார். பின் நீங்கள் முழுமையுடன் சட்டத்துடன் இணக்கத்தோடு இருப்பவர்கள் ஆவீர்கள். அதனால் எது நடந்தாலும் நல்லதாகவே இருக்கும்.

நல்லது என்பது ஒருவன் செய்யத் தேவையில்லை. நீங்கள் செய்யாதவராக இருந்தால் அது நல்லது. முழுமை யுடன்- அதன் போக்கிலேயே போகிறவராக இருந்தால்- சட்டத்துடனே நகர்ந்து செல்கிறவராக இருந்தால், நதியுடனேயே நகர்ந்து செல்வதாக இருந்தால், நல்லது நடக்கிறது. நல்லது ஒரு செயல் அல்ல.

பாவம் இல்லை; பிழைகள் மட்டுமே. புண்ணியம் இல்லை; நல்ல செயல்களே. உங்களை நீங்களே சரணாகதி அடைந்துவிட்டால் நல்ல செயல்கள் ஏற்படுகின்றன.

'கெட்ட செயல்களைத் தவிர்த்து விடுங்கள். தீய விஷயங் களைத் தடுத்து விடுங்கள்! என்கிறார் புத்தர். ஆனால் நல்லவற்றைச் செய்யுங்கள் என்று சொல்லவில்லை. தவறுகளைத் தவிர்த்து விடுங்கள் என்கிறார். அதனால், நீங்கள் முழுமையோடு இசைந்து விடுவீர்கள் என்கிறார். சட்டத்தோடு இணங்கி விடுவீர்கள் என்கிறார். அப்புறம் எது நடந்தாலும் அது நல்லது தான் என்கிறார்.

நல்லது என்பது ஆரோக்கியத்தைப் போல. நோயுடைய வராய் ஆகாதீர்கள். அப்போது நீங்கள் ஆரோக்கியமாய் இருப்பீர்கள். நோயைத் தவிர்த்து விடுங்கள். போதுமானது. அவ்வளவுதான். நீங்கள் ஆரோக்கியமாய் இருப்பீர்கள். டாக்டரிடம் சென்று ஆரோக்கியம் என்றால் என்ன என்று கேட்டால் அவரால் வரையறுக்க முடியாமல் இருக்கலாம். 'எனக்குத் தெரியாது. என்னால் உங்கள் நோயை மட்டுமே கண்டுபிடிக்க முடியும். நோய்க்குத் தகுந்த மருந்தை என்னால் கொடுக்க முடியும். நோய் மறைந்துவிட்டால், நீங்கள் ஆரோக்கியம் ஆகிவிடுவீர்கள். அப்போது ஆரோக்கியம் பற்றி நீங்கள் அறியலாம்' என்று கூறலாம்.

இதேதான் புத்தரின் மனப்பான்மை. புத்தர் தன்னை ஒரு மருத்துவர், வைத்தியர் என்று அழைத்துக் கொள்கிறார். 'நான் சும்மா ஒரு மருத்துவர் அல்லது வைத்தியரைப் போன்றவன். நீங்கள் என்னிடம் வருகிறீர்கள். நான் உங்கள் நோயைக் கண்டுபிடிக்கிறேன். நான் மருந்து எழுதுகிறேன். நோய்கள் மறைந்துவிட்ட பொழுது, எது மிஞ்சுகிறதோ, அதில் ஆரோக்கியம் இருக்கிறது' என்று பொருள்.

இந்தத் தீமைகள் பத்தும் செய்யாவிட்டால்,
நல்லவை பத்துச் செயல்கள் உண்டாம்.

எனவே நீங்கள் பின்பற்றுவதற்கு நேர்மறைக் கட்டுப் பாட்டைத் தரவில்லை. எதிர்மறைப் புரிந்துணர்வு, அதைப் புரிந்துகொள்ள முயலுங்கள். அதனால் தவறுகளைச் செய்யாமல் இருக்கலாம். அதனால் நீங்கள் முழுமையின் ஒரு பகுதியாக இணக்கமாக இருக்கிறீர்கள்.

இணக்கம் மகிழ்ச்சி. இணக்கமே சொர்க்கம். இணக்கம் நிகழ்வது, நீங்கள் முழுமையோடு இசைவாக இருக்கும் போது மட்டும்தான். முழுமையோடு நீங்கள் இருக்கிறீர்கள் என்றால், நீங்கள் புனிதமாக இருக்கிறீர்கள் என்று பொருள்.



*நிச்சயமாக, இயேசுவும் புத்தரும் தனி நபர்களாக இருந்திருக்கிறார்கள். அவர்களது தனிநபர்த் தன்மையும் வெளிப்பாடுகளும், 'ஆளுமை' என்று அழைக்கப்பட முடியுமா? நீங்களும் கூட ஆளுமை உடையவரே எனலாம். ஆயினும் ஆணவம் இல்லாதது அந்த ஆளுமை.*

*தயவுசெய்து, ஆளுமை, ஆணவம், தனிநபர்த் தன்மை, சுயம் ஆகிய இந்தக் கோட்பாடுகளைத் தெளிவுபடுத்தவும்.*

முதன்முதலாக, தனிநபர்த்தன்மை, 'ஆளுமை' என்னும் இந்த இரண்டு சொற்களைப் பற்றிப், புரிந்துகொள்ள வேண்டும். தனிநபர்த்தன்மை ஆங்கிலத்தில் 'இன்டிவிஜுவாலிட்டி' என்று கூறப்படுகிறது. அச்சொல்லின் பொருள், பிரிக்கப்பட முடியாதவர். 'ஒற்றுமையாக ஆனவர்' 'ஒருபோதும் பிரியாதவர்' என்றெல்லாம் பலவகையாகக் கூறலாம். அது ஓர் அழகான சொல்.

இந்தப் பொருளில், புத்தரும், இயேசுவும், ஜொரதுஷ்டரும், 'இன்டிவிஜுவல்ஸ்' என்று அழைக்கப்படலாம். அந்த வேர்ச் சொல்லின் பொருளில் இப்படிச் சொல்லாமே தவிர, நீங்கள் 'தனிநபர்' என்னும் பொருளில் பயன்படுத்துகிறீர்களே, அந்தப் பொருளில் பயன்படுத்தக்கூடாது.

நீங்கள் இன்டிவிஜுவாலிட்டி என்னும் சொல்லைப் பர்சனாலிட்டி என்னும் சொல்லின் பொருளில் பயன்படுத்துகிறீர்கள். 'பர்சனாலிட்டி' என்னும் சொல் பல்வேறு அடிப்படைகள் கொண்டதாகும். கிரேக்க நாடகத்தில் நடிகர்கள் பெர்சோனாக்களை அதாவது முகமூடிகளைப் பெற்றிருந்தனர். அவர்கள் தங்கள் முகங்களை, முகமூடிகளுக்குப் பின்னால் மறைத்துக் கொண்டிருந்தனர். உங்களால் அவர்களது முகங்களைப் பார்த்திருக்க முடியாது. ஆனால் அவர்களது குரல்களை மட்டுமே கேட்டிருக்க முடியும். 'ஸோனா' என்றால் ஒலி- 'பெர்ஸோனா' என்றால், அவர்களது ஒலிகளால் மட்டுமே அவர்களைத் தொடர்புகொள்ள முடியும். அவர்கள் முகங்களைத் தொடர்புகொள்ள முடியாது. அவர்கள் வேறெங்கோ மறைத்துக் கொண்டுள்ளார்கள். அதிலிருந்துதான் 'பெர்சனாலிட்டி' என்னும் சொல் வந்துள்ளது.

அந்தப் பொருளில், புத்தரும், இயேசுவும், ஜொராதுஷ்டரும், லாவோட்ஸுவும் பெர்சனாலிட்டி இல்லாதவர்கள். அவர்கள் உங்கள் முன்பு அப்படியே இருக்கிறார்கள். அவர்கள் எதையுமே மறைத்து வைக்கவில்லை. அவர்கள் மாசற்றவர்களாக இருக்கிறார்கள், முழுமையான தூய்மையில் உங்களோடு வேறுபடுகிறார்கள். அவர்களுக்கு எதையும் மறைத்து வைக்க வேண்டாம். அவர்களைப் பார்த்துக்கொண்டே இருக்கலாம். மேலும் மேலும் பார்த்துக்கொண்டே இருக்கலாம். அவர்கள் பளிங்கு போன்று வெளிப்படையானவர்கள்.

அதனால் சரியாகச் சொல்ல வேண்டுமென்றால் அவர்கள் 'பெர்சனாலிட்டிகள்' உடையவர்கள் என்றோ, 'பெர்சன்ஸ்' என்றோ கூறமுடியாது. ஆனால் அவர்கள் இன்டிவிஜுவல்ஸ், நினைவில் கொள்ளுங்கள், 'பிரிக்க முடியாதவர்கள்' என்ற பொருளில் தானே தவிர, தனிநபர்கள் என்ற பொருளில் அல்ல. அவர்களிடம் பிரிவுகள் கிடையாது. அதே நேரத்தில் அவர்கள் கூட்டமும் இல்லை. அவர்கள் பலமனம் கொண்டவர்கள் அல்லர். அவர்கள் மனங்கள் பல இல்லாதவர்கள்; அவர்களது பன்மை மறைந்து அவர்கள் ஒன்றாக ஆகியிருக்கிறார்கள். அவர்கள் பிரிக்கப்பட முடியாத 'ஒருமை'யை உடையவர்கள். அவர்களை எந்த வாளும் இரண்டாகத் துண்டாட முடியாது. அவர்களது பிரிக்கப் பட முடியாத தன்மை என்பது முடிந்த முடிவானது.

அந்தப் பொருளில் அவர்களைத் தனிநபர்கள் (இன்டிவிஜுவல்) என்று நீங்கள் அழைக்கலாம். ஆனால் அது அபாயகரமானது. ஏனென்றால் 'பல' என்பது இல்லாதபொழுது தான் ஒருமை வருகிறது. ஆனால் 'பல என்பது' தொலைந்த பின்பு 'ஒன்றை' ஒன்று என்று நீங்கள் எப்படி அழைக்க முடியும்? 'பல' என்பது இருக்கின்ற வாய்ப்பு இருந்தால் தான் ஒன்று என்ற ஒன்றைக் குறிக்க முடியும். ஆனால் அந்த வாய்ப்பே மறைந்து விட்டதே!

புத்தர் பலர் அல்லர்; ஆனால் அவரை ஒருவர் என்று எப்படி அழைக்கமுடியும்? அதனால் தான் நாம், இந்தியாவில், கடவுளை அத்வைதம்-இரண்டற்றது-என்று அழைக்கிறோம். ஒருவர் என்று அழைத்திருக்கலாம், ஆனால் அந்த ஆசையைச் சமாளித்திருக்கிறோம். அவரை ஒருபோதும் ஒருவர் என்று நாம் அழைத்ததில்லை; ஏனென்றால் அவரை ஒன்று என்று அழைக்கும் நிமிடத்தி லேயே, 'இரண்டு' என்பது நுழைந்துவிடுகிறது. இரண்டு, மூன்று, நான்கு இல்லாமல் ஒன்று இருக்கமுடியாது. ஒன்று

என்பது வரிசைமூலம் இருக்கும்போது தான் அர்த்தமுள்ளது. படிநிலை அமைப்பில்தான் ஒன்று என்பது அர்த்தமுள்ளது.

உண்மையில் ஒன்று என்பது ஒன்று. ஆனால், அவரை ஒருவர் என்று எப்படி அழைக்கமுடியும்? அந்த வார்த்தை அர்த்தத்தை இழந்துவிடுகிறது. அவரை நீங்கள் பலர்–அல்லாதவர் என்று தான் அழைக்க முடியும். அத்வைதா, இரண்டு அல்லாதவர் இருமையற்றவர் என்று தான் அழைக்க முடியும். ஆனால் 'ஒருவர்' என்று அழைக்க முடியாது. இரண்டற்றது அழகானது. அதன் பொருள், பன்மை. இவை மறைந்துவிட்டது என்பது தான்.

எது இருக்கிறது என்று அது சொல்லவில்லை; எது இல்லை என்றுதான் சொல்கிறது. அதாவது இது ஓர் எதிர்மறைச்சொல்.

முடிந்த முடிவான உண்மையைப் பற்றி எதைச் சொன்னாலும் எதிர்மறையாகத்தான் சொல்ல முடியும். நாம் எது கடவுள் இல்லை என்று கூறமுடியும், கடவுள் யார் என்று கூறமுடியாது. ஏனென்றால் அவர் யார் என்று ஒவ்வொரு வரையறையும் ஒரு குறிப்பிட்ட எல்லையை உடையது; ஒருமுறை நாம் கடவுளை வரையறுத்து விடுகிறோம். ஒவ்வொரு வரையறையும் ஒரு குறிப்பிட்ட எல்லையை உடையது; ஒருமுறை நாம் கடவுளை வரையறுத்து விட்டோம் என்றால், அவர் அதற்கப்புறம் எல்லையற்றவராக எப்படி இருப்பார், எல்லையுள்ளவர் ஆகிவிடுவார்.

ஒருவகையில், புத்தரை நீங்கள் இன்டிவிஜுவல் என்று அழைக்கலாம்; ஆனால் ஆசையைத் தவிர்ப்பது நல்லது. அவர் நிச்சயமாக ஒரு 'பெர்சன்' இல்லை. அவருக்கு நிச்சய மாக பர்சனாலிட்டி இல்லை; இன்டிவிஜுவல் என்று அவரை அழைப்பதும் தவறாகும். ஆனால் 'பெர்சன்' என்று

அழைப்பதைவிடச் சிறந்தது. இருப்பினும் அது முழுவதும் சரியன்று. அவர் ஒரு 'பர்சன்' அல்லர். அவர் ஓர் இன்டிவிஜுவல் அல்லர்-ஏனென்றால் அவர் இல்லை.

அவரது இருத்தல் பற்றிய கருத்தே மறைந்துவிட்டது. அவர் ஒரு பரந்த வெற்றிடம். அவர் வெளி; அவருக்கு இப்பொழுது எல்லைகள் இல்லை.

நினைவில் கொள்க. உங்களுக்கு எல்லைகள் உண்டென்றால் நீங்கள் பிரிக்கப்பட முடியும். எல்லையுள்ள எதுவும் பிரிக்கப்பட முடியும். இயற்பியலாளர்களைக் கேளுங்கள். அவர்கள், நுண்கூறு ஒவ்வொன்றையும் பிரிக்கமுடியும் என்கின்றனர். அது மிகவும் சிறியது. ஆனாலும் அதை நீங்கள் பிரிக்கலாம். ஏனெனில் அது எல்லையுடையது. அணுவை நீங்கள் பிரிக்கலாம். மின்னணுவை நீங்கள் பிரிக்கலாம். அல்-மின்னணு, நேர்மின்னணு இவற்றையும் பிரிக்கலாம். ஏனென்றால், அவற்றிற்கும் எல்லை உண்டு. அதற்கும் அப்பால், பிரிவு என்பது அசாத்தியம். ஏனென்றால் எல்லைகள் மறைந்து விடுகின்றன. அதற்கும் அப்பால், பொருள், எல்லையை இழந்து விடுகிறது. அதற்கும் அப்பால் இருப்பது எல்லையற்ற தூய்மையான வெளி ஆகும். நீங்கள், பிரிக்க முடியாது. தூயவெளியைப் பிரிப்பது இயலாத காரியம்.

ஆகவே ஒருவர், இன்டிவிஜுவல் ஆகிறார் என்றால், அவர் எல்லையில்லாதவர் ஆகிவிட்டார் என்று பொருள். இது ஒரு முரண்பாடு போலத் தோன்றக்கூடும். நான் சொல்கிறேன். யாராவது ஒருவர் உலகளாவியவர் ஆனால் தான், முழுமையுடன் ஒன்றியவர் ஆனால்தான் இன்டிவிஜுவல் ஆகமுடியும். அப்பொழுதுதான் யாருமே பிரிக்க முடியாதவர் ஆகின்றார்; ஆனால் அவரை இன்டிவிஜுவல் என்று அழைப்பது சொல்லின் பொருளினை வெகுதூரம் விரிவுபடுத்துவதாகும். அது அவ்வளவு பொருந்தவில்லை.

அதனால், புத்தரை 'எவருமில்லை' என்று அழைப்பது பொருந்தும். அவர் பர்சனும் இல்லை, இன்டிவிஜுவலும் இல்லை. அவையனைத்தும் வெகுதொலைவில் உள்ளன. அவர் அனைத்து எல்லைகளையும் கடந்து சென்று விட்டார்.

பிரேம்திவ்யாவின் கேள்வி இது. அவர் கேட்கிறார்:- தயவு செய்து பெர்சனாலிட்டி (ஆளுமை), ஈகோ (ஆணவம்) இன்டிவிஜுவாலிட்டி (தனிநபர்த் தன்மை) மற்றும் செல்ஃ (சுயம்) ஆகிய வார்த்தைகளை விளக்கித் தெளிவுபடுத்துக.

பெர்சனாலிட்டி (ஆளுமை) ஈகோ (ஆணவம்) இவை யிரண்டும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள்; அதேபோல் இன்டிவிஜுவாலிட்டி (தனிநபர்த்தன்மை) செல்ஃப் (சுயம்) ஆகிய இரண்டும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள்; பர்சனாலிட்டிக்கும் ஒரு மையம் உள்ளது. அதுதான் ஈகோ (ஆணவம்); ஏனென்றால் பர்சனாலிட்டி என்பது பொய்யானது. மையமும் பொய்யானதுதான். ஏனென்றால் ]பொய்யான சுற்றளவு உண்மையான மையத்தைப் பெற்றிருக்க முடியாது. அதே போல் உண்மையான மையம் பொய்யான சுற்றளவைப் பெற்றிருக்க முடியாது.]

பர்சனாலிட்டி உண்மையல்லாதது; பர்சனாலிட்டி என்பது நீங்கள் இருப்பதாக நடிப்பது. ஆனால் அப்படி இல்லை. பர்சனாலிட்டி என்பது நீங்கள் தோற்றமளிப்பது. ஆனால் நீங்கள் உண்மையில் அப்படி இல்லை. பர்சனாலிட்டி என்பது உங்கள் வெளிப்புறக்காட்சி. ஆனால் உங்கள் எதார்த்தம் அல்ல. பர்சனாலிட்டி என்பது உங்களைச் சுற்றிலும் நீங்கள் உருவாக்குவது-ஏமாற்றுகிற ஒரு கதை- ஆனால் அப்படி நீங்கள் இல்லை.

அதனால்தான் பர்சனாலிட்டி என்பது பொய்யான மையம் உடையது. அது தானே தன்னளவில் எப்படிப் பொய்யானதோ அதன் மையமும் பொய்யானது.

அந்தப் பொய்யான மையம் தான் 'தான்மை' யாகும். நீங்கள் பர்சனாலிட்டியை விடும்போது, ஆணவம் (ஈகோ) மறைந்து விடுகிறது. அல்லது நீங்கள் ஆணவத்தை விட்டுவிடும்போது உங்கள் பர்சனாலிட்டி அடியோடு அழிந்து தூள் தூளாகிறது.

நன்றாக நினைவு கொள்ளுங்கள். நீங்கள் இல்லாததை இருப்பதாக நடிக்கவேண்டாம்; அப்படி நடித்தால் உங்கள் ஆணவம் ஒருபோதும் உங்களை விட்டுப் போகாது. பின்பு நீங்கள் உங்கள் ஆணவத்தைப் போஷித்துக் கொண்டே போவீர்கள். நீங்கள் இருப்பதைக் காட்டிலும் வித்தியாச மாக இருப்பதாக ஒருபோதும் காட்சியளிக்க முயலாதீர்கள். அலங்கரிக்க முயலாதீர்கள். ஆடை அணிவிக்க முயலாதீர் கள். அலங்கரிக்க முயலாதீர்கள். எந்த நடத்தை நெறிகளி லும் ஆயிரத்தொரு பொய்த் தன்மைகளைப் புகுத்தாதீர்கள்.

நீங்கள் வெற்றாக எப்படி இருக்கிறீர்களோ அப்படியே இருங்கள். மக்கள் உங்கள் உண்மையான நாடித்துடிப்பை அறியட்டும். அதனால் உங்களுக்கு எந்த இழப்பும் நேராது.

ஆரம்பத்தில் உங்களுக்குத் தொல்லை இருப்பதுபோல் தோன்றும். ஆனால் விரைவிலேயே நீங்கள் ஒருபோதும் எதையும் இழக்கவில்லை என்பதைக் கண்டுபிடிப்பீர்கள். எதார்த்தத்தோடு இருந்தால் ஒருவரும் ஒருபோதும் எதையும் இழப்பதில்லை.

உண்மையற்ற தன்மையோடு நீங்கள் இருக்கும்போது, நீங்கள் லாபம் அடைவதாக நினைப்பீர்களே தவிர நீங்கள் இழந்து கொண்டே இருக்கிறீர்கள். இப்படித்தான் பலர், தங்கள் முழுவாழ்வையுமே அழித்துக் கொள்கிறார்கள்.

உண்மையற்றவர்களாக இருந்துகொண்டு-அப்புறம் அவர்கள் தாங்கள் மகிழ்ச்சியற்றிருப்பதாகச் சொல்கிறார்கள். உண்மையல்லாத மனிதன் எப்படி மகிழ்ச்சியாக இருக்க முடியும்? சொல்லுங்கள் பார்க்கலாம்.

இது எப்படி இருக்கிறது தெரியுமா?/ விதைகளுக்குப் பதிலாகக் கற்களை விதைத்துவிட்டீர்கள்! ஆனால் பூக்களுக்காகவும் கனிகளுக்காகவும் காத்திருந்து காத்திருந்து பூத்துப் போகிறீர்கள். அசாத்தியம் அது இல்லையா? கற்கள் கனிகள் ஆக முடியாதல்லவா? அந்தக் கற்கள் எதனுடைய விதைகளும் இல்லை. அவை எந்த உள்ளார்ந்த சக்தியும் அற்றவை. அவை விதைகளைப் போல் தோற்றமளிக்கக் கூடும்! அவற்றிற்கு நீங்கள் வண்ணம் பூசியிருக்கக் கூடும்! வண்ணம் பூசப்பட்ட கற்கள் விதைகள் ஆகா! அவை வளர முடியாது.

ஆணவம் வளரமுடியாது. அது இறந்தது. அது ஒரு பொய்ப் பொருள். அது உயிரோடு இல்லை. நீங்கள் அதனோடு உயிர் வாழ்ந்து கொண்டே மேலும் மேலும் போய்க் கொண்டே இருக்கலாம். ஆனால் உங்கள் முழு வாழ்வும் ஒரு பாலைவனமாக-ஒரு வெற்று நிலையாகத் தான் இருக்கும். நிறைவேற்றமில்லை. நிறைந்த மனமில்லை, நிம்மதியாக மகிழ்ச்சி உங்கள் கதவை ஒருபோதும் தட்டப்போவதில்லை.

நீங்கள் அழியாமைக்காகக் காத்திருக்கலாம். ஒருபோதும் ஒருவரும் வரமாட்டார்கள். ஏனென்றால் ஆரம்பத்திலேயே நீங்கள் ஏதோ ஒன்றை இழந்துவிட்டீர்கள். அந்த ஏதோ ஒன்று மிக முக்கியமானதும் அடிப்படையானதும் ஆகும். நீங்கள் மட்டுமே வளரமுடியும். உங்கள் பாசாங்குகள் அல்ல.

நீங்கள் ஒரு முகமூடி போட்டுக் கொண்டிருந்தால் உங்கள் முகமூடி வளராது. நீங்கள் வளர்வீர்கள். நீங்கள்

குழந்தையாக இருந்தபோது முகமூடியைப் போட்டுக் கொண்டிருந்திருக்கலாம். ஆனால் இப்போது நீங்கள் இளைஞனாக ஆகியிருக்கலாம். ஆனால் அந்த முகமூடி அப்படியே தான் இருக்கும். அது அழுக்கான பழமையான விஷயம், அழுகிப்போனது. அது அழுகித்தான் போகும். வளர்ச்சி அடையாது.

அதன் பின்னால் நீங்கள் வளர்ந்து கொண்டிருப்பீர்கள். அது உங்களுக்குச் சிறைபோல் இருக்குமாதலால், அதனால் பல வலிகளை நீங்கள் அனுபவிக்கக்கூடும். அதனால் வளர முடியாது. ஆனால் நீங்கள் வளர்ந்து கொண்டிருக்கிறீர்கள். இன்னும்கூட நீங்கள் உங்கள் குழந்தைப் பருவ உடைகளை அணிந்து கொண்டிருப்பது போன்றது இது. நீங்கள் வளர்ந்து கொண்டிருக்கவில்லை. அதனால் அவை அடிமைத் தளையாகி விட்டன. அவை உங்களுக்குச் சுதந்திரம் அளிக்கவில்லை. அவை உங்களைச் சிறைப் படுத்துகின்றன். அவை உங்களை நசுக்குகின்றன. தொடர்ச்சியான ஓர் அழுத்தத்தை, ஒரு முறுக்கத்தை, ஒரு ஏக்கத்தை நீங்கள் உணர்கிறீர்கள்.

இதை நீங்கள் முயற்சி செய்யலாம். உங்கள் கால்களின் அளவைவிட மிகச் சிறிய முழுக்காலணிகளை அணிந்து, நடந்து பாருங்கள். லட்சக்கணக்கான மக்களுக்கு என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று நீங்கள் அறிவீர்கள். உங்கள் பர்சனாலிட்டிகள் மிகவும் சிறியவை. ஆனால் அவர்களின் இருத்தல்கள் வளர்ந்து கொண்டிருக்கின்றன. இரண்டு அளவு சிறிய முழுக்காலணிகளை அணிந்து நடந்து பாருங்கள்... அப்போது தெரியும் நான் என்ன சொல்ல வருகிறேன் என்று. ஒருநாள், நான் முல்லா நசிருதீனுடன் உட்கார்ந்து கொண்டிருந்தேன். அவர் ஒரு பெண்ணைப் பார்த்து 'இவள் அசாத்தியமானதைச் செய்ய முயற்சி செய்து கொண்டிருக்கிறாள்' என்று சொன்னார்.

"என்ன சொல்கிறீர்கள்?" என்று நான் கேட்டேன். 'இரண்டு அங்குலம் சிறிய அளவுள்ள முழுக்காலணிகளை அவள் அணிந்துகொண்டுள்ளாள்' என்று அவர் கூறினார்.

'அதை எப்படி நீங்கள் அறிவீர்கள்?' என்று நான் கேட்டேன். 'அதுவா? அவள் என் மனைவி. அவள் முகத்தைப் பாருங்களேன், எவ்வளவு துயரம்? எவ்வளவு ஏக்கம்?' என்று அவர் சொன்னார்.

மக்களின் முகங்களைப் பாருங்கள். அவர்களின் துயரமும் ஏக்கமும் மிகத் தெளிவாக எழுதி ஒட்டப் பட்டிருக்கின்றன.

அவர்கள் தங்கள் துயரத்தையும் ஏக்கத்தையும் தவிர வேறெதையும் ஒலிபரப்பிக் கொண்டிருக்கவில்லை. அவர்கள் இறந்த முகமூடியை அணிந்து கொண்டிருப்பது தான் பிரச்சினை. அது இறந்துபோன பர்சனாலிட்டி, அவர்களோடு சேர்ந்து அவை ஒருபோதும் வளர முடியாதவை. உண்மையில் எப்போதும் அது பின்தங்கித் தான் இருக்கும். அவர்கள் தொடர்ந்து வளர்ந்து கொண் டிருக்கிறார்கள். அது ஒரு இறந்த சுமையாக ஆகிறது.

நினைவு கொள்ளுங்கள். பொய்யுடன் சேர்ந்து நீங்களும் நசுக்கப்படுகிறீர்கள். பொய்யுடன் நட்பு வேண்டவே வேண்டாம். உண்மையிலேயே நீங்கள் பூத்துக் கொண்டிருக் கும் உயிராக ஆக வேண்டுமானால், உங்கள் உயிருக்கு உண்மையாகவே நீங்கள் சுதந்திரம் அளிக்க விரும்பினால், ஒருபோதும் பொய்யோடு நட்புக் கொள்ளாதீர்கள்.

என்ன விலை கொடுத்தேனும் உண்மையாக இருங்கள். மறுபடியும் சொல்கிறேன். ஆரம்பத்தில் பாசாங்குகள் மிக நல்லவை போன்று தோற்றமளிக்கலாம். ஆனால் அவை அப்படி இல்லை. உங்கள் மனம் உங்களை ஏமாற்றிக் கொண்டிருக்கிறது.

அதே நேரத்தில், நீங்கள் உண்மையுடன் நட்புக் கொள்ள முயன்றால், ஆணவம் தானாகவே தன் விருப்பத்திலேயே மறைந்து போய்விடும்.

இல்லையென்றால் அது புதிய புதிய வழிகளைக் கண்டு பிடித்துக் கொண்டே இருக்கும். தக்கை உயிரோடு வைத்துக் கொண்டு, தன்னைத் தானே போஷித்துக் கொள்வதற்காக.

நீங்கள் கற்பனையே செய்யமுடியாத அளவுக்கு மக்கள் மிகவும் பொய்யாக ஆகிவிட்டார்கள்.

நான் ஒரு சம்பவக் குறிப்பைப் படித்துக் கொண்டிருந் தேன்.

நியூயார்க்கில் உள்ள மிகவும் விலைமதிப்புள்ள, மிகச் சிறந்த இறுதிப்பள்ளி ஒன்றுக்கு சேடி பெர்ல் முட்டர் அனுப்பப்பட்டார். நாகரிக நடத்தை பற்றிய எல்லா விஷயங்களையும் அவள் அங்கே கற்றுக்கொண்டாள். செலவு இவ்வளவு செய்தாலும், அவளுடைய தாய்க்கு அவளைப்பற்றி மிகவும் பெருமையாகவே இருந்தது.பிறகு ஓர் இருண்ட இரவில், சேடி, தள்ளாடியபடி, அலங்கோல மான ஆடையுடன் பார்க் அவென்யூ அபார்ட்மெண்டிற்கு வந்து சேர்ந்தாள்! சென்ட்ரல் பார்க் தெற்கில் 'நான் கற்பழிக்கப்பட்டுவிட்டேன்' என்று சேடி விம்மினாள்.

யார் செய்தார்கள் என்று தெரியுமா?–இது தாய்.

'தெரியாது' என்றாள் மகள்.

'நாகரிக நடத்தை' படித்திருக்கும் உனக்கு யாருடன் சந்தோஷம் அனுபவிக்கிறாய் என்று கூடத் தெரிந்து கொள்ளத் தோன்றவில்லை என்று சொல்கிறாயா? நீ படித்த படிப்பு தண்டம் தானா? –தாய் மகளைக் குறை கூறினாள்.

மக்கள் தங்கள் நாகரிக நாடகத்தைத் தொடர்ந்து கொண்டே இருக்கிறார்கள். அவர்களது நட்பு நடப்பு நெறி களையும், பொய்களையும், அவர்களது பாசாங்குகளையும் கற்பனை செய்ய முடியாத அளவு உள்ள சூழ்நிலையில் கூடத் தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறார்கள்!' என்ன செய்வது?

நான் ஒரு மனிதரை அறிவேன். அவரது வீடு தீப்பற்றி எரிந்தது. அவர் தன் வீட்டை விட்டு வெளியில் வரும்போது முதன்முதலாகச் செய்த விஷயம் அவருடைய 'டை'யைக் கட்டிக் கொண்டது தான். வீடு தீப்பற்றி எரிகிறது; வீட்டை விட்டு வெளியே வருவதனால் டை கட்டிக் கொண்டுதான் அவரால் வரமுடியும்.

உங்கள் பர்சனாலிட்டி அவ்வளவு உங்களோடு ஒட்டிக் கொண்டு விட்டது. நீங்கள் அவ்வளவு அதனோடு ஒட்டிக் கொண்டு விட்டீர்கள்.

நான் ஒரு பெரும் பேராசிரியர் ஒருவர் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறேன். அவர் அடக்கமானவர், மிகமிக ஆத்திரத் திலும் கூட. ஒரு மாணவனிடம் மிகவும் கோபமாக இருந்தார் அந்தப் பேராசிரியர். அவர் தன்னுடைய அதிதீவிர கோபத்தால், கொந்தளித்துக் கத்தினார் இப்படி. "தயவுசெய்து நரகத்துக்குப் போ"... தயவுசெய்து நரகத்திற் குப் போகவேண்டுமாம்.

நன்றாகக் கவனியுங்கள். பர்சனாலிட்டி என்பது தான்மையின் தந்தை. நீங்கள் பர்சனாலிட்டியை விட்டு விட்டால் உங்கள் ஆணவம் தன் விருப்பத்திலே தானே செத்துவிடுவதைக் கண்டுபிடிக்கலாம்.

நான் கேட்டிருக்கிறேன்.

வயதான பெண் ஒருத்தி ஒரு ஓவியக் கண்காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அங்கிருந்த தனக்குப் புரியாத ஓவியங்களைப் பற்றி வினவினாள்.

அது என்ன? அங்கிருந்த ஓவியத்தைப் பார்த்தவள் கேட்டாள்.

'அது ஓவியர்.' உதவியாளன் சொன்னார்.

இன்னோர் ஓவியம் பற்றிக் கேட்டாள்.

'அது ஓவியரின் மனைவி'-உதவியாளர் சிறிது சலித்துக் கொண்டார். "குழந்தைகள் வேண்டாம் என்று அவர்கள் திட்டமிட்டுக் கொண்டிருக்கவில்லை என்று நம்புகிறேன்" என்று சொன்னாள் அந்த வயதான பெண்.

ஆணவம் என்பது ஆளுமையின் குழந்தை. மக்கள் பலர் ஆணவத்தை விட்டுவிட எண்ணுவார்கள். உள்ளிருக்கும் தொடர்பை அவர்கள் புரிந்து கொள்ளவில்லை. ஆணவத் தைக் கைவிட அவர்கள் விரும்புவார்கள்? ஏன்? அது மிகவும் துயரத்தைத் தருகிறது. தொடர்ந்து அது துன்புறுத்து கிறது. அது ஒரு புண்ணைப் போன்றது. அது ஒருபோதும் ஓய்வு பெற அனுமதிப்பதில்லை. அது எப்போதும் நீ ஓய்வின்றி நிம்மதியின்றி இருக்கச் செய்கிறது. அது ஒரு நோய். பலர் வெகுவிரைவில் ஆணவத்திலிருந்து விடுபட் டால் நன்றாயிருக்கும் என்று எண்ணத் தொடங்குகிறார் கள். ஆனால் அவர்கள், தான்மை என்பது ஆளுமையின் குழந்தை தான் என்று அறிவதில்லை. நீங்கள் உண்மையி லேயே தான்மையிலிருந்து விடுபட நினைத்தால், நீங்கள் உங்கள் ஆளுமையைக் கைவிட வேண்டியிருக்கும்.

அதனால்தான் அரண்மனையிலிருந்து புத்தர் வெளியேறினார். ஆளுமையை விட்டுவிட்டு இளவரசராகத் தொடர்வது அசாத்தியம். மகாவீரர் நிர்வாணமானார்.தன் உடைகளையும் கைவிட்டார் அவர்-உலகம் கண்ட மிகவும்

தைரியமான மனிதர்களில் அவரும் ஒருவர் ஆவார். ஏனென்றால் அவர் ஆடைகள் கூட உடலுக்காக அல்ல. சமூகப்பழக்கத்திற்காக- சமூக நாகரிக நடத்தைக்காக அவை என்று உணர்ந்து கொண்டார். உண்மையில் அவர் மிகவும் துன்பப்பட்டார். அவர் நகரங்களிலிருந்து துரத்தப்பட்டார். மக்கள் அவரைக் கல்லால் எறிந்து துன்புறுத்தினார்கள். அவர்கள் மிகவும் கஷ்டப்பட்டார். அவருடைய சாதனை அந்தக் கஷ்டங்களைச் சமாளித்துப் பெரிய அளவில் ஆளுமை கொண்டார்.

வெகுவிரைவில், அவரது ஆளுமை சரிந்தது; மறைந்தது. அவரது ஆளுமை மறைந்தபோது-அவர் இந்த சமுதாயத் திடமிருந்து கற்ற கடந்தகால சம்பவங்களைக் கைவிட்டு விட்டார். ஆம் எல்லாப் பாசாங்குகளும் வெளிப்பட்டுத் தந்திரங்களை, எல்லாத் தான்மைப் பயணங்களைத் திடீரென்று அவர் உணர்ந்தார். அவரது ஆணவமும் மறைந்துபோய்விட்டது.

அவர் தன் அரண்மனையைவிட்டுச் சென்றார். தன் தந்தையின் அரண்மனையை விட்டுச் சென்றார். தன் உடைகளைக் கைவிட்டார், அது மட்டுமா, தன் மொழியை யும் கைவிட்டுவிட்டார். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. அவரது தர்க்கம் முழுமை யும் சரியானது. நம் அதே மொழியில் தான் நம் ஆளுமை கள் நுழைந்திருக்கின்றன. நீங்கள் எப்படிப் பேசுகிறீர்கள், நீங்கள் எப்படிச் சொற்களைப் பயன்படுத்துகிறீர்கள் என்பது உங்கள் ஆளுமையின் பகுதி ஆகலாம்.

நீங்கள் அதைப் பார்க்கலாம். ஒரு மனிதன் கிராமத்தி லிருந்து வருபவன் என்றால் அவன் மொழியின் மூலம் அவன் ஒரு கிராமத்தான் என்று கண்டுகொள்ள முடியும்.

ஒருவன், மிகவும் பணக்கார, பண்பாட்டுக் குடும்பத்தி லிருந்து வந்திருந்தால், அவன் மொழியை வைத்து நீங்கள் கண்டுபிடித்து விட முடியும்.

ஆம், உண்மையில், மகாவீரர் ஓர் இளவரசர். மொழியி லேயே ஆளுமை நுழைகிறது. உங்கள் வெளிப்பாட்டில், தோரணைகளில் ஆளுமை நுழைந்து விடுகிறது.

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு மகாவீரர், முழுமையாக, எல்லாவற்றையும் விட்டுவிட்டார். அவர் மிகச் சரியாகக் கைவிட்டவர்! மொழி, உடைகள், சமூகம், உத்திரவாதம் என்று எல்லாவற்றையும் விட்டுவிட்டார். பின்னர் வெகு விரைவில் அவரது மாசின்மை மேலேழுந்தது. அவரது ஆளுமையின் அனைத்து அடுக்குகளும் விடப்பட்டன. அவரது ஆணவம் மறைந்துபோய் விட்டது.

நினைவு கொள்ளுங்கள். ஆணவம் மிகவும் தந்திர மானது. மிகவும் நுட்பமானது. அதன் வழிகள் மிகவும் நுட்பமானது. ஒரு பக்கத்தில் அதை விடுகிறீர்கள். இன்னொரு பக்கத்திலிருந்து அது வந்துவிடுகிறது. அது எப்படி எழுகிறது, எப்படிப் போஷிக்கிறது என்பது பற்றி மிகமிக விழிப்புணர்வோடு நீங்கள் இருக்க வேண்டும்.

திவ்வியா ஒரு நாட்டு மருத்துவர். அவளுக்கு இந்தச் சம்பவம் மிகவும் பிடிக்கும்.

மூன்று நாட்டு மருத்துவர்கள் ஒரு தெருமுனையில் நின்று கொண்டு தங்களுக்குள் யார் மிக அதிக ஞாபகசக்தி உள்ளவர் என்று விவாதம் செய்து கொண்டிருந்தனர். யாருக்கு மிக நீண்ட காலம் பின்னால் போகமுடியும் என்பது சவால்.

‘சக்கர வண்டியில் என்னுடைய மாமா என்னை வைத்து 125–ஆவது தெருவில் தள்ளிக் கொண்டு சென்றதை

நினைவு கொள்கிறேன் நான்' என்று முதலாமவர் சொன்னார்.

'அது ஒன்றுமில்லை; என்னால் நான் பிறந்த நாளை நினைவுபடுத்திக் கொள்ள முடிகிறது; டாக்டர் என்னை என் பின்புறத்தில் தட்டியதைக் கூட நான் மறக்கவில்லை' என்றார் இரண்டாமவர்.

'அது ஒரு பெரிய விஷயமா? நான் ஓர் இரவு விருந்துக் குச் சென்றிருந்தேன் எங்கள் அப்பாவோடு; ஆனால் வீட்டிற்குத் திரும்பி வந்தேன் எங்கள் மாமாவோடு. இது எவ்வளவு பெரிய விஷயம்' என்றார் மூன்றாமவர்.

ஆணவம் எங்கிருந்து வேண்டுமானாலும் உணர்வைக் கண்டுபிடித்துக் கொள்ளும்.

எந்த ஆட்டமாய் இருந்தாலும் நான் தான் உச்சியில் இருப்பவன். 'பணிவு' என்பது ஆட்டத்தின் பெயராய் இருந்தாலும் 'நான்தான் பணிவில் மிக உயர்ந்த மனிதன்'- பெயர்கள் வேறுபடலாம். பணிவாக இருந்தாலும் அதிலும் நீங்கள் தான் அதிலும் மிகவும் உயர்ந்த பணிவுள்ள மனிதர் என்று உணரத் தொடங்கினால்-அது எந்த வித்தியாசமு மில்லை; 'தான்மையற்ற தன்மை'யாகவும் இருக்கலாம், அதிலும் தான் தான் மிக உயர்ந்த ஆணவமற்ற ஆணவம் உடையன் இல்லை. உலகத்திலேயே ஆணவமற்ற மனிதர் களில் சிறந்தவர் நீங்கள்தான் என்று நினைத்தால், நீங்கள் வாலையில் மீண்டும் விழுந்து விட்டீர்கள் என்று அர்த்தம்.

உரிமை கேட்பதில் ஆணவம் உயிர் வாழ்கிறது. அது போட்டியிடும் தன்மை கொண்டது. ஆளுமை, நுட்பமான முறைகளில் அதனை போஷித்துக் கொண்டே செல்கிறது. ஆளுமைதான் உங்கள் பாசாங்குகளின், வெளிப்பாடு களின், மோசடிகளின் சுற்றுவட்டம் ஆகும்; ஆணவம்,

அதன் மையமாகும். அவை சேர்ந்து செல்கின்றன. சேர்ந்து தங்குகின்றன. தம்பதிகள் போல!

இப்போது இரண்டாவது தம்பதி. தனிநபர்த்தன்மையும், தானும். தனிநபர்த் தன்மை சுற்றுவட்டம். தான் மையம், அவை, ஆளுமை, ஆணவத்தைவிட அதிக உண்மை யானவை. முதல் தம்பதியைவிட உண்மையானவை தான்; ஆனால் முடிந்த முடிவான உண்மையுள்ளவை அல்ல.

உங்கள் ஆளுமையை விட்டவுடன், நீங்கள் தனிநபர் ஆகிறீர்கள். நீங்கள் தனிநபர் ஆனவுடன் உங்கள் 'சுயம்' உங்களுக்குள் எழுகிறது. 'நான் இருக்கிறேன்' –இது உரிமை கேட்பதில்லை, போட்டி போடுவதில்லை ஆணவத்தைப் போல! சுயம் என்பது போட்டி போடாது; அது தான் மிகச்சிறந்தது என்றோ இது இழிந்தது என்றோ, தான் மிகவும் முன்னால் என்றோ மிகவும் பின்னால் என்றோ சொல்வதில்லை.

அது ஒப்பிடுவதில்லை; ஒப்பு நோக்கப்படுவதுமில்லை. அது சும்மா சொல்கிறது 'நான் இருக்கிறேன்' என்று; அது மற்றவற்றோடு தொடர்புடையதில்லை; நீங்கள் யார் என்பது பற்றிய ஒரு சாதாரண வெளிப்பாடு மட்டும்தான் அது; 'நான் இருக்கிறேன்' என்பதன் ஆழமான பொருள் தான் தனிநபர்த்தன்மை என்பது.

ஆனால், புத்தரோ இயேசுவோ 'தனிநபர்கள்' என்று அழைக்கப்பட முடியாதவர்கள்; 'தான்' என்னும் உணர்வே இல்லாத இடத்தை அவர்கள் அடைந்து விட்டதனால், அவர்கள் சுயத்தைக் கடந்து இன்னும் கொஞ்சதூரம் சென்று விட்டவர்கள் எனலாம்.

ஆணவம் என்பது ஒப்பிடப்படுவது, மிகவும் நோய்வாய்ப்பட்டது. சுயம் கொஞ்சம் ஆரோக்கியமானது. அவ்வளவு நோய்வாய்ப்படுவதில்லை. ஆயினும் சுயம்

என்னும் அந்தக் கருத்தே, 'நான் இருக்கிறேன்' என்னும் அந்த உணர்வே, பிரிக்கிறது. தனியாக்குகிறது மொத்த ஒற்றுமையிலிருந்து! இயேசுவின் வழி இதுதான். 'நானும் என் தந்தையும் ஒருவர். அதன் பொருள் நான் 'நான்' அல்ல; என் தந்தையே என் தான்' இன்னும் சிறப்பாக மொழி பெயர்க்க வேண்டுமானால் இப்படிச் சொல்ல லாம். "முழுமையின் மையமே என்னுடைய மையம். இப்போது, மொழி விஞ்ஞானபூர்வமாகிவிடுகிறது."

புத்தர் மேலும் கூடக்கொஞ்சம் அதிகக் கவனம் உடையவராக இருக்கிறார். தன் விருப்ப வெளிப்பாடுகளை அவர் பயன்படுத்த மாட்டார். அவர் சாதாரணமாகச் சொல்கிறார். 'நானில்லை' என்று. 'நான்' என்னும் மிகப் பெரிய அதிசயத்தை அவர் பிளந்து கொண்டே போய்க் கொண்டிருக்கிறார். 'ஒன்றுமில்லை' என்பது மட்டுமே இருக்கும் நிலைவரைக்கும் அவர் செல்கின்றார்; இயற்பிய லாளர் ஒருவரின் கைகளில் 'பொருள்' ஒரு கட்டத்தில் மறைந்துவிடுவதைப் போல, புத்தரின் கைகளில் 'தான்' என்பது மறைந்தே போய்விடுகிறது.

நான் கேட்டிருக்கிறேன்.

ஒருநாள், யானையொன்று காட்டின் வழியே சென்று கொண்டிருந்தது; தன்னை விடச் சிறந்தவர் யாருமில்லை என்று அது நினைத்துக் கொண்டது; உலகத்தையே சவாலுக்கு அழைக்கத் தயாராய் இருந்தது. அது நடந்து கொண்டே இருந்தது. ஒரு சிங்கம் எதிரில் வந்தது. தன் நெஞ்சை நிமிர்த்தி உரத்த முழக்கமிட்டு 'என்னைப்போல நீ ஏன் பெரிதாய் இல்லை' என்று வினவியது.

நடந்து கொண்டே சிங்கம் 'எனக்குத் தெரியாது' என்று கூறிச் சென்றுவிட்டது.

அடுத்து, யானை, ஒரு கழுதைப்புலியைச் சந்தித்தது; 'என்னைப் போல நீ ஏன் பெரிதாய் இல்லை' என்று நெஞ்சு நிமிர்த்திக் கேட்டது. கழுதைப்புலி 'எனக்குத் தெரியாது' என்று கூறிச் சென்றுவிட்டது.

அதற்குப் பிறகு பாவப்பட்ட சின்னஞ்சிறிய எலி ஒன்றைச் சந்தித்தது யானை. எலிக்கு மூக்கு ஒழுகிக் கொண்டிருந்தது; ரோஸ்நிறக் கண்கள் அதற்கு.

'என்னைப் போல நீ ஏன் பெரிதாய் இல்லை'-யானை எலியிடம் முழங்கியது. எலி, யானையை மேலே பார்த்து, "பிற்காலத்தில் நான் மிகவும் நோய்வாய்ப்பட்டுவிட்டேன்" என்றது அது.

ஒவ்வொருவருக்கும், எலிக்கும்கூடச் சொந்தத் ஆணவம் உள்ளது. ஒவ்வொருவரும், ஒரு சமயவாதிக்குக்கூட, சிறிது ஆணவம் என்பது இருக்கத்தான் செய்கிறது. 'நான் தங்கள் காலடியில் தூசிக்குச் சமமானவன்' என்று ஒருவர் அறிவிக்கும்போது கூட, அவர் ஆணவத்தைத்தான் சேகரிக்கிறார். அதில் சந்தேகமே இல்லை.

ஆணவமும் ஆளுமையும் கைவிடப்பட வேண்டியவை. அப்போது தனிநபர்த்தன்மை உதிப்பதைக் கண்டுகொள்ள லாம். அது 'தனித்தன்மை' பற்றிய ஓர் உணர்ச்சியாகும். ஆம், நீங்கள் தனித்தன்மை உடையவர். மற்ற ஒவ்வொரு வரும்கூடத் தனித்தன்மை வாய்ந்தவரே. இந்த உலகில் தனித்தன்மை உடைய மக்களே இருக்கிறார்கள். ஒப்பு நோக்குதல் என்பது முட்டாள்தனமே. ஏனென்றால் நீங்கள் மட்டுமே உங்களைப் போல் இருக்கமுடியும். யாரும் உங்களைப் போல் இல்லவே இல்லை; எப்படி ஒப்பிட முடியும்?

பல பேர்கள் ஒரே மாதிரி இருந்தால் தான் ஒப்பிடுவது சாத்தியம். ஒவ்வொருவரும் அடுத்தவர்போல் இருக்க

வேண்டும். ஆனால் இந்த வாழ்க்கையில் மிகப்பெரிய அளவில் படைப்பாற்றல் செயல்படுகிறது; எல்லோரும் அசல் படைப்புகளே; யாருமே மறுபடியும் செய்யப்பட்ட படைப்புகள் அல்லர். அனைவரும் அசல்களே. கார்பன் பிரதிகளை வாழ்க்கை நம்பவே இல்லை. வாழ்க்கை ஒவ்வொரு நபரையும் ஒரு தனிநபராக, தனித்தன்மை உடையவராக ஆக்குகிறது. ஆளுமை கைவிடப்பட்டவுடன், நீங்கள் தனித்தன்மை உடையவர் என்பதை உடனடியாக உணர்கிறீர்கள். தனித்தன்மை என்பது அனைவர்க்கும் உள்ள பொதுத் தன்மை ஆகும். தற்பெருமை கொள்ள எதுவுமில்லை இங்கே. ஒவ்வோர் உயிரின் பொதுக் குணமாக இது அமைந்துள்ளது.

தனிநபர்த் தன்மையுடன், 'நான் இருக்கிறேன்' என்னும் உணர்ச்சியை அதன் நுட்பமான மையமாக நீங்கள் பெற்றிருக்கிறீர்கள். புத்தர் அதற்கும் அப்பால் செல்கிறார். மகாவீரர் கிருஷ்ணர் இயேசு ஆகிய இவர்கள் இதை தாண்டி எதுவும் சொல்வதில்லை. அப்பாற்பட்டதைச் சொல்ல முடியாது என்று அவர்கள் நினைக்கலாம். அவர்கள் தங்கள் தனிநபர்த் தன்மையுடனும், 'நான் இருக்கிறேன் தன்மை'யுடனும் ஒட்டிக்கொண்டு விடுகிறார்கள். புத்தர்தன் தாக்கத்தின் கடைசி முடிவுக்கே செல்கிறார். ஆளுமை விடப்பட்டு விட்டது; இப்போது தனிநபர்த் தன்மையையும் விட்டுவிடுங்கள். ஆணவம் விடப்பட்டு விட்டது; இப்போது 'நான் இருக்கிறேன்- என்ற இந்த சுயத்தையும் கூட விட்டுவிடுங்கள்.

இப்போது எதுவும் மீதி இல்லை-'எதுவுமில்லை' மட்டுமே மீதம் உள்ளது. அந்த வெற்றுநிலையில் நீங்கள் நிர்மலமாகிறீர்கள். மாசற்றவர் ஆகிறீர்கள். வெற்றுநிலையில் மாசு படியமுடியாது 'இருத்தல்' உள்ளது. 'நான் இருக்கிறேன்' என்னும் உணர்வு இல்லை.

நீங்கள் இருந்தும், நீங்கள் மிகப்பெரிய அளவில் இருந்தும், அப்போதும் 'நான் இருக்கிறேன்' என்ற உணர்வு இல்லாமல் சில கணங்களாவது நீங்கள் இருந்திருக்கிறீர்களா? அந்தக் கணங்கள் அற்புதமானவை, அருள் நிரம்பியவை. அவை ஒவ்வொருவருக்கும் ஏற்படுகின்றன. நீங்கள் கவனிக்காமல் இருந்திருக்கலாம். நீங்கள் அவற்றை ஏற்றுக்கொள்ளாமல் இருந்திருக்கலாம். உங்களுக்கு அவை ஞாபகம் இல்லாமல் இருக்கலாம். வேறிடத்தில் நடப்பவை போல் இருப்பதால் நீங்கள் அவற்றை அலட்சியப்படுத்தி இருக்கலாம்.

அவை உங்களுடைய வாழ்க்கையுடன் பொருந்தவில்லை. அவை உங்கள் ஆணவத்துடனும் ஆளுமையுடனும் கூடிய வாழ்க்கையுடன் பொருந்தவில்லை. அவை பொருந்தவில்லை. அவை பொருந்தவில்லை. உங்கள் வழக்கமான வாழ்க்கையில் அவை நிலையானவை அல்ல. அதனால் அவற்றை விட்டு விடுகிறீர்கள். நீங்கள் மறந்து விடுகிறீர்கள். அவை கற்பனை என்றும் கனவு என்றும் நினைத்திருக்கலாம்.

ஆனால் ஒவ்வொருவருக்கும் அந்தக் கணங்கள் வரத்தான் செய்கின்றன. இதுபோன்ற அனுபவம் இல்லாத ஒருவனைக்கூட என் வாழ்வில் நான் சந்திக்கவேயில்லை இதுவரை. தன்னைப்பற்றிய முழுஉணர்வும் இருக்கும் போது, 'நான்' என்னும் உணர்வு சிறிதும் இல்லாத அந்தச் சில கணங்கள் நிச்சயம் ஒவ்வொருவருக்கும் ஏற்பட்டிருக்கும். நீங்கள் அழகையும், காதலையும், அதிசயத்தையும் உணர்கின்ற கணங்கள், அந்த அற்புதமான கணங்கள்தாம்.

இரவு நேரத்தில் நட்சத்திரங்களைப் பார்த்துக் கொண்டே இருக்கிறீர்கள். திடீரென்று ஏதோ ஒன்று மறைகிறது. திடீரென்று ஒரு வெற்றுநிலை உங்களுக்குள் உதயமாகிறது...

கன்னித்தன்மையுடன் களங்கமின்றிச் சமுதாயத்தால், பண்பாட்டால், நாகரிகத்தால், சமயத்தால், மறைநூல்களால், மரபுகளால் எந்தவகையிலும் மாசுபடுத்தப்படாமல் அந்த வெற்றுநிலை இருக்கின்றது.

மீண்டும் நீங்கள் தூய்மையாக, குற்றமற்றவராக உள்ளவராக இருக்கிறீர்கள். நீங்கள் வாழ்க்கையிலேயே முதன்முறையாகத் அங்கு அதிகம் வெளிப்பட்டு இருக்கிறீர்கள். ஆனால் உங்கள் 'நான்' எங்குமில்லை. அதோ வெற்று வானம், நட்சத்திரங்கள் பளிச்சிட்டு மின்னுகின்றன. இங்கே இதோ நீங்கள் இருக்கின்றீர்கள். வெற்றாக- நட்சத்திரங்கள்- பிரதிபலிக்கின்றன.

இரண்டு வானங்கள், இரண்டுமே வெற்றானவை சந்திக்கின்றன.

இவை சமயதன்மை வாய்ந்த கணங்கள்.

பிரார்த்தனைக் கணங்கள், அழகு, அதிசயம் பயபக்தி. அவை ஒவ்வொரு மனிதனுக்கும் வரும். சிலசமயம் காதல் செய்தல், திடீரென்று நீங்கள் அங்கே இல்லை. இருப்பினும் நீங்கள் இருக்கிறீர்கள். இது ஒரு முரண்பாடு. நீங்கள் முதல்தடவையாக மிக உண்மையாக, முற்றிலும் உண்மையாக இருக்கிறீர்கள். ஆனால் இருப்பினும் ஆணவத்தின் பளுகிடையாது. 'நான்' என்னும் உணர்வு கிடையாது. காதல் செய்தல், சில சமயம் நீங்கள் முற்றிலும் தூய்மையான சக்தி ஆவீர்கள். நீங்கள் காதலில் உங்களை இழக்கத் தயாராக இருந்தால், காதலுக்குப் பரவச அனுபவம் என்பது மிகவும் இயற்கையானது. நீங்கள் இன்னும்கூட உங்களைக் கட்டுப்படுத்திக் கொண்டிருந்தால், நீங்கள் இன்னும் ஆணவத்தில் இருக்கிறீர்கள். அப்புறம் காதல் மூலம் திறக்கின்ற அந்தக் கதவையே நீங்கள் இழந்து விடுகிறீர்கள். உச்சநிலை இன்பத்தையே நீங்கள் இழக்கிறீர்கள். அந்தத் உச்சநிலை இன்பமே எல்லையற்றதற்கான கதவு.

உங்கள் ஆணவம் ஆவியாவதற்கான, உருகுவதற் கான, மறைவதற்கான ஒரு நிலை அது. ஆனால் நீங்கள் தொடர்ந்து கட்டுப்படுத்திக் கொண்டே இருந்தால்... இந்தத் துரதிர்ஷ்டம் உலகம் முழுவதிலும் நடந்து கொண்டிருக் கிறது- நீங்கள் கட்டுப்படுத்திக் கொண்டே இருக்கிறீர்கள்.

இப்பொழுது, குறிப்பாக மேற்கில், மக்கள் மிகவும் முறை சார்ந்தவர்களாக ஆகிவிட்டார்கள். அவள் உண்மையி லேயே சரியாக காதல் செய்கிறானா இல்லையா, நிபுணர்களின் கருத்துப்படி காதலிக்கிறானா இல்லையா- தலைவர்களும் ஜான்சன் போன்றவர்களும் அதை ஏற்கிறார்களா இல்லையா, அவன் சின்ஸி போன்றோரின் அறிக்கைப்படி செய்கிறானா இல்லையா, என்றே நினைத் துக் கொண்டிருக்கிறான். தன்னால் முடிந்த அளவு எல்லா முயற்சிகளையும் செய்து பெண்ணைத் திருப்திப்படுத்த முயல்கின்றான்- அதேநேரத்தில் பெண்ணும் ஆணைத் திருப்திப்படுத்த முயற்சி செய்து கொண்டிருக்கிறாள். ஆண், பெண், இருவருமே இழக்கிறார்கள். இருவருமே 'ஆணவத் தில்' மிக அதிகமாக ஊறியிருப்பதால், இழக்கிறார்கள்.

ஒரு பெண், தன்னுடையவனை-வேறெந்தப்பெண்ணும் திருப்திப்படுத்த முடியாத அளவுக்குத் திருப்திப்படுத்த முயன்று கொண்டிருக்கின்றாள். அதேபோல் ஆண், தன்னுடையவளை-வேறெந்த ஆணும் திருப்திப்படுத்த முடியாத அளவுக்கு முயன்று கொண்டிருக்கிறான். இரு வருமே ஆணவத்தின் பாதையில் உள்ளார்கள்; இருவருமே அதிருப்தியாளர்களாகத் தங்கிவிடுகிறார்கள். ஒருவருமே ஒருவரையுமே திருப்தி செய்ய முயலாதபோது தான் திருப்தி வருகிறது.

ஒவ்வொருவரும் வெற்றுத் தன்மையில் வெறிதே மறைந்து கொண்டிருக்கும்போது, அந்தக் கலப்பில், ஆளுமைகள் இனிமேலும் தனியாக இல்லை, விஷயங்கள்

மறைத்துக் கொள்கின்றன. யார் யார் என்று ஒருபோதும் யாருக்கும் தெரியவில்லை.

ஆண் ஆணாக இருப்பதைத் தொடர்கிறான். பெண், பெண்ணாக இருப்பதைத் தொடர்கிறாள். அதனால் காதல் அளிக்கின்ற ஓர் அரிய வாய்ப்பை நீங்கள் இழக்கிறீர்கள். நீங்கள் கதவின் மிக அருகில் தங்குகிறீர்கள். கதவு திறக்கிறது. மூடுகிறது. ஆனால் நீங்கள் உள்ளே போக முடிவது இல்லை. எங்கோ ஓரிடத்தில் நீங்கள் அற்ப விஷயங்களில், சிறிய விஷயங்களில் ஈடுபட்டிருக்கிறீர்கள்.

ஆழ்ந்த காதல்-உறவில் நீங்கள், சமாதியின் முதல் அம்சங்களை அடையலாம். அல்லது இசையில், ஆடலில் கதிரவன் மறைவதைப் பார்ப்பதில் எதையுமே செய்யாமல் சும்மா அமைதியாக உட்கார்ந்திருப்பதில்-ஆகியவற்றில் கூடச் சமாதியின் முதல் அம்சங்கள் அடையலாம்.

ஆனால் நினைவு கொள்ளுங்கள், நீங்கள் செய்பவராக இருக்கும்போது நீங்கள் இழந்து கொண்டிருக்கிறீர்கள். செய்பவர் ஆணவத்தைச் சுமக்கிறார்; செய்பவர் ஆணவமாக இருக்கிறார்.

நீங்கள் செய்யாதவராக இருக்கின்றபொழுது, முழுமையுடன் ஒன்றிப் போகும் வாய்ப்பு உங்களுக்குக் கிடைக்கக் கூடும். அதைத்தான் வழி என்றும் தர்மம் என்றும் புத்தர் அழைக்கின்றார். நீங்கள் தர்மத்துடன் ஒன்றாகி விடுகிறீர்கள், உடனடியாகப் பேரானந்தத்தின் பாய்ச்சல்- எங்கும் சுற்றிலும்- பொழிகிறது. உங்கள் முழுவாழ்க்கையும் ஒரு நிறை நிலைக்கு, இதுவரை நீங்கள் அறிந்திராத புதிய ஆசிர்வாதத்தோடு வந்துவிடுகிறது.

ஆளுமை போகவே வேண்டும். ஆளுமையோடு ஆணவமும் போய்விடுகிறது. பிறகு தனிநபர்த்தன்மையும் கூடப் போகவே வேண்டும். தனிநபர்த் தன்மையுடன்,

சுயமும் போகவேண்டும். அப்புறம் எதுவும் மீதம் இல்லை. நீங்கள் நிம்மதியாக இருக்கிறீர்கள்; போய்விட்டது. நீங்கள் வந்து சேர்ந்துவிட்டீர்கள்.

புத்தரின் பல பெயர்களில் ஒன்று 'ததாகதா'. அதாவது மிகத் திறமையாகச் சென்றவர், மிகத் திறமையாக மறைந்தவர் என்றும் அர்த்தம். 'கதா' என்றால் சென்றவர் என்று அர்த்தம். திறமையாக கடந்து சென்றவர் என்று அர்த்தம். புத்தரின் பெயர்களில் மற்று மொன்று 'சுகதா' நன்றாகப் போனவர்-தடயம் காணமுடியாத அளவுக்கு மிக நன்றாகப் போனவர்-எதுவும் மீதியில்லை- முழுமை யான தூய நிர்மலம்- மாசின்மை! அதுதான் உள்ளது. சுகதாவாக ஆகுங்கள்; ததாகதா ஆகுங்கள். நீங்கள் ஆவியாக மாற அனுமதித்துக் கொள்ளுங்கள். உங்களை மறைய அனுமதித்துக் கொள்ளுங்கள். அப்பொழுது நீங்கள் யார் என்று உங்களைக் கண்டுபிடித்துக் கொள்ளமுடியும்.

நீங்கள், நீங்கள் அல்ல; உங்கள் 'நான்' என்னும் உணர்வே உங்களுக்குத் தளையாக, அடிமைத்தனமாக, சிறைவாசமாக, கூண்டாக இருக்கிறது.

கூண்டு மறையும்போது முழுவானமும் உங்களுடையது. வானம் கூட உங்களுடைய எல்லை இல்லை. நீங்கள் உள்ளார்ந்த இருத்தலில் வானத்தைப் பெற்றிருக்கிறீர்கள். நீங்கள் வானத்தைவிட விரிந்தவர்கள், வெளியைவிடப் பெரியவர்கள்.

கொரியாவைச் சேர்ந்த இளம்மேதையும் புத்தத்துறவியு மான ஒருவர், எனக்கு ஒரு கதை சொன்னார்; தன்னிடம் பாலுணர்வுக்காக வந்த எல்லா ஆண்களிடமும் காதலுறவு கொண்ட ஒரு பெண்ணின் கன்னங்கள், அவள் வடிக் கின்ற கண்ணீரால் எப்போதும் நனைந்து கொண்டிருந்தன. அவருடைய கதையால் நான் மிகவும் கவரப்பட்டேன். அடிக்கடி அந்தக் கதையின் நினைப்பு எனக்கு வந்து

**கொண்டே இருக்கிறது. அந்தப் பெண்ணும் நானும் ஒன்றுபோலத் தோன்றுகிறது; தங்கள் கருத்தைக் கூறமுடியுமா?**

பிரேம் வார்த்யாவிடமிருந்து வந்த கேள்வி இது. அவள் கொரியாவிலிருந்து வந்த நடனமணி. எனக்குக் கொரியாவின் முதல் துறவி அவள்தான்; அவளிடம் மிக நிறைய உள்ளார்ந்த சக்தி உள்ளது. அவள் என்ன சொல்கிறாள் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியும். அந்தக் கதை உண்மையில் அழகியது. ஒரு சிறிய கதை, அதிகமாக அதில் ஒன்றுமில்லை, ஆயினும் உள்ளடக்கம் மிகப் பெரியது.

"தன்னிடம் பாலுறவுக்காக வந்த எல்லா ஆண்களிடமும் காதலுறவு கொண்ட ஒரு பெண்ணின் கன்னங்கள், அவள் வடித்த கண்ணீரால் எப்போதும் நனைந்து கொண்டிருந்தன."

ஒரு வாக்கியக் கதை தான் இது. ஆனால் இந்தக் கதை முழுமையான மனித இனத்தின் கதையாக இருக்கமுடியும். இதுதான் இப்போது நடந்து கொண்டிருக்கிறது.

காதல் என்பது சாத்தியமானது. அது பாலுணர்ச்சியைத் தாண்டி ஒருபோதும் மேலெழுவது இல்லை. ஆகவே எல்லாக் கன்னங்களும் கண்ணீரால் நனைந்திருக்கின்றன. உங்கள் கன்னங்கள் முழுவதும் கண்ணீரைக் காண்கிறேன். கண்ணீர்த்துளிகள் உருண்டு விழுகின்றன.

மனித வாழ்க்கையின் மிகப் பெரிய துயரங்களில் ஒன்று இதுதான். அதாவது, மனிதன் பாலுறவிலேயே தங்கி விடுகிறானே தவிர, ஒரு கணம்கூட அதற்கப்பால் செல்வதில்லை. ஒருபோதும் காதலுக்காக ஒரு கணத்தைக் கூடச் செலவழிக்கவில்லை அல்லது சாதிக்கவில்லை.

காதல், பாலுறவில் பிறக்கிறது; ஆனால் பாலுறவு மட்டுமே காதல் அல்ல. சேற்றிலே பிறக்கிறது செந்தாமரை. ஆனால் செந்தாமரை வெறும் சேறு அல்ல. சேறு சேறாகவே இருந்தால், உண்மையில், கன்னங்களில் கண்ணீர் உருண்டோடத்தானே செய்யும்!

செந்தாமரையாக மலர நீங்கள் காத்திருக்கிறீர்கள். நீங்கள் உயர்ந்த இடத்தில் மலர்வதற்குக் காத்திருக்கிறீர்கள். ஆனால், வேர் விடும் இடத்தில் இருந்து எழ முடியவில்லை. பல நூற்றாண்டுகளாக இது நடந்து கொண்டிருக்கிறது. மிக மிகச் சில தனிமனிதர்களே காதலை அடைந்திருக்கிறார்கள். அப்பொழுது அவர்கள் முகங்களில் புன்சிரிப்பைக் கொண்டிருக்கிறார்கள். அப்பொழுது நீங்கள் அருளைக் காண முடியும். அழகைக் காண முடியும், அறியாததின் அழகு அவர்களில் இறங்குகின்றது. காதல் உரு மாற்றுகிறது.

பாலுணர்ச்சி என்பது ஒரு விடுதலை. சுகாதாரமானது, ஆரோக்கியமானது. நான் அதற்கு எதிர்ப்பானவன் அல்லன். அது இயற்கையானது. அது முடிவன்று; ஆரம்பம்; காதலின் அரிச்சுவடி அது; ஆனால் நீங்கள் அதிலிருந்து கவிதை ஆக்கவேண்டும். எல்லாக் கவிதைகளையும் அரிச்சுவடியாக்கலாம்.

மார்க்ட்வைனின் நண்பரும், மதகுருவும் ஆகிய ஒருவர் அவரைத் தன் பேச்சைக் கேட்க அழைத்தார். அவர் பல ஆண்டுகளாக அழைத்துக்கொண்டே இருந்தார். மார்க்ட்வைன் போகவில்லை. ஆனால் அன்றைக்கு அவர், 'சரி, நான் வருகிறேன்' என்று கூறினார்.

மதகுரு தன் பேச்சைத் தயாரித்தார். இதுவரை பேசாத அழகிய பேச்சு. அவர் ஒரு சிறந்த போதகர். ஆயிரக்கணக்கான மக்கள் 'ஆழ்ந்த பக்திப்பரவசத்தில் அவர் பேச்சைக் கேட்டார்கள். மார்க்ட்வைன் அவர் முன்பு உட்கார்ந்

திருந்தார். அது தான் அவருக்கு உச்சக்கட்டம். அவை யோர் ஆடாமல் அசையாமல் ஆழ்ந்து அடர்ந்த அமைதி எங்கும்! தன் ஓரக்கண்களால் பார்த்துக் கொண்டே, பேச்சாளர் மீண்டும் மீண்டும் பார்த்துக் கொண்டே பேசிக்கொண்டிருக்கிறார்-அவர் எப்படி இருக்கிறார் என்று பேச்சாளர் கவனிக்கிறார். அவர், உட்கார்ந்திருக்கிறார் சலிப்புடன்!

அவர்கள் இருவரும் காரில் சென்று கொண்டிருக்கும் போது மதகுரு சில நிமிடங்களுக்குப் பேசாமலிருந்தார் கேட்கத் தைரியம் இல்லாமல். பிறகு இறுதியாகக் காரை விட்டு மார்க்ட்வைன் இறங்கும்போது "எப்படி இருந்தது என்று நான் கேட்கமுடியுமா? உங்களுக்குப் பிடித்ததா' என்று மதகுரு கேட்டார்.

மார்க்ட்வைன் "எல்லாம் முட்டாள்தனம். எல்லாம் இரவல். தற்செயலாக நான் ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருக்கிறேன் சில நாட்களாக; நீங்கள் கூறிய தெல்லாம் இந்தப் புத்தகத்தில் உள்ளது."

மதகுருவிற்கு நம்பமுடியவில்லை; அவர் எதையும் யாரையும் காப்பியடிக்கவில்லை. ஏதோ சில வாக்கியங்கள் அங்குமிங்கும் இருக்கலாம். ஆனால் முழுப்பேச்சும்...? ஆனால் மார்க்ட்வைன் "வார்த்தைக்கு வார்த்தை நீங்கள் திருப்பிச் சொல்லியிருக்கிறீர்கள். இது கொள்ளை."

மதகுரு, 'நான் அந்தப் புத்தகத்தைப் பார்க்க வேண்டும்' என்று சொன்னார்.

அடுத்த நாள் அந்தப் புத்தகத்தை மார்க்ட்வைன் அனுப்பி வைத்தார். அது ஓர் அகராதி. ஓர் அகராதியில் உண்மையில், எல்லா வார்த்தைகளும் இருக்குமே.

ஒவ்வொரு கவிதையும் அரிச்சுவடிக்குள் குறைக்கப் படலாம்; ஆனால் கவிதை அரிச்சுவடியாகாது. புத்தரின்

பொன்மொழிகள் அனைத்தும் அரிச்சுவடிக்குள் அடக்கி விடலாம். ஆனால் அவை வெறும் அரிச்சுவடி இல்லை. அதைத் தான் ஃபிராய்டு செய்துள்ளார்; அதாவது அனைத்துக் காதலையும் பாலுணர்ச்சியாக அவர் குறைத்துவிட்டார்.

பாலுணர்ச்சி என்பது காதலின் அரிச்சுவடிதான். அவை செங்கற்கள்தாம்; அவற்றால் ஒரு தாஜ்மகாலை உருவாக்கலாம். ஆனால் தாஜ்மகால் வெறும் செங்கற்கள் அல்ல.

நீங்கள் செங்கற்களைக் குவித்து வைக்கலாம். ஆனால் அவை தாஜ்மகாலாக ஆகமுடியாது. தாஜ்மகால் என்பது அளவற்ற காதல் அளவற்ற படைப்பாற்றல் ஆகிய இவையிரண்டின் கலவையாகும். செங்கற்கள் என்பவை அக்கலவையின் கண்ணுக்குத் தெரியும் பாகம் ஆகும். ஆனால் தாஜ்மகால் என்பது கண்ணுக்குத் தெரியாதது. செங்கற்கள் ஒரு குறிப்பிட்ட வகையில் கண்ணுக்குத் தெரியாததைத் தெரியவைக்கிறது. அதை நீங்கள் உணர முடியும். செங்கற்கள் கண்ணுக்குத் தெரியாததை நாம் உணர உதவுகிறது. ஆனால் செங்கற்கள் கண்ணுக்குத் தெரியாதவை அல்ல.

பாலுணர்ச்சி என்பது செங்கற்களைப்போன்றது. நீங்கள் பாலுணர்ச்சியைக் குவித்துக் கொண்டே போனால் கண்ணீர்த்துளிகளைத்தான் உணர வேண்டியிருக்கும். அந்தப் பெண் ஆழமான புரிந்துணர்வைக் கொண்ட வளாகத்தான் இருந்திருக்க வேண்டும்.

மக்கள் ஒருவரை ஒருவர் பார்க்கிறார்கள்; ஆனால் அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்வதேயில்லை. அவர்கள் பாலுணர்ச்சிப் பொருளுக்காகத்தான் பார்க் கிறார்கள். ஒரு பெண் கடந்து செல்கிறாள். அவளை எப்போதாவது ஓர் உயிராகப் பார்த்தது உண்டா? சில

சமயம் ஒரு பெண்ணிடம் நீங்கள் அக்கறை கொள்கிறீர்கள். ஆனால் ஓர் உயிராக அவளிடம் அக்கறை கொண்டதில்லை. ஒருவிதமான குறிப்பிட்ட கவர்ச்சியை உணர்கிறீர்கள். ஆனால் ஓர் உயிர் மீது வந்த கவர்ச்சியல்ல அது. அவளை ஒரு பாலுணர்ச்சிப் பொருளாகத்தான் பார்த்திருக்கிறீர்கள்.

சில சமயம் நீங்கல் வெறுக்கலாம், ஆனால் அதுவும் பாலுணர்ச்சி சார்ந்ததே. சில சமயம் நீங்கள் விரும்பாமல் இருக்கலாம்- சலிப்படையலாம், வெறுத்தலாம் சரி விரும்பினாலும் சரி எதுவாக இருந்தாலும்- ஆனால் அதுவும் பாலுணர்ச்சியே.

உன்னை ஒரு பாலுணர்வுக்கான பொருளாக பார்க்காமல் உன்னை ஒரு உயிராக உன் கண்களை பார்க்கும் ஒருவரை, உன்னை ஒரு மனிதராக மட்டும் அன்பு செய்யும் ஒருவரை சந்திக்கும் காலம் வரும். அதன்பின் தான் நீ உன் நண்பரை கண்டுபிடித்து விட்டாய் என்று பொருள்; அதற்கு முன்பு அல்ல.

நாம் என்ன ஆசைப் படுகிறோமோ அதைத் தான் தேடுகிறோம். ஆண் பெண்ணை தேடுகிறான், பெண் ஆணைத் தேடுகிறாள்; அவர்கள் மற்றவரை ஒரு உயிர் என்று பார்ப்பதில்லை.

அவர்கள் வேறு எதற்காகவோ பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் தங்கள் உணவுக்காகப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு ஒரு பசி- அந்தப் பசி பாலுணர்ச்சி சார்ந்தது. எனவே சிலபேர் உங்களைப் பாலுணர்ச்சிப் பொருளாகப் பார்க்கும் போதெல்லாம் உங்களுக்குக் குற்ற உணர்ச்சி வருகிறது. ஏனென்றால் அவர் உங்களை புழுதி நிலைக்கு இறக்கி விடுகிறார். அவர் உங்களை மிகவும் கீழாக மதிப்பிடுகிறார். உயர்நிலையின் மிக இழிவான நிலைக்குத் தள்ளி விடுகிறார்.

உங்களைக் குறைத்து மதிப்பிடாமலே உங்களை ஒருவர் நேசிக்க முடியும். உண்மையில் நேசம் உங்களைக் குறைப்ப தில்லை. நேசம் உங்களைச் சாதாரணத் தன்மையிலிருந்து மேலெழும்பிவர உதவுகிறது. நேசம் உங்களை மேலும் உயரப் பறக்க உதவுகிறது. அது உங்களைத் தியானிப்ப வராக, பரவசக்காரராக ஆக்குகிறது. நேசம், கடவுள் இருப்பதற்கான முதல் சாட்சியாக இருக்கிறது. வாழ்க்கை என்பது வெறும் பொருளல்ல; மனிதன் என்பவன் வெறும் உடல் அல்ல; ஆன்மா இருக்கிறது. அப்பாலும் ஓர் உலகம் உள்ளது.

அந்தப் பெண்ணுக்கு அது கிடைக்கவில்லை போலும். அவள் பல பேர்களை நேசித்திருக்கக்கூடும். ஆனால் அவர்களது ஆன்மாக்களுக்குள் அவள் பார்த்த போது அங்கே இருந்தது வெறும் பாலுணர்ச்சி ஆசை மட்டுமே.

பலபெண்கள் தங்களை ஆண்கள் காதல் செய்யும்போது தாங்கள் அழுது புலம்புவதாகக் கூறினார்கள். ஏனென்றால் ஆண்கள் காதல் செய்கிறார்கள்; அப்புறம் உறங்கிப் போய்விடுகிறார்கள். அது ஒரு சடங்கு. அது நன்றாகத் தூங்குவதற்கு உதவுகிறது அது ஒரு தூக்க மருந்து போல. ஆனால் அந்தப் பெண்ணோ அதற்குப் பின்பும் கதறிக்கொண்டும் அழுது கொண்டும் இருக்கிறாள். அவள் உபயோகிக்கப்பட்டுத் தூக்கி எறியப்படுகிறாள், பிளாஸ்டிக் பொருள் போல்! நீங்கள் பயன்படுத்துகிறீர்கள்; தூக்கி எறிகிறீர்கள். அதைப் பற்றிக் கவலைப்பட எதுவுமில்லை இப்போது. உங்கள் தேவை நிறைவேறிவிட்டது.

நம் தேவையின் மூலமாகத்தான் அடுத்தவரை நாம் பார்க்கிறோம். அப்படியானால் அந்தப் பார்வை குற்றமுடையது. அடுத்த நபரை அவருக்கே உரியவகையில் ஓர் அழகாக, மேன்மையாக, தெய்விகமாக, கடவுளாக, தேவதையாக நீங்கள் காணும்போது-ஆம்-அதைத்தான்

நான் உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன் ஒவ்வொரு மனிதனும் ஒரு கடவுள். ஒவ்வொரு பெண்ணும் ஒரு தேவதை! அடுத்த நபரைக் கடவுளாகவும் தேவதையாகவும் நீங்கள் பார்த்தால், அப்போது அந்த நபர் பயனடைந்து விட்டார். பார்வை ஒன்றே அருளைப் பரப்புகிறது. அந்தப் பார்வையே உயரப்பறப்பதற்கு உதவி செய்கிறது.

உலகத்தின் அனைத்து மொழிகளிலுமே, காதலில் விழுதல் என்று அர்த்தம் கொடுக்கக் கூடிய வார்த்தை உணர்ச்சி வெளிப்பாடுகள் உள்ளன. இது மடத்தனமானது, ஏன் காதலில் விழுதல் என்று இருக்கிறது? ஏன் காதலில் எழுதல் என்று இருக்கக் கூடாது. காதலில் விழுதல் என்பது– அந்த வார்த்தையின் கருத்தே-ஏதோ தந்திரம் என்னும் உணர்வைத் தருகிறது. உண்மையில் நீங்கள் பாலுணர்ச்சியில் விழ விரும்புகிறீர்கள். நீங்கள் கீழே செல்ல விரும்புகிறீர்கள். நீங்கள் பாசாங்கு செய்கிறீர்கள். நான் கேட்டிருக்கிறேன்:–

புதிய பிரவச வார்டு ஒன்று, திறந்து ஆறுமாதங்கள் ஆனபோது ஐந்நூறு குழந்தைகள் பிறந்தன. அனைத்தும் பெண் குழந்தைகள் மட்டுமே. ஏழாவது மாதத்தின் ஆரம் பத்தில் ஒரு பையன் பிறந்தான். அங்கிருந்த செவிலியர் அனை வரும் அந்த நிகழ்ச்சியை விருந்து வைத்துப் பெரி தாகக் கொண்டாடிக் கொண்டிருந்தார்கள். உச்சக்கட்ட மாக ஒரு நிருபர் ஒரு கேள்வி கேட்டார். குழந்தை அப் பாவைப் போல் இருக்கிறானா, அம்மாவைப்போலவா?" ஒரு செவிலி பதில் சொன்னாள்: 'எனக்குத் தெரியாது. இது வரை அவனது முகத்தை நாங்கள் பார்க்கவில்லை.'

ஆறு மாதங்களாக வெறும் பெண்குழந்தைகள் மட்டுமே பிறந்தன. அவனது முகத்தைப் பற்றி யாருக்கு அக்கறை!

ஒரு நபர் உங்களைப் பாலுணர்ச்சியோடும் மோகத் தோடும் பார்க்கும்போது, அவர் உங்களைப் பார்க்க

வில்லை. அவர் உங்கள் பிறப்புறுப்புகளைத்தான் பார்க்கிறார். அவர் உங்களை அவமானப்படுத்துகிறார். உங்களை, உங்கள் பிறப்புறுப்புகளாகக் குறைத்து விட்டார் அவர். 'நீங்கள் வெறும் இணைப்பு மட்டுமே' என்று அவர் கூறுகிறார். "உங்களில் எனக்கு ஆர்வமில்லை. நான் உங்கள் பால்தன்மையில் ஆர்வம் கொண்டிருக்கிறேன். உங்கள் பிறப்புறுப்புகளில் எனக்கு ஆர்வம். நீங்கள் ஒரு சூழ்நிலை. அதைவிட ஒன்றுமில்லை. என்னுடைய ஆர்வம் உங்கள் பால்தன்மையில்தான்– ஆண்? பெண் என்னும் வகையில் தான்!" இது மிகவும் குற்றமுடையது, அவமானகரமானது, இழுக்குத்தருவது, கீழ்மைப்படுத்துவது ஆகும்.

அந்தப் பெண், ஆழ்ந்த காதல் உடையவளாக இருந் திருக்க வேண்டும். நீங்கள் ஆழ்ந்த காதல் உடையவராக இருந்தால், நீங்கள் எப்போதும் கன்னங்களில் கண்ணீர் வழிபவராகத்தான் இருப்பீர்கள். ஏனென்றால் அதை நிறைவு செய்வது மிகமிகக் கடினமாகும்.

கீழான தேவைகள் மட்டுமே இந்த உலகில் பூர்த்தி செய்யமுடியும். ஏனெனில் மக்கள் மிகவும் கீழ்நிலையில் விழுந்துவிட்டார்கள். உங்களுக்கு ஏதாவது உயர்நிலை தேவை இருக்குமானால் நீங்கள் கஷ்டப்படுவீர்கள். உங்களுக்கு உயரிய தேவை ஏதேனும் இருக்குமானால் உங்களுக்குச் சரியான துணைவர் கிடைக்கமாட்டார். உங்களுக்கு உயரிய தேவை இருக்குமானால் நீங்கள் தனிமையில் தங்கிவிடுவீர்கள். அதுதான் அந்தப் பெண்ணின் பிரச்சினை. கொஞ்சம் பரிந்துணர்வுள்ள, அறிவாளிகளான அனைத்து மனிதர்களுக்கும் உள்ள பிரச்சினையாக இதை நான் காண்கிறேன்.

மக்கள் ஒவ்வொன்றையும் பணத்திற்கு அல்லது பாலுணர்ச்சிக்குக் குறைத்து விட்டார்கள். இந்த இரண்டு விஷயங்களும் உண்மைக் கடவுள்களாகத் தோற்றமளிக்

கின்றன. பணம் அல்லது பாலுணர்ச்சி. மக்கள் பணத்தின் பின்னால் இருப்பதற்குக்கூடக் காரணம் என்னவென்று பார்த்தால் அதுவும் பாலுணர்ச்சிக்காகத்தான். ஆம், பணம் அதற்கும் உதவுமே!

நான் கேட்டிருக்கிறேன்:

ஒரு யூதர், விபச்சாரி விடுதி ஒன்றுக்குச் சென்றார்; அங்கிருந்த பெண்மணியிடம் தனக்கு மிகவும் குறைவான கட்டணத்தில் கிடைக்கக்கூடிய ஒரு பெண் வேண்டும் என்று கேட்டார்.

"பத்து டாலர்கள் கொடுத்தால் எங்களிடம் ஒரு கருப்புப்பெண் உள்ளாள்" என்றாள் அந்தப் பெண்மணி.

'ஆனால், என்னிடம் நான்கு டாலர்களுக்குமேல் இல்லை' என்று அடம்பிடித்தார் யூதர்.

நீண்ட விவாதத்திற்குப் பின், அந்தப் பெண்மணியே நான்கு டாலர்களுக்குச் சம்மதித்து அவருடன் சென்றாள். பத்தாண்டுகள் வரை யூதர், அந்த விடுதிக்குச் செல்ல வில்லை. பிறகு அங்குச் சென்றார். அப்போது, அவரை அந்தப் பெண்மணி மிகவும் அன்பாக வரவேற்றாள். தங்கள் உறவின் பலனாக ஒன்பது வயது மகன் ஒருவன் அவருக்கு உள்ளான் என்று கூறினாள். அந்தப் பையனை அழைத்து அவருக்கு அறிமுகப்படுத்தினாள். 'நீங்கள்தான் எனக்குத் தந்தையா. என்னுடைய கடைசிப் பெயர் என்னவாக இருக்கும் என்று நான் வியந்து கொண்டே இருந்தேன். அப்பா சொல்லுங்கள், என் கடைசிப் பெயர் என்ன?

'கோல்டுபெர்க்' –அப்பா பதிலளித்தார்.

'அடகடவுளே', பையன் ஆச்சரியப்பட்டு 'நான் யூதன் என்றா சொல்கிறீர்கள்' என்றான். 'ரொம்ப அலட்டிக்

கொள்ளாதே தம்பி! பத்தாண்டுகளுக்கு முன்பு என்னிடம் ஆறு டாலர்கள் அதிகம் இருந்திருந்தால், நீ கறுப்பாகக் கூட இருந்திருப்பாய்!' என்று தந்தை சொன்னார்.

எல்லாமே-முழுவதும்-பணம் அல்லது பாலுணர்ச்சி யாகத் தான் தோன்றுகிறது. ஒவ்வொருவரும் வாழ்க்கையை ஒரு விபச்சார விடுதியாகத்தான் குறைத்துக்கொண்டிருக் கின்றனர். வாழ்க்கையின் அனைத்துப் புனிதத் தன்மை களும் சிதைந்துவிட்டன. இந்தச் சூழ்நிலையில் காதலுக் காகக் காத்திருக்கும் இதயம் உங்களுக்கு இருந்தால், உங்கள் ஆசை பூர்த்தி செய்யப்படாமல் தான் இருக்கப்போகிறது.

ஒருவரையும் ஒருபோதும் அவன் அல்லது அவள் என்று பார்க்காதீர்கள். அது வெறும் பாலுணர்ச்சிதான். மனித உயிர்களை அவர்களாகவே முழுமையாகப் பாருங்கள். பால் என்பது அவர்களின் ஒரு பகுதி; அவர்கள் வெறும் பாலுணர்வு மட்டுமல்ல. மிகவும் சிறிய பகுதி. தன்னில் தானே அழகிய பகுதி-அதில் எந்தத் தவறும் இல்லை- ஆனால் ஒரு பகுதி முழுமையாக மாறும்போது எல்லாமே அசிங்கமாகிறது. ஒரு பகுதி முழுமையாகத் தன்னை ஆக்கிக்கொள்ளும் உரிமை கோரும்போது எல்லாமே அசிங்கமாகிறது.

உங்கள் தலை, உங்கள் முழு ஆளுமைக்கும் உரிமை கொள்ளுமானால் நீங்கள் அசிங்கம் ஆகிறீர்கள். அப்புறம் முழுமையில் உங்கள் வேர்களைத் தொலைத்து விடுகிறீர் கள். பால் உங்கள் முழு ஆளுமையையும் உரிமை கோருமானால், நீங்கள் அதற்காக வாழத் தொடங்குவீர் களானால், அப்பொழுது நீங்கள் குறைக்கப்படுகிறீர்கள், மண்ணுக்குக் குறைக்கப்படுகிறீர்கள், உங்கள் வானம் தொலைந்துவிட்டது. பிறகு நீங்கள் வெறும் வேர்களாக மட்டுமே குறைக்கப்பட்டு விடுகிறீர்கள். உங்களுக்குக் கிளைகள் எவையுமில்லை. அவை வானத்தில் பரவி,

சூரியனையும் மழையையும் வாழ்த்தி, மேகங்களைச் சந்தித்து, வானத்துடன் சரசமாட மழையையும் வாழ்த்தி, மேகங்களைச் சந்தித்து, வானத்துடன் சரசமாட முடியாது.

பால் நல்லது; ஆரோக்கியமானது. அழகியது. தன்னுடைய சொந்த இடத்தில்! என்னைப் புரிந்து கொள்ள முயலுங்கள். காதலில் நிழலாகப் பால் தொடர்ந்தால் அது பிரம்மாண்டமாகப் புனிதமானது. ஆனால், காதல் என்பது எதுவுமே இல்லை-வெறும் கவர்ச்சி நடவடிக்கை மட்டுமே-என்றால், காதல் என்பது ஒன்றுமில்லை-வெறும் விற்பனைப் பிரதிநிதித்துவம் என்றால், காதல் என்பது ஒன்றுமில்லை. வெறும் கற்பழிப்புத்தான் என்றால், பால் மட்டுமே இலக்காக இருந்தால், பால் அருவருப்பானது, காதல் அசிங்கமானது. அப்புறம் உங்கள் முழு இருத்தலுமே மெல்ல மெல்ல அசிங்கமாகிவிடும். நீங்கள் ஒரு புண்ணாக இருப்பீர்கள்! பூவாக அன்று!

எவரையும் ஒருபோதும், பால் உணர்வுப் பொருளாகக் குறைத்துவிடாதீர்கள். உங்களை எவரும் பால்உணர்வுப் பொருளாகக் குறைப்பதற்கு அனுமதித்து விடாதீர்கள். பால் உணர்வு காதலைத் தொடர்ந்தால், அது காதலின் ஒருங்கமைந்த பொருளாக ஆனால், அதற்கு முழுமையும் வித்தியாசமான குணமும் வந்துவிடுகிறது. அதன் பின்பு அது பாலியலே இல்லை.

காதலின் அங்கமாக அது வரும்போது... நீங்கள் ஒருவரைக் காதலிக்கிறீர்கள். அந்த நபரோடு ஒவ்வொன்றையும் நீங்கள் பகிர்ந்து கொள்கிறீர்கள். நீங்கள் ஒருவரைக் காதலிக்கும்போது உங்கள் உள்ளத்தைப் பகிர்ந்துகொள்ள விரும்புகிறீர்கள், உங்கள் உடலைப் பகிர்ந்துகொள்ள விரும்புகிறீர்கள், உங்கள் ஆன்மாவைப் பகிர்ந்துகொள்ள விரும்புகிறீர்கள், உங்கள் தியானத்தைப் பகிர்ந்துகொள்ள விரும்புகிறீர்கள், நீங்கள் உங்களைப்

பகிர்ந்துகொள்ள விரும்புகிறீர்கள், உங்களிடம் உள்ள எதை வேண்டுமானாலும் பகிர்ந்துகொள்ள விரும்புகிறீர்கள். உங்களுக்கு அழகுணர்ச்சி இருக்குமானால் உங்களால் காதலிக்கப்படும் நபர் உங்கள் கவிதையைப் பகிர்ந்து கொள்ள விரும்புகிறீர்கள். உங்கள் ஓவியத்தைப் பகிர்ந்து கொள்ள விரும்புகிறீர்கள். உங்கள் பார்வையைப் பகிர்ந்து கொள்ள விரும்புகிறீர்கள். உங்கள் கனவுகளைப் பகிர்ந்து கொள்ள விரும்புகிறீர்கள்.

உண்மையில், நீங்கள் ஒரு நபரைக் காதலித்தால், உங்கள் பாலியல்பையும் கூடப் பகிர்ந்துகொள்ள விரும்புகிறீர்கள். அப்போது அது அழகாய் இருக்கிறது. அது வெறும் பாலுணர்ச்சி மட்டுமல்ல. அது சிக்மண்ட் பிராய்டின் வெறும் பாலுந்தல் மட்டுமன்று! அந்த ஆற்றல் அப்போது முற்றிலும் மாறுபட்ட குணங்கொண்டது; உயரே உயரே நீங்கள் செல்வதற்கு அப்போது அது உதவுகிறது.

காதலைத் தவிர எதுவும் நீங்கள் உயரே செல்ல உதவுவதில்லை. காதல் உங்களுக்கு உயரே செல்ல உதவு வது போல் வேறு எதுவும் உதவ முடியாது. ஏனென்றால் அது அந்த அளவுக்கு ஒரு சமாதானமாக- அமைதியாக திருப்தியானதாக அமைந்து விடுகிறது. நன்றியுணர்ச்சி யுடையவராக வாழ்க்கையிலேயே மிகவும் மகிழ்ச்சியான வராக அவர் ஆகிவிடுகிறார். இனிமேல் அன்னியர் இல்லை!

நினைவு கொள்ளுங்கள்:- யாருடனாவது நீங்கள் உறவு கொள்ள நேர்ந்தால், பாலியலுக்காக மட்டுமே ஒருபோதும் உறவாடாதீர்கள். அப்படியென்றால் உங்கள் முழு இருத்தலும் முட்டாள்தனமாகிவிடக் கூடும். பாலுணர்ச்சி யைப் பிரார்த்தனையாகப் பாவியுங்கள். தெய்விகத்தை நோக்கியுள்ள கதவுகளில் அதுவும் ஒன்று. புனிதத்

தன்மையைக் கெடுக்கக்கூடிய செயல் எதையும் செய்துவிட வேண்டாம்.

நான் கேட்டிருக்கிறேன்.

ஒரு யூதக் கர்ப்பிணிப்பெண், தான் குழந்தையைப் பெற்றெடுக்கும் தருணத்தில் எந்த நிலையில் படுத்துக்கொள்ள வேண்டும் என்று டாக்டரிடம் கேட்டாள்.

"இதை ஆரம்பித்தபோது இருந்த அதேநிலையில் தான் இருக்க வேண்டும்' என்று டாக்டர் கூறினார்.

'அட, கடவுளே, பெர்லினிலிருந்து, டாக்ஸியில் ஜன்னல்களில் 'என் கால்களை நீட்டிக்கொண்டே இரண்டு மணி நேரம் சவாரி செய்ய வேண்டுமா' என்று அங்கலாய்த்தாள் அவள்.

ஆனால் இது நடக்கிறது. காதல் தொடர்புகள், இப்படிப் பட்ட வினோதமான அசிங்கமான இடங்களில் எல்லாம் நிகழ்கின்றன. இப்போது டாக்ஸியின் பின் இருக்கை. அது ஒரு தேவாலாயத்தில், கோவிலில் நடந்திருக்க வேண்டும். அந்தச் சேர்க்கையே அசிங்கம்.

ஒருவர் மிகப்பெரிய நிலையில் அழகாக, மகிழ்ச்சியாக, கொண்டாட்டமாக உணரும்போதுதான் காதல் உறவு கொள்ளவேண்டும். காதல் உறவு கொள்வதற்கு முன்பு நடனமாட வேண்டும். பாடவேண்டும், பிரார்த்தனை செய்ய வேண்டும். புத்தரின் பொன்மொழிகளைப் படிக்க வேண்டும். அல்லது இயேசுவின் சில பொன் மொழிகளைப் படிக்க வேண்டும் அல்லது மறைமொழிகளை ஒப்பிக்க வேண்டும். ஒருவர் காதல் உறவு கொள்வதற்கு முன்பு இது மிகவும் அழகானது.

கடவுளின் கோயிலைப் போல் எண்ணிக்கொண்டு காதலில் நுழையவேண்டும். அப்போது வேறு எதிலுமே கிடைக்காத மனநிறைவு காதலில் கிடைக்கும்.

**உங்கள் உடலுக்குப் பசிக்கிறபோது நீங்கள் சாப்பிடு கிறீர்கள் என்றும், உங்கள் உடலுக்கு ஓய்வு தேவைப்படும் போது தூங்குகிறீர்கள் என்றும் நீங்கள் சொல்லியிருக்கிறீர் கள். ஆனால் நீங்கள் அச்சாக அப்படியே கடிகாரத்தைப் பின்பற்றித்தான் உங்கள் குளியல், தூக்கம் முதலிய வற்றைச் செய்வதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். அருள் கூர்ந்து விளக்குங்கள்.**

ம்ம்... கிருஷ்ணா ராதாவிடமிருந்து இந்தக் கேள்வி. அவள் ஒரு மாஜிஸ்டிரேட் போலக் கேட்டிருக்கிறாள்: 'அருள் கூர்ந்து விளக்குங்கள்.'

இது அப்படியே வேறு வழியில் நடக்கிறது. அதாவது கடிகாரம் என்னைப் பின்பற்றுகிறது. நான் கடிகாரத்தைப் பார்ப்பது, அது என்னைப் பின்பற்றுகிறதா இல்லையா என்று பார்ப்பதற்காகத்தான்! ஒரு சுவையான நிகழ்ச்சி யைச் சொல்கிறேன். முல்லா நசிருதீன் நீதிமன்றத்தில் சாட்சியளித்துக் கொண்டிருந்தார். நீதிமன்ற நிருபர் அவர் கூறிய அனைத்தையும் ஒன்றுவிடாமல் எழுதிக் கொண் டிருந்ததை அவர் கவனித்தார். அங்கே பேசியபோது வேகமாக, மிகவேகமாகப் பேசிக்கொண்டே சென்றார். இறுதியாக அவருடைய வேகத்துக்கு ஈடுகொடுக்க வெறிபிடித்ததுபோல் வேகமாக எழுதத் தொடங்கினார் நிருபர். உடனடியாக முல்லா அந்த நிருபரிடம் "அன் பார்ந்த நண்பரே! அவ்வளவு வேகமாக எழுதாதீர்கள். நான் உங்களவுக்கு வேகமாகப் போக முடியவில்லை' என்று கூறினார்.

நான் கடிகாரத்தை ஒருபோதும் பின்பற்றவில்லை. ஆனால் என் உடலை நான் புரிந்து கொண்டுள்ளேன். என் உடலின் தேவைகளை உணரத் தெரிந்துகொண்டேன். அதைக் கவனித்துக் கேட்பதால் நான் நிறையக் கற்றுக் கொண்டேன். நீங்களும் கூட உங்கள் உடலைக் கவனித்துக்

கேட்கத் தொடங்கினால், நீங்கள் ஒழுங்குக் கட்டுப் பாட்டைப் பெற்றவர் ஆவீர்கள்-ஆனால் அதைக் கட்டுப் பாடு என்று கூற முடியாது.

நான் என்மீது இதைக் கட்டாயப்படுத்தித் திணிக்க வில்லை. என் வாழ்வில் எல்லா வகைகளையும் நான் முயன்றுள்ளேன். என் உடல் எதில் சரியாகப் பொருந்து கிறது என்று உணர்ந்து கொள்ளத் தொடர்ந்து பரிசோதனை செய்து கொண்டே இருக்கிறேன். ஒருமுறை நான் மூன்று மணிக்குக் காலையில் சீக்கிரமாக எழுந்திருக்கப் பழகினேன். அப்புறம் நான்கு மணிக்கு, ஐந்து மணிக்குப் பழகினேன். இப்போது நான் பல ஆண்டுகளாக ஆறு மணிக்கு எழுந்திருக்கப் பழகினேன். மெல்ல மெல்ல என் உடலுக்கு எது பொருந்துகின்றது என்று கவனிக்கத் தொடங்கினேன்; மிகவும் உணர்வு பூர்வமாக ஒருவர் இருக்கவேண்டும்.

உடலியலாளர்கள் இப்போது, 'ஒவ்வொருவருடைய உடலும் தூங்கும்போது இரண்டு மணி நேரத்திற்கு இயல்பான தட்பவெப்பநிலையை இழக்கிறது. இரண்டு டிகிரி அளவுக்குத் தட்பவெப்பம் விழுந்து விடுகிறது. இது உங்களுக்கு மூன்றிலிருந்து ஐந்து வரை ஏற்படலாம். அல்லது இரண்டிலிருந்து நான்குக்குள் ஏற்படலாம். அல்லது நான்கிலிருந்து ஆறுக்குள் ஏற்படலாம். ஆனால் ஒவ்வொருவருடைய உடலின் தட்பவெப்பமும், ஒவ்வோர் இரவும், இரண்டு டிகிரியாகிவிடுகிறது. அந்த இரண்டு மணி நேரங்கள் மிக ஆழமான தூக்கத்திற்குரிய நேரமாகும். இந்த இரண்டு மணி நேரங்களுக்கு இடையில் நீங்கள் எழுந்திருக்காவிட்டால் நாள் முழுவதும் தெளிவில்லாமல், தூக்கக் கலக்கத்திலேயே இருப்பீர்கள். நீங்கள் ஆறு, ஏழு மணி நேரம் தூங்கியிருக்கலாம் அதனால் எந்த வித்தியாச மும் இருக்காது. அந்த இரண்டு மனிநேரங்களுக்கு இடை யில் நீங்கள் எழுந்துவிட்டால், முழுநாளும் உங்களுக்குக்

களைப்பாயிருக்கும். தூக்கம் வந்து கொண்டேயிருக்கும். கொட்டாவி வந்து கொண்டேயிருக்கும். அதோடு ஏதோ ஒன்றை இழந்துவிட்டதைப்போல நீங்கள் உணர்வீர்கள். உங்களுக்கு மிகவும் இடைஞ்சலாக இருக்கும். உடல் மிகவும் ஆரோக்கியம் இழந்ததாக இருக்கும்.

அந்த இரண்டுமணி நேரம் கழித்துச் சரியாக நீங்கள் எழுந்தால் கூட அதுதான் நீங்கள் எழுந்திருக்கச் சரியான நேரம் ஆகும். அப்பொழுது நீங்கள் முழுமையாகப் புத்துணர்ச்சியோடு இருப்பீர்கள். அந்த இரண்டு மணிநேரம் மட்டும் தூங்கினால் அதுகூட உங்களுக்குப் போதுமானது. ஆறு ஏழு எட்டு மணிநேரமெல்லாம் தேவைப்படாது. இரண்டு டிகிரி தட்பவெப்பம் இருக்கும். அந்த இரண்டு மணிநேரத்தில் நீங்கள் தூங்கிவிட்டால் உங்களுக்கு மிகவும் மகிழ்ச்சியாகவும் நிம்மதியாகவும், முழுநாளும் நீங்கள் அருளை உணர்வீர்கள். அமைதி, ஆரோக்கியம், முழுமை, நல்வாழ்வு அனைத்தையும் உணர்வீர்கள்.

ஒவ்வொருவரும் தங்களுக்கு அந்த இரண்டு மணி நேரம் எப்போது வருகிறது என்று பார்த்துக்கொள்ள வேண்டும். வெளியிலிருந்து வரும் எந்தக் கட்டுப்பாட்டையும் நீங்கள் ஏற்றுக்கொள்ளக் கூடாது. ஏனென்றால் அதை யார் உருவாக்கினார்களோ அவர்களே அவர்களுக்கு அது நல்லதாயிருக்கக்கூடும். வினோபா காலையில் மூன்று மணிக்கு எழுந்திருக்கிறார். அவருக்கு அது பொருத்தமாக இருந்திருக்க வேண்டும். அவருடைய முழு ஆசிரம வாசிகளும் மூன்று மணிக்கு எழுந்திருக்கிறார்கள். ஆனால் அவர்கள் முழுநாளும் மந்தமாகக் காட்சியளிக்கிறார்கள். அவரது ஆசிரமவாசிகளை நான் பார்த்திருக்கிறேன்–மந்தமானவர்கள்! அவர்கள் இப்படி ஒரு சாதாரணமான கட்டுப்பாட்டைக்கூடத் தங்களால் கடைப்பிடிக்க முடிய வில்லை என்று நினைக்கிறார்கள். அப்புறம் அவர்கள் குற்றவுணர்ச்சி கொள்கிறார்கள். அவர்கள் கடுமையாக

முயல்கிறார்கள். அவர்களால் வெல்ல முடியவில்லை. அப்புறம் அவர்கட்கு வினோபா மிகவும் விதிவிலக்கான ஒருவராக; மகத்தானவராகக் காட்சியளிக்கிறார். அவர் ஒருபோதும் மந்தமாக இல்லை. ஆனால் அது எளிதாக அவருக்குப் பொருந்துகிறது. அவ்வளவுதான்!

உங்கள் உடலை நீங்கள் கண்டுபிடிக்க வேண்டும். அந்த வழி, எது பொருந்துகிறது-என்றெல்லாம் கண்டுபிடித்து அது உங்களுக்குச் சரியானது என்பதை உணர வேண்டும்.

அதை நீங்கள் கண்டுபிடித்து விட்டால்போதும், அதை அப்படியே அனுமதிக்கலாம், அதற்கப்புறம் எதுவும் திணிக்கப்பட முடியாது. உடலின்இயக்கத்தை ஒட்டியதாக அது அமைந்துவிடுகிறது. அதனால் உடலின்மீது எதுவும் திணிக்கப்படவில்லை. எதுவும் போராட்டமில்லை. எந்த முயற்சியும் இல்லை. கவனியுங்கள், சாப்பிடும்போது உங்களுக்கு எது பொருந்துகிறது? மக்கள் எல்லாவகை உணவுகளையும் சாப்பிட்டுக் கொண்டே இருக்கிறார்கள். அப்புறம் அவர்கள் தொல்லைப்படுகிறார்கள். அவர்கள் மனம் பாதிக்கப்படுகிறது. ஒருபோதும் எவருடைய கட்டுப் பாட்டையும் பின்பற்றாதீர்கள். ஏனென்றால் ஒருவருமே உங்களைப் போல் இல்லை. ஆனால் உங்களுக்கு எது பொருந்தும் என்று எவரும் சொல்ல முடியாது.

அதனால்தான் நான் உங்களுக்கு ஒரே ஒரு கட்டுப் பாட்டைத் தான் சொல்கிறேன், சொந்த விழிப்புணர்ச்சி, அது சுதந்திரமானதாகும். உங்கள் உடலைக் கவனித்துக் கேளுங்கள். உடலுக்கு மகத்தான ஞானம் உள்ளுக் குள்ளேயே இருக்கிறது. அதைக் கவனித்துக் கேட்டால் நீங்கள் எப்போதும் சரியாகத் தான் இருப்பீர்கள். நீங்கள் அதைக் கவனிக்காவிட்டால் மேலும் வற்புறுத்திக் கொண்டே சென்று கொண்டிருந்தால், நீங்கள் ஒருபோதும் மகிழ்ச்சியோடு இருக்கமாட்டீர்கள். நீங்கள் துயரமா

யிருப்பீர்கள், நோயுற்றிருப்பீர்கள். நிம்மதியிழந்திருப்பீர்கள். எப்போதும் இடைஞ்சலுக்கு ஆளாகியிருப்பீர்கள், கவனம் சிதறியிருப்பீர்கள், கலக்கத்தோடு இருப்பீர்கள்.

இது ஒரு மிக நீண்ட பரிசோதனையாக இருந்திருக்கிறது. எல்லாவகையான உணவுகளையும் நான் உண்டிருக்கிறேன். அப்புறம் வெகுவிரைவில் எனக்குப் பொருந்தா வற்றை யெல்லாம் விலக்க ஆரம்பித்துவிட்டேன். இப்போது எனக்கு எது பொருந்துகிறதோ அதைத்தான் உண்கிறேன். விவேக் மிகவும் சிரமத்தில் இருக்கிறான். ஒவ்வொரு நாளும் ஒரே விதமான உணவைத்தான் பெரும்பாலும் சமைக்க வேண்டியிருக்கிறது. நான் எப்படி அதையே மகிழ்ச்சியோடு சாப்பிட்டுக் கொண்டு இருக்கின்றேன் என்று அவனால் நம்பவே முடியவில்லை. சாப்பிடுவது சரி! மகிழ்வது- எப்படி? அது பொருந்துமானால் நீங்கள் மீண்டும் மீண்டும் மகிழ்ச்சி அடையலாம்-ஒரே விஷயத்தையே- திரும்பத் திரும்ப உண்டாலும், இது உங்களுக்குத் திரும்பச் செய்தல் அல்ல-அது பொருந்தவில்லையென்றால்-ஆம்-அது தொல்லைதான்! இது நடந்தது:-

ஒரு வியாழக்கிழமை இரவு. முல்லா நசிருதீன் இரவு உணவுக்கு வீட்டுக்கு வந்தார். அவரது மனைவி வேக வைத்த அவரை விதைகளைப் பரிமாறினாள். அவரை விதைத் தட்டைச் சுவர்மீது எறிந்துவிட்டுக் கோபத்தோடு கத்தினார். "சீ! வேகவைத்த அவரை விதைகளை வெறுக்கிறேன்" என்று அலறினார்.

"முல்லா, உங்களைப் புரிந்துகொள்ளவே முடிய வில்லையே. திங்கள் இரவு அவரை விதை பிடித்தது; செவ்வாய் இரவு பிடித்தது, புதன் இரவு பிடித்தது; இப்போது வியாழன் இரவு! எல்லாம் தலைகீழ் மாற்றம்! அவரைவிதையை வெறுக்கிறீர்கள்! இது மிகவும் சஞ்சலம்!"

பொதுவாக, ஒவ்வொருநாளும் ஓரே உணவை நீங்கள் சாப்பிட முடியாது. காரணம், ஓரே உணவு என்பதால் அல்ல, அது உங்களுக்குப் பொருந்தவில்லை என்பதனால் தான். ஒரு நாள் நீங்கள் பொறுத்துக் கொள்ளலாம். இரண்டாம் நாள் அது மிகவும் மிகையாகி விடுகிறது. எப்படி அதை ஒவ்வொரு நாளும் உங்களால் பொறுத்துக்கொள்ள முடியும்? அது உங்களுக்கு ஒத்துக்கொண்டு விட்டால் பிரச்சினையே இல்லை. உங்கள் முழுவாழ்க்கையையும் அதிலேயே வாழ்ந்துவிடலாம். ஒவ்வொரு நாளும் அதை மகிழ்ச்சியாகக் கொண்டாடவும் செய்யலாம். ஏனென்றால் அந்த அளவுக்கு அது இணக்கத்தை அளிக்கிறது உங்களுக்கு. அது உங்களுக்கு அப்படியே பொருந்துகிறது; அது உங்களுக்கு ஒத்துப் போகிறது. நீங்கள் மூச்சுவிடுகிறீர்கள். அதே மூச்சுத்தான்; நீங்கள் குளித்துக் கொண்டே இருக்கிறீர்கள்; அதே தண்ணீர்தான். நீங்கள் தூங்கிக் கொண்டிருக்கிறீர்கள்; அதே தூக்கம்தான். ஆனால் அது உங்களுக்குப் பொருந்துகிறது. அப்பொழுது எல்லாம் நல்லதுதான்; அது திரும்பச் செய்தல் ஆகவே ஆகாது; திரும்பச் செய்தல் என்பது உங்கள் மனப்பான்மை. /இயற்கையுடன் முழுமையாக இணக்கத்தோடு நீங்கள் வாழ்வீர்களானால் சென்றுவிட்ட நேற்று பற்றிய கவலை உங்களுக்குத் தேவையில்லை. நீங்கள் உங்கள் மனத்தில் அதைச் சுமக்கத் தேவையில்லை. உங்கள் இன்றோடு, உங்கள் நேற்றுகளை ஒப்பிடாதீர்கள். உங்கள் நாளைகளை முன்கூட்டியே கொண்டுவராதீர்கள். சும்மா இயல்பாக, இப்போது இங்கே வாழுங்கள்; இந்தக் கணத்தை மகிழ்ச்சியாகக் கொண்டாடுங்கள்.]

மகிழ்ச்சியடையும் கணங்கள் என்பது புதிய விஷயங்களோடு எந்தத் தொடர்பும் இல்லாதது. மகிழ்ச்சி என்பது இணக்கத்துடன் குறிப்பாகவும் நிச்சயமாகவும் ஏதோ ஒருவகையில் தொடர்புடையது. ஒவ்வொரு நாளும் புதிய

விஷயங்கள் மாறிக் கொண்டே போக முடியும். ஆனால் அவை பொருந்தாவிட்டால் அங்குமிங்கும் அலைபாய்ந்து கொண்டே தான் இருக்க வேண்டுமே தவிர, ஒருபோதும் ஓய்வு காணமுடியாமல் போய்விடும்.

ஆனால் /நான் எதைச் செய்தாலும் அது என்மேல் திணிக்கப்படுவதில்லை. இயல்பாகத் தானாகவே நடை பெறுகிறது. என் உடலின் தேவைகளை வெகுவிரைவில் நான் அறிந்து கொண்ட கதை இதுதான். என் மனதை ஒருபோதும் நான் என் உடல்மீது திணிக்கமாட்டேன். அதே போலவே நீங்களும் செய்தால் நீங்கள் மிகவும் மகிழ்ச்சிகரமானதும், பேரின்பமயமானதுமான வாழ்வை அடைவீர்கள்/

அருளற்ற அக்கறைபற்றிய அதிக அருளுடைய பேச்சு. இதே முறையில் புத்தரின் பேச்சைக் கேட்டோரும் பயன் அடைந்திருப்பார்களா என்று வியப்படைகிறேன்.

அது கேட்போரைப் பொருத்தது. புத்தருக்கோ அல்லது எனக்கோ அது பற்றிச் சம்பந்தமில்லை. அது கேட்போரைப் பொருத்தது தான். என்னோடு ஒத்த கருத்து உடையவராய் இருந்தால், நீங்கள் அருளை உணர்கிறீர்கள்; புத்தரோடு ஒத்த கருத்துடையவராக இருந்தால் அப்போதும் அருளை உணர்கின்றீர்கள். நீங்கள் ஒத்த கருத்துடையவராக இருக்க வேண்டுமென்பது தான் விஷயம். வேறெதுவும் பிரச்சினை இல்லை.

நீங்கள், மிகுந்த தர்க்கரீதியான மனதோடு என் பேச்சைக் கேட்க முடியும். அப்போது நீங்கள் துயரம் கூடப் படலாம். ஏற்கெனவே குவித்து வைத்துக்கொண்ட அறிவுடன் நீங்கள் கேட்கலாம். அதனால் இடைஞ்சல் அடையலாம். நீங்கள் அறிந்து கொண்டிருப்பவற்றோடு நான் முரண்பட்டால் நீங்கள் இடைஞ்சல் அடைவீர்கள்.

அல்லது என்னுடைய விவாதப்போக்கிலேயே நீங்கள் கேட்கலாம். அப்பொழுது இங்கே நான் பேசிக்கொண்டிருக்கிறேன். நீங்கள்கூட உங்கள் மனதிற்குள்ளே பேசிக் கொண்டிருப்பீர்கள். முரண்பட்டுக் கொண்டிருப்பீர்கள்; ஆம் என்பீர்கள், இல்லை என்பீர்கள், விவாதிப்பீர்கள். அப்போது அருள் இருக்காது. நீங்கள் சும்மா கேட்டுக் கொண்டிருந்தால் உங்கள் அறிவு ஒரு பக்கத்தில் ஓரங்கட்டப்படுகிறது. இனியராகம் பாடும் ஓர் இசைக் கருவியைக் கேட்பதுபோல் என்னைக் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள் என்றால் மரங்களை ஊடுருவிச் செல்லும் காற்றின் ஒலியைக் கேட்டு இன்புறுவது போல் கேட்டுக் கொண்டிருந்தால், நிலத்தில் விழும் இலைச்சருகுகளின் ஒலியைக் கேட்பதுபோல் கேட்டுக் கொண்டிருந்தால், என்னோடு ஒத்திசைவோடு இருந்தால், அருள் பொங்கி எழும். அதனால்தான் சொல்கிறேன் எல்லாம் கேட்போரைப் பொருத்தது என்று.

நீங்கள் என்ன கேட்கிறீர்கள் என்பதும் கேட்பவரைப் பொருத்தது தான். நான் என்ன சொல்கிறேன் என்பது முக்கியமானது அல்ல, முக்கியமான விஷயம் என்ன தெரியுமா? நீங்கள் என்ன கேட்கிறீர்கள் என்பதுதான். அது ஒரே விஷயமாகத் தான் இருந்தாக வேண்டும் என்று கட்டாயமில்லை. நான் ஏதோ ஒன்று சொல்லிக் கொண்டிருப்பேன். நீங்கள் ஏதோ ஒன்று கேட்டுக் கொண்டிருப்பீர்கள்.

நான் கேட்டிருக்கிறேன்.

வியாபாரச் சந்தையிருக்கும் ஓர் ஊருக்குச் செல்லும் பாதை.. நெருக்கடியான கூட்டம் மிகுந்துள்ள நேரம். இரண்டுபேர்கள் அவ்வழியில் நடந்து கொண்டிருந்தார்கள். திடீரென்று ஒருவர் வியந்து "ஆகா! என்ன அழகான ஒலி! எங்கோ சில்வண்டின் ஒலி!" என்று கூறினார். இன்னொரு

வரால் அந்த ஒலியைக் கேட்க முடியவில்லை. 'இந்த மக்கள் சந்தடியிலும் கூட்ட நெருக்கடியிலும் எப்படித் தான் நீ சில்வண்டிகள் ஒலியைக் கேட்க முடிகிறதோ' என்று ஆச்சரியப்பட்டுப் போனார்கள்.

முதல் நபர், ஒரு உயிரியலாளர், அவர் இயற்கையில் எழும் ஒலிகளையெல்லாம் கவனித்துப் புரிந்து கொள்ளும் அளவுக்குப் பயிற்சி பெற்றிருக்கிறார். ஆனால் அது பற்றி இரண்டாம் நபரிடம் எதையும் விளக்கவில்லை. ஆனால் தன் பையிலிருந்து ஒரு நாணயத்தைக் கையிலெடுத்துக் கீழே போட்டார், அது நடைபாதையில் விழுந்தபோது பன்னிரண்டு பேர்கள் அதைப் பார்த்தார்கள்.

'நாம் கேட்க நினைப்பதைக் கேட்கிறோம்' நிலத்தில் விழுகின்ற ரூபாய் நாணயத்தின் ஒலியை மட்டுமே கேட்க முடியக்கூடிய மக்கள் இங்கே உள்ளனர். அதுதான் அவர்கட்கு இசை, பாவப்பட்ட மக்கள்! அவர்கள் தாங்கள் பணக்காரர்கள் என்று நினைக்கிறார்கள். ]நாணயத்தின் ஒலிமட்டும் தான் அவர்களது முழுமையான இசை ஆகும். மிகவும் ஏழைமக்கள்;/ பட்டினியோடு இருப்பவர்கள். அவர்கள் வாழ்க்கை என்றால் என்னவென்று தெரியாதவர் கள். உங்களைச் சுற்றிலும் உள்ள எல்லையற்ற இன்னிசை பற்றி அவர்களுக்குத் தெரியாது-அது பலபரிபாணமுள்ள பணக்காரத்தன்மை. நீங்கள் எதைக் கேட்க விரும்புகிறீர் களோ அதைத்தான் நீங்கள் கேட்கிறீர்கள்.

ஒத்த கருத்தை நீங்கள் கேட்டால், என்னோடு ஆழமான இணைப்பு இருந்தால், அருள் நிகழும். ஒரு புத்தர், ஓர் இயேசு, ஒரு கிருஷ்ணன் இந்தப் பூமியில் நடக்கும் போதெல்லாம் அவரோடு கூட தைரியத்துடன் நடப்பவர் கள் எல்லோருக்கும் எப்போதும் அருள் நிகழ்ந்து கொண்டே இருந்தது.

நீங்கள் என்னோடு ஒத்த கருத்து உடையவர்களாக இருந்தால், அப்போது நீங்கள் பூர்த்தி செய்யப்படுவீர்கள். நான் ஏதோ ஒன்றை உங்களுக்குள் ஊற்றிக் கொண்டிருக்கிறேன். நீங்கள் உங்கள் இதயத்தைத் திறக்கவில்லையென்றால், நான் உங்களைப் பூர்த்தி செய்ய முடியாது. என்னால் நிரப்ப முடியாது. ஆனால் விரைவிலேயே உங்கள் இதயத்தை நீங்கள் திறந்தால், நீங்கள் நிரம்பி வழிந்து விடுவீர்கள். அந்த நிரம்பிவழிதல், உங்களைச் சேற்றிலே முளைத்த செந்தாமரையாக ஆக்கிவிடும்.

/தாமரை என்பது வேறொன்றுமில்லை. அது ஒரு நிரம்பி வழியும் சக்தி. ஆகவே நாம் எதையும்விட அதிகமாகத் தாமரையை மிகவும் மதித்திருக்கிறோம். முழுமையான வளர்ச்சியின் அடையாளமாக அது இருக்கிறது. உங்கள் இருத்தலில் உள்ள கடைசி மையத்தை நாம் ஹஸ்ரார்-ஆயிரம் இதழ்த் தாமரை-என்று அழைக்கிறோம். பாலியல் என்பது மிகக் கீழான மையம் ஆகும்; ஆயிரம் இதழ்த் தாமரை அல்லது க்ஷஸ்ரார் என்பது மிக உயர்ந்தது ஆகும். பாலியலால் நீங்கள் இயற்கையுடன் ஒன்றுகிறீர்கள். ஆயிரம் இதழ்த்தாமரையால் நீங்கள் கடவுளுடன் இசைந்து விடுகிறீர்கள் அல்லது முழுமையுடன் இணைகிறீர்கள். சேற்றிலிருந்து நகருங்கள், சேற்றைக் கடந்து செல்லுங்கள், நம்புங்கள், பிரார்த்தியுங்கள், தாமரை உங்களுக்குள் திறந்து மலர்வதற்காகக் காத்திருங்கள்/

அது சாத்தியம்தான். நீங்கள் என்னுடன் இருக்கும் இந்தக் கணங்கள் மகத்தான தாக்கம் உடையவை ஆகும். ஆனால் நீங்கள் எதைக் கேட்க விரும்புகிறீர்களோ அதைத் தான் கேட்க முடியும்.

புத்தர் கூறுகிறார்:

ஒரு மனிதன் கெட்ட செயல்கள் செய்பவன் என்றால் பச்சாதாபமில்லை, மற்றும் தீய இதயத்தைத் தூயதாக்குவதில்லை என்றால் தகுந்த தண்டனை வந்துதான் தீரும் அவன் மீது, கடலுக்குள்ளே நதிகள் கலப்பது போலே ஆகும் எப்போதும்! அகலமாகவும் ஆழமாகவும் ஆகும் எப்போதும் ஒரு மனிதன் கெட்டசெயல்கள் செய்பவன் என்றால் அதைப்பற்றி அவன் அறிய வந்துவிட்டால் தன்னைச் சீர்திருத்தி நல்லதைச் செய்து தண்டனையின் ஆற்றல் தானே நவிந்திடும் படிப்படியாய், நோயொன்று தனது கடுஞ்செல்வாக்கை நோயாளி வேர்த்தால் இழந்துவிடுமே!

புத்தர் கூறுகிறார்:

தீயது செய்பவன், தூயது செய்யும் உன்னைக் கண்டால் வருகிறான்; உங்களை வெறுத்துப் புண்படுத்துகிறான் பொறுமையுடன் நீயே சகித்துக் கொள்க! அவனிடம் கோபம் கொள்ள வேண்டாம். தீயது செய்பவன் தனக்குத்தானே புண்படுத்திக் கொள்கிறான், உன்னைப் புண்படுத்துவதன் மூலம்!

புத்தர் கூறுகிறார்:

ஒரு மனிதன் என்னிடம் வந்து கண்டித்தான் என்னை; நல்வழியில் நடந்து செல்வதனிலே மாபெரும் நேசக் கனிவினைக் கடைப்பிடிப்பதனால்.

ஆயினும் நானே அமைதி காத்தேன்! பதிலளிக்கவில்லை! கண்டனம் நின்றது. அப்பொழுது அவனிடம் நான் கேட்டேன். "அயலான் ஒருவனுக்கு அளித்தால், அவன் அதை மறுத்துவிட்டால், அன்பளிப்பு உன்னிடம் திரும்பிவருமா?" அவன் பதிலளித்தான் 'ஆம் வரும்' என்று! 'கண்டித்தாய் என்னை நான் அதை ஏற்காததனால் நீ நிச்சயம் திருப்பி உன் மீது எடுத்துக் கொள்ளவேண்டும்' என்றேன் நான்! எதிரொலி தொடர்ந்து ஓடி ஓடி வருவதுபோல், ஒரு பொருள்தனை நிழல் தொடர்வது போல் ஒருபோதும் நீ தப்ப முடியாதுன் தீயசெயல் விளைவிலிருந்து! ஆகவே கவனமாய் இரு, தீமை செய்யாது விலகி இரு!



மனிதன் ஒரு கூட்டம், பல குரல்களின் கூட்டம். பொருத்தமாய், பொருத்தமற்றதாய், நிலையானதாய், நிலையற்றதாய் ஒவ்வொரு குரலும் ஒவ்வொரு சொந்த வழியில் இழுக்கிறது. எல்லாக் குரல்களும் மனிதனைத் தனியே இழுக்கின்றன. சாதாரணமாக மனிதன் ஒரு குழப்பம். உண்மையில் ஒரு வகையான பைத்தியம். நீங்கள் எப்படியோ சமாளிக்கிறீர்கள். நீங்கள் எப்படியோ சரியான மனநிலையில் இருப்பது போலச் சமாளிக்கிறீர்கள்.

ஆழமான கீழடுக்குகள் மற்றும் பைத்திய அடுக்குகளும் சேர்ந்து உங்களுக்குள் கொதித்துக் கொண்டிருக்கின்றன. எந்தக் கணத்திலும் வெடித்துச் சிதறக்கூடும்! உங்கள் கட்டுப்பாடு எந்தக் கணமும் போய்விடலாம். ஏனென்றால்

உங்கள் கட்டுப்பாடு சுயமானதல்ல. வெளியிலிருந்து திணிக்கப்படுவது. உங்கள் இருத்தலின் மையத்திலிருந்து வரும் கட்டுப்பாடு இல்லை அது.

சமூகக் காரணங்களுக்காக, பொருளாதாரக் காரணங் களுக்காக, அரசியல் காரணங்களுக்காக, நீங்கள் ஒரு குறிப்பிட்ட நடத்தையை உங்கள் மீது திணித்துக் கொள் கிறீர்கள். ஆனால் முக்கிய உயிர்கள், ஆற்றல்கள் உங்களுக் குள் உள்ள பண்புக்கு எதிராக உள்ளன. அவை தொடர்ச் சியாக உங்கள் பண்பை நாசமாக்குகின்றன. ஆகவே ஒவ்வொரு நாளும் பல பிழைகளைப் பல தவறுகளைச் செய்து கொண்டே செல்கிறீர்கள். சில சமயங்கள்கூட, ஒருபோதும் நீங்கள் செய்ய விரும்பவில்லை என்று உணர்கிறீர்கள். நீங்களே இருந்தபோதிலும் நீங்கள் பல தவறுகளைச் செய்து கொண்டே செல்கிறீர்கள்– ஏனென்றால், நீங்கள் ஒருவரல்ல! பலர்!

புத்தர் இந்தத் தவறுகளையெல்லாம் பாவங்கள் என்று அழைக்கவில்லை. அவற்றைப் பாவம் என்று அழைத்தால் உங்களைச் சபிப்பது போல் இருக்கும். அவர் அவைகளைச் சும்மா கெட்ட செயல்கள் என்று தான் கூறுகிறார்; ஆம் அவை தவறுகள், பிழைகள் அவ்வளவுதான். தவறு செய்வது மனிதன் இயல்பு; தவறு செய்யாமல் இருப்பது தெய்விகம். முழுக்கவனத்தின் மூலமாகத்தான் மனிதன் தன் இயல்பிலிருந்து தெய்விகத்திற்குச் செல்ல முடியும். உங்களுக்குள் உள்ள இந்தக் கவனத்தின் மூலம் உங்களை நீங்கள் துன்புறுத்திக் கொள்வதை, இழுத்துக் கொள்வதைத் தள்ளிக் கொள்வதை நீங்கள் நிறுத்தமுடியும். நீங்கள் முழுக் கவனம் உடையவராய் இருந்தால் இந்தப் பல குறைகள் மறைந்து விடும்.

முழுக்கவனம் உள்ள மனநிலையில் தவறுகள் செய்யப் படுவதில்லை. நீங்கள் அவற்றைக் கட்டுப்படுத்துகிறீர்கள் என்பது இல்லை, ஆனால், உங்கள் முழுக்கவன மனநிலை

யிலும்- விழிப்புணர்வு நிலையிலும் உஷார் நிலையிலும்- குரல்கள்-பலகுரல்கள் நின்றுவிடும். நீங்கள் அப்படியே ஒன்று ஆகிறீர்கள். உங்களிடமிருந்து வருவது எதுவோ அது, உங்கள் இருத்தலின் மிக்க மையப்பகுதியிலிருந்து வருகிறது. அது ஒருபோதும் தவறில்லை. இந்த வாய்பாடுகளுக்குள் நாம் நுழைவதற்கு முன்பு இது புரிந்து கொள்ளப்பட வேண்டும்.

நவீன மனித சக்தி இயக்கத்தில், இதைப்புரிந்து கொள்வ தற்கு ஓர் இணை உள்ளது. குறுக்கு வெட்டு ஆராய்ச்சிப் பகுப்பு இதனை பெ.வ.கு என்றும் முக்கோணம் என்று அழைக்கின்றனர். பெ-பெற்றோரைக் குறிக்கும்; வ-வயது வந்தவரைக் குறிக்கும். கு-குழந்தையைக் குறிக்கும். இவை உங்கள் மூன்று அடுக்குகள், மூன்று அடுக்குக்கட்டிடம் போன்று!

முதல் தளம் குழந்தை, இரண்டாம் தளம் பெற்றோர். மூன்றாம் தளம், வயது வந்தவருடையது; இவை மூன்றும் சேர்ந்து ஒன்றாய் இருக்கின்றன.

இது உங்கள், உள்ளார்ந்த முக்கோணமும், முரண்பாடும் ஆகும். உங்கள் குழந்தை ஒன்றைச் சொல்கிறார்கள். உங்கள் பெற்றோர் மற்றொன்றைச் சொல்கிறார்கள், உங்கள் வயது வந்தவர், பகுத்தறியும் மனம், வேறொன்றைச் சொல்கிறது. குழந்தை 'அனுபவி' என்கிறது. ஏனென்றால் குழந்தைக்குக் கணம் என்பது-கணம் மட்டும்தான். அதற்கு வேறு எந்தப் பரிசிலனையும் இல்லை. குழந்தை இயல்பானது. ஆனால் பின்விளைவுகள் பற்றி அறியாதது. இறந்த காலம் பற்றி அறியாதது; எதிர்காலம் பற்றி அறியாதது; குழந்தை இந்தக் கணத்தில் வாழ்கிறது. குழந்தைக்கு மதிப்பீடுகள் இல்லை. முழுக்கவனமோ, விழிப்புணர்ச்சியோ இல்லை. 'உணரும் கோட்பாடுகளைத்தான் குழந்தை கொண்டுள்ளது. அது உணர்ச்சி மூலம் வாழ்கிறது. அவரது முழு இருத்தலும் பகுத்தறிவற்றது.

உண்மையில், பிறருடன் குழந்தை பல முரண்பாடு களைக் கொள்கிறது. அதற்குள்ளேயே தனக்குத்தானே ஒரு குழந்தை பல முரண்களைக் கொண்டுள்ளது. ஏனென்றால் ஒரு உணர்ச்சி ஒன்றைச் செய்ய உதவுகிறது. அப்புறம் உடனடியாக அது அடுத்த உணர்ச்சியை உணரத் தொடங்கி விடுகிறது.

ஒரு குழந்தையால் எதையும் ஒருபோதும் முழுமையாக்க முடியாது. அதற்குள்ளாகவே இன்னொரு உணர்ச்சி கொள்ளத் தொடங்கி விடுகிறது. அது பல விஷயங்களைத் தொடங்கிவிடுகிறது. ஆனால் ஒருபோதும் ஒரு முடிவுக்கும் வருவதில்லை. ஒரு குழந்தை முடிவுக்கு வராமலே இருந்து விடுகிறது. அது அனுபவிக்கிறது, மகிழ்கிறது. அதன் மகிழ்ச்சி அனுபவம் படைப்பாற்றல் உடையதல்ல. படைப் பாற்றல் உடையதாக இருக்க முடியாது. அது குதூகலிக் கிறது. ஆனால் வாழ்க்கையைக் குதூகலத்தின் மூலம் மட்டுமே வாழ்ந்துவிட முடியாது. எல்லாக் காலத்திற்கும் உங்களால் குழந்தையாகத் தங்கிவிட முடியாது. நீங்கள் பல விஷயங்களைக் கற்றாக வேண்டும். ஏனென்றால், இங்கே நீங்கள் தனிமையில் இருக்கவில்லை.

நீங்கள் தனிமையில் இருந்தால் ஒரு கேள்வியும் இருக்க முடியாது. எல்லாக் காலத்திற்கும் நீங்கள் குழந்தையாகத் தங்கியிருந்திருக்கலாம். ஆனால், சமூகம் இருக்கிறது. கோடிக்கணக்கான மக்கள் இருக்கிறார்கள். நீங்கள் பல விதிமுறைகளைப் பின்பற்ற வேண்டியிருக்கிறது. நீங்கள் பல நற்குணங்களைப் பின்பற்ற வேண்டியிருக்கிறது. இல்லாவிட்டால் வாழ்க்கையே அசாத்தியம் ஆகும் அளவுக்கு மிகுந்த முரண்பாடுகள் ஏற்பட்டு விடும். குழந்தை கட்டுப்படுத்தப்பட வேண்டும். அங்குத்தான் பெற்றோரின் பங்கு வருகிறது.

உனக்குள் இருக்கும் பெற்றோரியல் குரல் சமூகத்தின் குரலாகும். கலாச்சாரத்தின் நாகரிகத்தின் குரலாகும்.

நீங்கள் தனிமையாக இல்லாத இந்த உலகத்தில் அந்தக் குரல் உங்களை வாழச் செய்யும்.

தங்களுக்குத் தாங்களே முரண்படுகின்ற ஆசைகளை யுடைய பல தனி நபர்கள், வாழ்வதற்கு அதிக போராட்டம் இருக்கும் இடத்தில், மிகுந்த முரண்பாடு இருக்கும் இடத்தில், அந்தக் குரல் உங்களை வாழச் செய்யும்.

நீங்கள் உங்கள் பாதையை அமைத்துக் கொள்ள வேண்டும். மிகவும் எச்சரிக்கையுடன் உங்கள் பயணத்தை நீங்கள் தொடர வேண்டும்.

பெற்றோரியல் குரல் என்பது எச்சரிக்கையுடையதாகும். அது உங்களை நாகரிகப் படுத்துகிறது. குழந்தை முரட்டுத்தனமானது, ஆனால் பெற்றோரியல் குரல் உங்களை நாகரிகமாக்க உதவுகிறது. 'நகரியல்' என்னும் சொல் நல்லது; ஒரு மனிதன் நகரில் வாழும் தகுதி அடைந்துவிட்டான் என்பது அதன் பொருள். அவன் சமூகத்தில் உள்ள குழுவில் உறுப்பினன் ஆகும் தகுதி உடையவன் என்பது அதன் பொருள்.

குழந்தை மிகவும் சர்வாதிகாரமுடையது. குழந்தை உலகத்தில் மையம் என்று தன்னை நினைக்கிறது. நீங்கள் உலகத்தின் மையம் இல்லை என்று பெற்றோர் கற்றுக் கொடுக்க வேண்டும். ஒவ்வொருவரும் அப்படித்தான் சிந்திக்கிறார்கள். உலகத்தில் ஏராளமான மக்கள் இருக்கிறார்கள் என்று பெற்றோர் மேலும் மேலும் மிகுதியாக உஷார்ப்படுத்திக் கொண்டே இருக்கவேண்டும். நீங்கள் தனிமையில் இல்லை என்று எச்சரிக்க வேண்டும். அவர்களால் நீங்கள் கருதப்படவேண்டும் என்று நீங்கள் விரும்பினால், நீங்கள் அவர்களைக் கருதுதல் வேண்டும்.

இல்லாவிட்டால் நீங்கள் நசுக்கப்படுவீர்கள். இது வாழ்க்கையின், கொள்கையின், அரசியலின் ஒரு கூர்மையான பிரச்சினையாகும். பெற்றோரியல் குரல்,

உனக்குக் கட்டளைகளைக் கொடுக்கிறது. என்ன செய்ய வேண்டும், என்ன செய்யக்கூடாது அது ஆணையிடுகிறது. உணர்ச்சி சும்மா குருட்டுத்தனம் ஆக்குகிறது. பெற்றோர் உங்களை எச்சரிக்கையுடையவர் ஆக்குகிறார். அது தேவைப்படுகிறது.

உங்களுக்குள் ஒரு மூன்றாவது குரல் உள்ளது. அதாவது மூன்றாவது அடுக்கு அது; நீங்கள் ஒரு வயது வந்தவராக இருந்தால், நீங்கள் உங்கள் பெற்றோரால் கட்டுப்படுத்தப் படுவதில்லை. உங்களுக்குச் சொந்தப் பகுத்தறிவு உங்கள் வயதால் வந்துள்ளது; நீங்கள் சொந்தமாகச் சிந்திக்கலாம்.

உணரும் கோட்பாடுகளைக் கொண்டது குழந்தை. பெற்றோர் என்பது கற்பிக்கப்பட்ட கோட்பாடுகள். வயது வந்தவர் என்பது சிந்தனைக் கோட்பாடுகளைக் கொண்டது. இந்த மூன்று அடுக்குகள், தொடர்ச்சியாக போராடிக் கொண்டிருக்கின்றன.

குழந்தை ஒன்றைச் சொல்கிறது; பெற்றோர் அதற்கு நேர் எதிர்மாறானதைச் செய்கிறார்; பகுத்தறிவு என்பது முற்றிலும் வேறுபட்டு ஏதாவது ஒன்றைச் செய்கிறது.

நீங்கள் அழகிய உணவைப் பார்க்கிறீர்கள். எவ்வளவு விரும்புகிறீர்களோ அவ்வளவு அதிகமாகச் சாப்பிடுங்கள் என்று குழந்தை சொல்கிறது.

பல விஷயங்கள் பரிசீலிக்கப்பட வேண்டும் என்று பெற்றோரியல் குரல் கூறுகிறது. நீங்கள் உண்மையாகவே பசியாக இருக்கிறீர்களா, அல்லது உணவின் மணம், உணவின் சுவை உங்களை மயக்குகிறதா? இந்த உணவு உண்மையிலேயே சத்து நிறைந்ததா? உங்கள் உடலை அது வளரச் செய்யுமா? அல்லது அதனால் தீமை நேர்ந்து விடுமா? காத்திருங்கள். கவனியுங்கள். அவசரப்படாதீர்கள். அதன்பிறகு பகுத்தறியும் மனம், வயது வந்த மனம், முற்றிலும் வேறுபட்ட ஏதாவதொன்றைச் சொல்லக் கூடும்.

உங்கள் வயது வந்த மனம் உங்கள் பெற்றோருடன் ஒத்துப்போக வேண்டும் என்று அவசியம் இல்லை. உங்கள் பெற்றோர் எல்லாம் அறிந்தவர்கள் இல்லை. உங்களைப் போலவே அவர்களும் தவறு செய்யக்கூடிய மனிதர் களாகத் தான் இருந்தார்கள். அவர்களின் சிந்தனையில் பல தடவைகள் சந்து பொந்துகளைக் காண்பீர்கள். பல தடவைகளில் நீங்கள் மிகவும் பிடிவாதமான சித்தாந்தவாதி களாக, மூடநம்பிக்கையாளர்களாக, முட்டாள்தனமான வற்றில் நம்பிக்கையுடையவர்களாக, பகுத்தறிவற்ற கொள்கையுடையவர்களாகக் காட்சியளிக்கிறீர்கள்.

உங்கள் வயது வந்தவர் அப்படி இல்லை என்று சொல்கிறார். உங்கள் பெற்றோர் 'இதைச் செய்யுங்கள்' என்று சொல்கிறார். உங்கள் வயது வந்தவர். அது செய்யத் தகுதியற்றது' என்று சொல்கிறார். உங்கள் குழந்தை உங்களை வேறெங்கோ இழுத்துக் கொண்டு செல்கிறது. இதுதான் உங்களுக்குள் உள்ள முக்கோணம் ஆகும்.

நீங்கள் குழந்தையின் பேச்சைக் கேட்டால் உங்கள் பெற்றோருக்கும் கோபம் வரும். ஆகவே ஒரு பகுதி நல்லதை உணர்கிறது. நீங்கள் எவ்வளவு விரும்புகிறீர்களோ அவ்வளவு அதிகமாக ஐஸ்கிரீம் சாப்பிட்டுக் கொண்டே போகலாம். ஆனால் உங்கள் உள்ளிருக்கும் பெற்றோர் குற்றவுணர்ச்சி பெறுகிறார்கள். உங்களின் ஒரு பகுதி கண்டிக்கத் தொடங்குகிறது. அதன் பின்பு நீங்கள் குற்றவுணர்வு கொள்கிறீர்கள். நீங்கள் உண்மையிலேயே குழந்தையாய் இருந்தபோது எழுகின்ற குற்றவுணர்ச்சி இப்போதும் எழுகிறது. நீங்கள் இப்போது குழந்தையில்லை- ஆனாலும் குழந்தை மறையவில்லை. அது உள்ளே இருக் கிறது. அது உங்கள் அடித்தளம், அடிப்படை, அஸ்திவாரம் ஆகும்!

உங்கள் குழந்தையைப் பின்பற்றினால், நீங்கள் உணர்ச்சி யைப் பின்பற்றினால், உங்கள் பெற்றோர் கோபப்படுகிறார்.

அப்பொழுது நீங்கள் குற்றவுணர்ச்சி கொள்கிறீர்கள். நீங்கள் உங்கள் பெற்றோரைப் பின்பற்றினால், உங்கள் குழந்தை தான் செய்ய விரும்பாததைச் செய்வதற்கு வற்புறுத்தப் படுவதாக உணர்கிறது. தேவையில்லாமல் தன் விஷயத்தில் குறுக்கிடுவதாகவும் தலையிடுவதாகவும் குழந்தை உணர்கிறது. பெற்றோர் பேச்சைக் கேட்கும்போது உங்கள் சுதந்திரம் பறிபோகிறது என்று உங்கள் குழந்தை புரட்சி செய்யவேண்டும் என உணரத்தொடங்குகிறது.

நீங்கள் உங்கள் பெற்றோர் பேச்சைக் கேட்டால், உங்கள் வயது வந்தவரின் மனம், 'என்ன முட்டாள்தனம். இந்த மக்கள் எதுவும் தெரியாதவர்களாய் இருக்கிறார்கள். உங்களுக்கு அதிகம் தெரியும். இந்த நவீன உலகத்தில் இணக்கமாக இருக்கிறீர்கள். நீங்கள் அதிகமாகச் சமகால உணர்வு பெற்றிருக்கிறீர்கள். இந்தக் கொள்கைகள் எல்லாம் இறந்த போன கொள்கைகள், இந்தக் காலத்திற்கு ஒவ்வாதவை. நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்?" உங்கள் பகுத்தறிவின்படி நடந்தால், அப்போது உங்கள் பெற்றோரைக் காட்டிக் கொடுத்துவிடுவதாக நீங்கள் உணர்கிறீர்கள்.

மீண்டும் குற்றவுணர்ச்சி எழுகிறது. என்ன செய்வது? இந்த மூன்று அடுக்குகளும் ஏற்றுக்கொள்ளும் ஏதாவது ஒரு விஷயத்தைக் கண்டுபிடிப்பது பெரும்பாலும் அசாத்தியமாகும்.

இது மனித ஏக்கம். இல்லை, இந்த மூன்று அடுக்குகளும் ஏதேனும் ஒரு பொதுக்கருத்தை ஏற்பது ஒருபோதும் நடக்காத காரியம். எப்போதும் எந்த மாதிரியான ஒற்றுமையும் இவற்றுக்குள் இல்லை.

· குழந்தையை நம்பும் போதகர்கள் உள்ளனர். அவர்கள் குழந்தைப்பருவத்தை அதிகமாக வற்புறுத்துகின்றனர். உதாரணமாக லாவோட்ஸு . 'அந்த ஒற்றுமை இவற்றுக் குள் வரப்போவதே இல்லை. உங்கள் பெற்றோரின் குரலை

விட்டுவிடுங்கள். இந்தக் கட்டளைகள், பழைய ஏற்பாடுகள். "செய்தாக வேண்டும்" என்கிற கட்டாய உணர்வை மறந்து குழந்தையாக ஆகிவிடுங்கள்.

இதைத்தான் இயேசு கூறுகிறார். லாவோட்ஸுவும் இயேசுவும் வற்புறுத்துவது எது தெரியுமா? 'மீண்டும் குழந்தை ஆகுங்கள்' என்பது தான். உங்கள் சொந்த சுயவிருப்பத் தன்மையை உங்கள் குழந்தையுடன் தான் அடைய முடியும். தாவோ என்னும் இயற்கை ஒழுங்குடன் நீங்கள் மீண்டும் பாகம் ஆகிவிடலாம்.

அவர்களது செய்தி அழகானது. ஆனால் நடைமுறைக்கு உகந்ததாகத் தோன்றவில்லை. சில சமயங்களில்-ஆம்-இது நடந்திருக்கிறது. ஒரு நபர் மீண்டும் குழந்தையாகிறார். ஆனால் இது விதிவிலக்கான விஷயம்; ஏனென்றால் மனித இனமே குழந்தை ஆவது என்பது நடக்கமுடியாத காரியம். அது, நட்சத்திரத்தைப் போல் அழகானது. ஆனால் மிகவும் தூரத்தில் உள்ளது; ஆனால் அடையமுடியாத தூரத்தில் உள்ளது.

அப்புறம், மற்றப் போதகர்கள் உள்ளனர். மகாவீரர், மோசஸ், முகம்மது, மனு ஆகியோர்-பெற்றோரின் குரலைக் கேளுங்கள் என்று கூறுகிறார்கள். அவர்களின் நீதிபோத னைகளைக் கேளுங்கள், சமூகம் சொல்வதைக் கேளுங்கள். உங்களுக்குப் போதிக்கப்படுவதைக் கேளுங்கள். அதைப் பின்தொடருங்கள். உலகில் நிம்மதியாக இருக்க விரும் பினால், இந்த உலகில் சமாதானமாக நீங்கள் இருக்க விரும் பினால், பெற்றோர் பேச்சைக் கேளுங்கள். ஒருபோதும் பெற்றோரியல் குரலுக்கு எதிர்ப்பாகச் செல்லாதீர்கள்.

அதிகமாகவோ, குறைவாகவோ, இந்த உலகம் இப்படித் தான் பின்பற்றியிருக்கிறது. ஆனால் அப்படிப் பின்பற்று வோர் ஒருபோதும் உள்ளார்வம் என்று உணர்வதில்லை. இயல்பாகவும் ஒருபோதும் உணர்வதில்லை. எப்போதும்

அவர்கள் சிறைக்குள்ளிருப்பது போல், கூண்டில் அடைபட்டது போல்தான் உணர்கிறார்கள்.

நீங்கள் சுதந்திரத்தை உணராதபோது, சமாதானத்தை உணர்வீர்கள். ஆனால் அந்தச் சமாதானம் தகுதியற்றது. சுதந்திரத்தோடு வராத சமாதானத்தை நீங்கள் ஏற்க முடியாது. சமாதானம் பேரானந்தத்தோடு கூடி வந்தால் ஒழிய அதை ஏற்றுக்கொள்ளக் கூடாது. அது உங்களுக்குச் சௌகரியத்தை, வசதியைக் கொண்டு வருகிறது. ஆனால் உங்கள் ஆன்மா துன்புறுகிறது.

ஆம், பெற்றோரியல் குரலின் மூலமாகச் சாதித்தவர்கள் ஒரு சிலர் இருக்கிறார்கள். அவர்கள் உண்மையை அடைந்தவர்கள், உண்மையிலேயே!

ஆனால் அதுவும் வெகு அரிதானது. அந்த உலகம் போய் விட்டது. கடந்தகாலத்தில் வேண்டுமானால், மோசசும், மனுவும், முகம்மதும் மிகவும் பயனுள்ளவர்களாய் இருந்தார்கள். அவர்கள் இந்த உலகத்திற்கும் கட்டளைகளை அளித்துள்ளார்கள். 'இதைச் செய். அதைச் செய்யாதே.' அவர்கள் விஷயங்களை எளிதாக்கினார்கள். மிகவும் எளிதாக்கினார்கள்.

நீங்கள் தீர்மானிப்பதற்கு எதையும் அவர்கள் விட்டு வைக்கவில்லை. உங்களால் தீர்மானிக்க முடியும் என்று அவர்கள் நம்பவில்லை. அவர்கள் ஒரு வாய்பாட்டைத் தயாராக வைத்திருக்கிறார்கள். பின்பற்றுவதற்குப் பத்துக் கட்டளைகள் இருக்கின்றன. நீங்கள் நம்புவதையெல்லாம் அப்படியே செய்யுங்கள்.

நீங்கள் விரும்புவதெல்லாம் பின் விளைவு. தொடர்ந்து நிகழ்ச்சியாக நடக்கும். நீங்கள் சொன்னபடி அப்படியே கீழ்ப்படியுங்கள்.

பழைய சமயங்கள் அனைத்தும், கீழ்ப்படிதலை மிகவும் அதிகமாக வற்புறுத்தின. கீழ்ப்படியாமை தான் ஒரே பாவம்-இது தான் கிறிஸ்துவ மதம் சொல்கிறது. ஆதாமும் ஏவாளும், தங்கள். கீழ்ப்படியாமையினால், கடவுளின் தோட்டத்திலிருந்து வெளியேற்றப்பட்டார்கள். அறிவு மரத்தின் பழத்தைச் சாப்பிடக்கூடாதென்று கடவுள் அவர் களுக்குச் சொல்லியிருந்தும், அவர்கள் கீழ்ப்படியவில்லை. அதுதான் அவர்களது ஒரே பாவம். ஆனால் ஒவ்வொரு குழந்தையும் அந்தப் பாவத்தைச் செய்து கொண்டிருக்கிறது. அப்பா, 'புகைபிடிக்காதே' என்கிறார்; ஆனால் அது அதை முயல்கிறது. அப்பா, 'நீ' சினிமாவுக்குப் போகாதே' என்கிறார். ஆனால் அது போகிறது. ஆதாம் ஏவாளின் கதை ஒவ்வொரு குழந்தையின் கதை ஆகும். அதன்பின்பு, கண்டனம், வெளியேற்றம்...

கீழ்ப்படிதல் என்பது மனு, முகம்மது, மோசஸ் ஆகியோ ரின் சமயம் ஆகும். ஆனால் அந்த உலகம் போய்விட்டது. அதன் மூலம் பலர் அடையவில்லை; பலர் சமாதானம் உள்ளவர்கள் ஆனார்கள், நல்லகுடிமக்கள் ஆனார்கள். நல்ல உறுப்பினர்கள் ஆனார்கள். மதிப்பிற்குரிய சமூக உறுப்பினர்கள் ஆனார்கள். ஆனால் அதற்குமேல் எதுவு மில்லை.

அடுத்து வயது வந்தவராக இருத்தல் என்னும் மூன்றாவது வலியுறுத்தல் ஆகும். கன்பூசியஸ். பதஞ்சலி அல்லது நவீன சம்சயவாதிகள்-பெர்ட்ரண்ட் ரஸ்ஸல்-உலகத்தின் அனைத்து மனிதாபிமானிகள்- எல்லாரும் 'உங்கள் சொந்தப் பகுத்தறிவை மட்டுமே நம்புங்கள்' என்று வலியுறுத்துகிறார்கள்.

அது மிகவும் கடினமானதாகத் தோன்றுகிறது. அதுபோலவே ஒரு மனிதனின் முழு வாழ்க்கையும் வெறும் முரண்பாடாகவே ஆகிறது. ஏனென்றால், நீங்கள் உங்கள் பெற்றோரால் வளர்க்கப்பட்டிருக்கிறீர்கள். நீங்கள் உங்கள்

பெற்றோரால் பதப்படுத்தப்பட்டிருக்கிறீர்கள். அல்லது கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறீர்கள் எனலாம். நீங்கள், உங்கள் இருத்தலில் உள்ள பல விஷயங்களை மறக்க வேண்டும். உண்மையில் உங்கள் முழுமனமும் மறுக்கப்பட வேண்டும். அதை அழிப்பது என்பது அவ்வளவு எளிதல்ல.

எந்தப் பகுத்தறிவும் இல்லாத குழந்தைகளாக நீங்கள் பிறந்தீர்கள். அதுவும் ஒரு முக்கிய விஷயம். அடிப்படையில் நீங்கள் உணர்ச்சியுள்ள ஓர் இருத்தல் ஆவீர்கள். பகுத்தறிவு மிகவும் தாமதமாக வருகிறது.

நடக்க வேண்டியதெல்லாம் நடந்துவிட்ட பொழுது தான், உண்மையில் அது வருகிறது. ஏழு வழுதில், ஒரு குழந்தை, தன் அறிவில் பெரும்பாலும் எழுபத்தைந்து சதவிதத்தைக் கற்றுக்கொள்கிறது என்று உளவியலாளர் கூறுகின்றனர். அந்த எழுபத்தைந்து சதவிகிதத்தில் ஐம்பது சதவிகிதத்தை அந்தக் குழந்தை நான்கு வயதிலேயே பெற்று விடுகிறது. பகுத்தறிவு மிகவும் தாமதமாக வருகிறது. அது மிகத் தாமதமான வருகை ஆகும். நடக்க வேண்டிய எல்லாம் நடந்து முடிந்தபொழுதுதான், உண்மையில், அது வருகிறது. பகுத்தறிவுடன் வாழ்வது மிகவும் கடினமானது ஆகும். மக்கள் முயன்றிருக்கிறார்கள். ஒரு பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் இங்கும் அங்கும்–ஆனால் ஒருவருமே உண்மையை அதன் மூலம் அடைந்து விடவில்லை, ஏனெனில் பகுத்தறிவு மட்டுமே அதற்குப் போதாது.

இந்த எல்லாக் கோணங்களும் தேர்ந்தெடுக்கப்பட்டு முயற்சி செய்யப்பட்டன. எதுவுமே வேலை செய்யவில்லை. புத்தரின்நிலைப்பாடு முற்றிலும் வித்தியாசமானது ஆகும். மனித விழிப்புணர்ச்சிக்கு அவரது அசல் கொடை அதுதான். 'எதையும் தேர்ந்தெடுக்காதே. கோணத்தின் மையத்திற்குள் சென்று விடு' என்கிறார் புத்தர். 'பகுத்தறிவைத் தேர்ந்தெடுக்காதே, குழந்தையைத் தேர்ந்தெடுக்காதே. பெற்றோரை தேர்ந்தெடுக்காதே. வெறுமனே கோணத்தின்

அசல் மையத்திற்குள் சென்று விடுங்கள். அமைதியாகத் தங்குங்கள். முழுக்கவனம் உடையவராய் ஆகுங்கள்' என்று கூறுகிறார். /

அவரது அணுகுமுறை மிகப்பெரிய அர்த்தம் உள்ளது. அப்போதுதான் நீங்கள் உங்கள் இருத்தலின் தெளிவான தோற்றத்தைப் பெறமுடியும்.

அந்தத் தோற்றத்திலிருந்தும் தெளிவிலிருந்தும் எதிர்வினை வரட்டும்.

இதை நாம் வேறு வழியில் சொல்லலாம். நீங்கள் குழந்தையாக நடந்து கொண்டால் அது குழந்தைத் தனமான எதிர்வினை.

பல தடவைகள், நீங்கள் குழந்தையாக நடக்கிறீர்கள். சிலர் எதையோ சொல்கிறார்கள். நீங்கள் அதனால் துன்பப்படுகிறீர்கள்- ஓர் ஆவேசம், கோபம், எழுச்சி ஏற்படுகிறது... நீங்கள் ஒவ்வொன்றையும் இழக்கிறீர்கள்.

பின்னால், அதைப்பற்றி மிகவும் மோசம் என்று உணர்கிறீர்கள்- நீங்கள் உங்கள் பிம்பத்தை இழந்து விட்டீர்கள்!

ஒவ்வொருவரும் உங்களைப் பற்றி அவ்வளவு நிதானமானவர் என்று நினைக்கிறார்கள். ஆனால் நீங்கள் குழந்தைத்தனம் உள்ளவராக இருந்தீர்கள். இப்போது உங்களுக்கு ஆதரவாக எதுவும் அதிகமாக இல்லை. அல்லது உங்கள் பெற்றோர் குரலைப் பின்பற்றுங்கள். பிற்காலத்தில் நீங்கள் இன்னும் வயது வந்தவராக ஆகவில்லை./ உங்கள் கைகளில் உங்கள் வாழ்க்கையின் கடிவாளங்களை எடுத்துக் கொள்ளும் அளவுக்கு நீங்கள் பக்குவம் பெற்றவராக இல்லை./

அல்லது சில சமயங்களில் நீங்கள் பகுத்தறிவைப் பின் பற்றுகிறீர்கள். பின்பு பகுத்தறிவு மட்டுமே போதுமான தன்று என்று நினைக்கிறீர்கள்.

உணர்ச்சியும் தேவை என்று நினைக்கிறீர்கள். உணர்ச்சி யல்லாத பகுத்தறிவு உள்ளவன் வெறும் தலையாக ஆகிறான். மீதியுள் உடலின் தொடர்பை அவன் இழந்து விடுகிறான். வாழ்க்கையின் தொடர்பையும் இழந்து விடுகிறான். அவன் இணைப்பு இல்லாதவனாக ஆகி விடுகிறான்.

அவன் ஒரு சிந்திக்கிற இயந்திரவியலாக மாறிவிடு கிறான். ஆனால் சிந்தித்தல் உங்களை உயிருள்ளவராக ஆக்க முடியாது.

ஏனெனில் சிந்தித்தலில் வாழ்க்கையின் சாறு இல்லை எனலாம்.

அது ஒரு மிகவும் உலர்ந்த விஷயம். அப்புறம் மிகுந்த ஆசை கொள்கிறீர்கள்.

உங்கள் ஆற்றல்களைப் பாய்வதற்கு அனுமதிக்கத் தக்க வகையில், நீங்கள் எதையாவது ஒன்றை ஆசைப் படுகிறீர்கள்.

அது உங்களை மீண்டும் பசுமையாக்கி, உயிர்த்துடிப்பும் இளமையுள்ளவராகவும் ஆக்கும். இது இப்படியே போய்க் கொண்டே இருக்கிறது.

உங்கள் வாலைத் தேடிக்கொண்டு நீங்கள் பின்னால் போய்க்கொண்டே இருக்கிறீர்கள்.

'இவை எல்லாமே எதிர்வினைகள்' என்று புத்தர் கூறுகிறார். எதிர்வினைகள் நிச்சயம் முழுமையானதாக இருக்க முடியாது.

நேர்கொள்ளல் மட்டுமே முழுமையானதாகும். முழுமையற்றதெல்லாம் தவறானது; அவரளிக்கும் தவறு பற்றிய வரையறை இதுதான்.

எவையெல்லாம் பகுதியானவையோ அவையெல்லாம் தவறுகள்.

ஏனென்றால், உங்களது எதிர்வினையில் பங்கேற்காத பகுதிகள் கண்டுகொள்ளாமல் விடப்படுவதால் அவை, பழிவாங்கி விடும்.

முழுமையாக இருங்கள். நேர்கொள்ளல் முழுமை; எதிர்வினை பகுதியானது; மூன்றில் ஒரு குரலை மட்டும் கேட்டு, அதை நீங்கள் பின்பற்றும்போது, தொல்லைக்கு ஆளாகிறீர்கள்.

நீங்கள் அதனோடு ஒருபோதும் திருப்தி அடையவே மாட்டீர்கள்.

ஒரு பகுதி மட்டும்தான் திருப்தியடையும். மீதி இரண்டு பகுதிகளும் மிகவும் அதிருப்தி அடையும்.

ஆகவே உங்கள் மூன்றில் ஒரு பகுதி திருப்தியடையும். மூன்றில் இரண்டு பகுதி திருப்தியடையாமல் இருக்கும்.

நீங்கள் எப்பொழுதும் குழப்பத்திலும் கொந்தளிப்பிலும் தான் இருப்பீர்கள்.

நீங்கள் எதைச் செய்தாலும் எதிர்வினை உங்களை ஒருபோதும் திருப்திப்படுத்த முடியாது. ஏனென்றால் எதிர்வினை என்பது பகுதியானது அல்லது முழுமை யில்லாதது.

நேர்கொள்ளல்- நேர்கொள்ளல் என்பது முழுமை யானது. அப்போது நீங்கள் எந்த முக்கோணத்தில் இருந்தும் செயல்படவில்லை.

/ நீங்கள் எதையும் தேர்ந்தெடுக்கவில்லை. நீங்கள் சும்மா, தேர்வில்லாத விழிப்புணர்வில் தங்கி விடுகிறீர்கள். /

நீங்கள் மையப்படுத்தலில் தங்குகிறீர்கள். அந்த மையப்படுத்தலிலிருந்து, என்ன வருகிறதோ அதை நீங்கள் செய்கிறீர்கள்.

அது குழந்தையாகவோ, பெற்றோராகவோ, வயது வந்தவராகவோ இருப்பதில்லை.

நீங்கள் பெ-வ-கு.க்கு அப்பால் போய்விட்டீர்கள். இப்போது இருக்கும் நீங்கள் குழந்தையில்லை! பெற்றோர் இல்லை, வயது வந்தவர் இல்லை. அது நீங்கள். உங்கள் இருத்தல். அந்த பெ.வ.கு. என்பது ஒரு சூறாவளி போன்றது; உங்கள் மையம், அந்தச் சூறாவளி மையம்.

ஆகவே, நேர்கொள்ளலுக்கு தேவை இருக்கும்போது, ‘முதல் விஷயம், முழுக்கவனம் உடையவராக ஆவது, விழிப் புணர்ச்சியோடு இருப்பது!’ என்று புத்தர் கூறுகிறார்.

உங்கள் மையத்தை நினைவு கொள்ளுங்கள்.

உங்கள் மையத்தில் தரையிறங்குங்கள்.

நீங்கள் எதையாவது செய்யத் தொடங்குவதற்கு முன்னால், சில கணங்கள் அங்கே இருங்கள்.

அதைப்பற்றி நீங்கள் சிந்திக்கத் தேவை இல்லை. ஏனென்றால் சிந்தித்தல் பகுதியானது.

அதே நேரத்தில் நீங்கள் எதையும் பற்றி உணரத் தேவை யில்லை. ஏனென்றால் உணர்தலும் பகுதியானது தான்.

உங்கள் பெற்றோரிடமிருந்து எந்தக் குறிப்புகளையும் கண்டுபிடிக்க வேண்டிய அவசியமில்லை. பைபிள்- குர்ஆன், கீதா இவையனைத்தும் பெற்றோர் குரல்களே. ஆகவே தேவை இல்லை.

நீங்கள் சும்மா அமைதியில், மௌனத்தில், விழிப்புணர்வில் தங்கியிருங்கள்.

அந்தச் சூழ்நிலையை நீங்கள் கவனியுங்கள்-முழுமையும் அதனின்று வெளியே இருந்துகொண்டு, உங்களுக்கும் அதற்கும் சம்பந்தமே இல்லாமல்-மலை மீது இருந்து கொண்டு, கவனியுங்கள்.

இதுதான் முதல் தேவை-நீங்கள் ஒரு செயலைச் செய்ய விரும்பும்போது மையப்படுத்திக்கொள்ள வேண்டும்.

பிறகு அந்த மையப்படுத்தலிலிருந்து செயல் எழ வேண்டும். இப்படி நீங்கள் எதைச் செய்தாலும் புண்ணியம் தான். நீங்கள் எதைச் செய்தாலும் அது சரியாகத்தான் இருக்கும்.

"இருப்பதிலேயே, சரியான முழுக்கவனமே-அது மட்டும்- புண்ணியம் ஆகும்" என்கிறார் புத்தர். கவனமில்லாமல் இருப்பது தவறுக்குள் விழுவது ஆகும். விழிப்புணர்வில்லாமல் செயல்படுவது தவறுக்குள் விழுவது போன்றதாகும்.

இப்போது வாய்பாடுகள்.

புத்தர் சொல்கிறார்:

ஒரு மனிதன் கெட்ட செயல்கள் செய்பவன் என்றால், பச்சாதாபமில்லை, தீயமனதைத் தூயதாக்குவது இல்லை என்றால், தகுந்த தண்டனை வந்து தான் தீரும் அவன் மீது கடலுக்குள்ளே நதிகள் ஓடிக் கலப்பது போல அகலமாகவும் ஆழமாகவும் ஆகும். எப்போதும் ஒரு மனிதன் கெட்ட செயல்கள் செய்பவன் என்றால் பச்சாதாபமில்லை.

கழிவிரக்கம் என்பது விழிப்போடு பின்னோக்கி பார்ப்பது. கழிவிரக்கம் என்றாலே பின்னோக்கிப் பார்ப்பது. நீங்கள் ஏதோ ஒன்றைச் செய்து விட்டீர்கள்.

நீங்கள் விழிப்புணர்வோடு இருந்திருந்தால், தவறு ஏற்பட்டிருக்க முடியாது. ஆனால் நீங்கள் அதைச் செய்தபோது நீங்கள் விழிப்புணர்வோடு இருக்கவில்லை., யாரோ ஒருவர் அவமானப்படுத்திவிட்டார். நீங்கள் கோபப்பட்டீர்கள். நீங்கள் அவர் தலையில் அடித்து விட்டீர்கள்.

நீங்கள் என்ன செய்தீர்கள் என்று நீங்கள் அறிய மாட்டீர்கள். இப்போது விஷயங்கள் ஆறிப் போய்விட்டன.

அந்தச் சூழ்நிலை போய்விட்டது. நீங்கள் இப்போது கோபமாய் இல்லை.

நீங்கள் அதிக எளிதாக, இப்போது பின்நோக்கிப் பார்க்கலாம்.

நீங்கள் விழிப்புணர்வை அந்த நேரத்தில் இழந்து இருந்தீர்கள். மிகச் சிறந்த விஷயம் என்னவென்றால், அந்த நேரத்தில் நீங்கள் விழிப்புணர்வோடு இருந்திருக்க வேண்டும். ஆனால் இழந்து விட்டீர்கள்.

எனவே, இப்போது, சிந்திய பாலைப்பற்றி அலறுவதிலோ, அழுவதிலோ எந்த அர்த்தமும் இல்லை. ஆனால், நீங்கள் பார்க்கலாம். ஏற்கெனவே நடந்ததற்கு நீங்கள் விழிப்புணர்வைக் கொண்டு வரலாம்.

இதைத்தான்/மகாவீர் பிரதிக்கிரமண் என்று அழைக்கிறார், அதாவது திரும்பிப் பார்த்தல் என்று பொருள்.

இதையே பதஞ்சலி 'பிரத்யாஹார்' என்று அழைக்கிறார். உள்ளே பார்த்தல்! இதைத்தான் இயேசு 'கழிவிரக்கம்' என்கிறார். புத்தர் இதை 'பச்சாத்தாப்' என்று அழைக்கிறார்./

இது வருத்த உணர்ச்சியில்லை; இதைப்பற்றி மோசமாக உணர்வது என்பதும் இல்லை; ஏனெனில் இது எந்த வகையிலும் உதவப் போவதில்லை.

விழிப்புணர்வுடையவர் ஆவது தான் அது; அது எப்படி நடந்திருக்க வேண்டும் என்று அந்த அனுபவத்தை மறுவாழ்வு வாழ்வது போன்றது தான் அது. மறுபடியும் நீங்கள் அதற்குள் செல்ல வேண்டும்.

அந்தக் கணத்தில் விழிப்புணர்வை நீங்கள் இழந்தீர்கள். நீங்கள் விழிப்புணர்வில்லாமையால் மூழ்கடிக்கப் பட்டிருந்தீர்கள்.

இப்போது விஷயங்கள் ஆறிப்போய் விட்டன. உங்கள் விழிப்புணர்வை மேற்கொள்ள முடியும். விழிப்புணர்ச்சி வெளிச்சத்தை மீண்டும் நீங்கள் பெற முடியும்.,

மறுபடியும், நீங்கள் அந்த நிகழ்ச்சிக்குள் நகர்கிறீர்கள். அந்த நிகழ்ச்சிக்குள் மறுபடியும் புகுந்து பார்க்கிறீர்கள்; உண்மையில் அந்நிகழ்ச்சியில் நீங்கள் எப்படி நடந்து கொண்டிருக்க வேண்டும் என்று பார்க்கிறீர்கள். அது போய் விட்டது; உங்கள் மனதில் பின்-நோக்கு முறையில் நீங்கள் அதைச் செய்ய முடியும்.

'இந்த முறை, இதயத்தில் உள்ள தீமையைத் தூய்மைப் படுத்துகிறது' என்று புத்தர் சொல்கிறார்.

பின்-நோக்குதல், தொடர்ச்சியாகப் பின்-நோக்குதல், உங்களை மேலும் மேலும் விழிப்புணர்வு உள்ளவர் ஆக்கும். மூன்று நிலைகள் உள்ளன.

நீங்கள் ஏதோ ஒன்றைச் செய்துவிட்டீர்கள். பிறகு நீங்கள் விழிப்புணர்வு கொண்டீர்கள்-இது முதல் நிலை.

நீங்கள் ஏதோ ஒன்றைச் செய்கிறீர்கள். அப்போதே விழிப்புணர்வு கொள்கிறீர்கள்-இது இரண்டாம் நிலை.

நீங்கள் ஏதோ ஒன்றைச் செய்யப் போகிறீர்கள். இப்போதே, விழிப்புணர்வு கொள்கிறீர்கள்-இது மூன்றாம் நிலை.

மூன்றாம் நிலையில் மட்டுமே உங்கள் வாழ்க்கை, உருமாற்றம் பெறும்.

ஆனால் முதல் இரண்டு நிலைகளும் மூன்றாம் நிலைக்குத் தேவை. இவை இரண்டும் தேவையான படிகள்.

எப்பொழுதெல்லாம் உங்களால் விழிப்புணர்வு கொள்ள முடியுமோ, விழிப்புணர்வு கொள்ளுங்கள். நீங்கள் கோபமாக இருந்து கொண்டிருக்கிறீர்களா? இப்போது கீழே உட்காருங்கள். தியானியுங்கள். என்ன நடந்திருக்கிறது என்று விழிப்புணர்ச்சி கொள்ளுங்கள்.

சாதாரணமாகவே நாம் இதைச் செய்கிறோம். ஆனால் தவறான காரணங்களுக்காகச் செய்கிறோம். நமது பிம்பத்தை மறுபடியும் சரியான இடத்தில் திரும்பவும் வைப்பதற்காக, நாம் இப்படிச் செய்கிறோம்.

நீங்கள் மிகவும் நேசம்மிக்க நபர் என்றும், கருணையுள்ளவர் என்றும், எப்போதும் சிந்திக்கிறீர்கள். ஆனால் அதன் பிறகு திடீரென்று நீங்கள் கோபம் ஆகிவிடுகிறீர்கள்.

இப்போது உங்கள் பிம்பம் உங்கள் சொந்தக்கணக்கில் முன்பு உருச்சிதைகிறது.

நீங்கள் ஒருவகையான பச்சாதாபம் கொள்கிறீர்கள். நீங்கள் அந்த நபரிடம் சென்று 'நான் மிகவும் வருந்துகிறேன்' என்று சொல்கிறீர்கள். நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? உங்கள் பிம்பத்திற்கு மறுவண்ணம் பூசுகிறீர்கள்.

உங்கள் ஆணவம், உங்கள் பிம்பத்தை மறுவண்ணம் பூசமுயல்கிறது. ஏனென்றால் உங்கள் சொந்தக் கண்களில் முன்பு நீங்கள் விழுந்து விட்டீர்கள். பிறரது கண்கள் முன்பும் நீங்கள் விழுந்து விட்டீர்கள்.

இப்போது நீங்கள் பகுத்தறிவு ரீதியாக ஆக்க முயற்சி செய்கின்றீர்கள். நான் வருந்துகிறேன். நானாக இருந்தும் அதை அப்படிச் செய்துவிட்டேன்.

அது எப்படி நடந்ததென்றே எனக்குத் தெரியாது. என்னை எந்தத் தீய சக்தி அப்போது ஆட்கொண்டிருந்தது என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் நான் மிகவும் வருந்துகிறேன். என்னை மன்னித்து விடுங்கள்.

நீங்கள் கோபம் கொண்டதற்கு முன்பு எப்படி இருந்தீர்களோ அதே நிலைக்குத் திரும்பச் செல்வதற்கு நீங்கள் முயல்கிறீர்கள். இது ஆணவத்தின் ஒரு தந்திரம் ஆகும். இது உண்மையான பச்சாதாபம் அல்ல; மீண்டும் அதே விஷயத்தை நீங்கள் செய்வீர்கள்.

/புத்தர் கூறுகிறார்: உண்மையான பச்சாதாபம் என்பது அதை நினைவுபடுத்திக் கொள்வதுதான். என்ன நடந்தது என்று முழுமையாக விரிவாக விழிப்புணர்வாக உள்ளே செல்ல வேண்டும்! அனுபவத்தை மறுபடியும் வாழ்தல், பின்னால் செல்லுதல். அனுபவத்தை மறுபடியும் வாழ்தல் என்பது பதிவு செய்யாமல் ஓடவிட்டுவிடுவதாகும். அது அழித்து விடுகிறது. அது மட்டுமல்ல. அது உங்களை மேலும் விழிப்புணர்வுள்ளதாக்கி விடுகிறது.

ஏனென்றால் அதை நீங்கள் நினைவு படுத்திக் கொள்ளும்போது விழிப்புணர்வு நடைமுறைப் படுத்தப் படுகிறது. மீண்டும் நீங்கள் பழைய நிகழ்ச்சியைப் பற்றி விழிப்புணர்வு அடைகிறீர்கள். உங்கள் விழிப்புணர்விலும், முழுக்கவனத்திலும் ஒரு கட்டுப்பாட்டைப் பெற்றுக் கொண்டிருக்கிறீர்கள். அடுத்த தடவை, சற்று முன்னதாகவே நீங்கள் விழிப்புணர்வு பெற்று விடுவீர்கள்.

இந்தத் தடவை நீங்கள் கோபமாய் இருந்தீர்கள். இரண்டு மணி நேரத்திற்குப் பின்பு நீங்கள் அமைதியாக இருக்க முடியும். அடுத்த தடவை ஒரு மணி நேரத்திற்குப்

பின்பு நீங்கள் அமைதியாகிவிட முடியும். அடுத்த தடவை ஒரு சில நிமிடங்களுக்குப் பின்பு. அடுத்த தடவை அந்த நிகழ்ச்சி நடந்தவுடனேயே நீங்கள் அமைதியாகி விடுவீர்கள். நீங்கள் பார்க்க முடியும்.

வெகுவிரைவில், மெதுவான முன்னேற்றமாக, ஒருநாள், நீங்கள் கோபமாய் இருக்கும்போது, நீங்கள் உங்களைக் கையும் களவுமாகப் பிடித்துக் கொள்வீர்கள்.

அது எவ்வளவு அழகான அனுபவம்! நீங்கள் தவறு செய்யும்போது உங்களை நீங்களே கையுங்களவுமாகப் பிடித்துக் கொள்வது.

அப்போது உடனடியாக, உங்கள் முழுக் குணாதிசயமும் மாறுகிறது. ஏனென்றால் விழிப்புணர்வு உங்களை ஊடுருவும் போதெல்லாம் எதிர்வினைகள் நிற்கின்றன.

இந்தக் கோபம் ஒரு குழந்தைத்தனமான எதிர்வினை. அது உங்களுக்குள் உள்ள குழந்தை. அது 'கு' விலிருந்து வருகிறது. அதன்பின்பு நீங்கள் வருந்துகிறீர்கள். இப்போது அது உங்கள் 'பெ'யிலிருந்து வருகிறது. அதாவது பெற்றோர். பெற்றோர் உங்களை வருந்தச் சொல்லி வற்புறுத்துகிறார்; போய் மன்னிப்புக் கேட்கச் சொல்கிறார்.

நீங்கள் உங்கள் அம்மாவுக்கு அல்லது மாமாவுக்கு நல்லபடியாக நடக்கவில்லை-போங்கள், விஷயங்களைச் சரி செய்யுங்கள்.

அல்லது அது 'வ' விலிருந்து வரலாம்; அதாவது உங்கள் வயது வந்த மனதிலிருந்து, நீங்கள் கோபமாக இருக்கிறீர்கள். பின்னர் இது மோசமான பின் விளைவுகளைத் தரும் என்று அடையாளம் கண்டு கொண்டு விட்டீர்கள். அதில் ஒரு பொருளாதார நஷ்டம் உள்ளது. நீங்கள் உங்கள் முதலாளியிடம் கோபம் கொண்டுவிட்டீர்கள். இப்போது உங்களை அச்சம் ஆட்டிப் படைக்கிறது. அவர் உங்களை

வேலையிலிருந்து நீக்கிவிடக் கூடும் என்று நினைக்கத் தொடங்குகிறீர்கள். அல்லது அவர் தனக்குள்ளேயே கோபத்தை வைத்திருக்கலாம். உங்கள் சம்பளத்தை உயர்த்துவதாக இருந்தார். இப்போது அவர் உயர்த்தாமல் இருக்கலாம்-இதுபோல் ஆயிரத்து ஒரு விஷயங்கள்; நீங்கள் விஷயங்களைச் சரிசெய்ய விரும்புவீர்கள்.

பச்சாத்தாபப்படுங்கள் என்று புத்தர் கூறும்பொழுது நீங்கள், கு அல்லது பெ அல்லது வ விலிருந்து செயல் படுமாறு சொல்லவில்லை.

நீங்கள் விழிப்புணரும்போது, கீழே உட்கார்ந்து, கண் களை மூடிக்கொண்டு, முழுவிஷயத்தையும் தியானியுங்கள். கவனிப்பாளராக ஆகுங்கள். நீங்கள் சூழ்நிலையை விட்டுவிட்டீர்கள். என்னதான் இருந்தாலும் அது பற்றி ஏதாவது செய்யலாம்.

நீங்கள் அதைக் கவனிக்க முடியும். எப்படி அதைக் கவனித்திருக்க வேண்டுமோ அது போன்று இப்போது நீங்கள் கவனிக்க முடியும்.

நீங்கள் பழக முடியும், இது ஓர் ஒத்திகையாக இருக்கும். அதற்குள், முழுச் சூழ்நிலையையும் நீங்கள் கவனித்து விட்டீர்கள். நீங்கள் முழுமையும் நலமாகவே இருப்பதாக உணர்வீர்கள்.

அப்புறம் நீங்கள் போய் மன்னிப்பும் கேட்கவேண்டும் போல் உணர்ந்தீர்களென்றால், பிற எந்தக் காரணங்களுக் காகவும் இல்லாமல்-பெற்றோரில்லை. வயது வந்தவர் இல்லை-குழந்தையும் இல்லை-ஆனால் வெறும் புரிந்துணர் வினால் மட்டுமே அது தவறு என்கிற வெறும் தியானத் திலேயே-அது வேறெந்தக் காரணத்திற்காகவும் தவறில்லை. அது எதனால் தவறு என்றால், நீங்கள் விழிப்புணர்வு இல்லாமல் நடந்து கொண்டீர்களே, அதனால் தான்.

மீண்டும் சொல்கிறேன். வேறெந்தக் காரணத்திற்காகவும் நீங்கள் போய் மன்னிப்புக் கேட்கப் போவதில்லை-பொருளாதார-சமூக-அரசியல்-கலாச்சாரக் காரணங்களுக்காக அல்ல! அல்லவே அல்ல-ஆனால் சும்மா அங்கே செல்லுங்கள். அந்த விஷயத்தில் தியானம் செய்தீர்கள். நீங்கள் நன்றாக அடையாளம் கண்டுகொண்டீர்கள், புரிந்து கொண்டு விட்டீர்கள், எதைத் தெரியுமா? நீங்கள் விழிப்புணர்வு இல்லாமல் செயல்பட்டு விட்டீர்கள் என்னும் உண்மையை! நீங்கள் யாரோ ஒருவரை விழிப்புணர்வு இல்லாமையால் துன்புறுத்தி விட்டீர்கள்.

குறைந்தபட்சம் அந்த நபரிடம் சென்று அவருக்கு ஆறுதல் கூறவாவது வேண்டும். உங்கள் அனாதரவான நிலையை-உதவியற்ற நிலையை-அவர் புரிந்து கொள்ளும் படி செய்ய அங்கு நீங்கள் போக வேண்டும்.

நீங்கள் ஓர் விழிப்புணர்வு இல்லாத நபர், நீங்கள் மனிதருக்குள்ள எல்லாக் குறைகளையும் உடையவர், அதற்காக நீங்கள் வருந்துகிறீர்கள். உங்கள் ஆணவத்தைப் பின்னால் வைக்கவில்லை. உங்கள் தியானம் காட்டிய ஒன்றை-ஏதோ ஒன்றை-நீங்கள் அப்படியே செய்கிறீர்கள்.

இது முழுவதும் வித்தியாசமான பரிமாணம்.

**ஒரு மனிதன் கெட்ட செயல்கள் செய்பவன் என்றால்**
**பச்சாதாபமில்லை, தீயமனதைத் தூயதாக்குவது இல்லை**
**என்றால் தகுந்த தண்டனை வந்து தான் தீரும் அவன்**
**மீது கடலுக்குள்ளே நதிகள் ஓடிக் கலப்பது போலே**
**அகலமாகவும், ஆழமாகவும் ஆகும் எப்போதும்.**

சாதாரணமாக நாம் என்ன செய்கிறோம். நாம் நம்மைத் தற்காத்துக் கொள்கிறோம். நீங்கள் உங்கள் மனைவியிடம் கோபம் கொண்டிருந்தால், அல்லது உங்கள் குழந்தையிடம் கோபம் கொண்டிருந்தால், நீங்கள் தற்காப்புச் செய்து கொள்கிறீர்கள்.

அது அப்படித்தான் செய்தாக வேண்டும். அது தேவைப்பட்டது. ஏனென்றால் அந்தக் குழந்தையின் நன்மைக்காகத் தான் செய்யப்பட்டது. நீங்கள் கோபித்துக் கொள்ளவில்லை என்றால் அப்புறம் உங்கள் குழந்தையை எப்படி ஒழுங்குபடுத்தப் போகிறீர்கள்? நீங்கள் யாரிடமாவது கோபம் கொள்ளவில்லையென்றால், மக்கள் அதைத் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொண்டு விடுவார்கள். நீங்கள் ஒரு கோழை இல்லை; நீங்கள் ஒரு தைரியசாலி. உங்களுக்குச் செய்யக் கூடாததைச் செய்ய மக்களை அப்படியே விட்டுவிடுவது எப்படி? நீங்கள் எதிர்வினை செய்தே ஆகவேண்டும்.

தற்காப்புச் செய்து கொள்கிறீர்கள். நீங்கள் காரண காரியங்களெல்லாம் பேசுகிறீர்கள். உங்கள் தவறுகளுக் கெல்லாம் நீங்கள் காரணகாரியம் கண்டுபிடித்தால், எல்லாத் தவறுக்கும் காரணகாரியம் காணமுடியும். நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள்.

நீங்கள் காரண காரியப்படி அணுகினால் எதுவுமே தவறு என்று சொல்லமுடியாது. ஒவ்வொன்றையும் நீங்கள் காரணகாரியப்படுத்தலாம். அப்படிப்பட்ட நபர், மேலும் மேலும் விழிப்புணர்வை இழப்பதற்குக் கட்டாயம் வாய்ப்புண்டு. அதிக ஆழமாக விழிப்புணர்வு இல்லாமல் ஆகிவிடுவார்கள்.

கடலுக்குள்ளே நதிகள் ஓடிக் கலப்பது போலே
அகலமாகவும் ஆழமாகவும் ஆகும் எப்பொழுதும்

உங்களை நீங்களே தற்காத்துக் கொண்டே சென்று கொண்டிருந்தால், நீங்கள் உங்களை உருமாற்றம் செய்து கொள்வது முடியாமல் போய்விடும். ஏதோ ஒன்று தவறு என்று அடையாளம் கண்டு கொள்ள வேண்டும். அந்த அங்கீகாரம் ஒன்றே மாற உதவும்.

நீங்கள் ஆரோக்கியமாக உணர்ந்து, நீங்கள் நோயாக இல்லையென்றால், நீங்கள் மருத்துவரிடம் செல்லப்போவ தில்லை. மருத்துவர் உங்களிடம் வந்தால்கூட, நீங்கள் அவர் சொல்வதைக் கேட்கப் போவதில்லை.

நீங்கள் மிகவும் நலமாய் இருக்கிறீர்கள். "நான் மிகவும் நன்றாக இருக்கிறேன். நான் நோயாக இருக்கிறேன் என்று யார் கூறினார்கள்?" என்று நீங்கள் சொல்வீர்கள். நீங்கள் நோயாளியாக இருக்கிறீர்கள் என்று நீங்கள் நினைக்க வில்லை என்றால் என்ன ஆகும்!

உங்கள் நோயைக் காப்பாற்றிக் கொண்டே போவீர்கள். அது ஆபத்தானது. நீங்கள் தற்கொலைப் பாதையில் இருக்கிறீர்கள்.

கோபம் இருந்து கொண்டிருந்தால், பேராசை இருந்து கொண்டிருந்தால், நீங்கள் விழிப்புணர்வுடன் இல்லாத போது ஏதாவது நடந்து கொண்டே இருந்தால் அதை அங்கீகரியுங்கள். எவ்வளவு சீக்கிரம் அதைச் செய்கிறீர் களோ, அவ்வளவு சிறப்புடையது. தியானம் செய்யுங்கள் அதன்மீது! உங்கள் மையத்திற்கு நகருங்கள். மையத்தி லிருந்து எதிர்வு செய்யுங்கள்.

> ஒரு மனிதன் கெட்ட செயல்கள் செய்பவன் என்றால்
> அதுபற்றி அவன் அறிய வந்து விட்டால், தன்னைச்
> சீர்திருத்தி நல்லதைச் செய்து தண்டனையின் ஆற்றல்
> தானே நலிந்திடும் படிப்படியாய் நோயொன்று தனது
> கடுஞ்செல்வாக்கை நோயாளி வேர்த்தால் இழந்து
> விடுமே.

அதை நீங்கள் ஒப்புதல் செய்தால், நீங்கள் மிகுந்த அர்த்தமுள்ள நடவடிக்கை எடுத்தவர் ஆவீர்கள். "நீங்கள் ஒப்புதல் அளிக்க வந்துவிட்டால், அதை நீங்கள் அறிந்து விட்டால், உங்களை நீங்களே சீர்திருத்திக் கொண்டவர்

ஆவீர்கள்" என்று இந்த முக்கியமான விஷயத்தைப் புத்தர் கூறுகிறார்.

சாதாரணமாகச் சில சமயங்களில் நாம் ஆம் என்று அங்கீகரித்தால் கூட, 'தவறு நடந்துவிட்டது' என்று ஒப்புக் கொண்டுவிட்டால் கூட, நாம் நம்மைச் சீர்திருத்திக் கொள்ளவில்லை, நாம் நமது பிம்பத்தைத்தான் சீர்திருத்திக் கொள்ள முயற்சி செய்கிறோம். ஒவ்வொருவரும் நம்மை மன்னித்து விட்டதாக உணரும்படி செய்ய நாம் விரும்புகிறோம்.

நம்மீது தான் தவறு என்று ஒவ்வொருவரும் அங்கீகரிக்க வேண்டும் என்று விரும்புகிறோம். ஆனால் அவர்களது மன்னிப்பை நாம் கேட்கிறோம். விஷயங்கள் மறுபடியும் சரி செய்யப்படுகின்றன. நாம் நம் பீடத்தில் மீண்டும் இருக்கிறோம். விழுந்துவிட்ட பிம்பம் சிம்மாசனத்தில் மீண்டும் திரும்ப ஏறிவிட்டது. நாம் நம்மைச் சீர்திருத்திக் கொள்ளவில்லை.

நீங்கள் பலதடவை மன்னிப்புக் கேட்டுவிட்டீர்கள். ஆனால் மறுபடியும், மறுபடியும், அதே விஷயத்தைச் செய்து கொண்டே இருக்கிறீர்கள். அது ஒரு கொள்ளை யாக- அரசியலாக-மக்களைத் தங்கள் வசப்படுத்தும் ஒரு தந்திரமாகக்-காட்டப்படுகிறது. ஆனால் நீங்கள் அப்படியே தங்கி விடுகிறீர்கள். நீங்கள் மாறவே இல்லை. நீங்கள் உண்மையிலேயே உங்கள் கோபத்திற்காக அல்லது யாருக் காவது எதிர்ப்பாகக் குற்றம் செய்ததற்காக மன்னிப்புக் கேட்டிருந்தால் மறுபடியும் அது நடக்கக் கூடாது. அது மட்டும் தான் உங்களுக்கு ஒரு நிரூபணமாக இருக்கும். எதற்கு நிரூபணம்? உங்களை நீங்களே, உண்மையாக மாற்றிக் கொள்ளும் பாதையில் இருப்பதற்கு அதுவே நிரூபணம். புத்தர் கூறுகிறார்.

**ஒரு மனிதன் கெட்ட செயல்கள் செய்பவன் என்றால் அது பற்றி அவன் அறிய வந்துவிட்டால் தன்னை சீர்த்திருத்தி நல்லதைச் செய்து...**

எனவே, அவர்கள் இரண்டு விஷயங்களைச் சொல் கிறார். முதலாவதாக, ஏதாவதொன்று தவறாகப் போவதாக நீங்கள் உணர்கின்ற கணத்திலேயே, ஏதோ ஒன்று தொடர்ச்சியாக உங்களை விழிப்புணர்வு இல்லாமல் செய்கிறது என்று உங்களுக்குத் தெரியும்போதே, நீங்கள் இயந்திரமயமான வழியிலே, எதிர்வினை புரிகிறீர்கள், அப்போது ஏதாவதொன்று நீங்கள் செய்ய வேண்டும்– உங்கள் செய்கை அதிக விழிப்புணர்வு அடைவதே ஆகும்.

அது ஒன்று தான் உங்களைச் சீர்திருத்திக் கொள்ள ஒரே வழியாக இருக்கிறது.

எப்படிப் பல விஷயங்களை நீங்கள் விழிப்புணர்வு இல்லாமல் செய்கிறீர்கள் என்று கவனியுங்கள். யாரோ ஒருவர் ஏதோ ஒன்றைக் கூறுகிறார். அதில் கோபம் உள்ளது. ஒற்றைக் கண இடைவெளி கூட இல்லை. நீங்கள் ஒரு இயந்திரவியல்போல அது இருக்கிறது. யாரோ ஒருவர் உங்கள் பொத்தானை அழுத்துகிறார். நீங்கள் உங்கள் நிதானத்தை இழக்கிறீர்கள். நீங்கள் பொத்தானை அழுத்து கிறீர்கள். மின்விசிறி சுற்றத் தொடங்குகிறது. விளக்கு எரியத் தொடங்குகிறது. ஒற்றைக்கணம் கூட இல்லை. மின்விசிறி சிறிது கூடச் சிந்திப்பதில்லை என்னவென்று? சுற்றலாமா கூடாதா என்று! அது சுற்றுகிறது. அவ்வளவுதான்.

இதுதான் விழிப்புணர்வில்லாமை. இதுதான் முழுக் கவனம் இல்லாமை. யாரோ ஒருவர் அவமானப் படுத்து கிறார், அவரது அவமானப்படுத்தும் செயலால் நீங்கள் அப்படியே கட்டுப்படுத்தப்படுகிறார்.

குர்ட்ஜிப், தன் வாழ்க்கையை, ஒரு சிறிய விஷயம் முழுமையாக உருமாற்றியதாகச் சொல்கிறார். அவரது

தந்தை மரணப் படுக்கையில்! மகனை, அழைத்தார்- குர்ட் ஜிப்புக்கு ஒன்பதே வயது தான். அவர் தன் மகனிடம் நான் எதுவும் அதிகமாக உனக்குக் கொடுப்பதற்கு இல்லை. ஆனால், என் தந்தை தனது மரணப்படுக்கையில் எனக்குக் கொடுத்த அறிவுரை ஒன்று உள்ளது. அது எனக்கு மிகப் பெரிய அளவில் நன்மை அளித்துள்ளது. அது ஒருவேளை உனக்குக் கூடப் பயன் உள்ளதாக இருக்கலாம். இப்பொழுதே நீ இதைப் புரிந்து கொள்ள முடியும் என்று நான் நினைக்கவில்லை. மிகவும் இளமையாய் இருக்கிறாய். இதை நன்றாக ஞாபகம் வைத்துக்கொள். உனக்கு இது புரியும் பொழுது, உனக்கு உதவிகரமாய் இருக்கும்."

"ஒரு விஷயம் மட்டும் ஞாபகம் வைத்துக்கொள். நீ கோபம் இருப்பதாக உணர்ந்தால், இருபத்து நான்கு மணி நேரம் காத்திருக்கவும். அப்புறம் எதை வேண்டுமானாலும்- நீ செய்ய விரும்புவதைச் செய்-ஆனால் இருபத்து நான்கு மணி நேரம் மட்டும் காத்திருக்கவும்.

யாராவது உன்னை அவமானப்படுத்தினால், அவரிடம் நீ சொல், நான் இருபத்து நான்கு மணி நேரம் கழித்து வருகிறேன். அப்புறம் தேவைப்படுகிறது எதுவோ அதைச் செய்கிறேன். தயவு செய்து எனக்குச் சிந்திப்பதற்குச் சிறிது நேரம் கொடுங்கள்" என்று சொன்னார்.

ஆனால் ஒன்பது வயதே ஆன குர்ட்ஜிப்பால் அது என்னவென்று புரிந்துகொள்ள முடியவில்லை தான். ஆனால் அவர் அதைப் பின்பற்றினார். வெகுவிரைவில் அதன் மாபெரும் தாக்கத்தைப் புரிந்து கொண்டார் அவர். அவர் முழுமையாக உருமாற்றம் செய்யப்பட்டார். ஏனென்றால் அவர் இரண்டு விஷயங்களை நினைவு கொள்ள வேண்டியிருந்தது. ஒன்று:- அவர் விழிப்புணர் வோடு இருந்து கொண்டு கோபிக்காமல் இருப்பது. தன்னை யாராவது அவமானப்படுத்தினால் கோபம் அடைவதில்லை. பிறரால் தான் கையாளப்படுவது

தகாதது-இருபத்தி நான்கு மணி நேரத்திற்கு அவர் காத்திருக்க வேண்டும்.

ஆகவே யாராவது ஒருவர் அவருக்கு எதிராக ஏதாவது சொன்னால் அவர் விழிப்புணர்வோடு, எதுவும் பாதிக்கப் படாமல் அப்படியே தங்கியிருக்க வேண்டும். தான் பாதிக்கப்படாத வகையில் அவர் தங்கியிருக்க வேண்டும். தான் பாதிக்கப்படாத வகையில் அவர் தங்கியிருக்க வேண் டும். இருபத்தி நான்கு மணி நேரங்களுக்கு அடக்கமாகவும் அமைதியாகவும் தான் தங்கியிருப்பதாக, மரணப் படுக்கையில் இருந்த தன் தந்தைக்கு வாக்களித்திருந்தார். வெகு விரைவில் அவர் அவர் தகுதியைப் பெற்றுவிட்டார்.

அதன்பின் இருபத்து நான்கு மணி நேரங்களுக்குப் பின்னால் அது தேவைப்படவில்லை- என்பதைப் புரிந்து கொண்டார். இருபத்திநான்கு மணி நேரத்திற்குப் பின்பு கோபப்பட முடியாது.

இருபத்து நான்கு நிமிடங்களுக்குப் பின்னாலும் கோபப்பட முடியாது. இருபத்து நான்கு விநாடிகளுக்குப் பின்னாலும்கூடக் கோபப்பட முடியாது. ஒன்று உடனடி யாக இருக்கும் இல்லையென்றால் இருக்காது.

நீங்கள் விழிப்புணர்ச்சியில்லாமல் இருக்கும்போது மட்டுமே கோபம் செயல்படுகிறது; இருபத்து நான்கு வினாடிகள் நீங்கள் காத்திருந்து, பிறகு கோபப்படலாம் என்னும் இந்த அளவு விழிப்புணர்ச்சி உங்களுக்கு இருந்தால்கூடப் போதும்-முடிந்தது! ஆம் நீங்கள் அப்போது கோபப்படமுடியாது. அந்தக் கணத்தைத் தவற விட்டு விட்டீர்கள் அல்லவா? நீங்கள் ரயிலைக் கோட்டை விட்டு விட்டீர்கள். பிளாட்பாரத்தை விட்டு ரயில் சென்று விட்டது! இருபத்து நான்கு வினாடிகள் கூடப்போதும் அதற்கு. முயற்சி செய்து பாருங்களேன்.

தன் தவறுகளை ஒப்புக் கொள்கிறவன் என்று புத்தர் கூறுகிறார்... அவர் ஒப்புக் கொள்கிறவன் என்று தான் சொல்கிறார்-கண்டிக்கிறவன் என்று அவர் கூறவில்லை. ஏனென்றால் இதில் கண்டிக்க ஒன்றுமில்லை. மனிதத் தன்மைதான், இயற்கையானது தான். நாம் விழிப்புணர் வற்ற உயிர்கள், கடவுள், பிரபஞ்ச ஆத்மா அல்லது வாழ்க்கை, தாதுவில் தூங்குகிறது. முழுமையாக மறதியானது. காய்கறிகளில் அந்தத் தூக்கம் மிக ஆழமாக இல்லை. சில கனவுகளின் பகுதிகள் மட்டும் அங்கு மிங்கும் சுற்றியலையத் தொடங்குகின்றன. மிருகத்தினுள், கடவுள் கனவு காண்கிறான். மனிதனுள், கொஞ்சம் விழிப்புணர்வுடன் ஆகிறார். மிகவும் கொஞ்சம் தான், அவை மிக மிகக் கொஞ்சம் தான். நீண்டதூரம் இடைவெளி உண்டு.

சில சமயங்கள், மாதங்கள் கடக்கின்றன. நீங்கள் ஒரு கணம் கூட விழிப்புணர்ச்சியில்லாமல் இருக்கிறீர்கள். மனிதரில் ஏதோ ஒரு சில கணங்கள் விழிப்புணர்வுக்குச் சாத்தியம் உள்ளது. புத்தருக்குள், கடவுள் முழுமையாக விழிப்புணர்வோடு உள்ளார். உங்களைச் சுற்றிலும் வாழ்க்கையைக் கவனியுங்கள். மரங்களில் கனவுகளின் சில சிறு பகுதிகள் உள்ளன. பாறைகள்... வேகம், ஆழத்தூக்கம், கனவின்றி-இருக்கின்றன. இதைச் 'சுஹுப்தி' என்பர். மிருகங்களில்-பூனையில்-நாயில்-சிங்கத்தில்-புலியில்-பறவைகளில்-கடவுள் கனவு கண்டுகொண்டிருக்கிறார். பல கனவுகள். மனிதனுள் மேலெழுந்து வருகிறார்-கொஞ்சம் ஒரு சில நிமிடங்கள் விழிப்புணர்வு- இருக்கின்றது.

ஆகவே, நீங்கள் விழிப்புணர்வு பெறுகின்ற ஒரு சிறு வாய்ப்பைக் கூட நீங்கள் தவற விடாதீர்கள். அவை மிகச் சிறந்த கணங்கள்-உங்கள் விழிப்புணர்வு இல்லாமை ஆழமாகக் கீழே இழுக்கும்போது விழிப்புணர்வு பெற உதவக்கூடிய அவை மிகச்சிறந்த கணங்கள்.

அவற்றை நீங்கள் பயன்படுத்த முடியுமானால், அவற்றைச் சவாலாக உங்களால் பயன்படுத்த முடியுமானால், கடவுள் உங்களில் மேலும் மேலும் விழிப்புணர்வுள்ளவராக ஆகிறார். ஒருநாள் உங்கள் விழிப்புணர்வு ஒரு தொடர்ச்சியான ஜுவாலையாக, அழியாத ஒரு ஜ்வாலையாக-ஆகிறது.

அப்பொழுது கடவுள் முழுமையாக விழிப்போடு இருக்கிறார். தூக்கமில்லை. கனவும் இல்லை.

புத்தர் என்னும் சொல்லின் பொருள் யாது?-/முழுமையாக விழிப்புணர்வு பெற்ற ஒருவர் புத்தர்-ஒரு சூழ்நிலையிலும் அவர் நிலையிழந்து முழுக்கவனம் இழப்பது இல்லை/

/அவரது முழுக்கவனமும் இயற்கையானதாக- சுவாசத்தைப்போல- ஆகிவிட்டது. நீங்கள் மூச்சை உள்ளே இழுத்து விடுவதும் வெளியே விடுவதும் போல, அவர் விழிப்புணர்வை உள்ளிழுக்கிறார், வெளியே விடுகிறார். அவரது மையப்படுத்தும் நிலை, நிலையானது./

அவர் ஆளுமைகளிலிருந்து இயங்குவதில்லை. குழந்தையின் ஆளுமை, பெற்றோர், வயது வந்தவர்- யாருடைய ஆளுமையும் அவரிடம் இல்லை.

✓எல்லா ஆளுமைகளையும் கடந்த ஒரு புள்ளியிலிருந்து அவர் இயங்குகிறார்/

இதைத்தான் அவர் சீர்திருத்தம் என்று அழைக்கிறார். 'சீர்திருத்தம்' என்னும் சொல் மிக ஆழமானது. மீண்டும் செய்வது திருத்திச் செய்வது-என்பது அதன் பொருள்-மறுவடிவமைப்பது, மறுஉருவாக்குவது, மறுபடியும் படைப்பது இப்படித்தான் பொருள்படும். சீர்திருத்தம் என்பது வெறும் சீர்திருத்தத்தை மட்டும் குறிக்கவில்லை. அங்கும் இங்கும் மாற்றி அமைப்பது சீர்திருத்தம் ஆகாது.

எங்கோ காரைப்பூச்சி விழுந்து விட்டது. அதைச் சரி செய்க. எங்கோ ஒரு வண்ணம் மங்கிப்போய்விட்டது. அதனால் மீண்டும் வண்ணம் பூசவும் என்று சொல்வது சீர்திருத்தம் ஆகாது.

சீர்திருத்தம் என்பது சிறிய திருத்தங்களைக் குறிப்ப தில்லை. சீர்திருத்தம் ஒரு புரட்சிகரமான வார்த்தை. அதன் பொருள் மீண்டும் உருவாக்கவும், மீண்டும் மறுபிறப்பு எடுக்கவும். மொத்தமாகப் புதியதாக மாறும். வானில் குதிக்கும் ஒரு தாவலைத் தாவுக, பழைய ஆளுமையி லிருந்து விலகுக.

பழைய சுழற்சியிலிருந்து வெளியே வாருங்கள்.

புதிய மையத்தை அடையுங்கள்.

தன்னைச் சீர்திருத்தி நல்லதைச் செய்து

நீங்கள் உங்களது அடிப்படை தவறாக எதை உணர்ந்தா லும், ஆண்டு ரீதியாக அதை நோக்கிக் கவனம் செலுத்தா தீர்கள். அதனால் மன அழுத்தம் அடையாதீர்கள். அதுவும் ஒரு தவறுதான். என்னிடம் வந்து, "எங்களால் கோபத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. நாங்கள் தொடர்ந்து அதைக் கட்டுப்படுத்த முயற்சி செய்கிறோம். ஆனால் எங்களால் கட்டுப்படுத்த முடியவில்லை. என்ன செய்வது?" என்று கேட்கும் பலர் இருக்கின்றனர். எதனாலும் ஆக்கிரமிக்கப் படாதீர்கள் என்று புத்தர் கூறுகிறார். அதை அறிந்து கொள்ளுங்கள். விழிப்புணர்வு கொள்ளுங்கள். ஆனால் நேர் எதிரிடையானவற்றைச் செய்யுங்கள். உங்கள் பிரச்சினை என்ன? கோபமா? கோபத்தைப் பற்றி அதிகக் கவனம் செலுத்தாதீர்கள். கருணையுள்ளவராகுங்கள்; அதிகமாக நேசிப்பவராக ஆகுங்கள். கோபத்தைப் பற்றி அதிகக் கவனம் செலுத்தினீர்கள் என்றால், நீங்கள் கோபப்படவில்லையென்றால், எங்கே உங்கள் கோபத்தைக் காட்டுவீர்கள்? அந்தச் சக்தி எங்கே போகும்? உங்கள்

சக்தி போவதற்கான ஒரு பாதையை உருவாக்குங்கள். அது அதே சக்திதான். கோபத்தின்போது இருந்த சக்திதான் கருணையின் போதும் இருக்கிறது. அது இப்போது நேர்மறையானது. இதற்கு முன்பு அது எதிர்மறையாக இருந்தது. அன்று அது ஓர் அழிவுச் சக்தி, இன்று அது ஆக்கசக்தி.

ஆனால் அதே சக்தி தான்-கோபம், கருணை ஆகிறது. எனவே, கோபத்தை மாற்றுவதற்கு முன்பு நீங்கள் வழியமைக்க வேண்டும், கருணையை நோக்கிய புதிய கால் வாய்களை உருவாக்க வேண்டும்.

"ஆதலால் நல்லதைப் பயிலுங்கள், புண்ணியத்தைப் பயிலுங்கள்'' என்று புத்தர் கூறுகிறார். உங்களது பெருந்தவறு எது என்று கண்டுபிடித்து உங்கள் இருத்தலின் புதிய பாதைகளை உருவாக்குங்கள். நீங்கள் ஒரு கிருமி யாக இருந்தால், வெறும் கத்தலிலோ, அதைப் பற்றிப் பேசிக்கொண்டே இருப்பதிலோ உங்களுக்கு ஒருவிதப் பயனும் இல்லை. அப்புறம் எவற்றையெல்லாம் பகிர்ந்து கொள்ள முடியுமோ அவற்றையெல்லாம் பகிர்ந்து கொள் ளுங்கள்- தலைகீழ் மாற்றமாக எதையாவது செய்யுங்கள், இதற்கு முன்பு எப்போதும் செய்திராத, ஏதாவது ஒரு செயலைச் செய்யுங்கள்.

நீங்கள் எப்படிக் கருணையாய் இருப்பது என்று தெரியாத காரணத்தால் நீங்கள் கோபமாய் இருப்பது சாத்தியம்தான். நீங்கள் பிறருடன் எப்படிப் பகிர்ந்து கொள்வது என்று தெரியாததால், நீங்கள் கிருமியாய் இருத்தல் சாத்தியம் தான்.

புத்தர் நேர்மறையாக இருக்கவேண்டும் என்று வற்புறுத் துகிறார். எதையாவது செய்யுங்கள். அப்போது உங்கள் சக்தி இயங்கத் தொடங்கட்டும், பொழியத் தொடங் கட்டும்!

பிறகு வெகுவிரைவில் கோபத்திலிருந்து அது எடுக்கப் பட்டுவிடும். விழிப்புணர்வாக இருங்கள். ஆனால் மன அழுத்தத்திற்கு ஆளாகாதீர்கள்.

இரண்டு விஷயங்களுக்கு இடையில் நீங்கள் தரம் காணுங்கள்; ஏனென்றால்/ மனித மனம் எப்போதும் தவறாகவே பொருள் கொண்டு கொண்டிருக்கும்./

முழுக்கவனம் உடையவராய் ஆகுங்கள் என்கிறார் புத்தர். நீங்கள் மனஅழுத்தம் அடையவேண்டும் என்று புத்தர் சொல்லவில்லை. நீங்கள் தொடர்ந்து கோபத்தைப் பற்றிச் சிந்திக்கவேண்டும் என்று சொல்லவில்லை புத்தர். நீங்கள் தொடர்ந்து கோபத்தைப் பற்றிச் சிந்திக்கிறீர்கள் என்றால், மேலும் மேலும் கோபச் சூழ்நிலைக்கு நீங்கள் ஆளாவீர்கள்.

விழிப்புணர்வாய் இருங்கள். ஆனால் ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டிருக்க வேண்டாம். விழிப்புணர்வாய் இருக்கவும். ஆனால் அதிகமாகக் கவலைப்பட்டுக் கொண்டிருக்க வேண்டாம்.

நன்றாக இதைக் கவனியுங்கள். உங்கள் சக்தியின் பாணியை மாற்றுகின்ற ஏதோ ஒன்றைச் செய்யுங்கள். அதைத்தான், 'நல்லதைச் செய்யுங்கள்' என்று புத்தர் சொல்லும் போது சொல்கிறார்.

தண்டனையின் ஆற்றல் தானே நலியும் படிப்படியாய்
நோயொன்று தனது கடுஞ் செல்வாக்கை நோயாளி
வேர்த்தால் இழந்து விடுமே.

/ஒருவர் அதிகமாக மது அருந்திவிட்டார். நீங்கள் செய்வது என்ன? நீங்கள் அவரை வெந்நீரில் குளிக்கச் செய்யலாம் அல்லது நீராவியில் குளிக்கச் செய்யலாம். அவர்க்கு வேர்த்தால், வேர்வையோடு மதுவும் போய் விடும்./

புண்ணியம் செய்வது என்பது வேர்வையைப் போன்றது என்கிறார் புத்தர். உங்கள் விழிப்புணர்வில்லாத பழக்கங்கள் அதன் மூலம் ஆவியாகிவிடும். கெடுதல் செய்யாமல் இருப்பது நல்லது செய்வதாகும், உண்மையில்.

நீங்கள் எதிர்மறையாக ஆர்வம் கொள்ள வேண்டாம். நேர்மறையாக இருங்கள். நீங்கள் செய்த எல்லாத் தவறு களையும் பற்றி நீங்கள் உட்கார்ந்து சிந்தித்தால், வெகுவிரை வில் நீங்கள் செய்த தவறுகளைப் பற்றி அளவுக்கதிகமாக நினைப்பது அளவுக்கதிகமாக அவற்றுக்குத் தீனி போடுவது போன்றதாகும்.

கவனம் கொடுப்பது என்பது உணவு கொடுப்பது போன்றது. கவனம் அளிப்பது என்பது, உடல் காயத்தோடு விளையாடுவது போன்றதாகும்.

குறிப்பெடுங்கள், முழுக்கவனத்தோடிருங்கள். தியானி யுங்கள். ஆனால் காயத்தோடு விளையாடாதீர்கள். இல்லை யென்றால் காயத்தை மேலும் மேலும் ஆறாததாகவே ஆக்கிவிடுவீர்கள். அது ரத்தம் ஒழுகத் தொடங்கிவிடும். ஆகவே உங்கள் சின்ன விஷயங்களை அதிகமாய்க் கவலைப்படாதீர்கள். அவை சிறியவை.

நான் ஒரு முனிவர் பற்றிக் கேட்டிருக்கிறேன். ஒவ்வொருநாள் காலையிலும் தன்னைத் தானே அடித்துக் கொண்டு கதறுவார். 'ஓ, கடவுளே, என்னை மன்னித்து விடுங்கள், நான் ஒரு பாவம் செய்துவிட்டேன்' என்று அவர் கதறுவார்.

நாற்பது ஆண்டுகள் இது தொடர்ந்தது. திரும்பத் திரும்ப அவரைக் கேட்டார்கள்.... அவர் மிகவும் மரியாதைக்குரிய மனிதர்; அவர் மிகவும் புனிதராகக் கருதப்பட்டவர். அவர் எந்தப்பாவத்தையும் எப்போதும் செய்ததாக யாரும் சொல்ல முடியாது. நாற்பதாண்டுகளாக முழுமையாக மக்களால் சூழப்பட்டிருந்தார். அவர் தூங்கிக் கொண்

டிருந்த போதெல்லாம் கூட மக்கள் அவரைச் சூழ்ந்து கொண்டிருந்தார்கள். அவர் எந்தத் தவறும் செய்யாததை எல்லோரும் அறிவர்; அவர் தொடர்ச்சியாகப் பிரார்த் தனை செய்து கொண்டிருந்தார்.

ஆனால் ஒவ்வொரு நாளும் காலையில் தன்னை அவர் அடித்துக் கொள்வார்; அவர் உடலிலிருந்து இரத்தம் பீறிட்டு எழும். என்ன தவறு செய்தீர்கள் என்று தொடர்ச்சி யாக அவரைக் கேட்டவர்கள் பலர். என்ன பாவம்? நாங் கள் தெரிந்துகொள்ள வேண்டும்" என்று எத்தனையோ முறை அவர்கள் தொடர்ச்சியாக அவரைக் கேட்டார்கள்.

ஆனால் அவர் சொல்லவில்லை.

அவர் இறக்கும் நேரத்தில் 'இப்பொழுது நான் சொல்லத்தான் வேண்டும். ஏனென்றால் நேற்று இரவு கடவுள் என் கனவில் தோன்றி, "நீ, ஒன்றுமில்லாததைப் பற்றி பெரிதாக்கிக் கொண்டிருக்கிறாய். போதும் இந்த நாற்பது வருடங்கள் புலம்பியது. நீ எந்தத் தவறும் செய்யவில்லை. நீ இதை நிறுத்தாவிட்டால் உன்னைச் சொர்க்கத்திற்கு அனுமதிக்கமாட்டேன். நீ எதுவும் தவறு செய்யவில்லை" அவருடைய இளமையில் அருகில் சென்று கொண்டிருந்த ஒரு பெண்ணைப் பார்த்து அவர் மனதில் அவளை அடையவேண்டும் என்று ஆசை எழுந்தது. அவ்வளவுதான். அதுதான் அவர் செய்த பாவம்-எண்ணம் மட்டும்தான்-நாற்பது வருஷம் அவர் தன்னை அதற்காக அடித்துக் கொண்டிருக்கிறார். அவர் கனவில் கடவுளே தோன்றிச் சொல்லவேண்டியிருந்தது. நீ நாளைக்குச் சாக இருப்பதால் சொல்கிறேன். இதை நீ தொடர்ந்தால் சொர்க்கத்திற்கு உன்னை அனுமதிக்க மாட்டேன். நீ எதுவும் பெரிய தவறு செய்துவிடவில்லை; ஆனால் அளவுக்கு அதிகமாகப் பெரிதுபடுத்திவிட்டாய்! வீணாகப் பெரிது படுத்தாதே.

எல்லாத் தவறுகளும் சாதாரணமானவைகளே. என்ன பெரிய அசாதாரண பாவத்தை நீங்கள் செய்துவிட முடியும்? ஏற்கெனவே எல்லாப் பாவங்களும் செய்யப் பட்டு விட்டன. நீ ஒரு புதிய பாவத்தைக் கண்டுபிடித்து விட முடியாது. அது மிகவும் கடினம். பாவத்தைப் பொருத்தவரையில் நீங்கள் அசலானவராக இருக்க முடியாது. லட்சக்கணக்கான ஆண்டுகளாக என்னென்ன பாவங்களெல்லாம்? நீங்கள் ஏதாவது புதியதாகக் கண்டு பிடிக்க முடியுமா? முடியவே முடியாது. அது அசாத்தியம். நீங்கள் புதிதாக என்ன செய்ய முடியும்?

/பெர்ட்ரண்ட்ரசல் கூறினார். கிறிஸ்தவக் கடவுள் பெரும்பாலும் முட்டாள் தனமானவராகத் தென்படுகிறார். நீங்கள் ஒரு பாவம் செய்துவிட்டால், என்றென்றும் நிரந்தர மாக நீங்கள் நரகத்தில் தூக்கி எறியப்படுவீர்கள். இப்போது இது மிகவும் அதிகம்! ஒரே ஒரு மனிதனை ஐந்தாண்டுகள் எறியலாம். பத்தாண்டுகள் எறியலாம் இருபதாண்டு எறியலாம். ஐம்பதாண்டுகள் கூட எறியலாம்.

ஒரு மனிதன் எழுபது ஆண்டுகள் வாழ்ந்தால் எழுபது ஆண்டுகள் கூட எறியலாம். அப்படியென்றால் அவன் எழுபதாண்டுகள் ஒரு சிறு இடைவெளி கூட இல்லாமல். விடுமுறைகூட இல்லாமல்-தொடர்ந்து பாவம் செய்து கொண்டே இருந்திருக்கிறான். அப்போது கூட இல்லாமல்- தொடர்ந்து பாவம் செய்துகொண்டே இருந்திருக்கிறான். அப்போது கூட அவனை எழுபதாண்டுகள் அவனை நரகத்தில் துக்கி எறியலாம்.

ஆனால் கிறிஸ்தவர்கள் ஒரே ஒரு வாழ்க்கையைத் தான் நம்புகிறார்கள். நல்லவேளை, அவர்கள் ஒரு வாழ்க்கை யைத் தான் நம்புகிறார்கள். இல்லையென்றால் அவர்கள் என்ன செய்வார்கள்? ஒரு வாழ்க்கையின் பாவங்களுக்காக உன்னை நிரந்தரமாக நரகத்தில் வீசி எறிந்து விடுவார்கள். இந்துக்கள் பற்றி எண்ணிப் பாருங்கள். அவர்களுக்குப்

பல பிறப்புகள் உண்டு! அவர்களுக்கு ஒரு நிரந்தரத் தண்டனை போதாது!

"நான் என் பாவங்களை-எண்ணுகிறேன்-செய்த மற்றும் செய்யாத பாவங்கள் இரண்டையும் சேர்த்தே எண்ணு கிறேன். இந்தச் சின்ன அற்ப விஷயங்களுக்கெல்லாம் நான் நரகத்தில் நிரந்தரமாக வீசப்படுவேன் என்பதை என்னால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. மிக மிக மிகக் கடுமையான நீதிபதிகூட என்னை நான்கு ஆண்டுகளுக்கு மேல் சிறையில் அடைக்க முடியாது!" என்று ரஸ்ஸல் கூறுவது வழக்கம். அவர் சரியாகத்தான் சொல்கிறார்.

நீங்கள் என்ன தவறுகள் செய்ய முடியும்? என்ன தவறுகள் செய்திருக்கிறீர்கள்? அவற்றைப் 'பாவம்' என்று அழைக்க வேண்டாம். அந்த வார்த்தையே தொற்றிக் கொள்ளக் கூடியது; அதற்குள் ஒரு சாபம் உள்ளது. புத்தர் அதைத்தான் 'தவறான நடத்தைகள்' என்று கூறுகிறார்- அதாவது நல்லதல்லாத செயல்கள். அவரது வார்த்தை அழகானது. நீங்கள் கோபித்துக் கொள்கிறீர்கள். நீங்கள் அருளல்லாத எதையோ ஒன்றைச் சொல்லிவிட்டீர்கள். அல்லது அருளல்லாத எதையோ செய்துவிட்டீர்கள். ஆனால் அவை தவறான நடத்தைகள்!

இந்த வாய்பாட்டைப் புரிந்துகொள்ள முயலுங்கள். எப்போதும் இப்படி நிகழ்கிறது. நீங்கள் நல்லவராகி விட்டால் பலபேர்களுக்கு உங்கள் மீது கோபம் வருகிறது. ஏனென்றால் உங்கள் நல்லகுணம் அவர்களுக்கு ஒரு குற்ற மனப்பான்மையை ஊட்டுகிறது. அவர்கள் அவ்வளவு நல்லவர்கள் அல்லர். உங்கள் நல்ல பண்பு ஒரு ஒப்பீட்டை உருவாக்குகிறது. ஒரு நல்ல மனிதனை மன்னிப்பது என்பது மிகவும் கடினம். அவர்கள் எப்போதும் கெட்ட மனிதர் களை நம்ப முடியும். அதனால் நூற்றாண்டுக் கணக்காகக் கோபத் தோடு அவர்கள் ஏசுவைப் பற்றியும் சாக்ரட்டீஸ் பற்றியும் புத்தர் பற்றியும் மிகவும் கோபத்தோடு இருக்கிறார்

கள். ஏன் இப்படி நிகழ்கிறது. நீங்கள் இதை வாழ்க்கையில் கவனிக்க முடியும்.

ஒருமுறை நான் பல்கலைக்கழகத்தில் ஆசிரியராக இருந்தேன். அந்த அலுவலகப் பணியாளர்களிலேயே சிறந்தவரான ஒரு எழுத்தர், 'நான் மிகவும் கஷ்டப் படுகிறேன். எல்லாப் பணியாளர்களும் எனக்கு எதிராக இருக்கிறார்கள். "நீங்கள் ஏன் இவ்வளவு வேலை செய்கிறீர் கள்? நாங்கள் எல்லாம் வேலை செய்யாமல் இருக்கும் போது நீங்களும் அதையே தான் செய்திருக்க வேண்டும். சும்மா இரண்டு மணி நேரம் வேலை செய்தால் போது மானது. கோப்புக்களை இங்கிருந்து அங்கே அங்கிருந்து இங்கே வைத்தால் போதும்" என்று அவர்கள் சொல் கிறார்கள்" என்று சொன்னார்.

அவருடைய மேஜை எப்போதும் சுத்தமாக இருக்கும்; கோப்புகள் குவிவதில்லை, ஆனால் மற்றவரது மேஜை களில் கோப்புக் குவியல்கள் தான். உண்மையில் அவர்கள் கோபம் கொண்டார்கள்; ஏனென்றால் இந்த மனிதனின் இருப்பு ஒரு ஒப்பீட்டை உருவாக்கியது. இந்த மனிதர் செய்தால், அவர்கள் ஏன் செய்யக்கூடாது?

/ ஒரு நல்ல மனிதன் எப்போதும் நேசிக்கப்படுவதில்லை./ ஏனென்றால் அவர் ஓர் ஒப்பிட்டை உருவாக்குகிறார். ஏசு சிலுவையில் அறையப்பட வேண்டியிருந்தது. ஏனென்றால் இவ்வளவு குற்றமற்ற தன்மை சாத்தியம் என்றால் ஏன் நீங்கள் அப்படி இல்லை. அது ஓர் ஆழமான காயத்தை உங்கள் ஆணவத்தில் உண்டாக்குகிறது. இந்த மனிதனை நசுக்க வேண்டும். இந்த மனிதனைக் கொல்வதன் மூலமே நீங்கள் திருப்தியடைவீர்கள். நீங்கள் சாக்ரடீசுக்கு நஞ்சு கொடுக்க வேண்டியிருந்தது. ஏனென்றால் ஏன் அவ்வாறு உண்மையானவராக இருக்க முடியவில்லை. உங்கள் பொய்கள் அனைத்தும் இந்த மனிதரின் உண்மையில் வெளியாகிவிடுகின்றன. இந்த மனிதரின் உண்மைத்தன்மை,

ஆதாரத்தன்மை, நீங்கள் அனைவரும் போலிகள் என்று உணரவைக்கிறது. இந்த மனிதர் அபாயகரமானவர். குருடர்களின் பள்ளத்தாக்கில் பார்வையுள்ள ஒரு மனிதன் வந்து விடுவதைப் போன்றது அது.

ஹெச்.ஜி. வெல்ஸ் ஒரு கதை கூறுகிறார்... தென் அமெரிக்காவில் எங்கோ ஒரு பள்ளத்தாக்கில் பார்வை யற்றவர்கள் இருந்தார்கள். அங்கு ஒரு முறை பார்வையுள்ள ஒருவன் பயணியாக வந்து சேர்ந்தான். அனைத்துப் பார்வையற்றவர்களும் ஒன்று சேர்ந்தனர். இந்த மனிதனிடம் ஏதோ ஒரு தவறு இருக்கிறது. இது மாதிரி எப்போதும் ஏற்பட்டதில்லை. அவர்கள் அறுவைச் சிகிச்சை செய்யத் தீர்மானித்தார்கள்.

உண்மையில் பார்வையற்றோர் இருக்கும் பள்ளத் தாக்கில் பார்வையுள்ள ஒருவன் இருந்தால் அவனிடம் ஏதோ தவறு இருப்பதாகத்தான் அவர்கள் நினைப்பார்கள்.

முல்லா நசிருதீன் 'நோயுணர்வு' நோய் உள்ளவர். ஒரு தடவை என்னிடம் வந்து அவர் 'என் மனைவியிடம் ஏதோ ஒரு குறையிருக்கிறது' என்றார்.

'என்ன குறை, உங்கள் மனைவியைப் பார்த்தால் மிகவும் ஆரோக்கியமாகத் தென்படுகிறாரே' என்று நான் கூறினேன்.

'ஆம். அவளிடம் ஏதோ ஒரு குறை உள்ளது. அவள் வைத்தியரிடம் செல்வதே இல்லை' என்று வருத்தப்பட்டுக் கொண்டார்.

அவர், ஒவ்வொரு நாளும், ஒழுங்காகப் பயபக்தியோடு சென்று நகரத்தின் ஒவ்வொரு மருத்துவரையும் தொந்தரவு படுத்தி விடுவார். இப்போது அவருக்குத் தன் மனைவி பற்றிய கவலை– ஏதோ அவளுக்கு ஒரு குறை உள்ளது. ஏனென்றால் வைத்தியரிடம் அவள் செல்வதில்லை.

/நீங்கள் ஆரோக்கியமற்ற மக்களுடன் வாழ்ந்தால் நீங்கள் ஆரோக்கியமாய் இருப்பது ஆபத்தானது. நீங்கள் மனநலம் அற்றவர்களோடு வாழ்ந்தால், நீங்கள் மனநலத்தோடு இருப்பது ஆபத்தானது. நீங்கள் ஒரு மனநல மருத்துவ மனையில் இருந்தால், குறைந்த பட்சம் மனநலம் குன்றியவர்போல் நீங்கள் நடிக்கவாவது வேண்டும். இல்லா விட்டால், அந்த மனநலம் குன்றிய மக்கள் உங்களைக் கொன்று விடுவார்கள்./

அவர்கள் வந்து உங்களைப் புண்படுத்துவார்கள். நீங்கள் அவர்களை விடச் சிறந்தவதராக இருக்கிறீர்கள் என்னும் கருத்தை அவர்கள் தாங்கிக்கொள்ள முடியாது. தங்களை யாராவது மிஞ்சி விடுவார்கள் என்பதை அவர்கள் நம்புவது அசாத்தியம். அப்படியானால் தன்னை மிஞ்சுபவர் ஒரு பாசாங்குக்காரன், அவன் ஏமாற்றுக்காரன், தன்னைப்பற்றியே ஒரு பிம்பத்தை உருவாக்கிக் கொள்ள முயன்று கொண்டிருக்க வேண்டும். அவர்கள் இப்போது இடைஞ்சலுக்கு ஆளாகி விட்டனர். அவர்கள் நிம்மதி யிழந்து விட்டார்கள். அவர்கள் பழி வாங்கத் தொடங்கி விட்டார்கள்.

நீங்கள் உங்கள் மையத்தில் தங்க வேண்டும். நீங்கள் பொறுமையுடன் சகித்துக்கொள்ள வேண்டும். என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று நீங்கள் அதை அப்படியே கவனித்துக்கொள்ள வேண்டும்.

அதைப் பற்றி நீங்கள் துன்புறக் கூடாது. உங்களுக்கு இடையூறு ஏற்படுவதாக நினைத்தால், அந்தத் தீயமனிதன் உங்களைத் தோற்கடித்துவிட்டார். நீங்கள் இடையூறு அடைந்தால், வெல்லப்பட்டவர்கள் ஆகிவிடுவீர்கள். நீங்கள் இடைஞ்சல் அடைந்தால் அவர்களோடு நீங்கள் ஒத்துழைத்து விட்டீர்கள் என்று பொருள்.

'சும்மா அமைதியாக இருங்கள். சகித்துக் கொள்ளுங்கள். பொறுமையாய் இருங்கள். அவனுடன் கோபம் கொள்ளாதீர்கள்' என்று புத்தர் கூறுகிறார்.

ஏனென்றால் உங்களை அவமானப்படுத்துவதாக நினைத்துத் தன்னைத் தானே அவன் அவமானப்படுத்திக் கொள்கிறான். அவன் தன் சொந்த சக்தியையே அவமானப்படுத்திக் கொள்கிறான்.

நாம் இயேசுவைச் சிலுவையில் அறைந்தபொழுது நாம் நமது குற்றமற்ற தன்மையையும் சேர்த்துச் சிலுவையில் அறைந்து விட்டோம். நாம் இயேசுவைச் சிலுவையில் அறைந்தபோது, நம் சொந்த எதிர்காலத்தையே நாம் சிலுவையில் அறைந்து விட்டோம். நாம் இயேசுவை சிலுவையில் அறைந்த போது, நாம் நமது சொந்த தெய்விகத்தையே கொன்று விட்டோம். அவர் ஒரு அடையாளமாக இருந்தார். அவருக்கு நடந்தது எதுவும் உங்களுக்கும் நடக்க முடியும் என்பதற்கு அவர் ஓர் அடையாளமாக இருந்தார்.

நாம் சாக்ரடீஸை விஷம் வைத்துக் கொன்றபோது, நாம் நமது முழு இருத்தலுக்கும் விஷம் வைத்துக் கொண்டோம்; நாம் நமது முழு வரலாற்றையும் விஷம் வைத்துக் கொன்றோம். அவர் ஒரு நட்சத்திரம்-எழுந்து கொண்டிருக்கும் ஒரு நட்சத்திரம்-வருங்காலத்தின் தூதர். இது உங்கள் ஆற்றல். நான் ஒரு செய்தியாளன் தான். நீங்களும் என்னைப்போல் ஆக முடியும் என்னும் செய்தியைத்தான் சொல்ல வந்தேன்!

உங்களை அவனமானப்படுத்துவதன் மூலம் கெட்டது செய்பவன், தன்னைத்தானே அவமானப்படுத்திக் கொள்கிறான். நீ பொறுமையாக இருக்கவும்; சகித்துக் கொள்ளவும்; கோபம் கொள்ள வேண்டாம்.

புத்தர் கூறுகிறார்:

எனவே முழுக் கவனத்தோடு இருங்கள்.

இது மிகவும் முட்டாள்தனமாகத் தோன்றக்கூடும். எந்தத் தீங்கும் செய்யாதவனிடம் சென்று மக்கள் ஏன் கண்டிக்கிறார்கள்? அவர்கள் ஏன் புத்தரிடம் சென்று அவரைக் கண்டித்தார்? ஏனென்றால் அவர் யாருக்கும் எந்தத் தீங்கும் செய்யவில்லை. அவர் யாருடைய வழியி லும் குறுக்கே இல்லை. எல்லாப் போட்டியுணர்வுகளையும் அவர் துறந்து விட்டார். கிட்டத்தட்ட இந்த உலகைப் பொருத்தவரை அவர் ஓர் இறந்த நபருக்குச் சமம்.

ஆனாலும் மக்கள் ஏன் தங்கள் வழியைவிட்டு விலகி புத்தரைக் கண்டிக்க வேண்டும்?

அவரது வெறும் இருப்பே அவர்களை அவமானப் படுத்துகிறது. ஒரு மனிதன் இவ்வளவு நல்லவனாக இருக்க முடியும் என்ற அந்த வெறும் சாத்தியக் கூறே அவர்களைத் துன்பப்படுத்துகிறது. அப்படியென்றால் அவர்கள் ஏன் அவ்வளவு நல்லவர்கள் இல்லை? இது ஒரு குற்ற உணர்வை ஏற்படுத்துகிறது. அதனால் பல நூற்றாண்டு களாக மக்கள் 'புத்தர் என்று ஒருவர் எப்போதுமே இருந்ததில்லை' என்று எழுதி வருகிறார்கள். இயேசு ஒரு கட்டுக்கதை என்றும் அவர்கள் எழுதுகிறார்கள். இவை அவர்களது மனோரதங்களின் ஈடேற்றம்.

அவர்கள் ஒருபோதும் இருக்கவில்லை; இவை அவர் களது மனித ஆசைகள், கற்பனை உலகங்கள்; அவர்கள் உண்மையில் வாழவில்லை; அல்லது அவர்கள் வாழ்ந்திருந் தாலும்கூட அவர்கள் பற்றிச் சாத்திரங்கள் கூறுவதெல் லாம் பொய்; அவை கற்பனைகள் கனவுகள். ஏன்?

இன்றும்கூட புத்தரை பற்றியும் இயேசுவைப் பற்றியும் எதிர்த்து எழுதுவோர் இருக்கிறார்கள். இப்போது கூட

ஏதோ ஒன்று அவர்களைத் துன்புறுத்துகிறது. இருபது நூற்றாண்டுகள் நடந்து விட்டன, இந்த மனிதர் நடந்து சென்று இருந்தபோது அந்த மனிதருடன் ஒத்துப்போகாத மக்கள் இன்றும் இருக்கிறார்கள். அவர் உண்மையாகவும், வரலாறு பூர்வமாகவும் வசித்திருந்தால், அவர்கள் அனைவரும் கண்டிக்கப்படுகிறார்கள். அவர்கள் இந்த மனிதன் வாழவே இல்லை என்று நிரூபிக்க வேண்டி யிருக்கிறது. இது ஒரு கட்டுக்கதை. அப்போதுதான் அவர்களுக்கு நிம்மதியாய் இருக்கும்.

புத்தர், ஏசு, கிருஷ்ணர்-இவர்களெல்லாம் வாழவே இல்லை என்பதை அவர்கள் நிரூபித்துவிட்டால், கடவுள் இல்லை என்று நிரூபித்து விட்டால், அப்போது தான் அவர்கள் ஓய்வு எடுக்க முடியும், அப்போது அவர்கள் எப்படி இருப்பினும் அப்படியே இருக்கலாம். அவர்களுக் குச் சமமாக யாரும் இல்லை.

அவர்களே வாழ்க்கையின் கடைசிப் புகலிடம். எந்த மாற்றமும் தேவைப்படாதவர்களாக அவர்கள் தொடர்ந்து இருக்கலாம். அப்புறம் அவர்கள் எது வேண்டுமானாலும் செய்யலாம். அவர்கள் விருப்பப்படியே எப்படி வேண்டு மானாலும் இருக்கலாம். அப்புறம் அவர்கள் எப்படிப்பட்ட இழிவான செயலையும் செய்யலாம்; எப்படிப்பட்ட குப்பை வார்த்தைகளையும் பேசலாம்; எப்படிப்பட்ட முறையில் வேண்டுமானாலும் இருக்கலாம். ஏற்கெனவே அவர்கள் மொடாக் குடியர்கள் தான்.

ஆனால் புத்தரைப் போன்று ஒளியுடன், புகழுடன் மகிமையுடன் ஒரு மனிதர் இந்தப் பூமியில் நடந்தால், அதை அவர்களால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. அது அவர்களைத் துன்புறுத்துகிறது. கண்ணை உறுத்துகிறது.

பெ.வ.கு. முக்கோணத்திலிருந்து வெளியே வாருங்கள் என்று சொல்லும்போது இதைத் தான் நான் சொல்ல

நினைக்கிறேன். ஏனென்றால் நீங்கள் பதில் கொடுத்தால் நீங்கள் எதிர்ச்செயல் செய்கிறீர்கள்.

நீங்கள் அமைதியாக இருங்கள். வெறுமனே சும்மா, உங்கள் மையத்தில் நீங்கள் இருங்கள். எந்தக் காரணத்தைக் கொண்டும் கவனம் சிதையாதீர்கள். நீங்கள் மௌனமாக, தெளிவாக, ஒருமையுடையவராக, அமைதியாகச் சும்மா வெறுமனே இருங்கள். அதுபோதும்.

அது புரிந்துகொள்ளப்பட வேண்டும். ஏனென்றால் இத்தகைய மனிதனுக்குப் பதிலளிப்பதில் என்ன பொருள் இருக்கிறது?

முதலாவதாக, அவர் புரிந்துகொள்ள மாட்டார்; இரண்டாவதாக, அவர் தவறாகப் புரிந்து கொள்வார்.

கடைசி நிமிடத்தில், சிலுவையில் அறையும் தண்டனை தருவதற்கு முன்பு, பிலாத்து, இயேசுவைக் கேட்டார். 'உண்மை என்ன' என்று. ஆனால் இயேசு அதற்கு அமைதியாக இருந்தார். ஒரு வார்த்தை கூட அவர் சொல்லவில்லை. அவர்தன் வாழ்க்கை முழுவதிலும் உண்மையைத் தான் பேசிக்கொண்டிருந்தார். அவரது முழு வாழ்க்கையும் உண்மைக்குச் சேவை செய்வதிலேயே அர்ப்பணிக்கப் பட்டது. ஆனால், அந்தக் கடைசி நொடியில் ஏன் அவர் அமைதி ஆனார்? ஏன் அவர் பதில் அளிக்கவில்லை? விடை மிகவும் பயனற்றது என்று அவர் அறிவார். அதனால் எதுவும் நடந்துவிடப் போவதில்லை. அதே நேரத்தில் எந்தப் பதில் சொல்லியிருந்தாலும் அது தவறாகப் புரிந்து கொள்ளப்படும் சாத்தியம் அதிகம்.

மௌனம் தான் அவரது விடை. ஆம். மௌனம், அதிக ஊடுருவும் சக்தி உடையது. அவரது சீடர் அந்தக் கேள்வியைக் கேட்டிருந்தால் நிச்சயம் அவர் பதில் அளித்திருப்பார்.

ஏனென்றால் சீடன் புரிந்து கொள்ளத் தயாராய் இருப்பான். ஏற்கும் நிலையில் இருப்பவன் அவன். தனக்குச் சொன்னதைப் பற்றி மிகவும் கவனத்தோடு இருப்பவன் அவன். அதை நன்கு போஷிப்பான்; ஜீரணிப்பான்; அந்த வார்த்தை அவனுக்குள் சதையாக மாறும்.

ஆனால் பிலாத்து சீடன் அல்லன். அவன், ஆழமான பணிவோடு அதைக் கேட்கவில்லை. அவன் எதையும் கற்றுக் கொள்ளத் தயாராய் இல்லை. சும்மா கேட்கிறான். ஓர் ஆர்வத்தினால் கேட்டிருக்கலாம். சும்மா ஒரு நகைச்சுவைக்காகக் கேட்டிருக்கலாம்! இந்த மனிதரைக் கேலிக்குரிய ஒரு மனிதனாக ஆக்க வேண்டும் என்றும் நினைத்திருக்கலாம். இயேசு அமைதியாக இருந்தார். மௌனம் தான் அவரது பதில்.

மேலும் புத்தர் கூறுகிறார்:

நான் மௌனம் காத்தேன்.
அவனுக்கு பதில் சொல்லவில்லை.
அந்த குற்றச்சாட்டு நின்றது.

ஏனென்றால் அந்த மௌனம் அந்த மனிதனை மிகவும் வியக்க வைத்திருக்க வேண்டும். ஏதோ ஒரு பதில் சொல்லியிருந்தால், அவனால் புரிந்து கொண்டிருந்திருக்க முடியும். ஆனால் அவரது மௌனத்தை அவனால் புரிந்து கொள்ளவே முடியவில்லை. அவன் அதிர்ச்சி அடைந்திருக்க வேண்டும்.

அவன் குற்றஞ்சாட்டுகிறான். ஆனால் புத்தரோ அமைதியாக, மௌனமாக சும்மா இருக்கிறார்.

அவன் அவரை அவமானப்படுத்துகிறான். ஆனால் புத்தர் எந்தப் பாதிப்பும் இன்றி இருக்கிறார். அவர் பாதிப்பு அடைந்திருந்தால், தொல்லைப்பட்டிருந்தால், அவரது கவனம் சிதைந்திருந்தால், அந்த மொழியை அந்த மனித

னால் புரிந்து கொண்டிருந்திருக்க முடியும். ஏனென்றால் அது அவன் அறிந்த மொழி; ஆனால், அவன், இந்த மௌனமொழியை, அருள் மொழியை, சமாதான மொழியை, அன்பு மொழியை, காருண்ய மொழியை முற்றிலுமாக அறியாதவன்.

அதனால் அவனுக்குச் சங்கடம் ஏற்பட்டிருக்க வேண்டும். அவனுக்கு அது புதிராக இருந்திருக்க வேண்டும். அவனால் அதை அடையாளம் காண முடியவில்லை. அவனுக்கு இது ஒரு பேரிழப்பு.

குற்றஞ்சாட்டுதல் நின்று போனது. தொடர்ந்து சொல்வதில் என்ன பொருள் இருக்கிறது? இந்த மனிதன் கிட்டத்தட்ட ஒரு சிலைபோல் நிற்கிறார்.

அவர் பதில் கூறவில்லை. அவர் எதிர்ச்செயல் செய்யவில்லை.

**நான் பிறகு அவனை கேட்டேன், நீ ஒரு பரிசு உன் அண்டை வீட்டுக்காரனுக்குக் கொடுத்தால் அவன் அதை ஏற்றுக்கொள்ளாவிட்டால் அது உன்னிடமே திரும்பி வந்து விடுமல்லவா?**

அவனுக்குப் பதில் அளிப்பதைவிடக் 'குற்றச்சாட்டு' நின்றவுடன், புத்தர் அவனைக் கேட்டார்.

சொல்லாமலே ஏதோ ஒன்றை அவர் காட்டியுள்ளார். அந்த மனிதனை அவர் கேட்டார். அதை அவர் அன்பளிப்பு என்று கூறுகிறார்.

**"நீ உனது பக்கத்து வீட்டுக்காரருக்கு ஒரு பரிசு கொடுக்கும்போது, அவர் அதை ஏற்க மறுத்துவிட்டால், அந்தப் பரிசு உன்னிடமே திரும்பி வந்து விடுமல்லவா?"**

**அந்த மனிதன் "வந்துவிடும்" என்று பதில் கூறினான்.**

கண்டனம் செய்தாய், ஆனால் நான் அவைகளை ஏற்றுக் கொள்ளாததால் நீ அந்த தவறானவற்றை உன்னிடமே திரும்ப எடுத்துக்கொள்ள வேண்டும். அது சத்தம் எதிரொலிப்பதைப் போன்றது. அது நிழல் நிஜத்தைப் பின்தொடர்வது போன்றது. தீய செயல்களை விதைத்தால் அதன் பலனை நீங்கள் அனுபவித்தே தீர வேண்டும். அதனால் தீய செயல்கள் செய்வதை முழு கவனத்தோடு இருந்து நிறுத்தி விடுங்கள்.

உண்மையில் அந்த மனிதன் 'நான் அதைத் திருப்பித் எடுத்துக்கொண்டு விடுவேன்' என்று சொல்லியிருக்க வேண்டும்.

அவன் பரிவுக்கு ஆளானான்; மீண்டும் பழைய வழியில் அவனால் திரும்ப முடியாது. புத்தர் கூறினார். நீங்கள் எனக்கு ஓர் அன்பளிப்பு அளித்தால்-அது அவனமானப் படுத்துவதாக, குற்றச்சாட்டாகக் கூட இருக்கலாம். அதை நான் ஏற்கவில்லை என்றால்? நீங்கள் கொண்டு வரலாம். அது உங்கள் சுதந்திரம். அதை ஏற்பதா வேண்டாமா என்பது என் சுதந்திரம். அது என் விருப்பம்.

புரிந்து கொள்ள வேண்டிய மிகவும் அழகான விஷயம் இது. நீங்கள் அந்த அவமானத்தை ஏற்காத வரை அது அர்த்தமில்லாததாகத் தான் இருக்கும்.

நீங்கள் அதை உடனடியாக எடுத்துக்கொள்ளா விட்டால் அது ஒரு சத்தம் தானே தவிர, அதனால் உங்களை ஒன்றும் செய்துவிட முடியாது. உங்களுக்கும் அதற்கும் எந்தத் தொடர்பும் கிடையாது.

அதனால் உண்மையில் உங்களை யாருமே அவமானப் படுத்த முடியாது. அதை ஏற்காதவரை, அதனோடு நீங்கள் ஒத்துழைக்காத வரை நீங்கள் அவமானப்பட வாய்ப்பே இல்லை.

ஆகவே, எப்போதாவது நீங்கள் அவமானப்படுத்தப் பட்டால், நீங்கள் அவமானப்படுத்தப் பட்டதாக உணர்ந் தால், அது உங்கள் சொந்தப் பொறுப்பு ஆகும்.

ஆனால், எந்தக் காரணம் கொண்டும், யாரோ பிறர் உங்களை அவமானப்படுத்தியதாகச் சொல்லாதீர்கள்.

நீங்கள் ஏன் அதை ஏற்றுக் கொண்டீர்கள். யாரும் உங்களை ஏற்கும்படி கட்டாயப்படுத்த முடியாதே. அவனது சுதந்திரம் அவமானப்படுத்துவது என்றால் உங்கள் சுதந்திரம் அதை ஏற்பதும் ஏற்காததும். அதை ஏற்றுக்கொண்டால் அப்போது உங்கள் பொறுப்புத்தான். அதனால் அப்புறம் அவர்கள் உங்களை அவமானப்படுத்தி விட்டதாகச் சொல்லாதீர்கள்.

வெறுமனே சொல்லுங்கள். 'நான் விழிப்புணர்வோடு இல்லை. விழிப்புணர்வின்மையினால் நான் அதை அப்படியே ஏற்றுக் கொண்டேன். அதனால் துன்பம் கொண்டேன். "உங்களுக்குத் தேவைப்படுவதை ஏற்றுக் கொள்ளுங்கள். வளர்ச்சியை மட்டும் ஏற்றுக் கொள்ளுங் கள்? விஷத்தை ஏன் ஏற்கிறீர்கள்?'' என்று புத்தர் கூறுகிறார். யாரோ ஒருவர், கோப்பை நிறைய விஷத்தை உங்களுக்கு அன்பளிப்பாக வழங்க வருகிறார். 'நன்றி ஐயா, ஆனால் எனக்கு அது தேவையில்லை. நான் எப்போதா வது தற்கொலை செய்துகொள்ள நினைத்தால் நானே உங்களிடம் வந்து கேட்பேன். ஆனால் இப்போது எனக்கு அது தேவையில்லை. நான் வாழ விரும்புகிறேன்' என்று சொல்லுங்கள். தேவையில்லை. யாரோ ஒருவர் விஷம் கொண்டுவந்து விட்டதனாலேயே நீங்கள் அதைக் குடித்துவிட்டுச் சாகவேண்டும் என்று கட்டாயமில்லை. நீங்கள் சும்மா 'நன்றி' என்று சொல்லலாம். அதுதான் புத்தர் செய்தது!

"நான் ஏற்றுக் கொள்ளவில்லையென்றால் அதை வைத்துக் கொண்டு நீ என்ன செய்யப்போகிறாய்? நீ அதைத் திரும்பப் பெற்றுத்தான் ஆகவேண்டும். நான் உங்களுக்காக மிகவும் வருந்துகிறேன். அதை நீங்கள் எடுத்துக் கொண்டு தான் ஆகவேண்டும்." அது உங்கள் மேல் தான் விழும்.

"ஒரு பொருளின் மீது அதன் நிழல் விழுவதைப்போல, ஒலியைத் தொடர்ந்து எதிரொலி தோன்றுவது போல அது இயற்கை" என்று புத்தர் கூறுகிறார்.

இப்போது அது உன்னை எக்காலமும் முக்காலமும் பின் தொடரத்தான் செய்யும்.

உங்கள் இருத்தலுக்கு உங்கள் அவமானம் என்பது ஒரு முள்ளைப் போன்றது. இப்போது அது உங்களைப் பற்றிக் கொள்ளப்போகிறது. நீ எனக்கு எதிராக எதுவுமே செய்ய வில்லை. உனக்கு எதிராக ஏதோ செய்து கொண்டாய்.

தனக்கே தீங்கு செய்து கொண்டு விட்ட அந்த மனிதனுக்காகப் புத்தர் மிகவும் வருந்துகிறார். புத்தர் அவனிடம் கருணை கொள்கிறார்.

ஆகவே முழுக்கவனத்தோடு இருங்கள். உங்களை எது பின்பற்ற வேண்டும் என நீங்கள் விரும்புகிறீர்களோ அதையே செய்யுங்கள் உங்களைப் பின்பற்றுவதையே நீங்கள் செய்யுங்கள். உங்களுக்குச் சந்தோஷம் இருக்கும்.

பாடல் பாடுங்கள். அந்த எதிரொலி வருமானால், அவை மேலும் அதிகப் பாடல்களை உங்கள் மேல் பொழியும்.

அருகிலுள்ள மலை வாசஸ்தலம் மாதுராமில், நான் பல முகாம்களை நடத்துவது வழக்கம். முதல் முகாம் ஒரு எதிரொலி முனையாகும். நான் அந்த இடத்தைப் பார்க்கச் சென்றிருந்தேன். என்னோடு சில நண்பர்கள் இருந்தார்கள். ஒருவர் நாயைப் போல் குரைக்கத் தொடங்கினார்.

அவ்வளவுதான். அந்தப் பள்ளத்தாக்கு முழுவதுமே பல நாய்களால் நிரம்பியிருப்பது போல் பல நாய்களின் குரைப்பொலி கேட்டது.

பாடம் கற்றுக் கொள்ளுங்கள்-இதுதான் வாழ்வின் சூழ்நிலை. வாழ்க்கையே ஓர் எதிரொலி முனைதான். நீங்கள் நாயைப் போல் குரைத்தால் பள்ளத்தாக்கு முழுவதும் நாய்க்குரைப்புத்தான் எதிரொலிக்கும்; அது தான் உன்னைப் பின்தொடரும். அதுவுன்னைப் பிடித்துக் கொள்ளும். நீங்கள் ஏன் ஒரு பாடல் பாடக்கூடாது? என்று நான் கேட்டேன்.

நண்பர் அந்தக் கருத்தைப் புரிந்துகொண்டுவிட்டார்; அவர் ஒரு பாடலைப் பாடினார். முழுப் பள்ளத்தாக்கும் பாடலைப் பொழிந்தது, எதிரொலித்தது.

அது உங்களைச் சார்ந்தது தான். மற்றவர்களுக்கு நீங்கள் என்ன செய்கிறீர்களோ, உண்மையில் உங்களுக்கு நீங்களே செய்து கொள்வது தான் அது-ஏனென்றால் எல்லா இடங்களிலிருந்தும் விஷயங்கள் திரும்பி வரும், ஆயிரம் மடங்காகத் திரும்பி வரும். பிறர் மீது நீங்கள் பூக்களைப் பொழிந்தால், பூக்கள் உங்கள் மீது பொழியப்படும். நீங்கள் பிறரது பாதைகளில் முட்களை விதைத்தால், அந்தப் பாதை உங்களுடையதாக ஆகிவிடும்.

முதலாவதாக நமக்கு நாமே செய்து கொள்ளாத எதையும் நாம் எவருக்கும் செய்துவிட முடியாது.

நாம் எதையாவது யாருக்காவது செய்ய வேண்டும் என்றரல், அவர் ஏற்றுக் கொண்டால் தான் நம்மால் செய்ய முடியும். ஆனால் அது அவ்வாறு முடிந்த முடிவானது இல்லை. அவர் ஒரு புத்தராக, இயேசுவாக, உங்கள் முன் அமைதியாக உட்கார்பவராக இருக்கலாம். அப்போது அந்தச் செயல் நம்மீது வந்து விழுந்து விடுகிறது.

புத்தர் கூறுகிறார்:

**எனவே முழுக்கவனத்தோடு இருங்கள்.**

அவர் மிக்க ஆழ்ந்த கருணையோடு சொல்லியிருக்க வேண்டும்.

**..."தீங்கு செய்வதிலிருந்து விலகி விடுங்கள்"**

ஏனென்றால், தேவையில்லாமல் நீங்கள் வருந்தக்கூடும்.

மீண்டும் ஒரு விஷயத்தைத் திரும்பச் சொல்கிறேன். நீங்கள் நினைவு வைத்துக் கொள்வதற்காக. நீங்கள் மூன்று அடுக்குகள் உடையவர்கள்; குழந்தை, பெற்றோர், வயது வந்தவர்-நீங்கள் யாருமில்லை.

நீங்கள் குழந்தையில்லை, பெற்றோர் இல்லை, வயது வந்தவரும் இல்லை. நீங்கள் இவற்றுக்கு அப்பால் உள்ளீர்கள் நீங்கள் அழியாத ஏதோ ஒன்று! நீங்கள் இந்தச் சண்டை போடும் பாகங்களுக்கு அப்பால் இருக்கிறீர்கள். தேர்ந்தெடுக்காதீர்கள்; முழுக்கவனத்தோடு சும்மா இருங்கள். முழுமனதோடு செயல்படுங்கள். அப்போது நீங்கள் குழந்தைத் தனமானவராக இல்லாமல் ஆனால் குழந்தையாக உள்ளார்ந்தவராக- தானியங்குபவராக- இருப்பீர்கள்.

நன்றாக நினைவு கொள்ளுங்கள், குழந்தையைப் போல இருப்பதற்கும், குழந்தைத்தனமாக இருப்பதற்கும் உள்ள வித்தியாசத்தை நினைவு வைத்துக்கொள்ளுங்கள்.

இவை இரண்டும் வித்தியாசமான விஷயங்கள்.

முழு மனதுடன் நீங்கள் செயல்பட்டால், நீங்கள் குழந்தையைப் போன்றவராக இருப்பீர்கள். ஆனால் குழந்தைத்தனமாக இருக்க மாட்டீர்கள்.

முழுக்கவனத்தோடு நீங்கள் செயல்பட்டால், எல்லாக் கட்டளைகளையும் நீங்கள் பின்பற்றாமலேயே, நீங்கள் பின்பற்றிக் கொண்டிருப்பீர்கள்.

நீங்கள் முழுக்கவனத்தோடு செயல்பட்டால், நீங்கள் எதைச் செய்தாலும் அது காரணகாரியம் உள்ளதாக இருக்கும்.

காரணகாரியத்தோடு இருப்பது என்பது உண்மையி லேயே நினைவு கொள்ளுங்கள். காரணகாரியத்தோடு இருப்பது என்பது பகுத்தறிவுக்கு வேறுபட்டது; காரண காரிய உணர்வு என்பது மிக மிக வித்தியாசமான விஷயம். ஏனென்றால், காரணகாரிய உணர்வு, பகுத்தறிவின்மை யைக்கூட வாழ்க்கையின் ஓர் அங்கமாக ஏற்றுக் கொள் கிறது. காரணம் சலிப்பளிக்கக் கூடியது. பகுத்தறிவுத் தன்மை என்பதும் சலிப்பளிக்கக் கூடியதுதான். காரண காரிய உணர்வு என்பது விஷயங்களில் துருவத்தன்மையை ஏற்றுக் கொள்கிறது.

காரணகாரியவுணர்வுள்ள மனிதன், பகுத்தறிவு மனி தனைப் போன்றே அதே அளவு உணர்ச்சியுள்ள மனிதன்.

ஆகவே, உங்கள் உள்ளார்ந்த இதயத்தின் மையப் பகுதியிலிருந்து நீங்கள் செயல்பட்டால் நீங்கள் மாபெரும் அளவில் திருப்தி உடையவர் ஆவீர்கள்; ஏன் திருப்தி உள்ளவர் ஆவீர்கள் என்றால், உங்கள் எல்லா அடுக்கு களும் நிரப்பப்பட்டிருக்கும்.

நீங்கள் தானியங்கியாக இருப்பதால் உங்கள் குழந்தை நிரப்பப்படுகிறது. உங்கள் உள்ளார்ந்த விழிப்புணர்வுத் தன்மையினால்-எல்லா நல்ல செய்கைகளையும் நீங்கள் செய்து விடுவீர்கள். அதனால் உங்கள் பெற்றோர் உங்களிடம் கோபதாபம் கொள்ளவே மாட்டார்.

நீங்கள், மோசஸின் பத்துக்கட்டளைகளைச் சிறிதும் கேள்விப்படாமலே, அவற்றைப் பின்பற்றுவீர்கள். இயல்பாகவே அவற்றைப் பின்பற்றுவீர்கள். மோசஸ் அவர்களை அந்த இடத்தில் தான் பிடித்தார்-மலைகளில் அல்ல உள்ளார்ந்த சிகரங்களில்! நீங்கள் லாவோட்ஸுவையும், இயேசுவையும் பின்பற்றிக் கொண்டிருப்பீர்கள். ஆனால், நீங்கள் லாவோட்ஸுவையும், இயேசுவையும் கேள்விப் பட்டிருக்கக்கூட மாட்டீர்கள்.

அங்குத்தான் அவர்கள் தங்கள் குழந்தைப் பருவத்தை மீண்டும் பெற்றார்கள்; அங்குத்தான் அவர்கள் பிறந்தார்கள். நீங்கள் மனுவையும், மகாவீரரையும், முகம்மதுவையும் பின்பற்றிக் கொணடிருக்கிறீர்கள், மிக இயல்பாக, ஆனால் நீங்கள் பகுத்தறிவற்றவராக இருக்கவே மாட்டீர்கள்.

உங்கள் மனம் முழுமையாக அதை ஆதரவு செய்யும். உங்கள் வயது வந்த நிலையின் பகுத்தறிவுக்கு அது எதிரானதாக அமையாது.

உங்கள் வயதுவந்த பகுத்தறிவுடைமை, நிச்சயம் அதனோடு ஒத்துப்போகும்-உங்கள் பெர்ட்ரண்ட்ரஸ்ஸல் இதனோடு இணங்கிப்போவார்.

அப்புறம் உங்கள் மூன்று முரண்பாட்டுப் பாகங்களும் முழுமையான ஒரே பாகமாக மாறிவிடும். நீங்கள் ஒற்றுமை ஆகிவிடுகிறீர்கள்; நீங்கள் ஒன்றாய் இருக்கிறீர்கள். அப்புறம் அந்தப் பல ஒலிகள் மறைந்துவிடும். அப்புறம் நீங்கள் பலர் அல்லர்; நீங்கள் ஒருவரே! அந்த ஒன்றாதலே குறிக்கோள்.

எனவே முழுக்கவனமாய் இருங்கள்.



ஒருவரை அவராகவே இருக்க ஏன் விடுவதில்லை? நாம் ஏன் நம்மை நாமாக ஏற்றுக்கொண்டு பிறரையும் பிறராக அப்படியே ஏற்றுக்கொண்டு வாழக்கூடாது?

நம்மை நாம் வித்தியாசப்படுத்திக் கொள்வதற்காக வாலைத் துரத்தும் விளையாட்டும் நாம் ஏன் தொடர்கிறோம்? அதாவது அதிக வெளிப்படையாக இருந்தால் அதிக விழிப்புணர்வு எல்லாம் சிறந்தவை என்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள். /எல்லாப் பொருள் களும் அவ்வவற்றின் இயல்புகளோடு அப்படியே சிறந்தவை தான் / என்று சொல்லியிருக்கிறீர்கள்.

நாம் இப்போது புதிய விளையாட்டைத் தொடங்கி வைத்திருக்கிறோமோ? இந்தப் பழைய விளையாட்டு மிகவும் சலிப்பைத் தந்துவிட்டது.

வாழ்க்கையிலும் காதலும், அச்சமும், பாதுகாப்பின்மையும் மிகவும் தரமானவை—அவை இருக்கும் நிலையிலேயே! அழகானவை.

இன்னும் 'அதிகமாக' எதுவும் இருக்குமா?

முதலாவது புரிந்துகொள்ள வேண்டிய விஷயம். 'அதிகம்' என்பது ஏற்கெனவே நடந்துவிட்டது. மேலும் அதிகமாக எதுவும் இருக்க முடியாது. ஆனால் இதை ஏற்றுக் கொள்ள முடியாமல் இருக்கலாம். நீங்கள் எப்போதும் கற்பனையை அதிகமாகச் செய்யலாம்.

ஒவ்வொரு கற்பனையிலிருந்தும் எப்போதும் அதிக மானது எதிர்பார்க்க வாய்ப்பு உள்ளது! உங்கள் கற்பனை யினால்தான் சிக்கல் உருவாகிறது. கற்பனையை நீங்கள் விட்டுவிட்டால் ஒழிய அதிலிருந்து விடுபடுவது இயலாது.

உங்களிடம் பத்தாயிரம் ரூபாய் இருக்கிறது. நீங்கள் அதிகமாகவும் கற்பனை செய்து கொள்கிறீர்கள். உங்களி டம் கோடி ரூபாய் இருக்கிறது. இன்னும் கூட அதிகமாக நீங்கள் கற்பனை செய்து கொள்ளலாமே! கற்பனைக்கு முடிவே இல்லை.

'அதிகம்' என்பது கற்பனைத் திறனிலிருந்து வருகிறது. மரங்கள் 'அதிகம்' வேண்டும் என்பதற்காக கொண்டிருக்க வில்லை. எந்த வளர்ச்சிக்காகவும் மிருங்கங்கள் ஏங்கிக் கொண்டிருப்பதில்லை. காரணம் மிகச் சாதாரணம். ஆம். அவற்றிற்குக் கற்பனை இல்லை.

புத்தர்கள் எங்கும் சென்று கொண்டிருப்பதில்லை. அவர்கள் கூட இந்தப் பைத்தியங்ககார விளையாட்டின் ஒரு பாகமாக இருப்பதில்லை. ஏனென்றால் அவர்கள் கற்பனையை விட்டு விட்டார்கள்.

நீங்கள் கற்பனையை விடாவிட்டால், 'அதிகத்தை' நீங்கள் விடமுடியாது; அதிகம் என்பதன் சாதாரணப் பொருள் நீங்கள் கற்பனை செய்ய முடியும் என்பதுதான். நீங்கள் காதலிக்கிறீர்கள். நீங்கள் இன்னும் அதிகமாக ஏற்பட முடியும் என்று கற்பனை செய்ய முடியும்–அதிகம் நடக்க முடியும். அதனால் தான் மனிதன் தொடர்ச்சியான அதிருப்தியில் எப்போதும் தங்கியுள்ளான். கற்பனை தான் 'அதிருப்தியை' உருவாக்குகிறது.

இதிலிருந்து விடுபட ஒரு வழி என்னவென்றால் நீங்கள் முட்டாள்தனமாக ஆக வேண்டும். பின்னால் விழ வேண் டும். முட்டாள்கள் துன்பப்படுவதேயில்லை. முட்டாள்கள்

எப்போதுமே மகிழ்ச்சியான உணர்வில் இருப்பதை நீங்கள் கண்டிருக்கலாம். அவர்கள் கற்பனை செய்ய முடியாது.

அவர்கள் கற்பனா சக்தி இல்லாதவர்கள். மதம் என்னும் பெயரால் பலபேர்கள் முட்டாள்களாக முயற்சி செய்திருக்கிறார்கள். உங்களை முட்டாள்தனமாக எவை ஆக்குமோ, அப்படிப்பட்ட விஷயங்களைப் பலர் செயல் படுத்தியிருக்கிறார்கள்.

உலக வாழ்விலிருந்து தப்பித்துக் கொண்டு, துறவற வாழ்க்கையை-உறவில்லாத ஒரு வாழ்க்கையை-வாழும் போது-முழுமையாகத் தனியான வாழ்க்கை வாழும் போது-உங்களுக்கு நீங்களே சலிப்படைந்து-வெகு விரை வில் நீங்கள் மந்தமாகி, உங்கள் கற்பனையை நீங்கள் இழந்து- நீங்கள் முடங்கிப் போய்விடுகிறீர்கள்.

நீங்கள் இதைப் பல வழிகளில் செய்யலாம். நீங்கள் பல வழிகளைப் பயன்படுத்தலாம்.

/ மணிக்கணக்காக நீங்கள் உங்கள் தலையால் நிற்கலாம்- அது உங்கள் மனதின் நுட்பமான திறமைகளையெல்லாம் அழித்துவிடும். யோகிகள் எனப்படுவோர் இதைத்தான் செய்து கொண்டிருந்தார்கள். ரத்தம் வேகமாக மிக அதிகமாக முட்டி மோதிக் கொண்டு மூளைக்குள் பாயும் போது பல சின்னஞ்சிறிய நரம்புகளையெல்லாம் அழித்து விடுகிறது. அதன்மூலம், வெகுவிரைவில் நீங்கள் மந்தமாக வும் முட்டாளாகவும் ஆகிவிடுகிறீர்கள்.

போதை மருந்துகளிடம் போகலாம்-வெகுவிரைவில் உங்கள் நுண்ணிய திறமைகளை நீங்கள் இழந்துவிடுவீர்கள். உங்கள் ஏற்கும் திறன் உங்களை விட்டுப்போய் விடும்.

நீங்கள் தேங்கிப் போனவர் ஆவீர்கள். தனியானவர் ஆகிவிடுவீர்கள். தொலைதூரத்தில் இருப்பீர்கள், விரக்தி யாக மாறிவிடுவீர்கள்; உங்களுக்குள் நீங்கள் உங்களை உள்

வாங்கிக் கொள்வீர்கள். நீங்கள் மிகவும் அடைபட்டவராக மாறுகிறீர்கள். உங்கள் கற்பனையை நீங்கள் இழந்து விடுகிறீர்கள்.

இது மக்களுக்கு மிகவும் எளிதாகத் தோன்றுகிறது. கற்பனையை இழப்பதற்கு! ஏனென்றால் நீங்கள் மலைமேலிருந்து கீழே சரிந்து கொண்டிருக்கிறீர்கள்! அது எளிதுதானே, ஏறுவதைவிட!

ஆனால் இது ஆனந்தமயமாவதற்கான வழியல்லவே அல்ல. ஏனென்றால்/ஆனந்தமயமாக இருப்பது எப்போது சாத்தியமாகும் தெரியுமா? நீங்கள் முற்றிலும் நுண்ணறிவு பெற்றவராக இருந்தால் தான் சாத்தியமாகும்./

மரங்கள் 'அதிகம்' வேண்டும் என்று ஏங்கிக் கொண்டிருப்பதில்லை. ஆனால் அவை ஆனந்தமயமாகவும் இருப்பதில்லை. ஏனென்றால் அவை விழிப்புணர்ச்சியோடு இருப்பதில்லை./நீங்கள் விழிப்புணர்வோடு இல்லையென்றால் ஆனந்தமயமாக இருப்பது எவ்வாறு நிகழும்?]

அவை ஆனந்தமயமாகக் காட்சியளிக்கின்றன. ஏன் தெரியுமா? அவற்றை நம்மால் பார்க்க முடிகிறது, கவனிக்க முடிகிறது, ஏனெனில் நம்மால் உற்றுநோக்க முடியும்.

பூக்கள் அழகானவையாக நமக்குக் காட்சி தருகின்றன. குழந்தைகள் அழகானவர்களாக நமக்குக் காட்சி தருகின்றன.

அவ்வளவு மௌனம்-அவ்வளவு நிர்மலம்-அப்பாவித் தன்மை-ஏனென்றால் நாம் உற்று நோக்க முடியும், நம்மால் விழிப்புணர்வோடு இருக்க முடியும். அவர்கள், அவர்களுக்குள்ளே விழிப்புணர்வின் முற்றத்தில் தான் நின்று கொண்டிருக்கிறார்கள். அங்கே எதுவும் நிகழவில்லை, ஏனென்றால் நிகழ்ச்சி என்பது விழிப்புணர்வோடு தான் தொடங்குகிறது. நீங்கள் மந்தமான வாழ்க்கையில்,

சலிப்பான, தேங்கிப்போன- சமதளமான வாழ்க்கையில் விழுந்துவிட முடியும். ஆனால், அதற்கப்புறம் விளை யாட்டு என்பதே அங்கில்லை.

அல்லது நீங்கள் மேலே எழமுடியும்; நீங்கள் மேல் நோக்கி நகரமுடியும். நீங்கள் மலையுச்சிக்கே முன்னேறிச் சென்று அங்கிருந்து கீழே பள்ளத்தாக்குகளைப் பாருங்கள், முழுவிளையாட்டும் அர்த்தமற்றதாகி விடுகிறது.

நீங்கள் ஆட்டம் விளையாடுவதை நிறுத்தி விட்டீர்கள் என்பதல்ல. நீங்கள் தொடர்ந்து விளையாடுகிறீர்கள்- ஏனென்றால் அது அர்த்தமற்றது. ஆனால் அழகானது. ஒரு குறிக்கோளும் இல்லாமல், எந்த எண்ணமும் இல்லா மல், நீங்கள் தொடர்ந்து விளையாடுகிறீர்கள். நீங்கள் அதில் பங்கு கொள்கிறீர்கள், ஆனால் நீங்கள் இனிமேலும் ஒரு ஆட்ட உறுப்பினர் இல்லை.

ஜென் பொன் மொழியின் அர்த்தம் இதுதான். 'இந்த உலகில் இருங்கள். ஆனால் அதனுடையதாக இருக்காதீர் கள்' 'இந்த உலகத்தில் நீங்கள் இருங்கள். ஆனால் அந்த உலகம் உங்களுக்குள்ளே நுழையாமல் பார்த்துக் கொள் ளுங்கள். ஆற்றில் செல்லுங்கள்; ஆனால் ஆற்றின் நீர் உங்கள் மீது படாமல் பார்த்துக்கொள்ளுங்கள். தண்ணீர் உங்களைத் தொடாமல் பார்த்துக் கொள்ளுங்கள்.

அது ஆட்டம்தான் என்று சரியாகப் புரிந்து கொண் டால், அந்த ஆட்டத்தில் எந்தத் தவறும் இல்லை. அப்போது நீங்கள் ஆட்டத்தை விளையாடலாம். சிக்கல் எப்போது எழுகிறது தெரியுமா? நீங்கள் விளையாட்டி லேயே தீவிரமாய் ஈடுபடும்போது தான் சிக்கல் எழுகிறது.

நீங்கள் மக்களைக் கவனிக்கலாம். சீட்டு விளையாடும் போது கூட மிகவும் தீவிரம் ஆகி விடுகிறார்கள். சதுரங்கம் ஆடும்போதுகூட அவர்கள் தீவிரமாகி மிகவும் இறுக்க

மாகிவிடுகிறார்கள். அவர்களுக்குத் தெரியும் அவர்கள் ஆட்டம்தான் ஆடுகிறார்கள் என்று. அதை மீண்டும் மீண்டும் மறந்து போய் விடுகிறார்கள். விளையாட்டு தீவிரமாகிறது.

ஆட்டத்தில் கலந்து கொள்வது அழகானதுதான். சதுரங்கம் அழகியது. நுண்ணறிவைக் கூர்மைப்படுத்தும் ஒரு சாதனம் தான் அது. ஆனால் அதிலும் தீவிரமாகி விடுவது, ஏக்கத்தை உருவாக்குகிறது, தீவிரமாக மாறுவது என்பது பைத்தியமாக்கக்கூடிய விஷயம் ஆகும்.

நான் எகிப்துச் சக்கரவர்த்தி ஒருவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். சதுரங்கத்தைத் தீவிரமாக விளையாடிய காரணத்தால் அவர் பைத்தியம் ஆகிவிட்டார். அவரது முழுவாழ்வும் எதன் மீதுமில்லை- வெறும் சதுரங்கம் பற்றிய கவலைதான்! அவர் பைத்தியமாகிய போது அவரது மருத்துவர்கள் மிகவும் கவலை கொண்டார்கள். அவர்கள் நாடு முழுவதும் விசாரித்தார்கள். வயதான அறிவாளிகள் பலரிடம் என்ன செய்வதென்று கேட்டார்கள்.

"யாராவது ஒரு நல்ல சதுரங்க விளையாட்டுக்காரர் அவருடன் சேர்ந்து விளையாடக் கிடைத்தால் அவர் குணமாகி விடுவார். ஆனால் அந்த விளையாட்டுக்காரன் மிகவும் தீவிர விளையாட்டுக்காரனாகவும் உண்மையிலேயே அவருக்குப் பொருத்தமானவனாகவும் இருக்க வேண்டும்" என்று சூஃபி மார்க்கஞானி ஒருவர் கூறினார்.

என்ன தேவையோ அதைக் கொடுக்க அவர்கள் தயார் ஆனார்கள். உலகத்திலேயே மகத்தான சதுரங்கம் ஆட்டக்காரர்களில் ஒருவன், உலகசாம்பியன், வந்து விளையாடுவதாக ஒப்புக் கொண்டான். அந்தப் பைத்தியம் பிடித்த சக்கரவர்த்தியுடன் தொடர்ச்சியாக ஓர் ஆண்டு அவன் சதுரங்கம் விளையாடினான். ஓராண்டுக்குப் பின் சக்கரவர்த்தி பைத்தியம் தெளிந்து நல்ல மனநலம் பெற்றார்-

ஆனால் அவரோடு கூட விளையாடியவன்-சாம்பியன்-பைத்தியமானான்.

விளையாட்டுத்தனமாக இருப்பதில் எந்தத் தவறும் இல்லை. ஆனால் தீவிரமாக இருந்து விடாதீர்கள். கேள்வி பிரபாவிடமிருந்து-அவள் மிகவும் இதைப்பற்றி மிகவும் தீவிரமாகியிருக்கிறாள் என்று எனக்குத் தோன்றுகிறது. இந்தக் கேள்வியைப் படிப்படியாகப் பிரித்துப் பார்ப்போம்.

முதலாவது. நாம் ஒருவரை அவராகவே இருக்க ஏன் அனுமதிக்ககூடாது? ஏனென்றால் நாம் நாமாக இல்லை. அப்படியிருக்க நாம் எப்படி அவர்களை அவர்களாக இருக்க விடுவோம்.

உங்களை நீங்கள் எந்த அளவு அனுமதிக்கிறீர்களோ அந்த அளவுக்கு அவர்களையும் அனுமதிப்பீர்கள். நீங்கள் அதற்கு மேல் அனுமதிக்க முடியாது. நினைவில் கொள் ளுங்கள். நீங்கள் சுதந்திரமாக இல்லை என்றால், நீங்கள் வேறு எவருக்கும் சுதந்திரத்தை அளிக்க மாட்டீர்கள். நீங்கள் மன அழுத்தத்தோடு இருந்தால் பிறர் எவரையும் மன வெளிப்பாட்டிற்கு அனுமதிக்க மாட்டீர்கள்.

நீங்கள் என்னவாக இருக்கிறீர்களோ, அதைத்தான், பிறர் மீது நீங்கள் திணிக்கப் பார்க்கிறீர்கள். ஒவ்வொருவரும் உங்கள் பிம்பமாக இருக்கும்படி செய்ய விரும்புகிறீர்கள். அது உங்களுக்கு மிகவும் ஒரு ஆணவ உணர்ச்சியை அளிக்கிறது. அதாவது ஒவ்வொருவரும் உங்களைக் காப்பி அடிக்கிறார்கள் என்பது-ஒவ்வொருவரும் உங்களை கார் பன் பிரதி என்பது-எவ்வளவு பிரியமானதாக இருக்கிறது உங்களுக்கு.

அது உங்களுக்கு நிம்மதி அளிக்கிறது. எல்லாரும் அப்படியே இருக்கிறார்கள். யாராவது ஒருவர் .சுதந்திரமாக இருந்து, நீங்களும் சுதந்திரத்தை அனுமதித்தால் அதே

நேரத்தில் நீங்கள் சுதந்திரமாக இல்லையென்றால், நீங்கள் ஒப்பிட்டுப் பார்ப்பதன் மூலம் மிகவும் மன அழுத்தம் உடையவராக இருப்பதை உணர்வீர்கள்.

மன அழுத்தம் மூலம் பல்வேறு நூற்றாண்டுகள் அழுத்தப்பட்டார்கள். அவர்கள் தங்கள் குழந்தைகளை அடக்கினார்கள். இந்தக் குழந்தைகள் தங்கள் குழந்தை களை அழுத்துவார்கள். இது ஒரு சங்கிலித் தொடர் போன்றது. இதை முரிப்பது மிகவும் கடினமானது. மிக அரிதாகச் சிலர் தான் துணிவு கொள்கிறார்கள். தனிநபர்த் தன்மை கொண்டு சங்கிலித்தொடரிலிருந்து வெளியே குதிக்கிறார்கள்.

இந்தச் சங்கிலித் தொடரிலிருந்து வெளியே குதிப்பது என்பது இந்த உலகத்தை விட்டே வெளியில் குதிப்பதாகும் அப்புறம் உங்களை யாரும் பதப்படுத்துதல் முடியாது; நீங்களும் யாரையும் பதப்படுத்துவதில்லை. அப்பொழுது நீங்கள் சுதந்திரம் ஆக வாழ்கிறீர்கள்; நீங்கள் பிறருக்கும் சுதந்திரம் கொடுக்கிறீர்கள்.

உங்களிடம் என்ன இருக்கிறதோ அதைத்தான் நீங்கள் கொடுக்க முடியும். இருத்தல் உங்களிடம் இல்லை. பிறருக்கு எப்படி அதை வழங்குவீர்கள். நீங்கள் நிலையாகப் பிறரது சுதந்திரத்தை அழிப்பதற்குத்தான் பல வழிகளைக் காண்பீர் கள். பிறரை ஆதிக்கம் செலுத்துவது எப்படி? கீழ்ப்படிதலை எப்படித் திணிப்பது என்றெல்லாம் ஆராய்கிறார்கள். நீங்கள் நிம்மதியாக இல்லை. நீங்கள் உங்கள் குறிக்கோளை இன்னும் அடையவில்லை. நீங்கள் நிரப்பப்படவில்லை, பிறர் எவரையும் நிரப்பிக் கொள்ளவும் உங்களால் அனு மதிக்க முடியாது. நீங்கள் ஒரு மலட்டுமரம் போன்றவர். பிறமரங்கள் பழங்களைத் தாங்க நீங்கள் அனுமதிக்க மாட்டீர்கள். ஏனென்றால் அது உங்களை மிகவும் அதிகமாகத் துன்புறுத்தும்.

நீங்கள் கேட்கிறீர்கள்: நாம் ஏன் ஒருவரை அவராகவே இருக்க அனுமதிப்பதில்லை? ஏனென்றால் நீங்கள் அவ்வாறு இல்லை. ஆகவே அடி ஆரம்பத்திலிருந்து ஆரம்பியுங்கள். முதலில் இருங்கள்! முதலில் உங்களை நீங்களாக இருக்க அனுமதியுங்கள். அப்புறம் பிறரையும் அனுமதிக்கும் தகுதி பெற்றவராக நீங்கள் ஆவீர்கள்.

நான் உங்களுக்கு முழுச் சுதந்திரம் அளிக்க முடியும். நான் எந்தக் கட்டுப்பாட்டையும் உங்களுக்குச் சொல்லிக் கொடுக்கப் போவதில்லை. ஏனென்றால் நான் முழுமையான சுதந்திரத்தைச் சுவைபார்த்திருக்கிறேன். எனக்கு நன்றாகத் தெரியும்-நீங்களும் அதைச் சுவைத்தால்-அதன் சின்னஞ்சிறு துண்டு துணுக்கையாவது நீங்கள் சுவைத்தால்- உங்கள் முழுவாழ்க்கையும் உருமாற்றம் பெற்றுவிடும்.

உங்களுக்கு ஏதாவது கட்டுப்பாட்டை நான் அளிக்க வேண்டும் என்று நீங்கள் விரும்பக் கூடும். மக்கள் என்னிடம் வந்து "எங்களுக்கு ஏதாவது ஒரு கட்டுப்பாட்டை அளியுங்கள். தெளிவான திட்ட வட்டமான விதிமுறைகள் அளியுங்கள்" நாங்கள் எதைச் செய்ய வேண்டும். எதைச் செய்யக்கூடாது என்று நீங்கள் ஒருபோதும் எங்களுக்குத் தெளிவான திட்டவட்டமான விதிமுறைகளை அளிப்பதில்லை. நீங்கள் தெளிவற்ற சொற்களால் பேசுகிறீர்கள்" என்று என்னிடம் சொல்கிறார்கள். அது அவர்களுக்குத் தெளிவில்லாததாகத் தோன்றுகிறது. நான் சுதந்திரத்தைப் பற்றிச் சொல்கிறேன்-அது தெளிவில்லாததாகத் தெரிகிறது. "நீங்கள் தெளிவில்லாத விதத்தில் பேசுகிறீர்கள். நீங்கள் என்ன அர்த்தத்தில் சொல்கிறீர்கள் என்று எங்களால் தீர்மானம் செய்ய முடியவில்லை. நீங்கள் எங்களுக்குத் திட்டவட்டமான வழிமுறைகளை ஏன் கொடுக்க முடியாது?

நீங்கள் கற்றுக் கொடுக்க விரும்புவதை நீங்கள் ஏன் குறைத்துக் கொள்ள முடியாது? நீங்கள் ஏன் ஒரு சில கட்டளைகளைப் போட முடியாது? அப்போது நாங்கள் அதை எளிதாகப் பின்தொடர்ந்து செல்வோம். நாங்கள் குழம்பவே மாட்டோம். நீங்கள் ஏன் எங்களைக் குழப்புகிறீர்கள்?" என்று அவர்கள் சொல்கிறார்கள்.

நான் உங்களைக் குழப்பிக் கொண்டிருக்கவில்லை. நான் உங்களுக்குச் சாதாரணமாக முழுச்சுதந்திரத்தையும் கொடுக்கிறேன்-உண்மையில், சுதந்திரம் என்பது குழப்புவதுதான். குழப்புவதாக இருப்பதற்குக் காரணம், நீங்கள் ஒவ்வொரு கணமும் தீர்மானிக்கிறீர்கள். நான் உங்களுக்காக எதையும் தீர்மானம் செய்யப்போவதில்லை. உங்களுக்காகத் தீர்மானம் செய்ய, நான் யார்? உங்களுக் காகத் தீர்மானிப்பவர் யாராயினும், அவர் ஒரு கொலை காரர். நீங்கள் உங்கள் கொலைகாரர்களைத் தேடிக் கொண்டிருக்கிறீர்கள். யாராவது ஒருவர் உங்கள் பொறுப்பு முழுவதையும் தோளில் தூக்கிச் சுமக்க வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள்.

அதைத்தான் நீங்கள் கேட்கிறீர்கள்-திட்டவட்ட விதிமுறைகள். அதனால் நீங்கள் விழிப்புணர்ச்சியோடு இருக்கவேண்டாம். நீங்கள் பதிலளிக்க வேண்டிய தேவை இல்லை; அதனால் நீங்கள் பொறுப்போடு இருக்க வேண்டிய அவசியமில்லை. என்ன நடந்தாலும் உடனே அதை நீங்கள் பொறுப்போடு இருக்க வேண்டிய அவசிய மில்லை. என்ன நடந்தாலும் உடனே அதை நீங்கள் கட்டளைப் புத்தகத்தில் பார்ப்பீர்கள். அதை அப்படியே பின்பற்றுவீர்கள். வெகுவிரைவில் அந்தப் புத்தகத்தை நீங்கள் பொருளுணராமல் மனப்பாடம் செய்வீர்கள், ஒப்பிப்பீர்கள், அந்த ஞாபகத்தின் மூலமாகவே நீங்கள் இயங்குவீர்கள்; அப்புறம் உங்கள் மையத்தின் மூலமாகச் செயல்படும் தேவை உங்களுக்கு இல்லை.

விதிமுறைகள் எங்கெல்லாம் கொடுக்கப் பட்டிருக்கிறதோ கொடுத்த-அந்த மனிதன் தானே சுதந்திரத்தை அடையாதவன் என்று நினைவில் கொள்ளுங்கள்.

சுதந்திரத்தை அவர் அடைந்திருந்தால் அப்பொழுது, அவர் அறிவார். அவர் அறிந்திருக்க வேண்டும், சுதந்திரம் என்பது முதல் படியிலேயே தொடங்குகிறது என்று. அது முடிவில் ஏற்படுவது அல்லது அது தொடக்கத்திலிருந்து ஆரம்பமாகிறது. நீங்கள் சுதந்திரத்தின் விதைகளை விதைத்தாக வேண்டும், அதன் பின்பு தான் நீங்கள் சுதந்திரத்தை அறுவடை செய்ய முடியும். அதுதான் விடுதலை, நிர்வாணா.

### ஏன் நாம் ஒருவரை அவராகவே இருக்கவிடக்கூடாது?

ஏனென்றால் நீங்கள் இல்லை. அதனால்தான், நீங்கள் ஒரு பொருள்-அல்ல; இருந்தும் நீங்கள் இருக்கவில்லை. நீங்கள் கனவு, சும்மா ஒரு கனவு, நீங்கள் மிகவும் கோணல்-மாணல்! இருந்தும், உங்களுக்கு ஒருமை இல்லை; நீங்கள் ஒன்று அல்ல. நீங்கள் பிறர்மேல் தாவுகிறீர்கள்.

உங்கள் எல்லையின் கீழ் யாரெல்லாம் வருகிறார்களோ-உங்கள் குழந்தைகள், உங்கள் மனைவி, உங்கள் கணவன், உங்கள் தாய், உங்கள் தந்தை, உங்கள் நண்பர்கள்-இப்படி யாரெல்லாம் உங்கள் வரம்பிற்குள் வருகிறார்களோ அவர்களது சுதந்திரத்தின் மீது பாய்ந்து அவனுடைய அல்லது அவளுடைய சுதந்திரத்தை நீங்கள் நசுக்குகிறீர்கள்.

சுதந்திரத்தை நசுக்கிவிட்ட பின்பு நீங்கள் நிம்மதியாக இருக்கிறீர்கள். இப்போது ஆபத்து எதுவும் இல்லை.

நீங்கள் உண்மையில் பிறருக்குச் சுதந்திரம் கொடுக்க விரும்பினால், நீங்கள் அதை வீட்டிலிருந்து தான் அதைத் தொடங்கவேண்டும். ஒவ்வொரு விஷயமும் வீட்டில் தான் தொடங்குகிறது. சுதந்திரமாக இருங்கள். இருத்தலாக

ஆகுங்கள். வாழ்க்கை உங்களுக்குக் கொடுத்துள்ள மகத் தான சுதந்திரத்தை அனுபவியுங்கள். எந்த விதிமுறைகளை யும் பின்பற்றாதீர்கள். ஒரே ஒரு விஷயத்தை மட்டும் பின்பற்றுங்கள். அதுதான் உங்கள் விழிப்புணர்ச்சி. அப்புறம் ஒவ்வொரு கணமும், என்ன செய்ய வேண்டும் என்று புத்தம்புதிதாக, உங்கள் விழிப்புணர்வே தீர்மானிக் கட்டும்.

ஞாபகசக்தியின் மூலமாகவோ, கடந்த கால அறிவைக் கொண்டோ, அனுபவத்தைக் கொண்டோ நீங்கள் இயங்க வேண்டும் என்று எந்தக் கட்டாயமும் இல்லை.

புத்தம் புதிய கன்னி அறிவோடு, கன்னி விழிப்புணர் வோடு, புத்தம் புதிதாக நீங்கள் இயங்குங்கள். அதற்குப் பிறகு, சுதந்தரமாக இருப்பது எவ்வளவு அழகானது, சுதந்திர மக்களோடு வாழ்வது எவ்வளவு அழகானது என்றெல்லாம் அறிந்து கொள்வீர்கள். ஏனென்றால் கைதிகளோடு வாழ்வது என்பது தானும் ஒரு கைதியாக ஆவது போன்றது தான்.

நீங்கள் கவனித்துள்ளீர்களா? ஒரு சிறைக் காவலர் சுதந்திர மனிதன் அல்லன். அப்படி இருக்கவே முடியாது.

சிறைக்கைதிகளை விட அதிகமாகச் சிறைப்பட்டிருப் பது சிறைக்காவலர் தான். நீங்கள் பல மக்களைச் சிறைக் கைதிகளாக இருக்க வற்புறுத்தினீர்கள் என்றால், நீங்கள் எப்படிச் சுதந்திரமானவராக இருக்க முடியும்? அந்தத் திணிக்கப்பட்ட சிறைவாசம் உங்கள் இருத்தலைக் கூடப் பிரதிபலிக்கிறது. நீங்கள் ஒரு சிறைக் கைதி ஆகிவிடுகிறீர் கள். ஒருபோதும் எவர் மீதும் சிறைவாசத்தைத் திணிக்காதீர்கள். சுதந்திரத்தை அனுமதியுங்கள். நீங்கள் சுதந்திரமாக இருப்பீர்கள். நீங்கள் சுதந்திரமாக இருங்கள். உங்களால் அதிக சுதந்திரத்தை அனுமதிக்க முடியும். அவர்கள் ஒன்றாக வேலை செய்கிறார்கள்.

**நாம் ஏன் நம்மையும் மற்றவர்களையும் அப்படியே அவர்கள் இருப்பதுபோலவே இயல்பாகவும் சாதாரணமாகவும் ஏற்றுக்கொள்ள முடியாது?**

ஏனென்றால், நீங்கள் மறுப்பதற்குக் கட்டுப்படுத்தப் பட்டிருக்கிறீர்கள். ஆனால் ஏற்பதற்கு அல்ல. நீங்கள் மறுப்பதற்கு, 'இல்லை' என்று சொல்வதற்குக் கட்டுப் படுத்தப் பட்டிருக்கிறீர்கள்.

உங்களுக்கு இதுவரை 'ஆம்' என்று எப்படிச் சொல்வது என்று தெரியாது. நீங்கள் சபிப்பதற்குப் பதப்படுத்தப் பட்டிருக்கிறீர்கள்.

நீங்கள் சபிக்கப்பட்டீர்கள். அதையே பிறருக்கும் செய்கிறீர்கள். உங்களையே நீங்கள் சபித்துக் கொண்டே செல்கிறீர்கள். அதையே நீங்கள் மற்றவர்களுக்கும் செய்கிறீர்கள்.

உங்களையே கூட நீங்கள் சபித்துக் கொண்டிருக்கிறீர்கள். உண்மையில் அதையே நீங்கள் பிறருக்கும் செய்ய வேண்டியுள்ளது. நீங்கள் வேறுவிதமாகச் செய்ய முடியாது.

உங்கள் பெற்றோர்கள், உங்களிடம் "இது தவறு, இது சரி, இதை ஒருபோதும் செய்திருக்கக்கூடாது" என்றெல்லாம் ஆயிரத்தொரு தடவை திரும்பத் திரும்பச் சொல்லியிருக்கிறார்கள். நீங்கள் ஒரு செய்தியைத் திரட்டிக் கொண்டிருக்கிறீர்கள். உங்களை நீங்களாக யாரும் ஏற்றுக் கொள்ளவில்லை என்றும் உங்களை யாரும் ஒரு சாதாரண இருத்தலாக அன்பு வைக்கவில்லை என்றும் நன்றாக உணர்ந்து கொண்டீர்கள். அவர்களது ஆசைகளை நீங்கள் நிறை வேற்றினால், அவர்கள் உங்களை விரும்புவார்கள். அவர்களது அன்பு ஒரு பேரம்; அவர்களை நீங்கள் நிழல் களைப் போலப் பின்பற்றினால் அவர்கள் உங்களைப் பாராட்டுகிறார்கள். அங்கீகரிக்கிறார்கள்.

நீங்கள் கொஞ்சம் சுதந்திரமாக ஆகி ஒரு சிறிது ஒரு தனி நபராக இருக்க விரும்பினால், அவர்கள் உங்களை எதிர்க்கிறார்கள், அவர்களது கண்கள், அவர்களது நடத்தை, ஒவ்வொன்றும் மாறுகிறது. ஒவ்வொரு குழந்தை யும் எந்த அளவுக்கு உருப்படாமல் போய்விட்டன என்றால், உயிருடன் இருப்பதற்கே அவன் அரசியல் ரீதியாக இருக்க வேண்டியுள்ளது. அவனது பெற்றோர்கள் என்ன சொல்கிறார்களோ அதை ஏற்றுக்கொள்ள வேண் டியிருக்கிறது.

அப்புறம் இருக்கவே இருக்கிறது. சமூகம்-அப்புறம் கல்வி நிறுவனம் இருக்கிறது. வெகுவிரைவில் நீங்கள் ஆழமாக, மேலும் ஆழமாக, எவ்வளவுக்கு எவ்வளவு குழப்பத்தில் ஆழ்கிறீர்களோ, அவ்வளவுக்கு அவ்வளவு அவரைப் பின்பற்றும்படி வலியுறுத்துவார்கள்.

அப்புறம் வருகிறார்கள் குருமார்கள், அரசியல் வாதிகள், நல்லது செய்வோர், அனைவரும் என்ன சொல்வார்கள்; தங்களைப் பின்பற்றச் சொல்வார்கள். அவர்கள் உங்களைப் பயிற்றுவிக்கிறார்கள்.

உங்கள் மனம் கட்டுப்படுத்தப்பட்ட மனம். அதனால் தான் உங்களை நீங்கள் ஏற்றுக் கொள்ள முடியாது. அத னால் நீங்கள் மற்றவர்களை ஏற்றுக்கொள்ள முடியாது.

ஆனால் சாத்தியக்கூறு இருக்கிறது. நீங்கள் இதைப் புரிந்து கொண்டால்-அதாவது இது ஒரு கட்டுப்படுத்தப் படுதல்தான் என்பதை நீங்கள் புரிந்து கொண்டால்- இப்போதே சுத்தமாக விட்டுவிட்டு வரமுடியும்! அதனு டன் எந்த வகையிலும் நீங்கள் உங்களை ஐக்கியப்படுத்திக் கொள்ளாதீர்கள். அதுதான் ஒரே வழி. இதுதான் நீங்கள் என்று எண்ணாதீர்கள். சமூகம் உங்கள் வழியாகப் பேசுவதாக நினைவு கொள்ளுங்கள். அது போதும். அதை உங்கள் மனசாட்சி என்று அழைக்காதீர்கள் அது உங்கள்

மனசாட்சி அல்ல. அது சமூகத்தால் உருவாக்கப்பட்ட ஒரு போலி மனசாட்சி. அது ஒரு தந்திரம். அது ஒரு அபாயகரமான தந்திரம். ஆனால் இந்தச் சமூகம் தன் சொந்தக் கருத்துகளையெல்லாம் உங்களுக்குள் போட்டு, அவை ஒன்றுசேர்ந்து உங்கள் மனசாட்சியாக இயங்கு கிறது. உண்மையில் உங்கள் உண்மையான மனசாட்சி வெளிவருவதை யாரும் அனுமதிக்கவில்லை. அவர்கள் சொந்த மனசாட்சி உருவாக்கவோ உங்கள் வாழ்க்கைக்கு அது பொறுப்பேற்பதற்கோ விட மாட்டார்கள்.

சமூகம் மிகவும் அரசியல்மயமானது. வெளியில் அது போலீஸ்காரரையும், மாஜிஸ்ட்ரேட்டையும் நியமித் துள்ளது; உள்ளுக்குள்ளே அது மனசாட்சியை நியமித் துள்ளது. அதாவது உள்பகுதி போலீஸ்காரராகவும் மாஜிஸ்ட்ரேட்டாகவும் மனிதனின் மனசாட்சி செயல் படுகிறது. இந்த ஏற்பாட்டோடு திருப்தியடையாத சமூகம், எல்லாவற்றுக்கும் மேலாகக் 'கடவுளை' நியமித்திருக்கிறது. அவர் தான் உயர் போலீஸ்காரர், அதாவது ஏட்டு (ஹெட் கான்ஸ்டபிள்)

ஆகவே அவர் அங்கிருந்து பார்த்துக் கொண்டிருக் கிறார். உங்கள் குளியலறையில்கூட, அவர் உங்களைக் கவனித்துக் கொண்டிருக்கிறார்.

யாரோ ஒருவர் உங்களைப் பின்தொடர்ந்து கொண்டே இருக்கிறார்; நீங்கள் ஒருபோதும், உங்களுக்கு நீங்களே தனிமையில் இருக்க விடப்பட்டதே இல்லை.

விட்டுவிடுங்கள்-இது உங்கள் எண்ணம், நீங்கள் அதனோடு ஒட்டிக் கொண்டு விட்டீர்கள். அது உங்களுக்குப் பிறரால் கொடுக்கப்பட்டது. உங்களால் நினைவு கொள்ள முடியாத அளவு இளம்வயதில், அது உங்களுக்குக் கொடுக்கப்பட்டு விட்டது. ஆனால் அது ஒரு அரசியல் ஏற்பாடுதான். அது சமயம் சார்ந்தது அல்ல.

சமயம் என்பது ஒரு கட்டுப்படுத்தப்படாத நிலை. சமயத்தின் நடைமுறையே உங்களைப் கட்டுப்படுத்தாமல் இருப்பது. எல்லாப் பதங்களிலிருந்தும் உங்களை விடுதலை செய்வது. நீங்கள் எதற்காக உள்ளீர்களோ அதற்கு அனுமதிப்பது, உங்கள் விதியை உங்களுக்கு அனுமதிப்பது ஆகியவை தான்.

இந்தப் கட்டுப்படுத்தப்பட்டிருப்பதை விட்டுவிடுங்கள். உண்மையான விடுபடுதல் அப்படித்தான் இருக்க வேண் டும். அது சமூகத்திலிருந்து விடுபடுதல் இல்லை. அதனால் எந்தப் பயனும் இல்லை. அங்கிருந்து விடுபட்டு வேறு எங்குச் செல்வீர்கள்? ஹிப்பியாக ஆகி இந்தச் சமூகத்தை விட்டு நீ வெளியே வந்தால்கூட, நீங்கள் மாற்றுச் சமூகம் ஒன்றை உருவாக்குவீர்கள். மீண்டும் அங்கும் பல்வேறு விதிமுறைகள், மீண்டும் கட்டுப்படுத்துதல்.

நீங்கள் சாதாரண சமூகத்தில் இயங்கினால், நிறுவனத் தில் இயங்கினால், நீண்ட முடி இல்லாமல் இருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பு இருக்கிறது. நீங்கள் ஹிப்பிகளிடம் பழகும்போது, நீங்கள் குட்டைமுடி உள்ள வராக இருக்கக்கூடாது. ஆனால் எல்லாம் ஒன்றுதான். நிறுவப்பட்ட ஒரு சமுதாயத்தில் நீங்கள் பழகினால், ஒரு நாள் ஒரு தடவை குளிக்க வேண்டும். நீங்கள் ஹிப்பி களிடம் பழகும்போது ஒருநாள் ஒரு தடவை குளித்தால், உங்களுக்கு ஏதோ ஒன்று ஆகிவிட்டது என்று ஹிப்பிகள் நினைத்துக் கொள்வார்கள். ஆனால் எல்லாம் ஒன்றுதான். தலைகீழ்!

ஆகவே சமூகத்திலிருந்து நீங்கள் வெளியேறுதல் முடியாதது. பல தடவைகள் அது முயலப்பட்டிருக்கிறது. ஆனால் மாற்றுச் சமூகங்கள் மட்டுமே உருவாக்கப்பட்டன. அவை அவர்களது சொந்த நிறுவனங்கள் ஆகிவிட்டன.

நீங்கள் சமூகத்திலிருந்து நுட்ப வழியில் மட்டுமே வெளி வரலாம். திட்பவழியில் முடியாத செயல். நுட்பவழி என்பது என்ன? உள்ளுக்குள் உங்களை நீங்களே அனுமதித்துக் கொண்டு, கட்டுப்படுத்தப்பட்ட அடுக்கி லிருந்து வெளியே வருதல் தான் அந்த நுட்ப வழியாகும்.

நன்றாக நினைவில் கொள்ளுங்கள், நீங்கள் போதுமான அளவுக்குப் பக்குவம் பெற்று விட்டீர்கள். மற்றவர்கள் என்ன சொன்னாலும் அது பற்றிப் பாதிப்படையாதீர்கள். நீங்கள், நீங்களாக நடந்து கொள்ளுங்கள்.

அனுபவியுங்கள், இந்தச் சுதந்திரத்தை அனுபவிக்கத் தொடங்குங்கள். அப்புறம் பிறருக்கும் கூட சுதந்திரத்தைப் பகிர்ந்தளிக்க முடியும் உங்களுக்கு. உங்கள் சுதந்திரம் வளரவேண்டும் என்று நீங்கள் விரும்பினால் உங்களைச் சுற்றிலும் உள்ள மக்கள் சுதந்திரமானவர்களாக இருக்க வேண்டும். ஏனென்றால், சுதந்திரம், சுதந்திரமான மக்களால் மட்டுமே செழிக்க முடியும்.

**'வித்தியாசமாக இருக்கமுயலும் வாலைத் துரத்தும் விளையாட்டில்' ஏன் மக்கள் விடிவாதமாயிருக்கின்றனர்? அதிக வெளிப்படை, அதிக விழிப்புணர்வு, அதிகம்..? எல்லாம் அவ்வவற்றின் வழியில் சிறந்ததாகத்தான் இருக்கிறது...**

நான் இதைச் சொல்லியிருக்கிறேன். ஆனால் நீங்கள் அதைக் கேட்கவில்லை. நான் சொல்வது உங்களை மாற்றப்போவதில்லை. நீங்கள் கேட்காத வரை! அதனால் நான் மீண்டும் மீண்டும் பல வழிகளில் வித்தியாசமான முறைகளில் சொல்லிக் கொண்டுதான் இருக்கின்றேன். என் செய்தி ஒன்றுதான். ஒவ்வொரு நாளும் ஒரு புதிய உண்மையை நான் சொல்லவில்லை. நான் ஒரே உண்மையைப் பல்வேறு வடிவங்களில் பல்வேறு வெளிப் பாட்டு முறைகளில் சொல்லிக் கொண்டே இருக்கிறேன்.

இப்போது நான் வித்தியாசமான திசைகளில் இருந்து எச்சரிக்கை விட்டுக் கொண்டே உள்ளேன். ஏனென்றால் அந்த அளவுக்கு நீங்கள் மிக நல்ல தூக்கத்தில் இருப்பதைக் கண்ணால் காண்கிறேன். உங்கள் குறட்டைச் சத்தத்தை நான் கேட்கிறேன். நான் சொல்கிறேன். நான் சொல்வதை ஒரு வகையில் நீங்களும் கேட்கிறீர்கள். ஏனென்றால் உங்கள் காதுகள் செவிடில்லை. இருப்பினும் நீங்கள் கேட்கவில்லை.

ஒரு தடவை நீங்கள் கேட்டிருப்பீர்கள்? அதாவது ஒரு தடவை அது பயன் அளித்திருக்கிறது. ஒரு தடவை உங்கள் உள்ளத்தை அது அடைந்திருக்கிறது. அப்பொழுது இந்தக் கேள்வி எழவே எழாது. அப்பொழுது ஏன் என்று நீங்கள் கேட்கவே மாட்டீர்கள். அப்புறம் உடனடியாக நீங்கள் பார்க்க முடியும். தெளிவு உங்களுக்குக் கிடைக்கும். முழு விளையாட்டும் இது தான் என்று நீங்கள் காண்பீர்கள். நீங்கள் முன்னேறுவதற்கு மேலும் செல்லுவதற்குக் கற்பிக்கப்பட்டிருக்கிறீர்கள். நீங்கள் அதிருப்தியானவராகத் தங்கியிருப்பதற்குக் கற்பிக்கப்பட்டிருக்கிறீர்கள். நீங்கள் அதிருப்தியானவர்களாய் இருந்தால் ஒழிய, நீங்கள் ஒருபோதும் முற்போக்கினராக இருக்கமாட்டீர்கள் என்று கற்பிக்கப்பட்டிருக்கிறீர்கள்.

நீங்கள் அதிருப்தியுடையவராக இல்லை என்றால் நீங்கள் தாவரம் போல் ஆகிவிடுவீர்கள். அதிருப்தியாக இருங்கள். அதிகம் வேண்டும் என்று கேளுங்கள். நீங்கள் கேட்க வில்லையென்றால், எவரும் எதையும் உங்களுக்குக் கொடுத்துவிடப் போவதில்லை.

**புதிய ஆட்டத்தைத் தொடங்கிய நேரம் சரியான நேரம் தானே?**

ஆனால் புதிய ஆட்டம் அதே ஆட்டமாகத்தான் இருக்கும். புதிய மனம் இல்லாவிட்டால், நீங்கள் புதிய

ஆட்டத்தை ஆடலாம். அதைத்தான் இப்போது நீங்கள் செய்து கொண்டிருக்கிறீர்கள்.

ஆமாம் அது என்ன இந்த ஆரஞ்சு நிறமும், மாலையும்?

ஆனால் மனம் மாறவில்லையென்றால், உங்களுக்குள்ளே ஒரு புரட்சி உருவாகவில்லையென்றால், அப்புறம், இந்த ஆட்டமும், முன்னரோ, பின்னரோ பழைய ஆட்டமாக மாறிவிடும். இங்கே நிலைபெற்ற பழைய துறவிகள் உள்ளார்கள்; இப்போது அவர்கள் இந்தப் புதிய பாத்திரத்தை ஏற்றிருக்கிறார்கள் – ஆனால் புரட்சி நிகழ்ந்து விடவில்லை.

நீங்கள் உங்கள் துணிகளை மாற்றுவது மிக எளிது; உங்கள் பெயர்களை மாற்றுவதும் எளிது; உங்கள் மனப்பான்மையை உங்கள் பார்வையை மாற்றுவதும் மிகவும் எளிது தான்.

பிரபா, நீங்கள் என்ன செய்வீர்கள்? புதிய ஆட்டம் ஒன்றை தொடங்கியிருந்தாலும் நீங்கள் அதேபோலத்தான் இருப்பீர்கள்.

ஆட்டத்தின் பெயர் மட்டும் தான் மாறும், வேறு எதுவுமே மாறாது.

நீங்கள் அதே மாதிரியே இருந்தால், புதிய ஆட்டத்தின் பயன் கூட அதே மாதிரிதான் இருக்கப்போகிறது.

ஆட்டத்தை மாற்றுவதால் எந்தப் பயனும் இல்லை. உண்மையில் அடிப்படைவிஷயம் எது தெரியுமா? உங்களையே நீங்கள் மாற்றிக்கொள்வது தான்.

நீங்கள் விரும்பினால் அதே ஆட்டத்தை ஆடலாம். அல்லது, நீங்கள் விரும்பினால் புதிய ஆட்டத்தையும் விளையாடலாம். ஆனால் அது சம்பந்தம் அற்றது;

சம்பந்தம் எது என்றால்- நீங்கள் மாறவேண்டும். முற்றிலும் மாறுபட்ட ஒரு பார்வையைப் பெறுங்கள்.

நான் என்ன சொல்கிறேன் புரிகிறதா? இந்த உலகத்தில் இரண்டு விதமான பார்வைகள் உள்ளன.

ஒன்று, ஞானம் மாறா நபருடையது, அந்தப் பார்வை என்ன? அதிகமாகக் குவியுங்கள், எதுவாயிருந்தாலும், பணமா, குவியுங்கள்! தியானமா, அதிகமாக மேலும் அதிகமாகக் குவியுங்கள்.

ஞானம் பெறாத நபர், பெறுவதில் மிகவும் ஆர்வம் உள்ளவர். அவர் மனித இருத்தலின் ஒரே வழியாகப் பெறுவதைத் தான் அறிவார். பெரிய வீடு பெறுதல், பெரிய கார் பெறுதல், நிறையப் பணம் பெறுதல், அதிகப் புண்ணியம் பெறுதல், அதிகவங்கியிருப்புப் பெறுதல், இந்த உலகத்தில் மட்டுமல்ல மறு உலகத்திலும் கூட அதிகம் பெறுதல் அதிகப் பெண்கள் அதிக ஆண்கள் அதிகமான காதல் விவகாரங்கள் - அதிகம் பெறுதல். அவருடைய ஒரே எண்ணம் இருத்தல் என்பது அதிகம் பெறுதல்!

பெறுதல் என்பது 'இருத்தலோடு' எந்தத் தொடர்பும் இல்லாதது, நீங்கள் இந்த உலகம் முழுவதையும் பெறலாம். இருத்தல் இது போன்ற வழியில் பயன் அளிக்கப் போவதில்லை. இந்த உலகமே உங்கள் காலடியில் வீழ்ந்து கிடக்கலாம்! அப்பொழுது கூட நீங்கள் 'காலி'யாகத் தான் வெற்றாகத்தான் இருப்பீர்கள். இருத்தலுக்குத் துணை செய்ய எவ்வகையிலும் பெறுதல் உதவப் போவதில்லை.

அப்புறம் வேறொரு பார்வை உள்ளது. புத்தரின் பார்வை. அதாவது ஞானம் பெற்றவரின் பார்வை. அது ஒரு மாறுதல், அது ஒரு அதிரடி மாற்றம். இருத்தலே முக்கியமானது; பெறுதல் முக்கியமானதல்ல. அப்படியென்றால், முற்போக்கிற்கே - அப்படி ஒரு கேள்விக்கே

இடமில்லை. ஏற்கெனவே நீங்கள் எப்படி இருந்தீர்களோ அதே போலத்தான் நீங்கள் ஏற்கனவே இருக்கிறீர்கள். நீங்கள் அதிகமானதைப் பெறலாம். ஆனால் நீங்கள் அவர்களுக்கு அதிகமாக இருக்க முடியாது.

திரும்பவும் சொல்கிறேன்; நீங்கள் அதிகமானதைப் பெறலாம். பெரிய வீட்டைப் பெறலாம். அதைப் பற்றி எந்தச் சிக்கலும் இல்லை. நிச்சயமாக நீங்கள் அதிகமான பணம் பெறமுடியும். நீங்கள் ராக்ஃபெல்லராய் இருந்தால் கூட, நீங்கள் அதிகமாகப் பணம் பெறமுடியும். நீங்கள் ஒரு நாட்டின் ஜனாதிபதியாய் இருந்தால் கூட உங்களால் அதிக அதிகாரம் பெறமுடியும்.

நீங்கள் மிகப் பெரிய முனிவராய் இருந்தால்கூட உங்களால் மேலும் அதிகமாகப் புண்ணியத்தைப் பெறமுடியும்.

ஆனால் முழுமை... பெறுதலின் பரிமாணம் என்பது எப்போதுமே அதிருப்தியின் பரிமாணம் தான். நீங்கள் எப்போதும் அதிகம் பெற முடியும். கற்பனை என்பது தொடர்ச்சியாக உள்ளது. கற்பனை, பயன்படுத்தக் கூடியதாகும்.

இருத்தலின் பரிமாணம்- நீங்கள் எப்படி இருக்க முடியுமோ அப்படித்தான் ஏற்கனவே இருக்கிறீர்கள். இலக்கு ஏற்கெனவே அடையப்பட்டு விட்டது. இனி எங்கும் போகவேண்டியது இல்லை.

பெறுதலின் பரிமாணம் வெளிமுகப் பரிமாணம். இருத்தலின் பரிமாணம், உள்முகப் பரிமாணம். நீங்கள் யாரென்று பார்ப்பதற்கு உங்கள் உங்களுக்குள்ளேயே செல்லவேண்டும்./ முதலில் நாம் யார் என்பதை நாம் அறிவோம், நாம் என்னவாக இருக்கிறோம் என்பதை நாம் அறிவோம்./

பொருள்களைப் பெறுவதற்கு எதிரானவன் அல்லன் நான். தாராளமாக நீங்கள் பெற்றிருக்கலாம். ஆனால் உங்கள் இருத்தலைப் பெறுங்கள்.

பெரிய இல்லத்தில் வாழ்வதை எதிர்க்கவில்லைநான். வாழுங்கள். அதில் எந்தத் தவறும் இல்லை ஆனால் முதலாவதான உங்கள் உள்ளார்ந்த இருத்தலில் வாழுங்கள். அப்புறம் எல்லாமே சரிதான். அப்புறம், நீங்கள் பிச்சைக் காரனாய் இருந்தால் கூட, அது சரிதான். நீங்கள் ஒரு சக்கரவர்த்தியாக இருந்தால் கூட அதுவும் சரிதான். நீங்கள் பிச்சைக்காரனாகத் தான் இருக்கவேண்டும் என்று வற்புறுத்தவில்லை.

என் முழு வலியுறுத்தலும் "முதலில் இருங்கள்" என்பதில் தான். அப்புறம் எல்லாமே சரியானது தான். அப்படியில்லையென்றால், எதுவுமே சரியில்லை. அப்பொழுது நீங்கள் ஆசைப்பட்ட அனைத்தும் உங்களுக்குக் கிடைத்திருந்தாலும் எல்லாமே நீங்கள் பெற்றிருந்தாலும், நீங்கள் அதிருப்தியுடையவராக, நிறைவில்லாதவராகத் தான் இருப்பீர்கள். இதில் எந்தச் சந்தேகமும் இல்லை.

ஆகவே ஆட்டத்தை மாற்றாதீர்கள். உங்கள் பரிமாணத்தை மாற்றுங்கள். உங்கள் பார்வையை மாற்றுங்கள். அதிரடிப் புரட்சியைப் பெறுங்கள். 'அதிரடி' என்னும் சொல் மிகவும் நல்ல சொல், 'வேரோடு' என்று பொருள் அதற்கு.

அதிரடி மாற்றம் வேண்டும் என்று நான் உங்களிடம் சொல்லும்போது, நான் எந்த அர்த்தத்தில் சொல்கிறேன், தெரியுமா?

"உங்கள் சொந்த வேர்களையே மாற்றுங்கள். இலைகளை மாற்றுவது உதவி செய்யாது. கிளைகளைச் சீர்படுத்துவது சரிப்படாது."

"உங்கள் வேர்களை மாற்றுங்கள், உங்கள் சொந்த மண்ணை மாற்றுங்கள்" என்று சொல்கிறேன்.

இருங்கள்! கொண்டாடுகள்! எதுவும் குறையானதில்லை! பாடுங்கள், ஆடுங்கள், காதலியுங்கள், சிரியுங்கள், அழுங்கள் – எதுவும் குறையுடையதில்லை.

**இந்தப் பழைய ஆட்டத்தினால் நான் மிகவும் சோர்ந்து போய்விட்டேன்.**

பழைய ஆட்டத்தினால் நீங்கள் சோர்ந்து போயிருக்கக் கூடும். நீங்கள் புதிய ஆட்டத்திற்கு மாறலாம். மீண்டும் புதிய ஆட்டத்தில் சோர்வடைந்து போவீர்கள், ஏனென்றால், எல்லாப் புதியதும் ஏதாவது ஒருநாள் பழமையாகிவிடும் அல்லவா? பழைய ஆட்டத்தில் சோர்வடைந்தது யார்?

மனம் தான்! அதுதான் பழமையுடன் சோர்வடைந்து, எப்போதுமே புதுமைக்காக ஏங்கிக் கொண்டிருக்கிறது.

பிரபா இந்தக் கேள்வியைக் கேட்டிருக்கிறார். ஆனால் தான் என்ன கேட்கிறோம் என்று அவர் புரிந்து கொள்ளவில்லை.

நீங்கள் பழமையினால் சோர்வடைந்து, புதுமையைத் தேடுகிறீர்கள் என்றால், நீங்கள் மீண்டும் ஏதோ அதிகம் வேண்டும் என்று தேடிக் கொண்டிருக்கிறீர்கள்.

பழமையோடு சலித்துப் போய்த்தான் புதுமையைத் தேடுகிறீர்கள். பரபரப்பை உண்டாக்குகிற ஒரு புதியது, கிளர்ச்சியூட்டுகிற ஒரு புதியது ஆனால் விரைவிலோ அல்லது தாமதமாகவோ புதியதும் பழையன ஆகும்.

அப்புறம் என்ன? ஒவ்வொரு புதியதும் பழையது ஆகும். ஏனென்றால் இப்போது இருக்கும் பழையவை அனைத்தும் ஒருநாள் புதியவையாய் இருந்தவையே ஆகும்.

இதை நன்றாகப் புரிந்து கொள்ளுங்கள். 'அ'விலிருந்து 'ஆ' ஆட்டத்திற்கு மாறிவிடுவதனாலேயே எதுவும் மாற்றம் நிகழ்ந்துவிடாது. அப்புறம் 'ஆ'விலிருந்து 'இ'க்குத்தான் செல்வீர்கள். நீங்கள் தாவிக்கொண்டே போய் கொண்டு இருப்பீர்கள்.

மாற்றம் உங்களுக்கு உள்ளுக்குள்ளே நிகழ்ந்திட வேண்டும். நீங்கள் புதியவராக ஆகிறீர்கள். அப்போது ஒவ்வொன்றும் புதியதாகத் தங்கியிருக்கும். அப்புறம் 'சலிப்பு' என்பது ஏற்படும் அளவுக்கு எதுவுமே குறையான தாக இருக்க முடியாது. அப்புறம் ஒருவருமே சலிப்பு அடைவதில்லை, விரக்தியும் இல்லை. நீங்கள் புதியவர் ஆகிறீர்கள், ஆட்டம் அன்று; நீங்கள் உங்களுக்கே புதுமை கொணர்கிறீர்கள்.

'இருத்தல்' எப்போது புதியது; ஏனென்றால் இது எப்போதும் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. எப்போதும் செத்துக்கொண்டும் எப்போதும் பிறந்து கொண்டும் உள்ளது. ஒவ்வொரு கணமும் உங்கள் மூச்சில் புதுமை. எந்தக் கணத்தில் அது தேங்குகிறதோ உடனே அது தூக்கி எறியப்படுகிறது. புதிய மூச்சு உள்ளே விரைகிறது. அதே வழியில், கடவுள் உங்களிடம் விரைந்து வருகிறார்.

ஒவ்வொரு கணமும், தேங்கிய கடவுள் தூக்கி எறியப் படுகிறார், புதிய கடவுள் உள்ளே நுழைகிறார்.

உங்கள் நதி ஓடுகிறது சும்மா, தன்னுணர்வு நதியோடு தொடர்பு கொள்ளுங்கள். தன்னுணர்வு நதி எப்போதும் புதியது தான்.

அதன் சொந்த இயல்பு புதுமை. அது பழமையாய் இருக்க முடியாது. மனம் எப்போதும் பழமை; தன்னுணர்வு ஒருபோதும் பழமையில்லை, மனம் எப்போதும் சலிப் படைகிறது; தன்னுணர்வு ஒருபோதும் சலிப்படைவது இல்லை.

**இந்தப் பழமையான ஒன்றினால், நான் மிகவும் சலிப்படைந்து போய் உள்ளேன். வாழ்க்கையும் காதலும், அச்சமும், பாதுகாப்பின்மையும் தரமானவையாக அவ்வவற்றின் வழியில் இருக்கின்றன.**

அப்புறம் யார் தடுத்துக் கொண்டிருக்கிறார்கள்? பிரபா, வாழ்க்கையில் குதியுங்கள்! வாழ்க்கையில் குதியுங்கள், அன்பு, அச்சம், பாதுகாப்பின்மை, யார் தடுத்துக் கொண் டிருக்கிறார்கள். உங்களை? குறைந்தபட்சம் நான் இல்லை!

யாருக்காகக் காத்துக் கொண்டிருக்கிறீர்கள். யாருடைய அனுமதிக்காக இந்தக் கேள்வியை என்னிடம் ஏன் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். மீண்டும் உங்களுக்கு எவருடைய அனுமதியாவது தேவைப்படுகிறது? அப்புறம் மீண்டும் என்மீது பொறுப்பைத் தூக்கிச் சுமத்துகிறீர்கள். அப்படியில்லையென்றால், அந்த அளவுக்குத் தரமானதாக நீங்கள் சொல்வதற்கேற்ப இல்லையென்றால், “பகவான், அன்பிற்கு என்னை நீங்கள் நகரச் சொன்னீர்கள். இப்போது... நரகமாக இருக்கிறது. பாதுகாப்பின்மையோடு என்னை இருக்கச் சொன்னீர்கள். நான் இப்போது நடுங்குகிறேன். இப்போது நான் என்ன செய்வது?” என்று நீங்கள் சொல்லியிருக்கலாமே!

நீங்கள் சொல்வது போல், அது உண்மையில் தரமான தாக இருக்குமானால், நீங்கள் விஷயத்தைப் புரிந்து கொண்டு விட்டீர்கள் என்றால், இந்தக் கேள்வியைக் கேட்டு ஏன் நேரத்தை வீணாக்குகிறீர்கள்?

வாழ்க்கையில் குதியுங்கள், ஏனென்றால் அது நழுவு கிறது. காலம் கடந்து விடுவதற்கு முன்பு, ஆற்றில் குதியுங் கள், துழாவி நீந்தி விளையாடுங்கள்.

மேலும், முடிவாக மீண்டும் அதே கேள்வி தங்குகிறது. இன்னும் அதிகமாக இருக்க முடியுமா?

எதுவும் அதிகம் இல்லையென்று எப்படி நிரூபிக்க முடியும்? உண்மையில், நான் பேசுவதைக் கேட்க நீங்கள், வருவது எதற்காகத் தெரியுமா? இன்னும் அதிகமாக ஏதாவது இருக்க முடியுமா?

ஒன்றுமே அதிகமாயில்லை என்று நான் கூறும்போது, நீங்கள் என்னை நம்புவதில்லை. எனக்குத் தெரியும்! நீங்கள் என்னை நம்பமாட்டீர்கள். 'இந்த மனிதர் விளையாடு கிறார்' என்று நீங்கள் சொல்கிறீர்கள். 'ஏதோ அதிக மிருக்கிறது, உங்களுக்கு அது குறையாயிருக்கிறது' என்று நீங்கள் அறிவீர்கள். உங்களுக்கு அது குறையாயிருப்பதன் காரணம், அதில் ஏதோ அதிகம் இருந்து, அந்த அளவுக்கு நீங்கள் வளரவில்லை என்பதல்ல. நீங்கள் அந்தக் குறையை உணர்வதற்குக் காரணமே நீங்கள், மிக மிக அதிகமாக அந்த அதிகத்தினால் அழுத்தப்பட்டிருக்கிறீர்கள். ஆனால் இங்கேயே, ஏற்கெனவே அது கிடைக்கிறது!

நீங்கள், குறையாய் உணர்கிறீர்கள், அதை நான் அறிவேன். நீங்கள் குறையாய் உணர்வதால் தான் என்னை உங்களால் நம்ப முடியவில்லை. அதாவது அதுவும் அதிகம் இருக்கமுடியாது என்று நான் சொல்வதை உங்களால் நம்ப முடியவில்லை. நீங்கள் என் கண்களைப் பார்க்கிறீர்கள். ஏதோ அதிகமாக இருப்பதாக உணர்கிறீர்கள். நீங்கள் என்னை உணர்கிறீர்கள். உடனே நினைக்கிறீர்கள் 'ஏதோ அதிகம் இருக்கிறது' என்று. அதனால் உங்களால் நான் சொல்வதை நம்ப முடியவில்லை.

ஏதோ அதிகம் இருக்கிறது, நீங்கள் அதை அடைய வேண்டும், அதற்குக் கடின உழைப்புத் தேவைப்படுகிறது, என்று நான் சொன்னால், உடனடியாக நீங்கள் அதை அங்கீகரித்து உங்கள் தலையை ஆட்டுவீர்கள், 'சரி' என்று நீங்கள் சொல்வீர்கள். 'குரு'மார்களால் நீங்கள் பிடித்துக் கொள்ளப்படுவது இப்படித்தான். இல்லையென்றால் எந்த குருமார்களும் உங்களைப் பற்றிக்கொள்ள முடியாது.

உங்கள் ஆசை- அதிகம் வேண்டும் என்னும் ஆசை தான்- உங்கள் தயார் நிலையை- பிடிக்கப் படுவதற்கான தயார் நிலையை வெளிப்படுத்தி- அதே நேரத்தில் அது தூண்டிலில் வைக்கப்படும் இரையாகச் செயல்படுகிறது.

யாரால் அதிகம் இருப்பதாக உரக்கச் சொல்ல முடியுமோ அவர்கள் அதிக பின் பெறுவார்கள். ஏனென்றால் ஒவ்வொருவரும் குறையுணர்வுடன் இருக்கின்றார்கள்; இந்த மனிதர் 'அதிகமாயிருப்பதாகக்' கூறுகிறார்; ஒருவேளை அவருக்குத் தெரிந்திருக்கலாம், அதனால் அவரைப் பின்தொடரலாம்.

நான் ஏ்துவுமே அதிகம் கிடைப்பதாக வாக்குறுதி கொடுக்காத காரணத்தினால், என்னோடு இருப்பது மிகவும் கடினமான காரியம் ஆகும். நான் உங்களுக்கு எந்த ரோஜாத்தோட்டங்களையும் வாக்குறுதியாக அளிக்க வில்லை. ஆனால் எனக்குத் தெரியும் உங்களுக்குக் குறை யுள்ளது என்று. உண்மைதான். அது மிகத் தொலைவில் உள்ளதாக இருப்பதால் அந்தக் குறை உங்களுக்கு இல்லை என்பது அல்ல. அது மிகவும் தெளிவாக இருப்பதனால் அது உங்களுக்குக் குறையாக உள்ளது.

ஒரு கடல் மீனிடம் சென்று அதன் வாழ்க்கை அனுபவங்களைக் கேட்டால், கடலைத் தவிர மற்ற எல்லாவற்றையும் பற்றி அது சொல்லும். அது தன் காதல் விவகாரம், குழந்தைகள், கணவன், குடும்ப விஷயங்கள்,

தன் மன நல மருத்துவர், தன் குரு, இது போன்ற எல்லா விவரங்களையும் பற்றிப் பேசும்; ஆனால் கடல் பற்றி எதுவும் பேசாது. ஏனென்றால், அது மிகவும் தெளிவானது.

மீன், சாதரணமாக, கடல் பற்றி எதுவும் தெரிந்து கொள்வதில்லை. அது கடலில் தான் வசிக்கிறது. அதில் தான் அது பிறக்கவே செய்கிறது. அது அங்கு வருவதற்கு முன்பிருந்தே கடல் அங்குத்தான் இருந்தது. அது எந்த அளவுக்கு நெருக்கமாக அதோடு இருந்தது தெரியுமா, அதைப்பற்றி எதுவும் அறிய முடியாத அளவுக்கு அவ்வளவு நெருக்கம். அதற்கும் இதற்கும் எந்த இடை வெளியும் இல்லை.

கடவுள் இந்தக் கடல் போன்றவர். உங்கள் பக்கத் திலேயே உட்கார்ந்து கொண்டு கையோடு கைகோத்துக் கொண்டிருப்பது போல் தான்.

அவரை நீங்கள் ஏன் பெறவில்லை என்றால், அவர் எங்கோ தொலை தூர நட்சத்திரத்தில் வாழ்வதனால் அல்ல. அவரை நீங்கள் பெறாததன் காரணம், அவர் உங்களை, இதோ இந்தப் பூமியிலேயே, உங்கள் நிழலைப் போல் தொடர்ந்து வருகிறார்.

அவர் உங்களுக்கு உள்ளே உட்கார்ந்து கொண்டிருக் கிறார். ஆனால் நீங்களோ வெளியில் அவரைப் பார்க்க முயல்கிறீர்கள். அதனால் தான் நீங்கள் அவரைப் பெற முடியவில்லை.

அவர் நீங்களாக மாறி விட்டார். ஆனால் நீங்கள் அவரை வேறெங்கோ காண முயல்கின்றீர்கள். தேடுபவனி டம், அவர் இருக்கிறார். தேடப்படுபவர் தேடுபவரிலேயே இருக்கிறார்.

எந்த நாளும் இது நடக்கலாம். என்னை நம்புவதற்கு நீங்கள் ஏதாவது ஒரு நாள் தீர்மானிக்கலாம். நான் இங்கே

இருப்பது உங்களுக்குப் பாதை காட்டுவதற்காக அல்ல. உங்கள் இலக்கை உங்களுக்குத் காட்டுவதற்காக மட்டுமே.

ஏனென்றால் பாதை என்பது நீண்ட நீண்ட தூரம் பயணிக்க வேண்டும். மேலும் அதில் இலக்கு தூரத்தில் இருக்கிறது. என் முழு உழைப்பும் என்ன தெரியுமா? உங்களைப் பாதைகள் என்று சொல்லப்படுபவைகளிலிருந்து விலகி வரச் செய்தல்தான்- உங்கள் இலக்கு இங்குத்தான் உள்ளது. நீங்கள் எங்கே போகிறீர்கள்?

**கடந்த சில நாட்களாக நீங்கள் சொல்லும் நகைச் சுவைத் துணுக்குகளில் சில என்னை அதிர்ச்சியடைய வைத்து விட்டது.**

சுவாமி ஆனந்த் பிரசாந்தரிடமிருந்து இந்தக் கேள்வி வந்துள்ளது. நல்லது உங்களுக்குப் பாராட்டுக்கள். குறைந்தபட்சம் நீங்கள் அதிர்ச்சியாவது அடைந்தீர்கள். ஏதோ ஒன்று நிகழ்ந்திருக்கிறது.

ஒருசமயம், நான்கு நபர்களிடம் நகைச்சுவைத் துணுக்குகள் சொல்லிக் கொண்டிருந்தேன். முதலாமவர் நான் சொன்னதைக் கேட்கவேயில்லை. அவர் தூங்கி விட்டார். அவர் மாபெரும் பேராசிரியர். அவருடைய அறிவில் அவர் நன்றாகத் தூங்கிவிட்டார். இரண்டாமவர் கேட்டார். ஆனால் அவரால் அவற்றைப் புரிந்துகொள்ள முடியவில்லை. அவர் ஒரு அரசியல்வாதி- முட்டாள். மூன்றாமவர் கேட்டார், புரிந்து கொண்டார், ஆனால் தவறாக அர்த்தம் சொன்னார். அவர் ஒரு உளவியல்-பகுப்பாளர். நான்காமவரைப் பற்றி நான் எதுவும் சொல்வதற்கில்லை. அவர் பல ஆண்டுகளாகவே இறந்து விட்டவர்- அவர் ஒரு மத போதகர்.

பிரசாந்தர் அதிர்ச்சியடைந்தார். நல்லது. மிகவும் நல்லது. குறைந்தபட்சம் அவர் தூங்கவில்லை; குறைந்த

பட்சம் அவர் இறக்கவில்லை. ஏனென்றால் இறந்த மனிதனுக்கு உங்களால் அதிர்ச்சியூட்ட முடியாது.

அவர் புரிந்து கொண்டார். ஆனால் உண்மையாகவே, தவறான விளக்கமளித்துள்ளார். அவர் உளவியல் பகுப் பாய்வுத் தொழிலில் உள்ளவர். உளவியல் மருத்துவத்தில், நிர்கிரந்தருக்கு அவர் உதவுகிறார்.

ஆம். அதுதான் எனது குறிக்கோள். நீங்கள் உஷாராக இருந்தால் நான் ஜோக் (joke) சொல்வதை நிறுத்தி விடுகிறேன்.

நான் ஒரு பக்கம் தூரம் சென்று கொண்டிருக்கிறேன். நீங்களும் மறுபக்கம் ரொம்ப தூரம் சென்று கொண்டிருக் கிறீர்கள். இப்போது நான் ஒரு நகைச்சுவைத் துணுக்குச் சொல்ல வேண்டியிருக்கிறது. அது உங்களைக் குலுக்கும், அதிர்ச்சியூட்டும், அதனால் உங்கள் தண்டு வடத்தில் ஒரு குலுக்கல் ஏற்படுகிறது. ஓரளவு இன்னும் அதிகமாக உங்களுக்கு உஷார் நிலை ஏற்படுகிறது. பின்பு நான் சொல்வதை நன்றாகக் கேட்கிறீர்கள்.

உண்மையில் எல்லாத் துணுக்குகளும், அதிர்ச்சி தரக் கூடியவையே. அப்படியில்லையேல் அவை துணுக்குகளே அல்ல. முழுக் குறிக்கோளும் உங்களுக்கு அதிர்ச்சி ஊட்டுவது தான்.

நீங்கள் பல பாதுகாப்பு அரண்களால் மூடப்பட்டு வாழ்கிறீர்கள். ஒருவகையான அதிர்ச்சி மருத்துவம் தேவைப்படுகிறது. ஆம் பல துணுக்குகள் பச்சை ரகம்தான். அது உங்களைப் பொறுத்துள்ளது. நீங்கள் நன்றாகத் தூங்கி விட்டீர்கள் என்று கண்டு கொண்டால், நான் மிகக் பச்சையான துணுக்கைச் சொல்ல வேண்டும். வேறு வழியே இல்லை. ஒரு மென்மையான துணுக்கு. உங்களைச்

சாதரணமாகக் கடந்து சென்றுவிடும். அது உங்கள் தண்டுவடத்திற்கு எந்தக் குலுக்கலையும் கொடுக்காது.

ஆனால் நல்லது. குறைந்த பட்சம் ஒருவராவது இங்கே தூங்காமல் இருக்கிறார், அதாவது பிரசாந்தர். ஆனால் அவர் தவறான விளக்கமளிக்கிறார். அது இயல்பானது தான். விளக்கங்கள் நம் சொந்த மனதிலிருந்து வருகின்றன. யூதர்களைப் பற்றியே என் துணுக்குகள் அதிகமாக இருப்பதால் அவை பச்சையானதாகவும், இன வெறி கொண்டதாகவும் அவர் எண்ணுவதால் அவர் தவறாக கருதி விட்டார்.

நான் யூதர்களை நேசிக்கிறேன். நானே ஒரு பழைய யூதன் தான். ஆகவே அவர்களை நான் மறப்பது மிகவும் கடினம். அவர்கள் தான் இந்தப் பூமியில் உள்ளவர்கள் அனைவரிலும் அழகானவர்கள் ஆவார்கள். ஆகவே தான் அவர்களைப் பற்றி அவ்வளவு துணுக்குகள் இருக்கின்றன. துணுக்குகள் எதனால் நிலைத்திருக்கின்றன என்றால் யூதர்கள் அந்த அளவுக்கு நுண்ணறிவு உள்ளவர்கள். நீங்கள் ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தைப் பற்றி மட்டும் தான் துணுக்குச் சொல்கிறீர்கள். ஏனென்றால் உங்களால் அந்தச் சமுதாயத்தோடு போட்டியிட முடியாது. இந்தத் துணுக்கு ஒரு நஷ்ட ஈடு உங்களுக்கு.

யூதர்கள் உண்மையிலேயே நுண்ணறிவு மிக்கவர்கள். உலகிலேயே மிகச்சிறந்த நுண்ணறிவுள்ள இனங்களில் அது ஒன்று.

ஒவ்வொருவரும் அந்த இனத்தோடு போட்டியிட முடியாது என்று உணர்கிறார்கள். பிறகென்ன? துணுக்குகளில் பழிவாங்கிக் கொள்கிறீர்கள். துணுக்குகள் மிகவும் சுட்டுத்தன்மை உடையவை.

துணுக்குகள் குறிப்பவரைப் பற்றி எதுவும் உண்மையில் சொல்வதில்லை. மாறாக அதை உருவாக்கியவர்களை பற்றியே சொல்கிறது. துணுக்கை உருவாக்கியவர் பற்றி ஏதோ ஒன்றை அவை சொல்கின்றன.

யூதர்கள் வசிக்கும் இடங்களிலெல்லாம் அவர்களைப் பற்றிய துணுக்குகளை உருவாக்குகிறார்கள். ஏனென்றால் அவர்களைப் பழிவாங்க வேறு வழியே இல்லை. அசல் வாழ்க்கையில் அவர்கள் மிகமிக மேலான நிலையில் உள்ளார்கள்; இது எப்போதும் நிகழ்கிறது!

ஆகவே உங்கள் விளக்கம், உங்கள் விளக்கம்தான். நீங்கள் நான் யூதர்களுக்கு எதிரானவன் என்று நினைக்கிறீர்கள்; அல்லது வேறு ஏதாவது? நான் ஒரு நேசிப்பவன். ஆனால் என்னால் புரிந்துகொள்ள முடியும். "நான் சிறுவனாய் இருந்த போது நான் கூறியவை இந்தத் துணுக்குகள். நான் அவற்றைக் கூறியபோது எனக்கு மிகவும் கொடுமையான உள்நோக்கம் இருந்தது" என்று பிரசாந்தர் கூறுகிறார்.

ஆகவே உங்கள் கொடுமையான உள்நோக்கங்களை என்மீது திணிக்கிறீர்கள்.

கதைகள் ஒன்றாய் இருக்கலாம், கதை சொல்பவர் அதே மனிதர் அல்லர், நினைவில் கொள்ளுங்கள். அதை மறக்க வேண்டாம்.

பொதுவாகவே, புத்தர்கள் ஒருபோதும் துணுக்குரைப்ப தில்லை. முதல்தடவையாக ஒரு புத்தர் துணுக்குரைக்கிறார். இது ஏதோ ஒரு புதுமையானது தான். எனவே நீ சற்று குழம்பி போய் இருக்கிறாய். ஆனால் என்னைப் பொருத்த வரை எல்லாமே புனிதம்தான். எதுவுமே புனிதமல்லாத தில்லை; பாலுணர்ச்சி முதல் பத்மாயிரம் வரை நான்

ஒவ்வொன்றையும் ஏற்றுக் கொள்கிறேன். என் ஏற்புடைமை முழுமையானது. என் ஏற்புடமை பூரணமானது.

ஆகவே சில சமயங்களில், துணுக்கு, பச்சையானதாகத் தோற்றம் அளிக்கக் கூடும். ஆபாசமாகத் தோன்றக்கூடும். எனக்கு எதுவும் ஆபாசமில்லை. எல்லாமே அழகானவை தான் அவை அவை இருக்கின்றவாறே!

[ஆபாசம் என்பது மனத்தின் விளக்கம் தான்.]

பிரசாந்தரே, உங்கள் விளக்கத்தை விட்டுவிடுங்கள். அந்த அதிர்ச்சி மிகவும் நல்லது. ஆனால் உங்கள் விளக்கம் விடப்பட வேண்டும். இல்லையேல் நீங்கள் என்னைத் தவறாகப் புரிந்து கொள்வீர்கள், நீங்கள் ஒரு வாய்ப்பை இழந்து விடுவீர்கள்.

நான் கேட்டிருக்கிறேன்:-

பத்தொன்பதாண்டுகள் கடினமான திருமண வாழ்விற் குப் பிறகு, கிளென்ஸி தன் மனைவி மாகிக்கு ஓர் உண்மையான அணில் தோல் அங்கியை அன்பளிப்பாக அளித்தார்.

மிகவும் மென்மையாகவும் உல்லாசமாகவும் சமைய லறையில் அந்த அணில் தோல் ஆடையுடன் உலாவந்த தன் தாயைப் பார்த்து அவளது கடைக்குட்டி மகன் உனக்கு அங்கி வேண்டுமென்பதற்காக அந்தப் பாவப்பட்ட ஜென்மம் மிகவும் சிரமப்பட்டிருக்கிறது என்று சொன்னான்.

தாய் மகனிடம், அவன் வாயில் அடிகொடுத்துக் கொண்டே, "மூடு வாயை உங்க சொந்த அப்பாவைப் பற்றி இவ்வளவு மோசமாக நீ பேசலாமா?" என்று சொன்னாள்.

அம்மா ஒரு கருத்தைக் கூறுகிறாள்- அவள் மனத்தில் இருக்கும் ஏதோ ஒன்றை-வைத்துக் கூறுகிறாள். அந்தப் பையன் சொல்லியது, முழுக்க முழுக்க வித்தியாசமான பொருள் உடையது.

நீங்கள் எப்படி ஒரு விஷயத்தை எடுத்துக் கொள்கிறீர்கள் என்பது எப்போதும் உங்கள் மனத்தைப் பொருத்தது. மரபுவழி எண்ணங்களால் நீங்கள் நிரப்பப்பட்டிருந்தால்- இது ஆபாசம், இது ஆபாசம் இல்லை, இது மிகவும் பண்பாடுடையது, இது பச்சையானது... இது போன்றெல்லாம் நான் எந்த வரையறைகளும் வைத்துக் கொள்ளவில்லை.

வாழ்க்கை எனக்கு- வாழ்க்கை- வெறுமனே- வாழ்க்கை மட்டுமே- பச்சையானது மற்றும் பண்பட்டது இரண்டும் தான். பண்படாத தன்மை அதன் பாகம், அதன் உயிர்ப்பு; நாம் அதனை நம் வழிகளில் விளக்கம் அளிக்கிறோம்.

நினைவு கொள்ளுங்கள்- என்னைப் பற்றி விளக்கும் போதெல்லாம் நீங்கள் நன்றாக நினைவு கொள்ளுங்கள்- அது உங்கள் வெளிப்பாடாக இருக்கலாம்.

இல்லாத ஏதோ ஒன்று உங்கள் பார்வைக்குத் தென்படலாம்.

இல்லாத ஒன்றில் உங்களை நீங்கள் ஈடுபடுத்திக் கொண்டிருக்கலாம். என்னால் அதைப் புரிந்து கொள்ளமுடியும். அது இயல்பானது தான். எனக்கு அது பற்றி எதுவும் கோபம் இல்லை. இது மிகவும் இயல்பானது.

ஏனெனில் இப்போது நீ அப்படித்தான் புரிந்துகொள்வாய். எந்த விளக்கங்களும் இல்லாமல் என் பேச்சைக் கேட்பதற்கு ஒருநாள் சாத்தியம் ஆகும். இல்லாவிட்டால், உள்மனத்திற்குள் நிலையான பேச்சுக்கள் இருந்து கொண்டே இருக்கும்.

இது நடந்தது. மிகவும் நல்ல முறையில் வளர்க்கப்பட்ட ஓர் ஆங்கில மாது, திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று தீர்மானித்தார். வேறொரு பெண்ணை ஒருபோதும் அறியாத மனிதனாகத் தன் கணவன் இருக்க வேண்டும் என்று வலியுறுத்திச் சொல்லி விட்டார். அவளது வழக்கறிஞர்கள் பாரெங்கும் தேடித் தன் வாழ்நாள் முழுவதும் தனிமையிலேயே வாழ்வைக் கழித்த, அழகான, ஆஸ்திரேலிய இளைஞன் ஒருவனைக் கண்டு பிடித்தனர். அவனை லண்டனுக்கு அழைத்து வந்து பாண்ட் தெருவில் உள்ள தலைசிறந்த கடையில் அவனுக்கு உடைகள் வாங்கிக்கொடுத்து அணிவித்து அவனைத் தங்கள் எஜமானியின் முன்னால் கொண்டு வந்து நிறுத்தினார்கள். அவள் அப்படியே மகிழ்ந்து போனாள். திருமணம் மிக விரைவில் ஏற்பாடு செய்யப்பட்டது.

திருமணத்தன்று இரவு டார்செஸ்டர் என்னுமிடத்தில், திருமணம் பதிவு செய்து கொண்டு, ஆடம்பர ஹோட்டல் அறை ஒன்றில் தங்கினர். அவர்கள் இருவரும் தனிமையில் விடப்பட்ட பின்பு, அந்த இளைஞன், அந்த அறையிலிருந்த அனைத்து மரச்சாமான்களையும் அப்புறப்படுத்தத் தொடங்கினான். 'நீங்கள் என்ன செய்கிறீர்கள்' என்று ஆங்கிலமாது, அவனைக் கேட்டாள்.

"எனக்குப் பெண்ணுடன் பாலுறவு கொள்வதுபற்றி எதுவும் தெரியாது. ஆனால் கங்காரு இனத்துடையது போன்றது என்றால், நமக்கு இந்த அறை முழுவதும் தேவைப்படும்" என்று பதிலளித்தான் இளைஞன்.

இப்போது அதுதான் அவனது ஒரேஉலகம். அவனுக்கு கங்காருக்களைப் பற்றித் தான் தெரியும்.

ஆகவே, பிரசாந்தரே, உங்கள் கங்காருக்களை இங்கே கொண்டு வராதீர்கள். நான் என்ன சொல்கிறேன் என்பதைச் சும்மா கேளுங்கள் போதும். உங்களை அதிர்ச்சி

அடையச் செய்வதுதான் என் குறிக்கோள். ஆகவே உங்களுக்கு அதிர்ச்சி வரும்போது, அது எவ்வளவு ஆழமாக நுழையமுடியுமோ அவ்வளவு ஆழமாக நுழையட்டும். அதை விளக்குவதற்கு அவசரப்படாதீர்கள்; ஏனென்றால் அது தொந்தரவு ஆகிவிடும். அப்புறம் அதிர்ச்சி உங்கள் இருத்தலின் மையத்தைச் சென்று சேராது. எவ்வளவு அதிர்ச்சிகள் உங்களுக்குத் தேவைப்படுகிறதோ, அவ்வளவையும் நான் கொடுக்க அனுமதித்தீர்கள் என்றால், உங்கள் தண்டுவடம் உறுதியடையும், நீங்கள் அதிர்ச்சியே அடையாதவராக ஆகிவிடுவீர்கள்.

முல்லா நசிருதீன், பல விருந்து கேளிக்கைகளில், ஈடுபட்டுக் களைத்துப் போய் விட்டார். சலித்து விட்டது அவருக்கு; ஆகவே விருந்துகளுக்குத் தன்னை யாரும் கூப்பிடக் கூடாது என்று விரும்பினார். ஒரு உத்தியைக் கண்டுபிடித்தார். இனிமேல் அவரை விருந்துகளுக்கே அழைக்காத அளவுக்கு ஒரு திட்டத்தை உருவாக்கினார்.

முதலாவதாகத் தன் வலப்பக்கம் உள்ள பெண்ணிடம் அவளுக்குத் திருமணம் ஆகிவிட்டதா என்று கேட்பார். ஆம் என்று பதில் வந்தால் குழந்தைகள் எத்தனை என்று கேட்பார். இல்லை என்று பதில் வந்தால் எப்படித் தடுத்துக் கொண்டார்கள் என்று கேட்பார்.

இரண்டாவதாகத் தன் இடப்பக்கம் உள்ள பெண்ணிடம் அவளுக்குத் திருமணம் ஆகிவிட்டதா என்று கேட்பார். இல்லை என்றால் அவளுக்குக் குழந்தைகள் ஏதேனும் உண்டா என்பார்.

மூன்றாவதாக மேஜையின் குறுக்கே உள்ள ஒருத்தியிடம், அவளுக்குக் குழந்தைகள் இருக்கின்றனவா என்று கேட்பார். ஆம் என்று பதில் வந்தால், அவளுக்குத் திருமணம் ஆகிவிட்டதா என்று கேட்பார். இப்படியெல்

லாம் கேட்டதனால், இப்போதெல்லாம், அவரை யாரும் விருந்துக்கு அழைப்பதே இல்லை.

எனது துணுக்குகள் அனைத்தும் வேண்டுமென்றே உங்களை அதிர்ச்சிக்குள்ளாக்குவதற்காகவே சொல்லப் படுகின்றன. பலவீனமானவர்கள், மிகவும் வலிமை இல்லாதவர்கள் மறைந்து விட்டார்கள். அவர்கள் பேச்சை கேட்க வருவதில்லை, அவர்களால் வரமுடியாது.

தைரியமான மக்கள் யாரோ அவர்கள் மட்டுமே, அதிர்ச்சிகளைத் தாங்கும் சக்தியுடையவர்கள் மட்டுமே, எனக்கு நெருக்கமாகிறார்கள், தெரிந்தே செய்யப் படுவதுதான் இது.

**நீங்கள் மூன்று வழிகள் பற்றிப் பேசினீர்கள்; அழகு, மேன்மை, அதிகாரம்; உங்கள் வழி எது? அல்லது மூன்றுமா?**

எதுவுமில்லை, எனக்கு வழியே இல்லை. ஏனென்றால் நான் உங்களை எங்குமே அழைத்துச் செல்லவில்லை. இங்கேயே இப்பொழுதே உங்களை விழித்துக் கொள்ளச் செய்ய நான் முயற்சி செய்து கொண்டிருக்கிறேன். நீங்கள் ஏற்கெனவே பூமி முழுவதும் அலைபாய்ந்து கொண்டிருக் கிறீர்கள். உங்களைக் உங்களிடம் சேர்ப்பதே என் முயற்சி யாகும். உண்மையில் உங்கள் அலைச்சல் கனவில் மட்டும் தான்.

இது எப்படி? நீங்கள் பூனாவில் தூங்கி பிலடெல்பியா பற்றிக் கனவு காண்பது போலத்தான் இது. மீண்டும் அடுத்தநாள் காலையில் நீங்கள் பூனாவில் உள்ளீர்கள். நீங்கள் பிலடெல்பியாவில் இருப்பதாகக் கனவு காண்பதை நான் கண்டுவிட்டால், நான் என்ன செய்யவேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்? பூனாவிற்குத் திரும்பிவர நான் ஒரு வழி அமைக்க வேண்டுமா? டிக்கட் ஏதாவது

ஏற்பாடு செய்ய வேண்டுமா? ஏனென்றால் அப்பொழுது தான் நீங்கள் பூனா வந்து சேரமுடியும் என்று நினைக் கிறீர்களா?

நான் உங்களுக்கு அதிர்ச்சி மட்டும் தான் கொடுக்க முடியும். உங்கள் படுக்கையிலிருந்து நீங்கள் எழுந்து கொள்வீர்கள். இதோ இங்கே இருக்கிறீர்கள். நீங்கள் பிலடெல்பியாவுக்கு ஒருபோதும் செல்லவில்லை. சும்மா நீங்கள் கனவு கண்டுகொண்டிருந்தீர்கள். அதனால் தான், கிழ்த்திசையில் நாம் உலகத்தைக் 'கனவு' என்று அழைக் கிறோம். மாயை, பொய்த்தோற்றம் என்றெல்லாம் கூடச் சொல்கிறோம். அது ஓர் அழகான சொல், நீங்கள் கனவு காண்கிறீர்கள் என்பது தான் அதன் பொருள். எதுவுமே நீங்கள் செய்ய முடியாது. எதுவுமே செய்யவும் வேண்டாம். ஆனால் ஒன்றே ஒன்று செய்ய வேண்டும். நீ விழிப்புணர் வோடு இருக்க வேண்டும், நீங்கள் விழித்துக் கொண்டிருக்க வேண்டும்.

நீங்கள் வீட்டை விட்டு வெளியே செல்லவே இல்லை; நீங்கள் எப்போதுமே இங்குத் தான் இருந்திருக்கிறீர்கள். அது தான் இருப்பதற்கான ஒரே வழி, நீங்கள் வேறு எந்த இடத்திற்கும் சென்றுவிட முடியாது; அது அனுமதிக்கப் படவில்லை, அந்தந்த விஷயங்களின் அதே இயல்புகளில், அவரவர் எங்கெங்கே எது எதற்குச் சொந்தமோ அங்கே இருக்கிறார்கள்.

ஆனால் ஒவ்வொருவரும் கனவு காண்கிறார்கள். கனவில் வேறுவேறு இடங்களுக்கு மிதந்து சென்று விட்டார்கள். கனவு காணும் பலவாழ்க்கைகள், மனிதன் மிதக்கிறான் மிதக்கிறான், மிதந்து கொண்டே இருக்கிறான்; ஒன்று இன்னொன்றிற்கு இட்டுச் செல்கிறது. இன் னொன்று மற்றொன்றுக்கு, மற்றொன்று வேறொன்றுக்கு...

இப்படி மேலும் மேலும் மிதந்து சென்று கொண்டிருக்கிறான் மனிதன்.

நீங்கள் உங்கள் வீட்டை விட்டுப் பல லட்சக்கணக்கான மைல்களுக்கு அப்பால் சென்றடைந்திருக்கக் கூடும்; ஆனால் இன்னும் நீங்கள் இங்குத் தான் இருக்கிறீர்கள். ஏனென்றால், விஷயங்களின் இயல்புகளின்படி அவளது சொந்த இருத்தலைத் தவிர வேறெங்கும் யாரும் சென்று விட முடியவே முடியாது.

எவரும் தங்கள் இயற்கையை விட்டுவிட்டு அப்பால் சென்று விட இயலாது. தங்கள் சட்டங்களை, கொள்கையை, தர்மத்தை விட்டு யாரும் எங்கும் சென்றுவிட முடியாது.

உங்கள் கடவுளை நீங்கள் இழக்கவே முடியாது. எவ்வளவு கஷ்டப்பட்டு முயன்றாலும், உங்கள் சட்டத்தை நீங்கள் இழக்கமுடியாது. அது தான் உங்கள் தாவோ ஆகும். ஆகவே என்னைப்பொருத்தவரை நீங்கள் தூங்கிக் கொண்டிருக்கிறீர்கள், நீங்கள் விழிப்புணர்ச்சி பெற்றாக வேண்டும். பயணம் செய்யப் பாதை இல்லை, வழியில்லை. ஏனென்றால் நீங்கள் ஒருபோதும் ஓரிடத்திற்கும் செல்லவே இல்லை.

ஆசிரியர் விழிப்புணர்வுக்குரிய வழிவகைகளைக் கண்டுபிடிக்க வேண்டும். ஜென்மக்களிடம் சரியான சொல் உள்ளது. அவர்கள் பாதையைப் 'பாதையல்லாப் பாதை' என்றும் வாசல் அல்லாத வாசல் என்றும் அழைக்கின்றனர். முரண்பாடுடையதாக இருந்தாலும் உண்மை தன்மையை அப்படியே வெளிப்படுத்துவதாக இது உள்ளது.

இங்கே இப்போது நீங்கள் விழித்துக் கொண்டால், நீங்கள் முழுமையான அழகும், மேன்மையும், சக்தியும்

உடையவர் ஆவீர்கள். அந்த மூன்றும், விழிப்புணர்வு பெற்ற ஆத்மாவின் குணங்கள் ஆகும்.

விழிப்புற்ற ஆத்மா அழகானது. அசிங்கமானது எதுவும் விழிப்புற்ற ஆத்மாவில் இருக்க முடியாது. விழிப்புணர்வு தான். இருக்கும் ஒரே அழகு விழிப்புற்ற ஆத்மா மாபெரும் மேன்மையும் மென்மையும் அருளும் உடையது. நீங்கள் அதற்குள்ளே நுழையலாம். ஒருபோதும் நீங்கள் அதை அறியமுடியாது. அது தெரிந்தது ஆகிறது; இருப்பினும் தெரியாமலே இருந்துவிடுகிறது. திகைப்பும் ஆச்சரியமும் தான் மிஞ்சுகிறது.

/நீங்கள் விழிப்புணர்வு பெற்றுவிட்டால், உங்களுக்கு மாபெரும் சக்தி கிடைத்துவிடுகிறது/அழிக்கக் கூடிய சக்தி என்னும் பொருளிலோ ஆக்கிரமிக்கக் கூடிய சக்தி என்ற பொருளோ, அரசியல்வாதி சொல்லும் பொருளிலோ, விஞ்ஞானி பயன்படுத்தும் பொருளிலோ அது சக்தி வாய்ந்தது என்று நான் சொல்லவில்லை.

சக்திவாய்ந்தவர் என்றால் திடீரென்று உங்களுக்கு எல்லையே இல்லை என்றும் எல்லைக்கோடுகள் இல்லை என்றும், நீங்கள் அளவற்றவர் என்றும் பொருள்படும்.

சக்திவாய்ந்தவர் என்றால் உங்களுக்குச் சாவுகிடையாது, சாவில்லாதவர் என்று அர்த்தம். சக்திவாய்ந்தவர் என்றால் உங்கள் ஆனந்தம். மிகபிரமாண்டமானது; நம்பமுடியாதது, உங்கள் கட்டுப்பாடு தீமையற்றது. சரியானது. நீங்கள் யாரிடமும் வற்புறுத்த வேண்டாம். அது சாதாரணமாக அங்கே இருக்கும். சக்திவாய்ந்தவர் என்பதன் பொருள், நீங்கள் கடவுள் என்பதே அதற்குக் குறைவாக எதுவு மில்லை.

சக்தி வாய்ந்தவர் என்பதன் பொருள் உலகத்தில் நீங்கள் தனிப்பட்டவர் இல்லை. மேலும் இருப்பவை அனைத்தும்

ஆண் பெண் கடவுள்களே. நீங்கள் பிரபஞ்சத்தோடு இணங்கிய ஒருவர். வாழ்வுடன் ஒன்றியவர். நீங்கள் விழிப் புணர்வோடு இருக்கும்போது மூன்று விஷயங்கள் நடக்கின்றன.

நீங்கள் ஏற்கனவே அப்படித்தான். ஆனால் மிகவும் சக்தியற்றவர் என்று உணர்வீர்கள்.

நீங்கள் சக்தியற்றவர் என்று ஏன் உணர்கிறீர்கள் என்றால் உங்களுக்கு நீங்கள் யார் என்று தெரியாது.

உங்கள் பொக்கிஷங்களையெல்லாம் நீங்கள் உணராத காரணத்தால் நீங்கள் சக்தியில்லாதவர்கள் என்று உணர்கிறீர்கள். நீங்கள் அறியாமையின் போதையில் மூழ்கி உள்ளீர்கள். நான் கேட்டிருக்கிறேன்.

முல்லா நசிருதீன் தன் வீட்டிற்குப் போகும் வழியில், போதையில் இருந்த நிலையில், வழி தவறி ஓர் உயிர் காட்சிசாலைக்கு, அதுவும் ஒரு நீர்யானைக் கூண்டுக்குச் செல்ல நேர்ந்தது. அவர் நன்றாகக் குடித்திருந்தார். 'என்னை நீ இந்த மாதிரிப் பார்க்காதே. நான் ஒவ்வொன் றையும் உனக்கு விளக்கிச் சொல்வேன்' என்று நீர்யானை யிடம் புலம்பிக் கொண்டிருந்தார். 'நீர்யானையைத் தன் மனைவியாகப் பார்த்தார் அவர்.'

நீங்கள் குடித்திருக்கும்போது இல்லாத பொருள்களைப் பார்க்கிறீர்கள். ஒரு நீர்யானை உங்கள் மனைவியாகத் தோன்றக் கூடும். அல்லது உங்கள் மனைவி நீர்யானை போல் தோன்றக் கூடும். காலையில், குடிக்காத நிலையில், போதைமயக்கம் தெளிந்தபின்பு, எல்லாம் சரியாக, உண்மையான தோற்றத்தில் தெரிகின்றன.

நாம் அறியாமை என்னும் மதுவை, விழிப்புணர் வின்மை என்னும் மதுவைக் குடித்திருக்கிறோம்... வாழ்க்கைப் பாதையில் இத்தகைய குடிகாரர்கள் பல

ஆண்டுகளாக, பல வாழ்க்கைகளாகத் தடுமாறிக் கொண்டிருக்கிறார்கள்.

நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் ஒன்றே ஒன்றுதான், கொஞ்சம் அதிகம் உஷாராக இருக்க வேண்டும். இந்தப் போதையிலிருந்து வெளியே வாருங்கள்.

தியானம் என்பது இது பற்றியது தான் - உங்களுக்குக் கொஞ்சம் விழிப்புணர்ச்சி அளிப்பது. சில கணங்களுக்கு நீங்கள் விழிப்புணர்வு பெற முடியுமானால் கூட உங்களால் உண்மைத் தன்மையைப் பார்க்க முடியும். அந்த உண்மைத் தன்மை பற்றிய அனுபவம் உங்கள் வாழ்க்கையை உருமாற்றத் தொடங்கிவிடும். அப்புறம் மேலும் மேலும் அந்தக் கணங்கள் உங்களுக்கு வரும். மேலும், மேலும் நீங்கள் உண்மையைப் பார்ப்பீர்கள்.

இப்பொழுது நீங்கள், உண்மையல்லாதவர், அதனால் தான் உங்களைச் சுற்றிலும் ஓர் உண்மையல்லாத உலகை நீங்கள் உருவாக்கியுள்ளீர்கள். நீங்கள் உண்மையானவராக ஆகும்போது உண்மையான உலகம் உங்கள் பார்வையில் வரும்.

கடவுள் என்பது உண்மையானவர்களின் அனுபவம் ஆகும். உலகம் என்பது உண்மையல்லாதவர்களின் அனுபவம் ஆகும். அவர்கள் விழிப்புணர்வில்லாதவர்கள் என்பதனால் உண்மையல்லாதவர்கள், அதிகமான விழிப்புணர்வை நீங்கள் பெறும்போது, அதிகமான உண்மையாக நீங்கள் ஆகிறீர்கள்.

**சாத்தான் என்பது இல்லை, கடவுள் மட்டும் தான் உள்ளார் என்று நீங்கள் சொல்லியிருக்கிறீர்கள். நான் மேலை நாடுகளில் இருக்கும்போது, பேய்பிடித்தல் பற்றி நிறைய பேச்சு அங்கே அடிபட்டது. குறிப்பாக 'எக்ஸார் ஸிஸ்ட்' படத்தினால் தன்னைப் பேய் பிடித்திருக்கிறது**

**என்று நம்புகின்ற ஒரு நபருக்கு என்ன நடக்கிறது? அது ஏதாவது மன அழுத்தம் சார்ந்ததா? அல்லது ஏதாவது ஆவியா? இது ஏதாவது அபாயமா? அல்லது எல்லாம் கற்பனையா?**

/ பேய் என்பது இருட்டைப் போன்றது. அது உள்ளது, அதேசமயம் இல்லை. இருட்டு என்பது ஒளி அற்ற நிலை. பேய் என்பது கடவுள் அற்ற நிலை. ஒளியை உள்ளே கொண்டு வாருங்கள், இருட்டு மறைந்துவிடும்; நீங்கள் கடவுளை உள்ளே கொண்டு வாருங்கள், பேய் மறைந்து விடும். இருளும் ஒளியும் சந்திப்பது இதுவரை நிகழ்ந்ததே இல்லை. கடவுளுக்கும் பேய்க்கும் நேருக்குநேர் சந்திப்பது இதுவரை நடந்ததே இல்லை. இந்துக்களிடம் பழைய கதை ஒன்று உள்ளது./

/ ஒரு சமயம் இருட்டு, கடவுளிடம் சென்று "நான் எந்தத் தவறும் செய்யவில்லை. இருந்தாலும் உங்கள் சூரியன் ஒவ்வொரு காலையிலும் என்னை விரட்டுகிறது. எந்தக் காரணமுமின்றி அது என்னைத் துரத்துகிறது. பூமியில், நான் அங்குமிங்கும் ஓடியாடிக் களைத்துப் போய்விட்டேன். இது நியாயம் இல்லை' என்று கூறியது.

கடவுள் "நான் சூரியனைக் கேட்கிறேன்" என்று கூறினார். சூரியன் அழைக்கப்பட்டான். கடவுள் சூரியனைப் பார்த்து "என் இருட்டுக்கு நீ ஏன் துன்பம் கொடுத்துக் கொண்டே இருக்கிறாய்? அது உனக்கு என்ன தீங்கு செய்தது? இது நியாயம் இல்லை" என்று கூறினார்.

"சூரியன் ஆச்சரியப்பட்டான். நான் இருட்டைப் பார்த்ததே இல்லை. நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? இருட்டு என்று எதைச் சொல்கிறீர்கள்? அது போன்ற ஒன்றை நான் பார்த்ததே இல்லை. தயவு செய்து என் முன்னால் அதைக் கூப்பிடுங்கள்" என்று கூறினான்.

வழக்கு இன்னும் கோப்புகளில் உள்ளது. கடவுள் முயன்று கொண்டுதான் இருக்கிறார்; ஆனால் சூரியன் முன்பு இருட்டைக் கூப்பிடுவது முடியாத செயல் ஆகும். பொருள்களின் இயல்பின்படி அது சாத்தியமானதல்ல. ஏனென்றால் இருட்டு என்பது உண்மைத்தன்மை இல்லை. அது இருக்கிறது. இருந்தும்கூட, அது இருக்கவில்லை, அது இல்லாமை.

அது தான் பேய் பற்றியும். பேய் இருட்டுப் போலக் கறுப்பாகச் சாயம் பூசப்பட்டிருப்பது நல்லது தான். இருட்டின் தன்மையைக் காட்டுவதற்காகத் தான் அந்தக் கறுப்பு நிறம்/குர் ஆனிலும் விவிலியத்திலும் வேதங்களிலும் கடவுள் ஒளி என்று அழைக்கப்படுகிறார். உலக மறை நூல்கள் அனைத்திலும். கடவுளும் ஒளியும் ஒரே பொருளுடையவை.

அர்த்தமுள்ளது, குறிப்பிடத்தக்கது. கடவுளிருந்தால் அங்குச் சாத்தான் இருக்க முடியாது.

கேள்வியாளர் "நீங்கள் சாத்தான் இல்லை என்றும் ஆனால் கடவுள் மட்டும் தான் இருக்கிறார் என்றும் சொல்லியிருக்கிறீர்கள்" என்று கேட்டுள்ளார்.

ஆமாம். ஆனால் கடவுள் இல்லாமல் இருக்க முடியும். கடவுள் தூங்க முடியும். அப்போது அங்குச் சாத்தான் இருக்கிறான். கடவுள் நன்றாகத் தூங்க முடியும். அப்போது சாத்தான் நிச்சயம் இருக்க முடியும். சாத்தானுடன் சண்டை போடாதீர்கள் ஏனென்றால் அது இருட்டோடு சண்டை போடுவது போன்றது. நீங்கள் உண்மையாகவே இருட்டை அழிக்க விரும்புகிறீர்களா, அப்படியானால் ஒளியைக் கொண்டு வாருங்கள். இருட்டுடன் சண்டை போடாதீர்கள். அது முட்டாள்தனமானது. சாத்தானுடன் சண்டை போடாதீர்கள். அப்படியே ஒளியைக் கொண்டு வாருங்கள்; அப்படியே கடவுளைக் கொண்டு வாருங்கள்.

அப்படியே இன்னும் கொஞ்சம் அதிகமாக விழிப்புணர் வோடிருங்கள், உங்கள் உள்ளே இருக்கும் கடவுளை இன்னும் உஷார் ஆக்குங்கள். சாத்தான் தானே மறைந்து விடுகிறான்.

**மேலைநாடுகளில் நான் இருக்கும்போது பேய்பிடித்தல் பற்றி அதிக பேச்சு அங்கு அடிபட்டது...**

எப்போதுமே அப்படித்தான் இருந்து கொண்டிருக்கிறது. பல நூற்றாண்டுகளாக உலகம் முழுவதும், மக்கள் பேய் பற்றிப் பேசியிருக்கிறார்கள், ஏனென்றால் மக்களுடைய அனுபவங்களில், உண்மையில், கடவுளை விடச் சாத்தான் அதிக உண்மைத் தன்மையுடையது ஆகும்.

எங்கோ ஓரிடத்தில், ஒரு புத்தர், ஒரு இயேசு, ஒரு ஜொராதுஷ்டிரர், ஒரு லாவோட்ஸ, ஒரு மகாவீர் தோற்றம் அது மிக அரிதாகத்தான் நடந்திருக்கிறது.

பேய் என்பதில் ஒவ்வொருவருக்கும் அனுபவம் இருக்கிறது. கடவுளை நம்பாத நாத்திகர்கள் கூடப் பேயை நம்புகிறார்கள். கடவுளைப்பற்றி நம்பவே நம்பாத மக்கள் கூடப் பேயைப்பற்றி நம்பிக்கொண்டே இருக்கிறார்கள். ஏனென்றால் பேய் என்பது சாத்தான் என்பது- கூட்டங் களுக்கு, பெரும்பான்மைக்கு ஒரு திடமான கண்கூடான அனுபவம் ஆகும். புத்தர் என்பது கூட ஏமாற்றப்பட்டிருக் கலாம். பிரமையாக இருக்கலாம். வசியம் செய்யப்பட்டிருக் கலாம். தனது தொப்புளைப் பார்த்ததனால் அவர் பித்த ரானார் அல்லது ஏதோ ஒன்று ஆனார் என்பர். யாருக்குத் தெரியும் அதற்குச் சாட்சி என்ன? ஆனால் லட்சக் கணக்கான மக்கள் பேயை அனுபவித்திருக்கிறார்கள்.

ஆம், அது உண்மை. பேய் என்பது கடவுளை விட உண்மையான அனுபவம், இருந்தாலும் சொல்கிறேன், பேய் இல்லை. இது ஒரு அனுபவம் தானே ஒழிய வேறல்ல.

அதுவும் நீங்கள் தூங்கிவிட்டதாலும், விழிப்புணர்வு இல்லாமல் இருப்பதாலும் தான் எந்தக் கணத்திலும் நீங்கள் மூர்க்கத்தனம் அடையலாம். நீங்கள் அதனால் ஆட்கொள்ளப்படலாம்.'

பேய்பிடித்த உயிருக்கும், பேய் பிடிக்காத மனித உயிருக்கும் இடையில் ஒரு வித்தியாசம் உள்ளது.

நீங்கள் உங்கள் மனதைக் கவனியுங்கள். நீங்கள் எப்போதும் பெரும்பாலும் விளிம்பில் இருப்பது போன்ற உணர்வில் தான் இருக்கிறீர்கள் என்று உணர்வீர்கள்.

எந்தக் கனமும் பேயின் எல்லைப்பரப்பிற்குள் நீங்கள் செல்லலாம். உங்களைக் கவனித்துக் கொண்டு, உங்களை அழைப்பதற்காக, வேலியின் மீது பேய் உட்கார்ந்து கொண்டு இருக்கிறது.

நீங்கள் கீழே உட்காருங்கள். உங்கள் கதவுகளையும் ஜன்னல்களையும் மூடிவிடுங்கள். பதினைந்து நிமிடங்கள் உங்கள் மனதில் என்னென்ன வருகின்றனவோ அவற்றை எழுதுங்கள். அது அதோ சாத்தான் எழுதிய ஒருமறைநூல் மாதிரி இருப்பதை நீங்கள் பார்ப்பீர்கள். உண்மையாய் இருங்கள். யாரும் அதைப்பார்க்கப் போவதில்லை. நீங்கள் உண்மையாகவும் கண்ணியமாகவும் இருந்து மனதில் என்னென்ன வருகிறதோ எல்லாவற்றையும் எழுதுங்கள். உங்களிடமிருந்து பெரும்பாலும் பைத்திக்காரத்தனம் வெளியே பொங்கிவழிவது போலத் தோன்றும். இந்தப் பைத்தியம் எந்த நாளிலும் பேய்த்தனமாக மாறக் கூடும்.

**அங்கிருந்தபோது குறிப்பாக எக்ஸார்ஸிஸ்ட் படம் பற்றி...**

திரைப்படங்கள், கதைகள், நிகழ்ச்சிகள், தங்கள் சொந்தச் சூழலை உருவாக்குகின்றன. 1962-ல் மர்லின் மன்றோ தற்கொலை செய்து கொண்ட பொழுது, சில

நாட்களுக்கு, அமெரிக்காவின் பல நகரங்களிலும் தற்கொலை விகிதம் மிக அதிகமாக இருந்தது. நியூயார்க், சிகாகோ, சான்பிரான்ஸிஸ்கோ ஆகிய நகரங்களில் வழக்கத்தைவிட அது ஐந்து மடங்கு அதிகமாக இருந்தது. ஒரு பெண் தற்கொலை செய்து கொண்டால் அவ்வளவு தான். பல தற்கொலைவிருப்ப மக்கள் இருந்தார்கள்; திடீரென்று அவர்களுக்கு ஒரு செய்தி கிடைத்தது. திடீரென்று அவர்கள் மன அழுத்தம் பெற்றார்கள். மக்கள் காப்பியடித்து வாழ்கிறார்கள். மன்றோ போன்ற இப்படிப்பட்ட அழகான இளம் பெண் தற்கொலை செய்து கொள்ள முடியுமானால், நாம் ஏன் கவலைப்பட வேண்டும்? நீங்களும் அதைச் செய்ய முடியும்.

மக்கள் காப்பியடித்து பல செயல்களைச் செய்து கொண்டு செல்கிறார்கள். ஜப்பானில், 1950-ல் ஒரு பள்ளிச்சிறுமி ஒரு எரிமலை வாயில் குதித்தாள். அப்புறம் மூன்று மாதத்திற்குள் முந்நூறு பள்ளிச் சிறுமிகள், அதே எரிமலை வாயில் குதித்தார்கள். என்ன நடந்தது? என்ன பைத்தியக்காரத்தனம்? விஷயங்கள் தொற்று நோயைப் போலப் பரவுகின்றன. மனிதன் தன்னைத் தூண்டுகின்ற எந்த விஷயத்திற்காகவும் காத்திருக்கும் அளவுக்குப் பெரிய பைத்தியக்காரன்,

நீங்களும் கூட இரையாவீர்கள். நன்றாக நினைவு கொள்ளுங்கள். எதுவும் ஒரு தூண்டும் முனையாக ஆகக் கூடும். அதனால்தான்/ 'ஒருபோதும் ஒன்று போலச் செய்யாதீர்கள், ஒருபோதும் யாருடைய கார்பன் காப்பியாகவும் நீங்கள் ஆகிவிடாதீர்கள்'/என்று நான் வலியுறுத்துகிறேன்.

/நீங்களாக ஆக முயலுங்கள். நீங்களாக இருக்க முயலுங்கள். உங்கள் தனிநபர்த்தன்மையைக் காத்துக் கொள்ளுங்கள்/ உங்களை நீங்களே கூட்டத்தில் தொலைத்துவிடாதீர்

கள். கூட்டு மனத்தின் ஒரு பகுதியாக உங்களை நீங்கள் ஆக்கிக் கொள்ளாதீர்கள்.

நீங்கள், தனிநபர் மனமாக ஆனால் ஏதாவது ஒருநாள் பிரபஞ்சமனத்தில் உறுப்பினராக ஆவதற்குச் சாத்தியம் இருக்கும். நீங்கள் கூட்டுமனத்தில் விழுந்து விட்டால், பேயிடம் விழுந்து கொண்டிருக்கிறீர்கள். கூட்டம் என்பது பேய் போலச் செய்தல் என்பது. பேய்க்கு இட்டுச் செல்லும் பாதை. எக்ஸார்ஸிஸ்ட் மாதிரி ஒரு திரைப்படம் இருந்தால், பலமக்கள் பேய் பற்றியும் ஆவிகள் பற்றியும் பேசத் தொடங்குவார்கள், பேய் பிடித்தவர்கள் ஆவார்கள், பல மக்கள் இரவில் பயங்கரக் கனவுகளைக் காண்பார்கள்.

அவ்வளவு எளிதாக, மனம் அவ்வளவு பெரிய அளவில் பாதிக்கப்படுகிறது. அதுதான் ஆபத்து. அப்படித்தான் நீங்கள் கிறிஸ்துவராகவும், இந்துவாகவும், முஸ்லீமாகவும், யூதனாகவும் ஆகியிருக்கிறீர்கள். நீங்கள் பிறரால் தாக்கம் பெற்றிருக்கிறீர்கள். எது நடக்கத் தொடங்கினாலும், அது சங்கிலி எதிர்ச்செயலாக ஆகிறது. எச்சரிக்கையாய் இருங்கள். நீங்கள் உங்கள் தன்னுணர்வைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்.

ஒரு போதும் ஒரு பிரிவின் அங்கமாக இருக்காதீர்கள். ஒருபோதும் எந்த இயக்கத்தின் அங்கமாகவும் இருக்காதீர் கள். ஒருபோதும் எந்த நாட்டின் அங்கமாகவும் இருக்காதீர் கள். எனக்குத் தெரியும், நடைமுறைச் சிக்கல்கள் உள்ளன. பாஸ்போர்ட் உங்களுக்கு வேண்டும். நான் அதை ஆற்றில் தூக்கி எறியச் சொல்லவில்லை. ஆனால் இது ஒரு வசதி என்று மட்டும் நினைவு வைத்துக் கொள்ளுங்கள். எந்த நாட்டிற்கும் அங்கமாக நீங்கள் ஆகாதீர்கள். இந்தியா அல்லது அமெரிக்கா அல்லது பிரான்ஸ், ஒருபோதும் எல்லைக் கோடுகள் பற்றிச் சிந்திக்காதீர்கள். ஒருபோதும் நீங்கள் கிறிஸ்துவர் என்றோ இந்து என்றோ முஸ்லீம்

என்றோ சிந்திக்காதீர்கள். நடைமுறைவசதிக்காக எல்லாம் சரிதான். ஆனால் ஆழமாக மேலும் ஆழமாக நீங்கள் எதற்கும் கட்டுப்படாதவராக இருங்கள் அல்லது உங்களின் சொந்த இருந்தலுக்குக் கட்டுப்பட்டு இருங்கள்./

இது கட்டாயம் ஞபாகம் வைத்துக்கொள்ள வேண்டிய முக்கியமான அடிப்படை விஷயங்களில் இது ஒன்று. இல்லாவிட்டால், மனித இனம் மிகவும் கஷ்டப் பட்டிருக்கிறது. விஷயங்கள் பிளேக் நோய் போலப் பரவு கின்றன. விஷயங்கள் தொற்றுநோய் போலப் பரவுகின்றன. இவை காட்டுத்தீப்போலப் பரவுகின்றன. அவற்றைக் கட்டுப்படுத்தவே முடியவில்லை.

நீங்கள் பாதிக்கப்படுவீர்கள். உங்கள் மனங்கள் காப்பியடிக்கத் தூண்டுகின்றன, அதனால், எச்சரிக்கையாய் இருங்கள்/தனிநபர்த்தன்மையை வளர்த்துக் கொள்ளுங்கள். உங்கள் சொந்த விழிப்புணர்ச்சியை வளர்த்துக் கொள்ளுங் கள்./ அப்போது நீங்கள் பேயின் பிடியில் மிகமிகக் குறைவாகவே இருப்பீர்கள். பேய் என்றால் கூட்டுமனம், பேய் என்றால் கூட்டு உறக்கம், கூட்டுக் குடிமயக்கம் என்று புரிந்து கொள்ளுங்கள்.

**அனுபுத்தா பாரதி என்னும் உங்கள் துறவிகளில் ஒருவர், சிகாகோவில் எங்களுடன் தங்கியிருக்கிறார். அவரது முழு வாழ்க்கையும் உங்களால் மாற்றியமைக்கப் பட்டுள்ளது. அவரை விட்டு விரைவில் நீங்கள் செல்வதால் அவர் மிகவும் கவலையோடு இருக்கிறார். நான் மீண்டும் திரும்பச் செல்லும்போது அவரிடம் என்ன சொல்ல வேண்டும்?**

நான் என் உடலை விட்டுவிட்டுச் சென்றாலும் என் துறவியரை நான் விட்டுவிட மாட்டேன் என்று சொல்லுங் கள். இப்போது இங்கே நான் எப்படிக் கிடைக்கப் பெறுகிறேனோ அதேபோல் அப்படியே அப்பொழுதும்

கிடைப்பேன். நீங்கள் எனக்குக் கிடைப்பீர்களா என்பது தான் நினைவு கொள்ள வேண்டிய ஒரே விஷயம்.

நான் உங்களுடன் இருப்பேன். எப்பொழுதும் உங்களுக்குக் கிடைப்பது போல தங்கியிருப்பேன். நீங்கள் எனக்குக் கிடைத்தால் அப்போது நீங்கள் பயப்படவேண்டிய அவசியமில்லை. அப்போது ஒரு இணைப்பு இருக்கிறது.

என் துறவியருடன் நான் தனி நபர்த்தன்மையுடன் இணைக்கப் பெற்றுள்ளேன். நீங்கள் ஓர் இயக்கத்தில் இணைக்கப்பட்டுள்ளீர்கள். அது பொருள் அன்று. இது ஒரு நிறுவனமே அன்று. இது தனிப்பட்ட உறவு. இது ஒரு காதல் விவகாரம்.

நீங்கள் எனக்கு வெளிப்படையாக. இருந்தால், இந்த உடல் மறைந்துவிட்டாலும் கூட, எந்த வித்தியாசமும் இருக்கப்போவதில்லை. நான் உங்களுக்குக் கிடைக்கப் பெறுவேன்.

அவர் பயப்படவேண்டாம் என்று சொல்லுங்கள். அவர் நம்பிக்கையுடனும் அன்புடனும் இருக்கலாம் என்று சொல்லுங்கள்.

புத்தர் சொன்னார்:

அறிவாளிகளைக் குறைசொல்லும் தீங்கு செய்வோர்
விரிவானை எதிர்த்துத் துப்புவோர் போன்றோர்
எச்சில் ஒருபோதும் விண்செல்வதில்லை
நச்சிவரும் அவனையே விண்விட்டுக் கீழே!

காற்றைத் தூற்றிப் புழுதி கிளப்புவோம்
போன்றவராவார் தீங்கு செய்வோர்!
புழுதி ஒருபோதும் எழும்புவதில்லை
பழுதாம் காயம் செய்திடாமல்!

அறிவால் ஒருபோதும் இடர்அடைதல் இல்லை.
ஆயினும் அச்சாபம் நிச்சயம்,
தீங்குசெய்வோர் தமை அழிக்கும்!

புத்தர் சொன்னார்:

நிறைந்த கல்வியால் வழியைத் தழுவிட
நீங்கள் முயன்றால்
புரிந்துகொள்ள மாட்டீர்கள் வழியினைத்தான்
எளிய இதயம் கொண்டு வழியைக் கடைப்பிடித்தால்
பெரிது மிகப்பெரிது இவ்வழிதான்!

புத்தர் சொன்னார்:

வழிகடைப் பிடிக்கும் பிறர்கண்டு, கொண்டாடுவோர்
பொழியப் பெறுவார் ஆசிகள் பலப்பல!
சிரமணர் ஒருவர் புத்தரைக் கேட்டார்
எப்பொழுதேனும் அவ் ஆசியை அழிக்க முடியுமா?

ஏற்பட்ட விளக்கினது
எரிகின்ற சுடர்தன்னால்
ஏற்றப்பட்ட மற்ற விளக்கை
ஏந்திக்கொண்டு மக்கள் பல்லோர் வருவார்.
உணவு சமைப்பார், இருளை அணைப்பார்
அசல்விளக்கது தானே
எரிந்து கொண்டிருக்கும் எப்போதும் சுடருடன்!
அதுதான் நடக்கும் ஆனந்த வழியிலும்!



புத்தர் சொன்னார்:

*அறிவாளிகளைக் குறைசொல்லும் தீங்குசெய்வோர்*
*விரிவானை எதிர்த்துத் துப்புவோர் போன்றோர்*

முதலில் புரிந்துகொள்ள வேண்டிய விஷயம் எது தெரியுமா? வானை எதிர்த்துத் துப்பும் ஆசை தீய நபரில் ஏன் எழுகிறது? முதலாவதாக, அறிவாளியை எதிர்த்துக் குறை கூறத் தீங்கு செய்வோன் ஏன் விரும்புகிறான்? யாரோ ஒருவர் அறிவாளி என்பதைக் கெட்டவனால் ஏற்றுக் கொள்ள முடியாது. அந்த வெறும் எண்ணமே அவனைத் துன்புறுத்துகிறது, மிக ஆழமாகத் துன்புறுத்துகிறது.

ஏனென்றால் எல்லாத் தீங்குகளுமே ஆணவ மனப் பான்மைகளில் தான் எழுகின்றன.

இது ஆணவத்தை அடியோடு சிதறடித்து விடுவதாக இருக்கிறது. 'நான் அறிவாளி இல்லை. ஆனால் வேறு யாரோ ஒருவர் அறிவாளி. நான் நல்லவன் இல்லை. வேறு யாரோ ஒருவன் நல்லவன். நான் இன்னும் இருளில் இருக்கிறேன். ஆனால் யாரோ ஒருவர் ஒளியை அடைந் திருக்கிறார்.' இது ஏற்றுக்கொள்வது அசாத்தியம்.

இரண்டு வழிகள் திறந்துள்ளன. ஒன்று : நான் அறிவாளியாக ஆக முயலவேண்டும்! அது மிகவும் கடினமானதும் அரிதானதும் ஆகும். எளிய மலிவானவழி எது தெரியுமா? அறிவாளியை அறிவாளியே இல்லை என்று குறை கூறுதல்.

சவாலைச் சந்திக்கும்போதெல்லாம், எப்போதும் இந்த இரண்டு வழிகள் நம் முன்னால் இருக்கின்றன. நீங்கள் மலிவான ஒன்றைத் தேர்ந்தெடுத்தால் நீங்கள் தீமையி லேயே தங்கியிருப்பீர்கள். மலிவானதற்குச் சொல்லாதீர்கள். ஒருபோதும் குறுக்கு வழியை விரும்பாதீர்கள். ஏனென்றால் வாழ்க்கை என்பது கடினமான வழியிலேயே கற்றுக் கொள்ளப்படுகிறது.

அதன் வழிகள் எளிதானவை அல்ல, நீளமானவை. மலைமேல் ஏறுவது போன்ற சவால்தான். ஏனென்றால் கற்பது எளிதாக ஆக முடியாது. ஏனென்றால், கற்பது என்பது, அறிவைத் திரட்டுவது மட்டுமன்று. அது தகவல் சேகரிப்பது மட்டுமன்று. கற்பது உங்களை மாற்ற வேண்டும். அது ஓர் ஆன்மிக அறுவைச் சிகிச்சை. நிறைய விஷயங்கள் அழிக்கப்பட வேண்டும் மற்றும் தூக்கி எறியப்பட வேண்டும்.

எவ்வளவோ அழுகல் உங்களுக்குள், விலக்கப்பட வேண்டியவை உள்ளன. உங்கள் கழுத்தைச் சுற்றி பாறை யைப் போல் இருப்பவை எவ்வளவோ இருக்கின்றன. அது உங்களை மிதக்க அனுமதிக்காது. அது உங்களை மூழ்

கடித்து விடும். பல விஷயங்களோடு இருக்கும் உறவுகளை, உங்கள் விருப்புவெறுப்புகளை நீங்கள் விலக்கியாக வேண்டும். உங்களுக்கு நீங்களே சுமையைக் குறைத்துக்கொள்ள வேண்டும்.

கற்பது, உண்மையாக கற்பது, ஞானம், நீங்கள் மாற்றம் பெறும்போது தான் வருகிறது. இது ஒரு சேர்த்தல் முறை அன்று. நீங்கள் சும்மா இதைச் சேர்க்க முடியாது. உங்களுக்கு நீங்களே அறிவைச் சும்மா கூட்டிக்கொண்டே போய்விட முடியாது.

நீங்கள் முழுமாற்றம் பெற வேண்டும். அது மிகவும் கடினம். எளிய வழி என்ன? குறை கூறுவது!

சவாலைச் சந்திக்கும் போதெல்லாம் யாரோ ஒருவர் அறிவாளி ஆகிவிட்டார் - உடனடியாகக் குறுக்குவழி என்ன சொல்கிறது? இல்லை. இது சாத்தியமில்லை. முதலாவதாக ஞானம் என்று ஒன்று இல்லை. இரண்டாவதாக ஞானம் என்று ஒன்று இருந்தாலும் கூட அது இந்த மனிதனிடம் இருக்கவே முடியாது. நான் அவனை நன்றாக அறிவேன். நான் அவன் தவறுகளை அறிவேன்!" அப்புறம் நீங்கள் அவன் தவறுகளைப் பெரிதுபடுத்திக் கொண்டே செல்கிறீர்கள், அவனைக் கண்டித்துச் சபிக்கத் தொடங்குவீர்கள்.

சாக்ரடீஸ் நஞ்சூட்டப்பட்டது, இயேசு சிலுவையில் அறையப்பட்டது, மன்சூர் கொல்லப்பட்டது இவையெல்லாம் சாதாரணமாக நிகழ்ந்த தற்செயல் நிகழ்ச்சிகள் அல்ல. எல்லாப் புத்தர்களும் குறை கூறப்பட்டிருப்பதும், எல்லா ஜெயினர்களும் குறை கூறப்பட்டிருப்பதும், எதிர்பாராத தற்செயல் நிகழ்ச்சியல்ல;

அவர்கள் பூமியில் நடக்கும் பொழுது அபாயத்தில் தான் தொடர்ந்து நடக்கிறார்கள். ஏனென்றால், தங்கள்

ஆணவம் பாதிக்கப்படுவதாக நினைக்ககும் பலர் இந்தப் பூமியில் வாழ்கிறார்கள்.

யாரோ ஒருவர் ஞானம் பெற்றவர் என்று சும்மா நினைப்பதற்கே மிகவும் கடினமாக இருக்கிறது. ஆனால் அவரைக் குறை சொல்வது மிக எளிது! "இல்லை. ஞானம் என்பது அசாத்தியமானது. அது ஒருபோதும் நடப்ப தில்லை. அது ஒரு மாயை, கடவுள் இருக்கவில்லை. சமாதி? சுயவசியம் தவிர அது வேறொன்றுமில்லை. "இந்த மனிதன் ஏமாற்றப்பட்டிருக்கிறான். அவன் ஞானம் பெறவில்லை, எங்களுக்கு அவனை நன்றாகத் தெரியும், அவன் குழந்தைப் பருவத்திலிருந்தே அவனை நாங்கள் அறிவோம். அவன் திடீரென்று எப்படி ஞானம் பெற்ற நபராக மாறிவிட முடியும்? அவன் நம்மைப் போன்றவன் தான்! ஆனால் பாசாங்கு செய்கிறான். அவன் ஒரு பாசாங்குக்காரன்! ஏமாற்றுக்காரன்!" என்று சொல்வது எளிது.

இதுதான் நம் ஆணவம் தேர்ந்தெடுத்த மலிவான வழி. எச்சரிக்கையாக இருங்கள். ஒவ்வொரு மனிதரிடமும் கண்டிப்பதற்கும் மறுப்பதற்குமான ஆசை எழுகிறது. ஆகவே புத்தர்போன்ற ஒரு நபர் உயிரோடு உள்ளபோது நாம் அவரைக் கண்டிக்கிறோம். அவர் இறக்கும்போது, குற்றமனப்பான்மையினால் வழிபடுகிறோம்.

/ எல்லா வழிபாடுகளும் குற்ற மனப்பான்மையினால் எழுகின்றன./ முதலில் ஒரு நபரைக் குறை கூறுகிறார்கள். ஏதோ ஒன்று நிகழ்ந்திருக்கிறது என்று தெரிந்தும்கூட. அதை உங்களால் ஏற்க முடியவில்லை.

ஆழத்தில் உங்கள் சொந்தத் சுயத்தில் அந்த மனிதன் உருமாறியிருப்பதை உங்களால் பார்க்க முடிகிறது. அவரிடம் ஒரு பிரகாசம் உள்ளது. நீங்கள் உண்மையில் அதை மறுக்க முடியாது. உங்கள் இருத்தலின் ஆழமான

சமயத்தில், ஒரு ஒளிக்கீற்று நுழைந்ததை நீங்கள் உணர்கிறீர்கள்.

ஆனால் தன்னுணர்வில் வேண்டுமென்றே உங்களால் ஏற்றுக் கொள்ளமுடியவில்லை. அது உங்கள் தோல்வியை ஒப்புக் கொண்டதுபோல் ஆகிவிடும்.

சந்தேகம் ஆழத்தில் உள்ளுக்குள்ளே, நீங்கள் நிச்சயமாக சந்தேகப்படுகிறீர்கள். நீங்கள் என்ன செய்து கொண்டிருந் தாலும் உங்கள் கண்டனத்தையும் நீங்கள் சந்தேகிக்கிறீர் கள். இருப்பினும் நீங்கள் தொடர்ந்து சந்தேகப்பட்டுக் கொண்டேயிருக்கிறீர்கள்.

அப்புறம் ஒருநாள் அந்த நபர் மறைந்து விட்டார். அப்பொழுது பிறகு அந்த மணம் மட்டுமே தங்குகிறது. அந்த நினைவு நிலைக்கிறது. ஒரு மனிதன் சாகும் பொழுது கூட அவரின் உண்மைத் தன்மையை நீங்கள் ஒப்புக் கொண்டிருக்காத பொழுது ஒரு குற்ற மனப்பான்மை எழுகிறது. 'நான் குற்றம் புரிந்து வந்திருக்கிறேன். நான் நல்லவனாக இல்லை. நான் வாய்ப்பை இழந்து விட்டேன்' என்று நீங்கள் உணர்கிறீர்கள். இப்போது என்ன செய்வது? குற்றமனப்பான்மைக்கு ஈடுகட்டுவது போல், நீங்கள் வழிபடுகிறீர்கள்.

அதனால்தான் இறந்த ஆச்சாரியர்கள் வழிபடப்படு கின்றார்கள். உயிருடன் உள்ள ஆச்சாரியரை மக்கள் வழிபடுவது மிகவும் அரிதாகும். ஏனென்றால் உயிருள்ள ஒரு ஆச்சாரியர் ஒருவரை வழிபடுதல் என்பது குற்ற வுணர்ச்சியினாலன்று; புரிந்துணர்வினால்! இறந்து போன ஆச்சாரியரை வழிபடுவது குற்றவுணர்வினால் தான்.

உதாரணமாக உங்கள் தந்தை உயிருடன் உள்ளார். அவரை நீங்கள் மதிக்கவில்லை. நீங்கள் நேசிக்கவில்லை. பல வழிகளில் நீங்கள் எதிர்ப்பாய் இருந்திருக்கிறீர்கள்.

பல வழிகளில் நீங்கள் அவரை அகௌரவப்படுத்தியிருக் கிறீர்கள். பலவழிகளில் நீங்கள் அவரை மறுத்திருக்கிறீர்கள். ஒருநாள் அவர் இறக்கிறார். உடனே நீங்கள் கதறவும் அழவும் தொடங்குகிறீர்கள். ஒவ்வொரு வருஷமும் நீங்கள் சிரார்த்தம் செய்வீர்கள். அந்த நாளில், ஒவ்வொரு வருஷமும், நண்பர்களுக்கும், பிராமணர்களுக்கும் விருந்து அளிப்பீர்கள். இது குற்றவுணர்ச்சியால் தான். அப்புறம் உங்கள் வீட்டில் உங்கள் தந்தையின் உருவப்படம் ஒன்றை வைத்துப் பூக்களை வைப்பீர்கள்.

அவர் உயிரோடு இருந்தபோது நீங்கள் ஒருபோதும் அதைச் செய்யவில்லை. அவர் காலடிகளில் பூக்களை அர்ப்பணிக்க நீங்கள் சென்றதில்லை. இப்போது அவர் போய்விட்டார். உங்களுக்குக் குற்றவுணர்ச்சி. அந்த வயதான மனிதருக்கு நீங்கள் நல்லது எதுவும் செய்ய வில்லை. அவருக்கு என்ன தேவையோ அதை நீங்கள் செய்ததில்லை. நீங்கள் உங்கள் நேசத்தையும் கடமையையும் நிறைவேற்றிக் காட்டவில்லை. இப்போது அந்த வாய்ப்பு உங்களுக்கு இல்லை. உங்களை மன்னிப்பதற்கு அந்த மனிதர் இனிமேல் இல்லை. இப்போது அந்த மனிதர் இந்த உலகில் இல்லாததனால், அவர் காலடிகளில் கதறி அழுது என்னை மன்னித்து விடுங்கள், நான் மிகவும் தீயவனாக இருந்து விட்டேன் என்று புலம்புகிறீர்கள்.

ஒரு குறிப்பிட்ட வழியில் நீங்கள் ஆழமாகக் குற்ற வுணர்ச்சி கொள்கிறீர்கள். பச்சாதாபம் எழுகிறது. பூக்களை அர்ப்பணிக்கிறீர்கள். அவர் நினைவைப் போற்றுகிறீர்கள். நீங்கள் ஒருபோதும் அந்த மனிதரை மதித்ததில்லை. இப்போது அவர் நினைவைப் போற்றுகிறீர்கள்.

நினைவு கொள்ளுங்கள். நீங்கள் அந்த மனிதரை உண்மையில் நேசித்திருந்தால், நீங்கள் உண்மையில் அந்த மனிதரை மதித்திருந்தால், பச்சாதாபம் கொள்ளத்

தேவையிருக்காது. குற்றவுணர்ச்சியும் இருந்திருக்காது. அப்போது அவளை நீங்கள் எந்தக் குற்றவுணர்ச்சியும் இல்லாமல் நினைவுகொள்ளக் கூடும். அந்த நினைவு அழகுடையதாக இருக்கும். அந்த நினைவு முழுமையாக வித்தியாசமானது, அது முழுமையாக வித்தியாசமான குணம். இந்த வித்தியாசம் பிரம்மாண்டமானது. உண்மையில் எல்லாம் நிறைவேற்றிய உணர்ச்சி உங்களுக்கு இருந்திருக்கும்.

சாவிற்காக நீங்கள் அழவில்லை. எப்போதுமே அது குற்றவுணர்ச்சியினால் தான் நிகழ்கிறது. நீங்கள் ஒரு பெண்ணைக் காதலித்திருந்தால், நீங்கள் உண்மையாகவே ஒரு பெண்ணைக் காதலித்திருந்தால், அவளை ஒருபோதும் துரோகம் செய்யாமல் இருந்திருந்தால், ஒருபோதும் ஏமாற்றாமல் இருந்திருந்தால், அவள் சாகும்போது உண்மையில் உங்களுக்குத் துயரமாயிருக்கும். அந்தத் துயரத்தில் ஓர் அழகுண்டு. நீங்கள்! அவள் இல்லாத குறையை மிகவும் உணர்கிறீர்கள். ஆனாலும் உங்களுக்கு எந்தக் குறைவுணர்ச்சியும் இல்லை.

நீங்கள் அவளை நினைவுபடுத்திக் கொள்கிறீர்கள். நீங்கள் எப்போதும் அவளை நினைவில் கொள்வீர்கள். அது எப்போதும் ஒரு போற்றப்படும் நினைவாக இருக்கும். ஆனால் நீங்கள் உங்கள் வழியை விட்டுத் தடம் மாறிக் கதறவோ அழவோ தேவையில்லை. நாலுபேர்கள் பார்க்கக் காட்டிக்கொள்ள வேண்டியதில்லை. நீங்கள் அதைக் கண்காட்சியாக வெளிப்படுத்திக் கொள்ள வேண்டியதே இல்லை. இதில் எந்தக் 'கண்காட்சியியலும்' இல்லை. நீங்கள் உங்கள் இதயத்தில் அவளது நினைவை ஆழமாகப் போற்றுவீர்கள். உங்கள் பையில் உள்ள புத்தகத்தில் அவளுடைய படத்தை எடுத்துச் செல்ல மாட்டீர்கள். நீங்கள் அந்தப் பெண்ணைப் பற்றிப் பேச மாட்டீர்கள்.

ஒரு தம்பதியுடன் எனக்குப் பழக்கம்-கணவன் மனைவிக்கு மிகவும் தீமை செய்திருக்கிறான். அது ஒரு காதல் திருமணம். மிகவும் பணக்காரக் குடும்பம், ஆனால் கணவன் லீலா விநோதன். எந்தெந்த வழியிலெல்லாம் முடியமோ அந்தந்த வழியிலெல்லாம் அவன் தன் மனைவிக்குத் துரோகம் இழைத்தான். அப்புறம் அவள் தற்கொலை செய்துகொண்டாள். அவனால் தான் அவள் தற்கொலை செய்து கொண்டள்.

அந்த நகரத்தின் வழியாகச் சென்று கொண்டிருந்தேன். நான் பார்க்கப் போயிருந்தேன். ஏனென்றால் சிலர் அந்த கணவன் மிகவும் சோகமாக இருக்கிறான். மனைவி இறந்ததிலிருந்து, அவனது வாழ்க்கை பெரிதும் மாற்றம் அடைந்திருந்தது என்று கூறினர். என்னால் அதை நம்பவே முடியவில்லை. நான் அவன் மிகவும் மகிழ்ச்சியாக இருப் பான் என்று நினைத்தேன். அது மிகவும் துன்பமயமான- பரிதாபகரமான உறவு. தொடர்ந்து சச்சரவு இருந்து கொண்டே இருந்தது. நான் அவரைப் பார்க்கச் சென்றிருந் தேன். தன்னைச் சுற்றிலும் தன் மனைவியின் பல படங் களைப் பரப்பிக் கொண்டு வரவேற்பறையில் உட்கார்ந்து கொண்டிருந்தான். தன் மனைவி ஒரு தேவதையாகி விட்டது போல் உணர்வு அவனுக்கு. அவன் கதறத் தொடங்கினான். "நிறுத்து இந்த முட்டாள்தனத்தை. அவள் உன்னுடன் சந்தோஷமாக இருக்கவில்லை. இப்பெண்ணு டன் நீ எப்போதுமே சந்தோஷமாக இருந்ததில்லை. அதனால்தான் அவள் தற்கொலை செய்து கொண்டாள். நீ எப்போதும் விரும்பியது அதுதான். உண்மையில் என்னிடம் பல தடவை கூறியுள்ளாய். 'அவள் இறந்து விட்டால் நான் சுதந்திரம் அடைவேன்' என்று. 'இப்போது உனக்குச் சுதந்திரம் கொடுத்திருக்கிறாள்' என்று நான் கூறினேன்.

'ஆனால் நான் இப்போது குற்றவுணர்ச்சியோடு உள்ளேன். நான்தான் அவள் சாவுக்குக் காரணம் என்றும் நான் அவளைக் கொன்றுவிட்டது போன்றும் நான் உணர்கிறேன். இனிமேல் நான் கல்யாணம் செய்து கொள்ளப் போவதேயில்லை, எப்போதுமே!' என்று அவன் சொன்னான். இது குற்றவுணர்வு, இது அசிங்கமானது.

புத்தர் ஒருவர் இறக்கும்போது மக்கள் வழிபடுகிறார்கள். அவர் உயிரோடு இருந்தபோது அவர்கள் அங்குத்தான் இருந்தார்கள். ஆனால் அவர்கள் ஒருபோதும் அவரிடம் செல்லவில்லை.

ஒரு மகாவீரர் இறக்கும்போது நூற்றுக்கணக்கான மக்கள் வந்து வழிபட்டுக் கொண்டே இருந்தார்கள்.

மகாவீரர் உயிரோடு இருந்தபோது, இந்த மக்கள் அங்குத்தான் இருந்தார்கள். ஆனால் இப்போது அவர்களுக்குக் குற்றவுணர்ச்சி.

இயேசு சிலுவையில் அறையப்பட்டார். கடைசிக் கணத்தில் அவரது சொந்தச் சீடர்கள் கூட அவரைவிட்டுப் பிரிந்து சென்றார்கள். 'நான் அவரது சீடன்' என்று சொல்பவர் யாருமே இல்லை. கடைசிச் சீடர்கூட... இயேசு பிடிக்கப்பட்டபோது அவரிடம் 'நீ என்னைப்பற்றாதே. இனிமேல் என்னை நீ பின்பற்ற முடியாது போகலாம்' என்று சொன்னார். 'அதெல்லாம் இல்லை. நான் வருவேன். உங்களை எங்கெல்லாம் கொண்டு செல்கிறார்களோ அங்கெல்லாம் நான் வருவேன்' என்று சீடர் சொல்ல அப்போது இயேசு "சூரியன் உதிப்பதற்கு முன்னால், மூன்று தடவைகள் என்னை நீ மறுதலிப்பாய். என்னைப் பின்தொடராதே! சென்றுவிடு!" என்று சொன்னார். ஆனால் சீடர் பிடிவாதமாயிருந்தார்.

இயேசு பிடிக்கப்பட்டார். பகைவர்கள் அவரைப் பற்றிக் கொண்டார்கள். சீடர், கூட்டத்தில் ஒருவராக பின் தொடர்ந்தார். 'யாரோ ஒருவர் அந்தக் கூட்டத்தில் அன்னியர் இருப்பதாக உணர்ந்த கூட்டம், அந்த சீடரைப் பார்த்து "யார் நீ? இயேசுவின் சீடன் தானே நீ" என்று கேட்டது. "யார் இந்த இயேசு. அந்தப் பெயரையே ஒருபோதும் நான் கேட்டதில்லையே" என்று சீடர் பதில் அளித்தார்.

இப்படி மூன்று முறை சூரியன் உதிப்பதற்கு முன்பு மறுதளித்தார். அவர் மூன்றாம் முறை மறுதளித்தபோது, இயேசு அந்தச் சீடரைத் திரும்பிப் பார்த்து, "இன்னும் சூரியன் தொடுவானில் உதிக்கவில்லை" என்று கூறினார்.

யாருக்கும் இது புரிந்திருக்க முடியாது. ஆனால் கிறிஸ்துவை மறுதளித்தமைக்காக ஆழத்தில் அவர் கதறியிருக்க வேண்டும்-அந்த மனிதரை அறியவில்லை, நகருக்கு இவர் ஒரு புதியவர், ஓர் ஆர்வத்தினால் அந்தக் கூட்டத்தில் வருகிறார்- என்று கூறியதற்காக அவர் கதறியிருக்க வேண்டும்.

கடைசிக் கணத்தில், சீடர்கள்கூட மறைந்துவிட்டனர். இயேசு சிலுவையில் அறையப்பட்டார். அப்புறம் சீடர்கள் கூடினார்கள். மேலும் பல சீடர்கள் ஒன்றுசேர்ந்தார்கள். மேலும் மேலும் சேர்ந்தார்கள்.

இப்போது அநேகமாக மனித இனத்தில் மூன்றில் ஒரு பங்கு, கிறிஸ்தவர்கள்.

இது மாபெரும் குற்றவுணர்ச்சியாகத் தோன்றுகிறது. சிந்தித்துப் பாருங்கள். இயேசு சிலுவையில் அறையப் படாமல் இருந்திருந்தால்-கிறிஸ்தவ மதமே இருந்திருக்காது.

எனவே கிறிஸ்துவ மதத்தை இயேசு உருவாக்கவில்லை. சிலுவைதான் உருவாக்கியது. அதனால் கிறிஸ்துவமதத்தின்

சின்னமாகச் சிலுவை ஆகியிருக்கிறது. நான் கிறிஸ்துவ மதத்தை- க்றிஸ்டியானிட்டி- கிறிஸ்துவமதம் அல்ல- சிலுவை மதம் என்று அழைக்கிறேன்.

உண்மையில், சிலுவைதான், அந்த மரணம்தான், குற்றஉணர்ச்சியை உருவாக்கியிருக்கிறது. குற்றவுணர்ச்சி அவ்வளவு அதிகமாக உருவாக்கப்பட்டிருக்கிறது. குற்ற வுணர்ச்சி எழும்போது என்ன செய்வது? வழிபாடு மூலம் தான் நஷ்டஈடு கட்ட முடியும்.

ஓர் ஆச்சாரியர் உயிரோடு இருக்கும்போது அவரை நீங்கள் நேசிக்கிறீர்கள். உங்கள் வழிபாட்டில் நேசம் உள் ளது. உங்கள் வழிபாட்டில் வெளிவேஷம் இல்லை. அது உங்கள் இதயத்தின் இயற்கையான ஆற்றொழுக்கு ஆகும்.

ஆனால் ஓர் ஆச்சாரியர் இறந்துவிட்டால், நீங்கள் அதுவரை அவரை மறுத்துக்கொண்டே வந்திருந்தால், நீங்கள் அவரை வழிபடுகிறீர்கள். உங்கள் வழிபாடு நிரூபிக்க வேண்டியுள்ளது. யாரை எதிர்த்து? உங்கள் சொந்த மனப்பான்மையை எதிர்த்துத் தான்.

நான் கேட்டிருக்கிறேன்.

'நீங்கள் நிச்சயம் மனஅழுத்தம் உடையவராகத் தோற்ற மளித்தீர்கள்; என்ன பிரச்சினை?' என்று முல்லா நசிருதீ னிடம் ஒரு நண்பர் கேட்டார்.

'நல்லது, உங்களுக்கு என் அத்தை தெரியுமா, அவர் இறந்து விட்டார். நான் தான் அவளை மனநல மருத்துவ மனையில் கடந்த ஐந்தாண்டுகளாகச் சேர்த்திருந்தேன். அவள் இறந்தபோது, எனக்கே எல்லாப் பணத்தையும் எழுதிவைத்துவிட்டுச் சென்று விட்டாள். இப்போது அவள் இறப்பதற்கு ஆறு வாரங்களுக்கு முன்னால், என்பேரில் உயில் எழுதி வைத்துவிட்டுச் சென்று விட்டாள். பிரச்சினை என்னவென்றால், அவள் உயில் எழுதி வைத்த

போது அத்தைக்கு மனநலம் இருந்தது என்பதற்கு நிரூபணம் வேண்டும்" என்று தன் பிரச்சினையைக் கூறினார்.

இப்படித்தான் நடக்கிறது. முதலில் நீங்கள் ஓர் அறிவாளியை மறுக்கிறீர்கள்-அவர் அறிவாளி இல்லை என்று உறுதியாகச் சொல்கிறீர்கள். அவர் ஞானம் அடைந்தவர் என்பதை மறுக்கிறீர்கள். அவர் நல்லவர் என்பதை மறுக்கிறீர்கள். அப்புறம் அவர் இறக்கும்போது தன் முழுச் சரித்திரத்தையும் உங்களுக்காக விட்டுச் செல்கிறார். உங்கள் பெயரில் அவர் பணம் முழுவதையும் எழுதிவைத்து விடுகிறார். அவர் உங்கள் பரம்பரைச் சொத்து.

இப்போது திடீரென்று விஷயங்கள் மாறுகின்றன. 180° கோணத்தில் மாற்றம் ஏற்படுகிறது.

நீங்கள் அந்த மனிதரை மறுத்து வந்தது ஏனென்றால் அவர் உங்கள் ஆணவத்தைத் துன்புறுத்தி வந்தார். இப்பொழுது, திடீரென்று அவரை வழிபாடு செய்யத் தொடங்குகிறீர்கள். இப்போது உங்கள் ஆணவத்தை நிரப்புபவராக இருக்கிறார்.

காரணம் அதேதான். நீங்கள் கண்டிக்கிறீர்கள் அல்லது வழிபடுகிறீர்கள்.

இந்துக்கள் இந்தியாவில் புத்தமதத்தை முழுமையாக அழித்துவிட்டார்கள். ஆனால் அவர்கள் புத்தரைத் தங்கள் பத்தாவது அவதாரமாக ஏற்றுக் கொண்டார்கள். ஏன்? ஏனென்றால் புத்தமதத்தை மறுப்பது சரியானது தான்; ஆனால் பண்பாட்டு சின்னமாக விளங்கிய புத்தரை எப்படி மறுப்பது? இந்தியாவில் வாழ்ந்தவர்களிலேயே மகத்தானவர் அவர். அவரை மறுத்தால் உங்கள் ஆணவம் குறுகியதாகி விடும். புத்தரோடு, உங்கள் ஆணவம் நட்சத்

திரம் போல், துருவ நட்சத்திரம் போல் பிரகாசிக்கிறது. உங்களால் புத்தரை மறுக்க முடியாது.

இப்போது நீங்கள் அவரை உரிமை கொள்கிறீர்கள்- அவர் சிறந்த மிகச்சிறந்த அறிவாளி என்றும், மகத்தான மனிதர் என்றும் புகழ்கிறீர்கள்.

இப்போது உங்கள் ஆணவத்துக்குத் தீனியாக உள்ளது. புத்தரின் பெயர். இப்போது உங்கள் புத்தர் என்று விரும்பு கிறீர்கள்- அவர் உங்கள் புத்தர் என்றும், அவர் ஆசியாவின் முழுமுகத்தையே மாற்றியுள்ளார் என்றும் கூறுகிறீர்கள்.

அவர் உலகத்தின் ஒளி ஆவார். உண்மையில் நீங்கள் புத்தத் துறவிகளைக் கொன்றீர்கள். புத்தமத மறைநூல்களை நீங்கள் அழித்தீர்கள். நீங்கள் ஒவ்வொன்றையும் மறுத்தீர் கள். ஆனால் நீங்கள் புத்தர் என்னும் பெயரை மட்டும் ஏந்திக் கொள்கிறீர்கள்.

சற்றுச் சிந்தித்துப் பாருங்கள். இந்தியா சுதந்திரமான பொழுது, தங்கள் கொடிக்காக, ஒரு சின்னத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டி இருந்தது. அவர்கள் ஒரு புத்தச் சின்னத்தைத் தேர்ந்தெடுத்தார்கள். இந்து மதத்திற்குச் சின்னங்களுக்குப் பஞ்சம் உண்டா என்ன? லட்சக்கணக் கான அழகான சின்னங்கள் இந்து மதத்தில் உள்ளன. கொடியில் புத்தமதச் சக்கரத்தை ஏன் தேர்ந்தெடுத்தார் கள்? ஏனென்றால் புத்தர் அவர்களது பண்பாட்டுச் சின்னம். புத்தர் இந்த நாட்டில், இந்த மத நாட்டில் பிறந்தத னால் அவர் தங்களவர் என்று உரிமை கொண்டாடு கின்றனர்.

அவர் உயிருடன் இருந்தபோது, நீங்கள் கற்களை எரிந்து கொண்டிருந்தீர்கள். இப்போது அவர் உங்களவர் என்று உரிமை கொண்டாடுகிறீர்கள். புத்தர் உயிருடன் இருந்த பொழுது, ஒவ்வொரு நகரிலும் அவர் கண்டனம் செய்யப்

பட்டார். சென்ற இடமெல்லாம் கண்டிக்கப்பட்டார். இப்போது ஒவ்வொரு நகரமும் அவர் இங்கு இருந்தார் என்று உரிமை கொண்டாடுகிறது. அவர் இங்குப் பிறந்தார், அவர் இங்கு இறந்தார், இந்த வீட்டில் அவர் தங்கினார், நாற்பதாண்டுகள் இங்கு வந்துகொண்டிருந்தார், இருபது தடவைகள் வந்தார் என்றெல்லாம் உரிமை கொண்டாடு கின்றனர்.

பீகாரில் ஒவ்வொரு நகரமும் இவ்வாறு உரிமை கொண்டாடுகின்றன.

முழு பீகாரும் அவரைக் கண்டித்திருக்கிறது. இப்போது பீகார் என்னும் பெயரே அவருடையது தான். ஏனென் றால் அங்கே அவர் நடந்தார். பீகார் என்றால் பொருள் "புத்தர் நடக்கும் இடம்" என்பதாகும்.

இப்போது முழு இடமும் பீகார் என்று அழைக்கப் படுகிறது. இப்போது நாம் உரிமை கொண்டாடிக் கொண்டே செல்கின்றோம். நேரு அவரது எலும்புகளைத் திரும்பக் கொண்டு வந்தார், இந்தியாவிற்கு.

நேரு ஒரு சமயவாதியே அல்ல- சிறிதும் இல்லை! ஏன்? இந்தியாவின் ஆணவம் மிகவும் பெருமை கொள்கிறது. புத்தர் தாய்நாட்டுக்குக் கொண்டு வரப்பட வேண்டும் என்பதில். அதே ஆணவம்தான் அவரைக் கண்டித்தது. அதே ஆணவம் இப்போது அவரை வழிபட்டுக்கொண்டே செல்கிறது. உங்கள் ஆணவம் எப்போதும் மறுக்கிறது. நினைவு கொள்ளுங்கள். கவனியுங்கள்.

இந்த வாய்பாடுகள் உங்களுக்குப் பயன்படும். வேறு யாருக்கோ அல்லது உங்களுக்குத் தெரிந்த பிறருக்கோ அல்ல-உங்களுக்கே-பயன்படும்.

யாராவது ஒருவர் X என்பவர் ஞானம் அடைந்து விட்டார் என்று சொன்னால், உங்கள் முதல் எதிர்ச்சொல்

என்ன? கவனியுங்கள் "X-ஆ! அந்த முட்டாளா? அவன் ஞானம் அடைந்து விட்டானா? நடக்க முடியாத காரியம்." சற்றே உங்கள் முதல் அபிப்பிராயத்தை உற்றுக் கவனியுங்கள். உங்கள் மனதில் என்ன நிகழ்கிறது என்பதை உஷாராக இருந்து பாருங்கள். உடனடியாக அந்த X ன் குறைகளையும் தவறுகளையும் விலாவரியாக எடுத்துச் சொல்லத் தொடங்கிவிடுவீர்கள். நன்றாகக் கவனியுங்கள்- நீங்களும் கூட மிகைப்படுத்துகிறீர்கள்.

சில சமயம் இப்படி நிகழ்கிறது. யாரோ ஒருவர் ஞானம் அடைந்து விட்டார், மிகவும் ஞானியாகி விட்டார் என்று யாரோ ஒருவர் சொல்கிறார் என்று வைத்துக் கொள்ளுங் கள்.

'அந்த மனிதனா? அவன் குழந்தைப் பருவத்திலிருந்தே அவனை எனக்குத் தெரியும். நான் அவனைப் பார்த்திருக் கிறேன். கவனித்தும் இருக்கிறேன். ஒரு நாளில் கிடைப்ப தல்ல ஞானம். இது பெரிய வளர்ச்சி முறை. இது அசாத்தியம்' என்று தானே சொல்வீர்கள். அல்லது ஏதோ தொடர்பில்லாதது ஏற்பட்டது என்று நீங்கள் கண்டு பிடிப்பீர்கள்.

ஒரு நகரத்தில், ஒரு மனிதன் தன் நண்பனிடம் 'நம் முடைய பக்கத்து வீட்டுக்காரர் பற்றி நீ கேள்விப்பட்டிருக் கிறாயா? அவர் மிகப்பெரிய தர்மாத்மா' என்று சொல் கிறான். மற்றவன் 'அது எப்படி? அது அசாத்தியம்! நடக்கவே முடியாதது. அவன் வீட்டுப் பக்கத்தில் தான் நான் இருக்கிறேன். நாங்கள் இரண்டு பேரும் ஒன்றாகவே வாழ்ந்திருக்கிறோம். உங்களுக்குத் தெரிவதற்குமுன் எனக்குத் தெரியாமல் அது எப்படி நடந்திருக்கும். நாங்கள் அண்டைவீட்டுக்காரர்கள். அதைப் பற்றி எல்லா விஷயமும் உள்ளும் புறமும் எனக்கு அத்துபடி. இது சும்மா பாசாங்கு. அவன் நடிக்கிறான். யாரை முட்டாளாக்க

முடியும்னு நினைக்கிறான்." இதை எப்போதும் புத்தர் சொல்வது வழக்கம்.

பிறர் ஞானம் பெற்று விட்டான் என்று ஏற்றுக் கொள்வது மிகவும் கடினம். ஏனென்றால் பிறரை ஞானி என்று ஏற்றுக் கொண்டால் நம்மை நாம் முட்டாள் என்று ஏற்றுக்கொண்டதாக ஆகிவிடும். அங்கு தான் சிக்கலே. அடுத்தவன் ஞானம் பெற்றுள்ளது பற்றியே கேள்வி இல்லை; உண்மையான கேள்வி, எனக்குச் சம்பந்தமானது. அவன் ஞானி என்றால் நான் யார்? முட்டாளா? ஒருக்காலும் இருக்கவே முடியாது.

யாரோ ஒருவர் அழகாய் இருக்கிறார் என்று ஏற்றுக் கொள்ளும்போது நீங்கள் வேண்டாமென்று மிகவும் வெறுப்பாக ஏற்றுக் கொள்வீர்கள். ஒரு பெண்ணிடம் சென்று அடுத்த பெண்ணின் அழகைப் பற்றிப் பேசிப் பாருங்களேன். அவள் வேண்டா வெறுப்புடன், மறுத்து பேசி கண்டனத்தைத் தொடங்கி விடுகிறாள்.

அடுத்தவள் அழகி என்று ஏற்றுக் கொண்டால், அவள் அழகு இல்லை என்று ஏற்றுக் கொண்டதாக ஆகிவிடுமே. உடனடியாக ஒப்பீடு எழுகிறது. ஆணவம் ஒப்பிடுதலில் தான் வாழ்கிறது.

"ஒரு மனிதன் மிகவும் அழகாகப் புல்லாங்குழல் வாசிப்பான். தேநீர்க் கடையில் ஒருவர், அவரைப்பற்றிப் புகழ்ந்து கொண்டிருந்தார். உடனடியாக ஒரு நபர் கண்டனம் செய்யத் தொடங்கிவிட்டான். "அவன் ஒரு திருடன். ஒரு பொய்யன், அவனால் எப்படிப் புல்லாங் குழலை நன்றாக வாசிக்க முடியும்?" என்றெல்லாம் கூறினான். -இது ஒரு ஜென் கதை.

இதில் எதுவுமே முரண்பாடில்லை. நீங்கள் பொய் சொல்லலாம். இருந்தபோதிலும் புல்லாங்குழலை அழகாக

வாசிக்கலாம். நீங்கள் திருடனாக இருக்கலாம். இருந்த போதிலும் புல்லாங்குழலை அழகாக வாசிக்கலாம். இதில் ஒன்றும் முரண்பாடில்லை. அடுத்த மனிதன் தெளிவாகச் சொன்னான். அவனால் முடியாது. அவன் ஒரு திருடன். அவன் ஒரு பொய்யன். அப்படி இப்படி என்றெல்லாம். 'எனக்குத் தெரியும் அவனால் வாசிக்க முடியாது'. மக்கள் அதிகமாகக் கண்டிக்கும்போதும், சத்தம்போடும்போது, அவர்களது கூச்சலுக்கு மதிப்புக் கூடுகிறது.

புல்லாங்குழல் வாசிப்பவனைப் பற்றிப் புகழ்ச்சியாகப் பேசிக் கொண்டிருந்தவன் வாயடைக்கப்பட்டான்.

அடுத்த நாள், வேறு ஒருவரிடம் அவன் பேசிக் கொண்டிருந்தான். அப்போது அவன் 'அந்த மனிதன் ஒரு திருடன்' என்று சொன்னான். இன்னொருவன் சொன்னான். 'அவன் எப்படித் திருடனாய் இருக்கமுடியும். அவன் எவ்வளவு அழகாகப் புல்லாங்குழல் வாசிக்கிறான் தெரியுமா?' இப்போது மறுபடியும் பாருங்கள். இதில் முரண்பாடும் இல்லை. இந்த இரண்டாவது மனிதனுக்கு முழுமையும் வித்தியாசமான பார்வை. இரண்டாவது மனிதன் வளர்வதற்குத் தயாராயிருக்கிறார். திறந்த மனத்தோடு இருக்கிறார். 'அவர் எப்படித் திருடனாக இருக்க முடியும்? எனக்கு நன்றாகத் தெரியும். அவர் அவ்வளவு அழகாகப் புல்லாங்குழலை வாசிக்கிறார். இவ்வளவு அழகுணர்ச்சி உள்ள மனிதன் திருடனாக இருக்கமுடியாது. அசாத்தியமானது. என்னால் நம்பவே முடியாது' அந்த நபர் திருடனா இல்லையா என்பதல்ல கேள்வி. இந்த இரண்டு எதிர்ச்செயல்களும் இந்த இரண்டு நபர்களின் பல விஷயங்களைத் தீர்மானம் செய்கின்றனர்.

யாராவது ஒருவர் 'அதோ அங்கே ஒரு நல்ல மனிதர் இருக்கிறார்' என்று சொன்னால், கவனியுங்கள். கண்டிக்கத் தொடங்கி விடாதீர்கள். ஏனென்றால், நீங்கள் நல்லதைக்

கண்டித்தால், உங்கள் எதிர்காலத்தையே நீங்கள் கண்டித்துக் கொள்கிறீர்கள். நீங்கள் நல்லதையும், ஞானத்தையும் கண்டித்துக் கொண்டே இருந்தால், நீங்கள் ஒருபோதும் நல்லவராகவோ, ஞானம் உள்ளவராகவோ ஆக முடியாது. ஏனென்றால் எதைக் கண்டிக்கிறீர்களா அது உங்களுக்கு நடக்க முடியாது. நீங்கள் மூடப்பட்டவராக ஆகிவிடுகிறீர்கள்.

ஒருவேளை அந்த மனிதன் நல்லவனாக இல்லாவிட்டால் கூட, அவன் ஞானியாக இல்லாவிட்டால் கூட, மறுப்பது நல்லதில்லை. ஏற்றுக் கொள்ளுங்கள். என்ன இழந்துவிடப்போகிறீர்கள்? அந்த மனிதன் நல்லவன் என்றும் ஞானி என்றும் ஏற்றுக் கொண்டீர்களே, அந்த ஏற்புடைமையே, உங்களை நல்லவனாகவும் ஞானியாகவும் ஆக்கிவிடும். உங்கள் கதவுகள் திறந்திருக்கின்றன. இனிமேலும் நீங்கள் மூடப்பட்டவர் இல்லை.

அந்த மனிதர் நல்லவனாகவும் ஞானியாகவும் வரமுடியுமானால் நீங்கள் ஏன் கூடாது? அந்த மனிதன் சாதாரண மானவன் என்று நீங்கள் நினைத்தால், அவனைக் கண்டிக்காதீர்கள்; அப்படியே சந்தோஷமாக இருங்கள். அதை நல்ல செய்தி என்று ஏற்றுக் கொள்ளுங்கள்' சாதாரண மனிதன் அறிவாளியாக இருக்கிறான். ஆகவே நான் கூட அறிவாளியாக முடியும். ஏனென்றால் நான் கூடச் சாதாரணம் ஆனவன் தான்' ஏன் இதை எதிர்மறை விஷயமாக ஆக்குகிறீர்கள்.

அதனால் தான் புத்தர் கூறுகிறார்.

**அறிவாளிகளைக் குறை சொல்லும் தீங்கு செய்வோர்**
**விரிவானினை எதிர்த்துத் துப்புவோர் போன்றோர்.**

உங்கள் சொந்த முகத்தில் துப்பிக்கொள்கிறீர்கள். வானை எதிர்த்து நீங்கள் துப்புவதனால், வானத்தில்

கறைபடியப் போவதில்லை. உங்கள் துப்புதலினால் உங்கள் முகமே கறைபடியும். அந்த எச்சில் உங்கள் மேல் விழப் போகிறது. உங்கள் முழுமுயற்சியும் முட்டாள்தனமானது. வானம் வானமாகவே இருக்கும். ஞானம் உடையவன் வானம் போன்றவன். அது உருவகம் போன்றது. வானம் என்பது தூய்மையான இடம்.

'வானை எதிர்த்துத் துப்புதல்' என்னும் பழமொழி ஏன் முட்டாள்தனமானது தெரியுமா? ஏன்?-ஏனென்றால் வானம் என்ற ஒன்றே இல்லை. வானம் என்று ஒன்று இருந்தால் உங்கள் எச்சில் அதைக் கறைபடுத்தக் கூடும். சுவரை எதிர்த்துப் துப்பினால் அது உங்களுக்குத் திரும்ப வராது. நீங்கள் கூரையை எதிர்த்துப் துப்புகிறீர்கள். நீங்கள் நிபுணராய் இருந்தால், கூரையில் படிந்த எச்சில் திரும்பி வராது. ஒட்டிக் கொள்ளும். நீங்கள் நடைமுறைப் படுத்திப் பார்க்கலாம். கூரை இருப்பதாலேயே அது திரும்பி வர வேண்டும் என்று அவசியமில்லை. அது கறைபடக்கூடும். எது இருக்கிறதோ அது கறைபடக் கூடும்; எது இல்லையோ அது கறைபட முடியாது.

ஞானி இருக்கவில்லை, அவனது ஆணவம் மறைந்து விட்டது. அவன் ஒரு பொருளல்லன். அவன் அப்படியே தூய்மையான இடம். நீங்கள் அவனை ஊடுருவிச் செல்ல முடியும். எச்சில் துப்பவும் முடியும், அதற்கு எந்தத் தடையும் இருக்காது. அந்த எச்சில் அவன் வழியாகச் செல்லும். ஆனால் அவன் அதைப் எடுத்துக் கொள்ள மாட்டான். அதாவது அவன் மீது அது ஒட்டாது.

ஞானி ஒருவரை நீங்கள் அவமானப்படுத்தினால், உங்கள் அவமதிப்பு அவரால் எடுத்துக் கொள்ளப்பட வில்லை. அது ஒரு காலி அறையில் நீங்கள் அவமானப் படுத்துவது போன்றது. ஆம். நீங்கள் ஒலி செய்கிறீர்கள்.

அவ்வளவுதான். அந்த ஒலி மறைந்துவிட்ட பின்பு அந்த அறை முன்பு போலவே ஆகிவிடுகிறது.

ஞானம் உள்ள மனிதன் வானத்தைப் போல் காலியானவன், இந்தப் பொன்மொழி புத்தசமயத்தைச் சார்ந்ததாக இருக்கவேண்டும். ஏனென்றால், 'ஞானி என்பதன் பொருள் சுயம் இல்லாதவன், ஆணவம் இல்லாதவன்' என்பதாகும்' என்று புத்தர் கூறுகிறார்.

ஞானம் உள்ள மனிதன் என்பதன் பொருள் 'இல்லாதவன்' என்பதாகும். அங்கே அவன் இல்லை. நீங்கள் அவன் வழியாகக் கடந்து செல்லலாம். அவனுக்குள் எந்தத் தடையும் காணப்படவில்லை. எந்த இடைஞ்சலும் அவனுக்குள் காணப்படவில்லை.

அறிவாளிகளைக் குறை சொல்லும் தீங்குசெய்வோர்
விரிவானினை எதிர்த்துப் துப்புவோர் போன்றோர் எச்சில்
ஒருபோதும் விண்செல்வதில்லை

வெகுதொலையில் வானம் இருக்கிறது என்பதில்லை. இல்லை, வானம் மிகவும் அண்மையில் உள்ளது. நீங்கள் வானில் உள்ளீர்கள். ஆனால் வானத்தை ஏன் அடையாது என்றால், அது தூய்மையான இருப்பு ஆகும். அது அப்படியே ஓர் இடம்-வெளி-வேறெதுவும் இல்லை. ஒவ்வொன்றும் வருகிறது. போகிறது. ஆனால் வானம் மாசில்லாமல் தங்கியிருக்கிறது.

இந்தப் பூமியில் எத்தனை போர்கள் நிகழ்ந்திருக்கின்றன. ஆனால் நீங்கள் வானத்தில் எந்த இடத்திலும் ரத்தக் கறைகளைக் கண்டுபிடிக்க முடியாது. இந்தப் பூமியில் எத்தனை மக்கள் வாழ்ந்திருக்கிறார்கள்? எவ்வளவு தவறான செயல்கள் செய்யப்பட்டிருக்கின்றன? கொலைகள், தற்கொலைகள்-ஆனால் வானில் ஒரு பதிவும் இல்லை. ஒரு சிறு தடயம் கூட இல்லை. இறந்த காலம்

என்பது அப்படியே இருக்கவே இல்லை. மேகங்கள் வந்து போகின்றன; வானம் அப்படியே திகழ்கிறது. எதுவும் கறை படுத்தவில்லை.

எதுவும் கறைபடுத்த முடியாத அளவுக்குப் பரந்த வெளி போல ஒரு ஞானி ஆகிவிடுகிறான். அவனை அவமதிப்ப தாக நீங்கள் நம்புவதற்கு மட்டுமே முடியும். உங்கள் அவமதிப்பு உங்களுக்கே திரும்ப வரும்.

ஞானம் உள்ள மனிதன் ஒரு பள்ளத்தாக்குப் போன்ற வர். உங்கள் அவமதிப்பு எதிரொலிக்கும். அது உங்கள் மேல் விழும்.

எச்சில் ஒருபோதும் விண்செல்வதில்லை
நச்சி வரும் அவனையே விண்விட்டுக் கீழே.

அதையும் கூடப் புரிந்துகொள்ள வேண்டும். ஞானம் உள்ளவன் உங்களைக் காட்டிலும் உயரத்தில் உள்ளான். ஞானம் உள்ளவன் ஒரு சிகரம் போன்றவன், இமாலயச் சிகரம் போன்றவன். நீங்கள் இருட்டில், பள்ளத்தாக்கில், அறியாமையில் நின்று கொண்டிருக்கிறீர்கள்.

நீங்கள் உயரத்தை எதிர்த்துத் துப்பினீர்கள் என்றால், அந்த எச்சில் உங்கள் மீது தான் விழும். அது இயற்கைக்கு எதிரானது. இது புவியீர்ப்பு விசைக்கு எதிர்ப்பானது. ஆகவே உங்கள் அவமதிப்பால் யாராவது ஒருவர் அவமானப்பட்டால், அந்த நபர் உங்களை விடக் கீழானவர் என்று நீங்கள் நிச்சயமாக இருக்கலாம். உங்கள் அவமதிப்பால் யாரேனும் அவமதிக்கப்படவில்லை யென்றால், உங்களால் அவமதிக்கப்பட்டவர் உங்களை விட உயர்ந்தவர் என்று நம்பலாம். உங்கள் அவமதிப்பு அவரை அடைய முடியாது. ஏனெனில் அவமதிப்புகள் புவியிர்ப்பு விசையைப் பின்பற்றுகின்றன. ஆகவே அவை கீழ் ஆழங்களை அடைகின்றன. ஆகவே நீங்கள் கோபமாய்

இருந்தால், உங்களைவிடத் தாழ்ந்த மனிதரைத் தான் உங்களால் சீற்றம் அடையச் செய்ய முடியும். ஓர் உயர்ந்த நபர் உங்களுக்கு அப்பால், அப்படியே இருக்கிறார். நீங்கள் ஒரு பலவீனமான நபரைத்தான் சீற்றம் கொள்ளச் செய்ய முடியும். பலமுள்ள நபர் உங்களால் பாதிக்கப்படாதவ ராகத் திகழ்கிறார். உங்களை விடத் தாழ்ந்த இருத்தல்களை மட்டுமே உங்களால் கையாள முடியும். உயர்ந்த இருத்தல் கள் வெகு தொலைவில் அப்பால் இருக்கின்றன.

காற்றைத் தூற்றிப் புழுதி கிளப்புவோன்
போன்றவராவார் தீங்கு செய்வோர்
புழுதி ஒருபோதும் எழும்புவதில்லை
பழுதாம் காயம் செய்திடாமல்
அறிவாளி ஒருபோதும் இடர்அடைதல் இல்லை
ஆயினும் அச்சாபம் தீங்கு செய்வோர்தமை அழிக்கும்.

நினைவில் கொள்ளுங்கள். நமக்கு எதிர்ப்பாயிருக்கும் விஷயங்களை நாம் செய்து கொண்டே இருக்கிறோம். தற்கொலைத் தன்மையுடைய செயல்களை நாம் செய்து கொண்டே இருக்கிறோம். நமது எதிர்காலத்தை அழிக்கக் கூடிய செயல்களை எல்லாம் நாம் செய்து கொண்டே இருக்கிறோம். நீங்கள் செய்கின்ற ஒவ்வொரு செயலும் ஏதோ ஒரு வழியில் உங்கள் எதிர்காலத்தை வரையறுத்துக் கொண்டிருக்கின்றன.

எச்சரிக்கை. உங்களுக்குத் தீங்கு செய்யக்கூடிய எதையும் நீங்கள் செய்யக்கூடாது. யாருக்காவது தீங்கு செய்ய நீங்கள் முயலும்போது உங்களுக்கு நீங்களே தீங்கு செய்து கொள் கிறீர்கள். எப்போதாவது நீங்கள் ஏதாவது காயப்படுத்த முயன்றால், எப்போதாவது நீங்கள் துன்புறுத்த விரும் பினால், உங்களுக்கு நீங்களே ஒரு கர்மாவை நீங்கள் உரு வாக்கிக் கொள்கிறீர்கள். நீங்கள் அதன் மூலம் துன்புறுத்தப் படுவீர்கள்.

இப்படி நிகழ்ந்தது:-

ஒரு தடவை ஒரு மனிதன் வந்து புத்தர் மீது எச்சில் துப்பினான். உண்மையாகவே. புத்தர் எச்சிலைத்துடைத்துக் கொண்டார். "ஐயா வேறு ஏதாவது சொல்ல இருக்கிறதா" என்று அவனிடம் கேட்டார். அந்த மனிதன் அயர்ந்து போனான். சங்கடம் அடைந்தான். இப்படிப்பட்ட எதிர்ச் செயலை அவன் அவரிடம் எதிர்பார்க்கவில்லை. புத்தர் கோபப்படுவார் என்று அவன் நினைத்திருந்தான். அவனால் தன் கண்களையே நம்ப முடியவில்லை. அவன் ஊமையாகிப் போனான். பிரமிப்பில் ஆழ்ந்தான்.

புத்தரின் சொந்தச் சீடர் ஆனந்தா அவர் பக்கத்தில் உட்கார்ந்திருந்தார். அவர் மிக மிகக் கோபம் கொண்டார். 'என்ன இது? இந்த வழியில் நீங்கள் மக்களை அனுமதித் தால், வாழ்க்கை அசாத்தியமாகி விடும். என்னிடம் கொஞ்சம் சொல்லுங்கள். நான் அவனைச் சரிசெய்கிறேன்' என்று சீடர் புத்தரிடம் கூறினார். அந்த ஆனந்தா என்பவர் நல்ல பலமான மனிதர். அவர் ஒரு போர்வீரர். அவர் புத்தருக்கு ஒன்றுவிட்ட சகோதரர் ஆவார். அவர் தானே ஓர் இளவரசர் ஆவார். அவர் மிகவும் கோபத்தோடு இருந்தார். "என்ன முட்டாள்தனம் இது. ஒரு சின்னக் குறிப்புக் கொடுங்கள். அவனைச் சரி செய்து விடுகிறேன்" என்று சொன்னார் அவர்.

புத்தர் சிரித்தார். "அவர் என்னை வியக்கவைக்க வில்லை. ஆனால் நீங்கள் என்னை வியக்கவைத்துவிட்டீர் கள். இந்த விஷயத்தில் நீங்கள் ஏன் குதித்துக் கொண்டிருக் கிறீர்கள். அவர் உங்களுக்கு எதுவும் செய்யவில்லையே. அவர் என் மீது துப்பியது சம்பந்தமாகச் சொல்கிறேன். கடந்தகால வாழ்க்கையில் நான் அவரை ஏதோ அவமானப்படுத்தியிருக்கிறேன். அந்தக் கணக்கு இன்று முடிந்து விட்டது. நான் மகிழ்கிறேன்" என்று ஆனந்தா விடம் சொன்னார்.

"நன்றி ஐயா, கணக்கை முடிக்க வேண்டும் என்பதற்காக உங்களுக்காகக் காத்துக்கொண்டிருந்தேன். எங்கோ ஓரிடத்தில் நான் உங்களை அவமானப்படுத்தியிருக்கிறேன். நீங்கள் மறந்திருக்கலாம். எனக்கு நினைவிருக்கிறது. உங்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். எனக்குத் தெரியும். நீங்கள் மிகவும் விழிப்புணர்வோடு இல்லாததால் மறந்திருக் கலாம். நான் மறக்கவில்லை. இன்று எனக்கு மகிழ்ச்சி. நீங்கள் வந்து முழுவிஷயத்தையும் முடித்து வைத்து விட்டீர்கள். இப்போது நாம் ஒருவருக்கொருவர் விடுதலை பெற்று விட்டோம்" என்று எச்சில் துப்பியவரிடம் புத்தர் கூறிவிட்டு, ஆனந்தாவிடம் 'என் செயல் தான் இது. எனக்கு இது திரும்ப வந்திருக்கிறது' என்று எடுத்துக் கூறினார்.

உண்மையில், 'நீங்கள் வானத்தை எதிர்த்துத் துப்பிய போது திரும்பி வருவதற்குக் கொஞ்சம் நேரம் பிடிக்கிறது. உடனடியாக அது வருவதில்லை. அது பல விஷயங்களைச் சார்ந்து உள்ளது. ஆனால் ஒவ்வொரு விஷயமும் திரும்ப வரும். நீங்கள் என்ன செய்தாலும் அது விதைத்தல் போன்றது. என்றாவது ஒருநாள் நீங்கள் அறுவடை செய்து தான் ஆகவேண்டும். ஏதாவது ஒரு நாள் அறுவடை செய்து தான் ஆகவேண்டும்.

இன்று நீங்கள் துயரத்தோடு இருந்தால், இவை தான் அந்த விதைகள், இப்போது பூத்திருக்கின்றன. உங்கள் கடந்தகாலத்தில் எங்கோ நீங்கள் விதைகளை விதைத் திருக்கலாம். இந்த வாழ்க்கை, இன்னொரு வாழ்க்கை, எங்கோ. இப்போது நீங்கள் என்னவாக இருக்கிறீர்களோ அவையனைத்தும் நீங்கள் குவித்துக் கொண்ட இறந்த காலம். நாளை என்னவாக இருக்கப் போகிறீர்களோ அவை அனைத்தும் நீங்கள் இன்று என்ன செய்கிறீர்கள் என்பதைப் பொருத்தது தான்.

இறந்த காலம் பற்றி எதுவும் செய்யமுடியாது. ஆனால் எதிர்காலம் பற்றி நிறையச் செய்யலாம். எதிர்காலத்தை மாற்றுவது என்பது எல்லாவற்றையும் மாற்றுவது ஆகும். நீங்கள் உங்கள் வாழ்க்கை வழிகளை மாற்றத் தொடங்கி னால், வாழ்க்கையின் சட்டங்களைப் புரிந்து கொள்ளத் தொடங்கினால், இது அடிப்படைச் சட்டங்களில் ஒன்றாகும், அது தான் கர்மாவின் சட்டம். நீங்கள் என்ன செய்தாலும் அறுவடை செய்துதான் ஆகவேண்டும்.

ஒற்றைக் கணம் கூட ஒருபோதும் இதை மறக்காதீர்கள். ஏனென்றால் அதை மறப்பது மிகப்பெரிய துன்பத்தை உருவாக்கி விடும். நினைவில் கொள்ளுங்கள். மீண்டும் மீண்டும், பழைய சம்ஸ்காரங்கள், பழைய தன்மைகள், பழைய விஷயங்களையே செய்வதற்குப் பழக்கம் காரண மாகக் கட்டாயப்படுத்தும் நினைவில் கொள்ளுங்கள். பழைய பழக்கங்களிலிருந்து விலகி வாருங்கள். இயந்திரத் தனமான எதிர்ச்செயல்களிலிருந்து விலகி வாருங்கள். அதிக மனசாட்சி உள்ளவர்களாக ஆகுங்கள். ஒரு சிறு விழிப்புணர்வும், மகத்தான மாற்றங்களும் நிகழத் தொடங்குகின்றன.

நான் கேட்டிருக்கிறேன்.

இது ஜப்பானில் நடந்தது. ஒரு தடவை ஒருதாய், தன் மகனைக் கல்லூரியில் சந்தித்தாள். அறையின் சுவர்களில் இருந்த சில ஆபாச ஓவியங்களைக் கண்டு மிகவும் வேதனைப்பட்டாள். அவள் எதுவும் சொல்லவில்லை. மற்ற படங்களோடு சேர்த்துப் புத்தர் படம் ஒன்றினை மாட்டி வைத்தாள்.

மறுமுறை அங்கு வந்து தன் பயனைப் பார்த்தபோது மற்றப் படங்கள் எல்லாம் போயிருந்தன. புத்தருடையது மட்டுமே அங்கே இருந்தது. "எப்படியோ நான் புத்தரின் படத்தையும் மற்றப் படங்களையும் ஒன்றாய்ச் சேர்த்து

வைக்க முடியவில்லை. ஆகவே அவற்றை எடுத்து விட்டேன். புத்தருடையதை வைத்துக் கொண்டேன்.

சும்மா ஒரு சின்ன விஷயம். புத்தருடைய ஒரு சின்ன படம் தான். மற்ற அந்த ஆபாச அசிங்க ஓவியங்கள் போய் விட வைத்துவிடாது. என்ன நடந்தது? பையனுக்கு நிம்மதி போய் விட்டது. அந்தப் படங்களோடு சேர்ந்து புத்தர் படத்தை எப்படி வைத்துக் கொள்வது? வெகு விரைவில் புத்தரின் இருப்பு உணரப்பட்டது. அதிக அளவில் அவன் விழிப்புணர்வு பெறப்பெற அந்த ஆபாச ஓவியங்கள் மறைந்து போயின.

ஒரு சிறு ஒளிக்கீற்று, அனைத்து இருட்டையும் அழித்து விடப் போதுமானது. அப்படியே முதல் ஒளிக்கதிரை அனுமதியுங்கள். அது போதும்.

மிகச்சிறிய வழியில் நீங்கள் விழிப்புணர்வு பெறத் தொடங்கினால் கூடப் போதும். கவலைப்படுவதற்கு எதுவுமே இல்லை- வெகுவிரைவில் மற்ற ஓவியங்கள் அனைத்தும் போய் விட்டன. விழிப்புணர்வு மட்டும் தான் மிஞ்சியது. புத்தர் என்றால் விழிப்புணர்வு. புத்தர் என்னும் சொல்லின் தெளிவான பொருள் விழிப்புணர்வு என்பது தான்.

நீங்கள் உண்மையாகவே மகிழ்ச்சியாகவும், ஆனந்தமாக வும் இருக்க விரும்பினால், நிரந்தரமாக ஆனந்தமாக இருக்க, வாழ்க்கை முழுவதும் நீங்கள் அனுபவித்த துயரங் களால் சலிப்படைந்து போயிருந்தால், அந்த நேரத்தில் உங்கள் எதிர்ச்செயல்கள் அனைத்திலும் விழிப்புணர்வைக் கொண்டு வாருங்கள். நல்லதை நம்பத் தொடங்குங்கள்.

ஆங்கிலத்தில் ஒரு கருத்து உள்ளது. 'உண்மையாக இருப்பது அளவுக்கு அதிகமாக நல்லது. இந்தக்கருத்து மிகவும் ஆபத்தானது. 'உண்மையாக இருப்பது அளவுக்கு

அதிகமாக நல்லது.' ஏதாவது ஒன்று அளவுக்கு மிகுதியாக நல்லதாக இருந்தால் நீங்கள் அதை நம்பமாட்டீர்கள். அது உண்மையாக இருக்க முடியாது. மாற்றுங்கள். அது இந்த வழியில் இருக்கட்டும். உண்மையில்லாமல் இருப்பது அளவுக்கு அதிகமாக நல்லது.

நல்லதில் நம்பிக்கை வையுங்கள், ஏனென்றால் உயர்ந்த உண்மைத் தன்மையை நம்புங்கள், ஏனென்றால் எதை நீங்கள் நம்பினாலும், அது உங்களுக்கு ஒரு தொடக்கமாக இருக்கும். உங்களை விட உயர்ந்ததாக ஒரு பொருள் இருக்கும் என்பதை நீங்கள் நம்பவில்லையேல், எல்லா வளர்ச்சிகளும் நிறுத்தப்பட்டுவிடும். எல்லாம் முடிந்து விடும்.

புத்தரையோ, மகாவீரரையோ, இயேசுவையோ ஜொராதுஷ்டிரரையோ நம்புதல் என்பது உங்களை நீங்களே திறந்து கொள்வதாகும். உங்களைவிட உயர் இருத்தல்கள், இருந்திருக்கிறார்கள், நடந்திருக்கிறார்கள், வாழ்ந்திருக்கிறார்கள் என்கின்ற அதே எண்ணமே- உயர்நிலை இருத்தல்கள் சாத்தியமே என்கிற கருத்தே உங்களைத் திறந்துவிடும்!

புத்தராக இருப்பது அசாத்தியமான ஒன்று- அந்த நோக்கமே- உங்கள் இருத்தலில் ஓர் ஒளிக்கதிராக உள்ளே நுழையும். அந்த ஒளி உங்களை உருமாற்றத் தொடங்கி விடும். உங்கள் வேதியியலே-ரசாயனமே-மாறுகிறது.

அதனால் தான் அனைத்து மதங்களும், நம்பிக்கையை, சிரத்தையை, விசுவாசத்தை வலியுறுத்துகின்றன. அதற்கும் மூட நம்பிக்கைகளுக்கும் தொடர்பு இல்லை. ஆத்திக ரீதியிலான நம்பிக்கைகளுக்கும் இதற்கும் எந்தத் தொடர்பும் இல்லை. இது இதயத்தைத் திறப்பதாகும். நீங்கள் நம்பாவிட்டால், நீங்கள் ரோஜாக்கள் இல்லை என்பதை வலியுறுத்தினால், என்றாவது ஒருநாள் ரோஜாப்

புதரையே காண நேர்ந்தாலும், நீங்கள் ரோஜாக்கள் இருப்பதை நம்பமாட்டீர்கள்.

“அங்கே ஏதோ மாயை இருக்க வேண்டும், யாரோ தந்திரம் செய்து கொண்டிருக்கிறார்கள், அல்லது நான் கானல் நீரில் உள்ளேன், அல்லது நான் கனவு காண்கிறேன். ஏனென்றால் ரோஜாக்கள் இருக்க முடியாது” என்று நீங்கள் சொல்வீர்கள். முதலாவதாக, ரோஜாக்கள் இருக்கின்றன என்று நீங்கள் நம்பவில்லையென்றால், மிகப்பெரிய சாத்தியக் கூறு என்ன தெரியுமா? சாத்தியம் என்று நாம் எவற்றை நினைக்கின்றோமோ அவற்றை மட்டுமே நாம் பார்க்கிறோம்; நாம் நேருக்கு நேர் ரோஜாக் களைச் சந்தித்தால்கூட நாம் அவற்றைப் பார்க்க மாட் டோம். நாம் நம்பாதவற்றைப் பார்க்க விரும்புவதில்லை.

நாம் கடந்து கொண்டே இருக்கிறோம், அலட்சியமாக நீங்கள் நம்புவது சக்தியுள்ளதாகிறது.

நான் கேட்டிருக்கிறேன்:-

ஓர் ஆஸ்பத்திரியில் நடந்தது இது. ஒரு நர்ஸ், திரை போட்டுவிட்டு, ஆண் நோயாளி ஒருவனிடம் பாட்டில் ஒன்றைக் கொடுத்து “10 நிமிடங்களில் திரும்பிவருவேன். உன் சிறுநீர் மாதிரி வேண்டும்” என்று கூறினாள். அப்புறம் இன்னொரு நர்ஸ் அங்கு வந்து அதே நோயாளிக்கு ஒரு கண்ணாடி டம்ப்ளர் நிறைய ஆரஞ்சுச் சாற்றைக் கொடுத்துவிட்டுச் சென்றாள். கொஞ்சம் நகைச்சுவை உணர்வுள்ள அந்த மனிதன், அந்த பாட்டிலில் சிறிது ஆரஞ்சு சாற்றை எடுத்துக் கொடுத்தான். “என்ன இது இந்த சிறுநீர் ‘மாதிரி’ ரொம்ப மாசுபடிந்ததாக உள்ளதே” என்று அவள் கேட்டாள்.

‘ஆம் அப்படித்தான்’ என்று கூறிய நோயாளி “நான் மீண்டும் அதை ஊற்றிப்பார்க்கிறேன், ஒரு வேளை அதைத்

தூய்மைப்படுத்தலாம் அல்லவா?" என்று கூறிக் கொண்டே அவன் அந்தப் பாட்டிலைத் தன் உதடுகளின் அருகில் வைத்தபோது நர்ஸ் மயக்கமடைந்தாள்.

அப்படியே உங்கள் நம்பிக்கை, உங்கள் எண்ணம் மட்டுமே-இந்த மனிதன் என்ன செய்து கொண்டிருக்கிறான். அவன் தாராளமாக ஆரஞ்சு சாற்றைக் குடித்துக் கொண்டிருந்தான். ஆனால் ஒரு தடவை நீங்கள் ஒரு குறிப்பிட்ட விஷயத்தை நம்பினால் அது மிகவும் சக்தி வாய்ந்ததாக ஆகிறது. நர்ஸ் இப்பொழுது என்ன நினைக்கிறாள், அந்த நோயாளிதன் சிறுநீரைக் குடிக்கிறான் என்று தானே! அந்த ஒரு எண்ணமே-ஆனால் எண்ணங்கள் மகத்தான உண்மைத் தன்மைகள், அவை உங்கள் பார்வையை மாற்றுகின்றன.

நீங்கள் அழகுக்காகப் பார்த்துக் கொண்டிருந்தால், அழகை நீங்கள் காண்பீர்கள். அழகு இருக்கவில்லை என்று நீங்கள் நம்பினால், நீங்கள் அதன் வழியாக வரலாம், ஆனால் அதை நீங்கள் பார்க்க மாட்டீர்கள். நீங்கள் எதற்காகப் பார்த்துக்கொண்டிருக்கிறீர்களோ-தேடிக் கொண்டிருக்கிறீர்களோ-அதைத்தான் நீங்கள் பார்க்கிறீர்கள். ஆழ்நம்பிக்கை என்பதன் பொருள் சாதாரணமாக இதுதான். நாம் கடைசியானவர்கள் இல்லை. நாம் வாழ்க்கையின் உச்சகட்டமானவர்கள் இல்லை. உயர் உண்மைத்தன்மை சாத்தியம் தான்.

இயேசுவை நம்புவது என்பது தெரியுமா? உங்கள் எதிர்காலத்தை நீங்கள் நம்புவதன் அறிகுறி அது. நீங்கள் வளரமுடியும் என்று நீங்கள் நம்புவதன் சின்னம் அது.

புத்தரை நம்புவது வளர்ச்சியை நம்புவது போன்றது; ஏதோ ஒன்று உங்கள் வாழ்க்கையில் இன்னும் நடக்க வேண்டும் என்று நம்புவது.

அதனால்தான்- இன்று மக்களுக்குச் சலிப்புத் தட்டுவது போல்-கடந்தகால நூற்றாண்டுகளில் மக்கள் இருந்த தில்லை. இப்போது எல்லாமே அசாத்தியம்தான்.

நீங்கள் தேய்ந்த பாதையில் உள்ளீர்கள். உலகாயதமாக மக்கள் எந்த அளவுக்கு அதிகமாக ஆகிறார்களோ அந்த அளவுக்கு சலிப்புத் தட்டியவர்களாக ஆகிறார்கள். அமெரிக்கர்களைவிடச் சலிப்புத் தட்டிய மனிதர்களை நீங்கள் பார்க்கவே முடியாது. கடந்த நூற்றாண்டுகளில் மனிதன் எதையெல்லாம் தேடி ஏங்கிக்கொண்டிருந் தானோ அதையெல்லாம் அடைந்து விட்டார்கள்; அதனாலேயே அவர்கள் சாவைத் தேடும் அளவுக்குச் சலிப்படைந்து விட்டார்கள்; ஏனென்றால் அவர்களுக்கு வேறு எதிர்காலம் இல்லை. எதிர்காலம் இல்லாதபோது வாழ்வதில் அர்த்தம் இல்லை.

உங்களிடம் அழகான கார் உள்ளது, அழகான வீடு உள்ளது, உங்களுக்கு அழகான வேலை உள்ளது-அதனால் என்ன? "அதனால் என்ன?" என்று தேய்ந்த பாதையில்- சக்கரம் மீண்டும் மீண்டும் மீண்டும் அதே தேய்ந்த பாதையில் தானே! அதே காலை! அதே மாலை! அதே வேலை! அதே பணம் பொழிந்து கொண்டே இருக்கிறது; இப்போது என்ன செய்வது? அப்புறம் நேரத்தைக் கழிப்பதற்காகச் சிறிய சிறிய விளையாட்டுகளெல்லாம் விளையாடுகிறார்கள். ஆனால் அவர்களுக்கு நன்றாகத் தெரியும். எதுவும் நடக்கப் போவதில்லை. அது சலிப்பைத் தான் உருவாக்குகிறது.

இந்த நூற்றாண்டில் மனிதன் சலிப்படைந்ததுபோல் ஒருபோதும் இதுவரை எந்தக் காலத்திலும் வரலாற்றில் அடையவில்லை. ஏனென்றால், எப்போதும் ஒரு சாத்தியம் இருந்தது, வானத்தில் ஒரு திறப்பு எப்போதும் இருந்தது- அதாவது நீங்கள் புத்தர் ஆகியிருக்கலாம், ஏசுவாகியிருக்

கலாம், கிருஷ்ணராகியிருக்கலாம். நீங்கள் வளர்ந்து கொண்டே இருந்தீர்கள், எப்போதும்! நீங்கள் ஒரு வண்டியில் ஏற்றிச் செல்லப்படவில்லை. அப்போது வளர்ச்சி இருந்தது. திடீரென்று நீங்கள் இந்த நூற்றாண்டில் வண்டியில் ஏறியுள்ளீர்கள்- கடவுள் இல்லை என்னும் வண்டியில்

'கடவுள் இறந்து விட்டார். மனிதன் சுதந்திரம் அடைந்து விட்டான்' என்று நியட்சே கூறுகிறார். சுதந்திரம்- எதற்காக? சலிப்படைவதற்காக. வளர்வதற்கான சுதந்திரம் இல்லை, அழிவதற்கான சுதந்திரம், சுதந்திரம் எதற்காக- ஏதோ உயிரோடிருந்து தாவரம் போன்று இருந்து சாவதற்காக. சுதந்திரம் என்பது வளர்ச்சியைக் கொண்டு வந்தால் தான் அர்த்தமுள்ளது. சுதந்திரம் என்றால் பொருள் என்ன? வளர்வதற்குச் சாத்தியம் உண்டு என்பது தான்-சிறந்த பூக்கள் உன்னில் மலரக்கூடும்!

உங்கள் ஆற்றலுக்கு இன்னும் ஒரு இலக்கு உள்ளது. அது அர்த்தம் உள்ளது, அது ஊக்கம் தரக்கூடியது, அது ஆர்வத்தை அளிக்கக்கூடியது. உங்கள் வாழ்க்கை அர்த்த முள்ளதாக இயங்கத் தொடங்குகிறது.

உங்கள் துன்பத்திற்கு நீங்கள் தான் காரணம் என்று மேலும் மேலும் நினைவு கொள்ளத் தொடங்குங்கள். உங்கள் ஆனந்தத்திற்கு நீங்கள் காரணமாகலாம். நீங்கள் நரகத்தில் வாழ்வதற்கு நீங்கள் தான் காரணம் ஆவீர்கள். நீங்கள் உங்கள் சொர்க்கத்தைக் கூட உருவாக்கிக் கொள்ள முடியும். நீங்கள் மட்டுமே பொறுப்புள்ளவர்கள். வேறு எவரும் இல்லை.

ஒருவருக்கும் ஒருபோதும் துன்பம் இழைக்க எண்ணா தீர்கள். ஏனென்றால் அவையனைத்தும் உங்கள் மேல்தான் விழும்.

உங்களால் நல்லது செய்ய முடியுமானால் செய்யுங்கள். உங்களால் யாருக்காவது உதவமுடியுமானால், உதவுங்கள். உங்களால் யாரிடமாவது கருணையோடு, அன்போடு இருக்க முடியுமானால், அப்படியே நடக்கட்டும்- ஏனென்றால் அது உங்களுக்கே திரும்பவும் வரும். தேவையுள்ள கணங்களில், சார்ந்திருக்க, விழுந்து கிடக்க, ஏதோ ஒன்று உங்களுக்குக் கிடைக்கும்.

எவ்வளவு தூரம் அன்பு செய்ய முடியுமோ அவ்வளவு தூரம் அன்பு செய்யுங்கள், உதவுங்கள். இப்போது அந்த உதவி பலனளிக்குமா இல்லையா என்பது பற்றியெல்லாம் கவலை கொள்ளாதீர்கள்.

அது நிச்சயம் பலனளிக்கிறது; பிரம்மாண்டமாகப் பலனளிக்கிறது. காலத்தையும் இடத்தையும் பற்றிக் கவலை கொள்ளாதீர்கள். நிச்சயம் பலனளிக்கிறது. ஏதோ ஒரு நாள், எப்பொழுதெல்லாம் உனக்குத் தேவை இருக்கிறதோ அப்பொழுதெல்லாம் அது உன்னை நோக்கி ஓடிவருகிறது. அது தொடர்ந்து குவிந்து கொண்டே இருக்கிறது.

முல்லா நசிருதீன், ஒரு பியானோ வித்வானிடம், தன் வீட்டுக்கு வந்து வாசிக்க வேண்டும் என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டே இருந்தார். பியானோ வித்வானே மனமிரங்கி அவர் வீட்டுக்கு வருவதாக ஒத்துக் கொண்டு 'என்ன வாசிக்க வேண்டும்' என்று கேட்டார்.

"எதை வேண்டுமானாலும் நீங்கள் வாசிக்கலாம். பக்கத்து வீட்டுக்காரர்களைத் தொல்லைப்படுத்த வேண்டும். அவ்வளவுதான்" என்றார் முல்லா நசிருதீன்.

மக்கள் இப்படித்தான் பல செயல்களைச் செய்து கொண்டே போகிறார்கள். அவர்கள் ஒரு சிறிது சந்தோஷம் அனுபவிக்காமல் இருக்கலாம். ஆனால் அண்டை

வீட்டாருக்கு அவர்களால் தொல்லை கொடுத்தாலே, அது அவர்களுக்குப் போதுமான சந்தோஷம் தான்.

இது ஒரு மனக் கோளாறு. இப்படித்தான் பல மக்கள் இருக்கிறார்கள். சித்திரவதை செய்வதில் மக்கள் மகிழ்ச்சி அடைகிறார்கள். ஆனால் அவர்கள் சித்திரவதை செய்யப்படும்போது, வாழ்க்கையில் நீதியேயில்லை, கடவுளிடம் நீதியேயில்லை என்றெல்லாம் அலறுகிறார்கள்.

'கடவுள் இல்லை' என்று புத்தர் கூறுகிறார். கடவுளின் சாத்தியத்தை' மட்டுமே விட்டுவிலக்குகிறார். அதனால், உங்கள் பொறுப்புணர்ச்சியை வேறு எவர்மீதும் நீங்கள் சுமத்த முடியாது. கடவுள் இல்லை' என்று சட்டம் இருக்கிறது என்றும், சட்டம் தன் கடமையைச் செய்கிறது என்றும் புத்தர் கூறுகிறார்.

சட்டத்தைப் பின்பற்றினால் நீங்கள் மகிழ்ச்சியாக இருப்பீர்கள். சட்டத்தைப் பின்பற்றவில்லையென்றால் நீங்கள் மகிழ்ச்சியின்றி இருப்பீர்கள்.

உங்களுக்கு உதவி செய்வதற்கென்றே கடவுளை அவர் விட்டு விடுகிறார். கடவுள் இருந்தால் நாம் தவறு செய்வதற்குச் சாத்தியம் இருக்கிறது. தவறு செய்துவிட்டு அழுது கதறிப் புலம்பிப் பிராத்தனை செய்து 'நான் முட்டாளாயிருந்தேன். ஆனால் என்னை இப்போது காப்பாற்று' என்று வேண்டிக் கொண்டால் அவர் காப்பாற்றுவார் என்கிற சாத்தியம் இருக்கிறது.

சட்டத்தின் முன்னால், நீங்கள் பிரார்த்தனை செய்ய முடியாது. சட்டத்தின் முன்னால் 'நான் ஒரு முட்டாளாயிருந்தேன்' என்று சொல்ல முடியாது. நீ ஒரு முட்டாளாயிருந்தால் நீங்கள் துன்பப்பட்டுத் தான் ஆக வேண்டும். ஏனென்றால் சட்டம் ஒரு நபர் இல்லை. அது முழுமையும் தன்னிச்சையானது. அது தன் போக்கில் மட்டுமே போகும்.

பூமியின் மீது நீங்கள் விழுந்தால், உங்கள் எலும்புகள் முறிந்து விடுகின்றன. உங்களுக்கு ஏராளமான எலும்பு முறிவுகள் ஏற்படுகின்றன. "எனக்கு எதிர்ப்பாக இவ்வளவு தூரம் இருக்காதீர்கள். எனக்கு ஒரே ஒரு எச்சரிக்கையாவது நீங்கள் கொடுத்திருக்கலாம். நீங்கள் ஏன் என்னிடம் அவ்வளவு கோபம் கொள்கிறீர்கள்" என்று எவரும் புவியீர்ப்பு விசையிடம் சென்று முறையிட முடியாது.

இல்லை. நீங்கள் புவியீர்ப்பு விசைபற்றி ஒருபோதும் பேசுவதில்லை. ஏனென்றால், அதைச் சரியாகப் பின்பற்றி னால், அது மிகவும் பாதுகாப்பானது என்று உங்களுக்குத் தெரியும். புவியீர்ப்பு விசை இங்கே இல்லையென்றால் நீங்கள் பூமியில் இருக்க மாட்டீர்கள். நீங்கள் வானத்தில் மிதந்து கொண்டிருப்பீர்கள்.

நீங்கள் பூமியல் நிற்க முடியாது. புவியீர்ப்பு விசைதான் உங்களைப் பூமியில் வைத்திருக்கிறது. அது தான் உங்கள் வேராக இருந்து செயல்படுகிறது. அது இல்லையென்றால், நீங்கள் இங்கே இருக்க முடியாது. அது தான் உங்களை இருக்க அனுமதிக்கிறது. நீங்கள் ஏதாவது தவறு இழைத்தால், அப்பொழுது தண்டனைதான்! வேறுவழியே இல்லை.

ஆனால் சட்டம் உங்களைத் தண்டிப்பதும் இல்லை. பரிசளிப்பதும் இல்லை. உங்களோடு தனிப்பட்ட முறையில் எந்தத் தொடர்பும் அதற்கு இல்லை. உங்களை நீங்களே தண்டித்துக் கொள்கிறீர்கள். உங்களுக்கு நீங்களே பரிசளித்துக் கொள்கிறீர்கள். சட்டத்தைப் பின்பற்றினால் உங்களுக்கு நீங்களே பரிசளித்துக் கொள்கிறீர்கள் என்று பொருள். நீங்கள் சட்டத்தைப் பின்பற்றவில்லையென்றால் அல்லது சட்டத்திற்குக் கீழ்ப்படியவில்லையென்றால் நீங் களாகத்தான் இரையாவீர்கள், நீங்கள் துன்பப்படுவீர்கள்.

புத்தர், அந்தச் சட்டத்தைத் 'தர்மம்' என்று அழைக்கிறார். அது தான் அவரது கடவுள். 'உருவ ஆளுமையை' அதிலிருந்து அவர் எடுத்துவிட்டார். ஏனென்றால், உருவ ஆளுமை மனிதனுக்குப் பற்பல தொல்லைகளை உருவாக்கிவிட்டது. யூதர்கள் தாங்கள் தாம் கடவுளின் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் என்றும், அதனால் அவர் அவர்களிடம் கொஞ்சம் சலுகை காட்டுவார் என்றும் நம்புகிறார்கள். இது முட்டாள்தனம்.

கிறிஸ்துவர்கள், தாங்களே கடவுளின் தேர்ந்தெடுக்கப் பட்ட மக்கள் என்றும், அதனால் தான் தன் ஒரே மகனை அனுப்பினார் என்றும் நினைக்கிறார்கள். ஆகவே இயேசுவை எவர் பின் தொடர்ந்தாலும் காப்பாற்றப்படுவார். இது 'உறவுச் சலுகையியல்' (repotism) போல அல்லவா தோன்றுகிறது.

ஏனென்றால் நீங்கள் இயேசுவுக்கு உறவினர். அவர் கடவுளின் மதன். இந்திய அரசாங்க அதிகாரிகள், அரசியல் வாதிகள் போன்றல்லவா இருக்கிறது இது. நீங்கள் உறவுக்காரரர். இது முட்டாள்தனம்.

நான் கேட்டிருக்கிறேன்.

ஜப்பானியர்கள் தோற்கடிக்கப்பட்டபொழுது ஜப்பானியத் தளபதி ஒருவர், ஆங்கிலத் தளபதியிடம் பேசிக் கொண்டிருந்தார். "நாங்கள் ஏன் தோற்கடிக்கப் பட்டோம், எப்படித் தோற்கடிக்கப் பட்டோம்" என்று ஜப்பானியத் தளபதி கூறினார்.

ஆங்கிலத் தளபதி, "உங்களுக்குத் தெரியாது. நாங்கள் கடவுளை நம்புகிறோம். பிராத்திக்கிறோம். ஒவ்வொரு நாளும் சண்டையைத் தொடங்கும்போது நாங்கள் முதலில் பிரார்த்தனை செய்கிறோம்" என்று கூறினார்.

"நாங்களும் அதைத்தான் செய்கிறோம். நாங்களும் கடவுளை நம்புகிறோம். நாங்களும் கூடப் பிரார்த்தனை செய்கிறோம்" என்றார் ஜப்பானியத் தளபதி!

"நீங்கள் இதைப்பற்றி எப்போதாவது சிந்தித்திருக்கிறீர்களா? கடவுளுக்கு ஜப்பானிய மொழி புரியாது" என்றார் ஆங்கிலத்தளபதி, சிரித்துக்கொண்டே.

கடவுளிடம் உள்ள உருவ ஆளுமை முழுமையும் புத்தர் எடுத்து விடுகிறார். அப்போது அவருக்கு ஜப்பானியம், ஆங்கில, ஹீப்ரு, சமஸ்கிருதம் முதலிய மொழிகள் பற்றிப் புரிந்துகொள்ளத் தேவையில்லை அல்லவா?

இந்துக்கள் சொல்கிறார்கள். கடவுளின் மொழி சமஸ்கிருதம் தான்–அது தான் தேவவாணி. கடவுளின் சொந்தமொழி என்கின்றார். மற்ற மொழிகள் மனிதச் சார்புடையவை. ஆனால் சமஸ்கிருதம் மட்டுமே தெய்விக மானது என்பது அவர்களது கருத்து. ஆனால் இந்த முட்டாள்தனம் அனைத்துலகிலும் நீக்கமற நிறைந்துள்ளது.

புத்தர் இந்த ஆழ்ந்த அடிப்படையையே வெளியே எடுக்கிறார்! 'கடவுள் ஒரு நபர் இல்லை', அது ஒரு சட்டம். பின்பற்றுங்கள். கீழ்ப்படியுங்கள். உங்களுக்கு நீங்கள் பரிசளித்துக் கொள்ளுங்கள்/

அதைப் பின்பற்றாதீர்கள்; துன்பப்படுங்கள்.

அறிவாளி ஒருபோதும் இடர் அடைதல் இல்லை
ஆயினும் அச்சாபம் தீங்கு செய்வோர்தமை அழிக்கும்

ஆகவே, இதை ஓர் அடிப்படை விதியாக நினைவு கொள்ளுங்கள். நீங்கள் பிறருக்காக எதையெல்லாம் செய்கிறீர்களோ அவையனைத்தையும் நீங்கள் உங்களுக்காகச் செய்து கொள்கிறீர்கள். எதுவாக இருந்தாலும், நீங்கள் பிறருக்குச் செய்வது எதுவாக இருந்தாலும், நீங்கள்

உங்களுக்காகத் தான் செய்து கொண்டிருக்கிறீர்கள் அதனால் நன்றாகக் கவனியுங்கள்.

புத்தர் சொன்னார்:-

**நிறைந்த கல்வியால் வழியைத் தழுவிட நீங்கள்**
**முயன்றால், புரிந்துகொள்ள மாட்டீர்கள் வழியினைத்**
**தான் எளிய இதயம் கொண்டு வழியைக்**
**கடைப்பிடித்தால் பெரிதும் மிகப் பெரிதும் இவ்வழி தான்!**

இந்த வழி, இந்தத் தர்மம், இந்தச் சட்டம், வாழ்க்கையின் இந்த இறுதிச் சட்டம், கல்வியினாலோ, அறிவினாலோ, மறைநூல்களை ஓதுவதனாலோ, தத்துவங்களை மனப் பாடம் செய்வதனாலோ புரிந்துகொள்ளப்பட முடியாது.

இதைப் புரிந்து கொள்ள அல்லது அறிந்து கொள்ள நீங்கள் இதன்படி வாழ வேண்டும். இதை அறிந்துகொள்ள ஒரே ஒரு வழிதான் உண்டு. அதன்படி வாழ்வதுதான். அறிவது என்பது வாழ்வதோடு சம்பந்தப்பட்டதே ஒழிய நுண்ணறிவோடு சம்பந்தப்பட்டது அன்று. நான் ஒரு மிகப் புகழ் வாய்ந்த நிகழ்ச்சியைக் கேள்விப்பட்டுள்ளேன்.

போலந்தில் உள்ள டால்மடிக் கல்லூரியில் இருந்த ஓர் இளைய மேதையைப் பற்றிப் பல்லாண்டுகளுக்கு முன்னால், கல்விச் சமூகத்தில் புகழ் மொழி பரவியது. அவரது மிகப்பெரிய கற்றல் பற்றியும் படிப்பில் அவரது கவனமுழுமை பற்றியும் மிகவும் பாராட்டப்பெற்றார். பார்வையாளர்கள் பலர், இவர்பற்றிக் கேள்விப்பட்டுப் பார்க்க வந்தனர்.

ஒருநாள், அந்த இளைய மேதையைப் பற்றிக் கல்லூரித் தலைவரிடம், கல்லூரி நிர்வாகிகளில் தலைசிறந்த ஒருவர், "உண்மையிலேயே இந்த இளைஞன் அந்த அளவு கற்றுள்ளானா?" என்று கேட்டார்.

"உண்மையாகவே, எனக்குத் தெரியாது. இவ்வளவு அதிகமாக அறிவதற்கு எப்படி நேரத்தைக் கண்டுபிடிக் கிறான் என்பது எனக்குத் தெரியாது" என்று அந்த முதிய தலைவர் கூறினார்.

நீங்கள் உண்மையாகவே உங்கள் நுண்ணறிவோடு ஈடு பட்டிருந்தால், உங்கள் மொத்த முழுமையான இருத்த லோடும் ஈடுபடுவதற்கு உங்களுக்கு நேரம் கிடைக்காமல் போய்விடும். உங்கள் தலையில் கவனம் அதிகமாக இருந்தால், கிடைக்கின்ற பல விஷயங்களை நீங்கள் இழந்து விடுவீர்கள்.

வாழ்வில், இருப்பில், ஆழமாகப் பங்கு கொள்வதன் மூலமாக மட்டுமே அந்த வழி அறியப்பட முடியும். வெளியிலிருந்து அதைப் புரிந்துகொள்ள முடியாது. நீங்கள் அதில் பங்குகொள்பவராக ஆக வேண்டும்.

ஒருசில நாட்களுக்கு முன்னால், உளவியல் பேராசிரியர் ஒருவர் இங்கே இருந்தார். அவர் சிகாகோவில் கற்பிக்கிறார். அவர் இந்தியர், அமெரிக்காவில் வசிக்கிறார். அவர் வந்திருந்தார். இரண்டு ஆண்டுகளாக எனக்கு எழுதிக் கொண்டிருந்தார். 'நான் வருகிறேன்' என்று எழுதிக் கொண்டே இருந்த அவர் வந்தே விட்டார். தியானம் பற்றி அறிந்துகொள்ள அவர் நினைத்தார். பத்துப் பன் னிரண்டு நாட்கள் அவர் இங்கே இருந்தார். மற்றவர்கள் தியானம் செய்ததை அவர் கவனித்தார். 'நான் கவனித்துக் கொண்டிருக்கிறேன்' என்றார்.

ஆனால், நீங்கள் எப்படித் தியானத்தைக் கவனிக்க முடியும்? நீங்கள் தியானிக்க முடியும். அதைப்பற்றி அறிய ஒரே வழி அதுதான். அது மட்டும் தான். நீங்கள் வெளியி லிருந்து தியானியைப் பார்க்க முடியும். அவர் நடனமாடு கிறாரா அல்லது அமைதியாக நின்று கொண்டு இருக் கிறாரா, அல்லது அவர் உட்கார்ந்து கொண்டிருக்கிறாரா...

என்றெல்லாம்- பார்க்கலாம். அதைப்பற்றி-தியானத்தைப் பற்றி என்ன தெரிந்துகொள்ள முடியும்?

தியானம் என்பது உட்கார்வதில்லை; நடனமாடுவது இல்லை. நிலையாக நிற்பதும் இல்லை/ தியானம் என்பது ஒரு மனிதனுக்குள் அடி ஆழத்தில், உட்புறதத்தில் நிகழ்கின்ற ஏதோ ஒன்று. நீங்கள் அதைக் கவனிக்க முடியாது; கண்ணுக்குத் தெரியும் எந்த வகை அறிவும் அதில் கிடையாது./

"நீங்கள் உண்மையில் அதைப் பார்க்க விரும்பினால்- ஆடுங்கள்" என்று நான் அவரிடம் சொன்னேன்.

முதலில் நான் பார்க்க வேண்டும். இதில் விஷயம் இருக்கிறது என்று முதலில் என் மனதில் நானே சம்மதிக்க வேண்டும். அதன் பின்னர் தான் நான் அதைச் செய்வேன்.

அப்பொழுது, "உங்கள் நிபந்தனையில் நீங்கள் உறுதியாய் இருந்தால், நீங்கள் ஒருபோதும் செய்ய மாட்டீர்கள். ஏனென்றால் இதை அறிகின்ற ஒரே வழி செய்வதுதான். நீங்கள் சொல்கிறீர்கள். அறிந்தால்தான் செய்ய முடியும் என்று. "அப்படியானால் இது அசாத்தியம். நீங்கள் ஒரு அசாத்தியமான- ஒருபோதும் நடக்கவே முடியாத ஒரு நிபந்தனையாய்- இருக்கின்றீர்கள்" என்று நான் சொன்னேன்.

'காதல் என்பது என்ன என்று தெரிந்தபின்புதான் நான் காதலிப்பேன்' என்று ஒருவன் சொல்வது போன்றது இது. காதலிக்காமல் காதல் பற்றி நீங்கள் எப்படி அறிவீர்கள்? காதலர் இருவர் கைகோத்துக் கொண்டிருப்பதை நீங்கள் கவனிக்கலாம். ஆனால் அது காதல் இல்லை. இரண்டு பகைவர்கள் கூடக் கைப்பற்றிக் கொண்டிருக்கலாம். இரண்டு பேர்கள் கைப்பற்றிக் கொண்டிருக்கும்போது அவர்கள் காதலில் இல்லாதவர்களாக இருக்கலாம். அவர்கள் பாசாங்கு செய்பவர்களாக இருக்கலாம். ஒருவர்க்

கொருவர் காதல் செய்துகொண்டிருக்கும் போது நீங்கள் பார்த்தால் கூட-காதல் இல்லாமல்கூட அவர்கள் அப்படி இருக்கலாம். அது வேறு ஏதாவது இருக்கலாம். சும்மா வெறும் பாலுணர்ச்சியாக அது இருக்கலாம். அது காதல் அல்ல. வெளியிலிருந்து காதல் பற்றி நீங்கள் அறிந்து கொள்ள வழியே இல்லை. நீங்கள் ஓர் 'உள்ளார்ந்தவராக' இருக்கும்போது மட்டுமே உங்களால் உணர்வதற்கு முடியக் கூடிய விஷயங்கள் பல உள்ளன; அவற்றை வெளியிலிருந்து உங்களால் ஒரு போதும் அறியவே முடியாது.

புத்தர் சொல்கிறார்:

**நிறைந்த கல்வியால் வழியைத் தழுவிட நீங்கள்**
**முயன்றால் புரிந்துகொள்ள மாட்டீர்கள் வழியினைத்தான்.**

கற்றலினால் புரிந்து கொள்ளக்கூடிய விஷயங்கள் உள்ளன. அவை வெளிப்புற விஷயங்கள், கண்ணுக்குப் புலப்படுபவை. அது தான் அறிவியலுக்கும் சமயத்திற்கும் இடையில் உள்ள வித்தியாசம். அறிவியலுக்கு உள்ளார்ந்த அனுபவம் தேவைப்படவில்லை. நீங்கள் வெளியில் இருந்து கொண்டு கவனிக்கலாம். உண்மையை நோக்கும் கண்ணுக் குப் புலப்படும் முறையில் செய்யப்படும் அணுகுமுறை இது.

சமயம் என்பது உள்ளார்ந்த அணுகுமுறை. நீங்கள் உள்ளே செல்ல வேண்டும்-உள்ளுக்குள்ளே செல்ல வேண்டும். 'தன்னாய்வு' செய்து கொள்வதுதான் அது.

உங்கள் சொந்த இருத்தலுக்குள்ளே நீங்கள் ஆழமாகக் குதித்தாக வேண்டும். அதன் பின்னர்தான் உங்களால் அறிய முடியும். உங்கள் சொந்த மையத்திலிருந்து தான் வழி என்ன என்பதையும், தர்மம் என்ன என்பதையும் உங்களால் புரிந்துகொள்ள முடியும். அல்லது கடவுள்

என்றால் என்ன என்றும் நீங்கள் அழைக்கலாம். ஆனால் நீங்கள் பங்கு கொண்டாக வேண்டும்.

நீங்கள் கடவுளாக ஆவதன் மூலமாகத்தான்-கடவுளை அறிய முடியும். வேறு எந்த வழியும் இல்லை. நீங்கள் காதலனாக ஆவதன் மூலமாகத் தான் காதலை அறிய முடியும். காதலை நன்றாக அறிந்துகொண்ட பின்பு தான் காதலிக்க வேண்டும் என்று நீங்கள் நினைத்தால், காதலை அறியாமல் காதலிப்பது மிகவும் ஆபத்தானது என்று நீங்கள் நினைத்தால், நீங்கள் காதல் இல்லாமலே தங்கி விடுவீர்கள். தனியாகத்தான் இறுதி வரை இருப்பீர்கள். ஆம்/வாழ்க்கை என்பது ஓர் ஆபத்துத்தான், ஆனால் ஒரு மனிதன் ஆபத்துகளைச் சந்திக்கும் அளவுக்குப் போது மான துணிச்சல் உள்ளவனாக இருந்தாக வேண்டும்/

எப்போதுமே ஒரு மனிதன் கணக்குப் போட்டுக் கொண்டே இருக்க முடியாது. உங்கள் முழுமையான வாழ்க்கையை நீங்கள் கணக்கிட்டுக் கொண்டே சென்றால், நீங்கள் எல்லாவற்றையுமே இழந்து விடுவீர்கள். ஆபத்து களை மேற்கொள்ளுங்கள். துணிச்சலாக இருங்கள்.

வாழ்க்கையை வாழ ஒரே ஒரு வழிதான் உள்ளது. அபாயகரமாக வாழ்வது ஒன்றுதான் அந்த வழியாகும்.

அபாயம் என்பது என்ன? ஒன்றும் தெரியாமல் இயங்குவது தான். தெரியாமையிலேயே இயங்குவது தான் அந்த அபாயம். ஆகவே நம்பிக்கை தேவைப்படுகிறது.

புத்தர் கூறுகிறார்:

**நிறைந்த கல்வியால் வழியைத் தழுவிட நீங்கள்**
**முயன்றால் புரிந்துகொள்ள மாட்டீர்கள் வழியினைத்தான்.**

நீங்கள் இதைப் பாருங்கள். நீங்கள், பெரிய மேதை களைக் கண்டால் அவர்களிடம் குறையுணர்வு இருப்பதை

நீங்கள் கண்டுபிடிக்கலாம். அவர்கள் வேதம், விவிலியம், குர்ஆன் பற்றியெல்லாம் அதிகமாக அறிந்திருக்கக் கூடும், அதை மனப்பாடமாக ஒப்பிக்கவும் கூடும். ஆனால் அவர்கள் கண்களில் பிரகாசம் இல்லாமல் இருப்பதைக் காணலாம். ஆமாம், அவர்கள், மறை நூல்களின் மூலமாக அதிகமாகத் தூசியைச் சேர்த்திருக்கிறார்கள். அறிவின் மூலமாக அந்தப் புகையைச் சேர்த்து வைத்திருக்கிறார்கள் அவர்கள். அவர்கள் நன்றாகத் தகவல் அறிந்தவர்கள்- ஆனால் பெரும்பாலும் இறந்து போனவர்கள்.

எப்படியோ வாழ்க்கையை அவர்கள் இழந்துவிட்டார் கள். அவர்களால் வாழ்க்கை என்ன என்று கண்டுபிடிக்க, நேரம் ஒதுக்க முடியவில்லை.

நான் கேள்விப்பட்டிருக்கிறேன்:

ஒரு பெரிய மேதையும், சமயகுருவும், பண்டிதருமான ஒருவர் செல்லப்பிராணிகள் விற்கும் கடையில் நின்று, ஒரு கிளியின் விலை யாது என்று கேட்டார். "அந்தக் குறிப்பிட்ட கிளி முழுமையான சமய அவமதிப்புச் செய்வதாக இருப்பதனால் அதை நான் உங்களுக்கு விற்கமுடியாது" என்று சொன்னார் கடைக்காரர்.

"ஆனால், தென்அமெரிக்காவிலிருந்து ஒரு கிளி வரப் போகிறது. அதற்குப் பயிற்சி கொடுத்தபின், தங்களுக்குத் தொலைபேசி மூலம் அழைப்பு விடுக்கிறேன். வந்து எடுத் துக் கொள்ளுங்கள்" என்றும் கடைக்காரர் தொடர்ந்து கூறினார்.

பல மாதங்கள் சென்றன; கடைக்காரர் அவருக்காக வைத்திருந்த கிளியைப் பண்டிதர் பார்வையிட அழைப்பு வந்தது. ஒவ்வொரு காலும் கட்டப்பட்ட நிலையில், கிளி இருந்தது. வலதுகால் கயிற்றை இழுத்துவிட்டார் கடைக்

காரர். உடனே அது 'இறைவனுக்குப் பிரார்த்தனை'யை ஆரம்பம் முதல் முடிவு வரை எழுத்துப் பிசகாமல் கூறியது.

பண்டிதர் மகிழ்ந்து போனார்; மிக நன்றாக இருக்கிறது. நல்லொழுக்கம் போதிப்பதாக இருக்கிறது. அவர்தன் வாழ்வு முழுவதும் அதைத்தான் செய்து வந்திருக்கிறார். இடது காலில் உள்ள நூலை இழுத்தார் கடைக்காரர். உடனே 'இறைவா உன் அருகில் நான்' என்று மிக அருமையாகக் கிளி பிரார்த்தித்தது. 'மகத்தான விஷயம்' என்று மகிழ்ந்தார் மதகுரு. 'இப்போது சொல்லுங்கள். இந்த இரண்டு நூல்களையும் ஒரே நேரத்தில் பிடித்து இழுத்தால் என்ன ஆகும் என்று பண்டிதர் கடைக்காரரிடம் கேட்டார்.

கடைக்காரர் பதில் சொல்வதற்கு முன் கிளி முந்திக் கொண்டு பதில் கூறியது! என்னவென்று தெரியுமா? இதோ கிளி கூறுவதைக் கேளுங்கள். "டேய் அடிமுட்டாள் நான் விழுந்து விடுவேன், அப்படியே!"

மிக எளிமை. ஒரு கிளிகூட அறிந்திருக்கிறது. ஆனால் அந்தப் பண்டிதர் அறியவில்லை. அவர் கிளியை விட மட்டமானவர். அவர் வெறும் எண்ணங்களில் மட்டுமே வாழ்கிறார். அவர் வெறும் தாக்கவியலில் மட்டுமே வாழ்கிறார். அவர் வெறும் சொல்லாலான வாழ்வு தான் வாழ்கிறார். அவர் உண்மை ரோஜாக்களை மறந்து விட்டார். அவருக்கு 'ரோஜா' என்ற சொல் மட்டும் தான் தெரியும். அவர் உண்மை வாழ்க்கையை மறந்து விட்டார். வாழ்க்கை என்னும் சொல்லை அறிவார். நன்றாக நினைவில் கொள்ளுங்கள். வாழ்க்கை என்ற வார்த்தையே வாழ்க்கை என்னும் சொல் ஆகாது. கடவுள் என்ற சொல் கடவுள் ஆகாது. உண்மை வாழ்க்கை என்பது உயிருடன் இருப்பது, வாழ்வது, அனுபவம்.

இது நடந்தது:-

விவசாயக் கல்லூரியில் படித்து முடித்துவிட்டு அண்மையில் வெளிவந்த பட்டதாரி ஒருவன், ஒரு விவசாயியின் நிலத்தையும் ஆடுமாடுகளையும் பார்வை யிட்டு ஆய்வு செய்ய வந்தான். அரசாங்கக் கடனிலிருந்து விடுவிக்க உதவும் வகையில் மதிப்பீடு செய்ய வந்திருப்ப தாகக் கூறினான். ஒவ்வொன்றையும் அவன் மிகவும் நுணுக்கமாக ஆய்வு செய்தான். தன்னுடைய குறிப்புச் சுவடியில் தேவையானவற்றைக் குறித்துக் கொண்டான். எல்லாவற்றையும் குறித்துக் கொண்டு விட்டதாக நினைத்த போது, தானியக்களஞ்சியத்தின் அருகில் ஒரு மிருகம் தலையை வைத்துக் கொண்டு நின்று கொண்டு இருந்ததைப் பார்த்தான்.

'அது என்ன விஷயம்? அது எதற்காக இங்கே இருக்கிறது' என்று பட்டதாரி இளைஞன் கேட்டான். "அது ஒரு வயதான ஆடு, ஆனால் விவசாயி, பட்டதாரிக்கு எதுவும் சொல்லவில்லை. "நீங்கள் நிபுணராயிற்றே. எனக் குச் சொல்லுங்கள். நான் கற்றுக் கொள்கிறேன்" என்று கூறினார்.

இப்போது நிலைமை கடினமாகிவிட்டது. அவர் ஒருபோதும் இப்படி ஒரு விஷயத்தைக் கண்டதேயில்லை. பல்கலைக்கழகத்தில் படித்துக் கொண்டிருந்தார். ஆனால் அவர் எதுவும் செய்ததில்லை, கற்றதைத் தவிர. அனுபவம் எதுவும் இல்லை. ஆடு எனப்படும் ஒரு மிருகத்தை அவர் ஒருபோதும் கண்ணால் கண்டதில்லை. உடனடியாக, ஒரு தந்தி அடித்து அடையாளம் சொல்லச் சொல்லி வேண்டிக் கொண்டார்.

தந்தி வாசகம் இப்படிச் சென்றது;- "நீளமான, ஒல்லியான பொருள், வழுக்கைத் தலை, முகவாய்க் கட்டையில் மீசை, காலியான ஒல்லியான வயிறு, நீளமான

துயரமான முகம், வெளுத்துப் பிணம் போன்ற கண்கள்..." என்று கேட்டிருந்தார். பதில், பல்கலைக்கழகத்திலிருந்து இப்படி வந்தது:-

"அறிவு கெட்ட முட்டாள். அது தான் விவசாயி" என்று.

நினைவு கொள்ளுங்கள். உங்கள் தலை, உங்களிடமிருந்து தொடர்பே இல்லாமல் இருக்கக்கூடும். அது, உங்கள் வாழ்வையே தொடர்பின்றிச் செய்துவிடக் கூடும். தலையைப் பயன்படுத்துங்கள். ஆனால் தலைக்குச் சிறைப் பட்டு விடாதீர்கள்/வாழ்க்கையை அணுக அறிவைப் பயன் படுத்துங்கள். ஆனால் அதையே ஒரு தடையாக ஆக்கிக் கொள்ளாதீர்கள்/

நிறைந்த கல்வியால் வழியைத் தழுவிட நீங்கள்
முயன்றால் புரிந்து கொள்ள மாட்டீர்கள் வழியினைத்
தான் எளிய இதயம் கொண்டு வழியைக்
கடைப்பிடித்தால் பெரிதுமிகப் பெரிது இவ்வழிதான்.

எளிய இதயம் கொண்டு.

வாழ்க்கையை எளிய இதயத்தால் மட்டுமே அறிய முடியும். தலை மிகவும் சிக்கலானது. வாழ்க்கை மிகவும் எளிமையானது.

சிக்கலான தலையை வைத்துக் கொண்டு எளிய வாழ்க்கையைப் புரிந்து கொள்வது மிகவும் கடினமாகும். வாழ்க்கை எளிமையானது. நீங்களும் எளிமையாக இருக்க வேண்டும்.

ஒரு குழந்தை அதிகமாகப் புரிந்து கொள்கிறது. அதற்கு வாழ்க்கையோடு ஒரு பரஸ்பரம் இருக்கிறது. ஒரு கவிஞன் அதிகமாகப் புரிந்து கொள்கிறான். அவனுக்கும் ஒரு பரஸ்பரம் உள்ளது.

ஓர் ஆன்மிகவாதி அதிகமாகப் புரிந்து கொள்கிறார்.

அவருடைய புரிந்துணர்வு மகத்தானது, ஆழமானது, அழுத்தமானது. ஏனென்றால் தன் தலையை அவர் அறவே அப்புறப்படுத்தி விடுகிறார்.

ஒரு குழந்தையின் கண்களால் அவர் பார்க்கிறார். அவர் அதிசயத்தோடும், ஆர்வத் திகைப்போடும் அணுகுகிறார்.

ஒவ்வொரு படியிலும் அவர் வியந்து போகிறார். அவருக்கு எந்தச் சிந்தனைகளும் கிடையாது. நிலையான-உறுதியான-எண்ணங்கள் எவையும் கிடையாது. எந்த விதமான திட்டம் சார்ந்த சிந்தனைகளும் கிடையாது. அவருக்கு எந்த விருப்புமில்லை, வெறுப்புமில்லை.

அவர் ஓர் இந்துவுமில்லை, முஸ்லீமும் இல்லை, கிறிஸ்துவரும் இல்லை.

அவரிடம் துடிக்கும் இதயம் உண்டு; நேசிக்கும் இதயம் உண்டு. வாழ்க்கை என்னவென்று அறியப் போதுமான தேவை அது தான்.

பெரிது மிகப் பெரிது இவ்வழிதான். அறியப்பட்டது-இதயத்தின் மூலம் அறியப்பட்டது. உணரப்பட்டது என்று அழைப்பது சாலப் பொருந்தும்-இதயத்தின் மூலம் உணரப்பட்டது.

வாழ்க்கை மிகவும் எளிமையானது. சில சமயங்களில் உங்கள் தலையை அப்பால் வையுங்கள். சில சமயம் நீங்களே உங்கள் தலையை வெட்டிக் கொள்ளுங்கள். கண்களில் எந்த மாசுகளும் இல்லாமல் சில சமயம் காணுங்கள். சற்றே காணுங்கள். சில சமயங்களில் மரத்தின் அருகில் அமருங்கள். சற்றே உணருங்கள். நீர்வீழ்ச்சியின் அருகில் அமர்ந்து கேளுங்கள். கடற்கரையில் நடந்து பாருங்கள், கடலின் கர்ஜனையைக் கேட்டுப் பாருங்கள். மணல்வெளியை உணருங்கள். அதன் குளுமையை

உணர்ந்து பாருங்கள். நட்சத்திரங்களைக் காணுங்கள். அந்த அமைதி உங்களை ஊடுருவட்டும்.

அல்லது இருண்ட இரவினைக் காணுங்கள். பட்டுப் போன்ற இருட்டு-வெல்வெட்டுப் போன்ற இருட்டு-சூழட்டும் உங்களை. இதுதான் எளிய இதயத்தின் வழி.

இந்த எளிமையான அணுகுமுறையின் மூலமாக, நீங்கள் ஞானம் உள்ளவராக முடியும். உங்களுக்கு வேதம் தெரியாமல் இருக்கலாம், பைபிள் தெரியாமல் இருக்கலாம், கீதா தெரியாமல் இருக்கலாம். ஆனால் வாழ்க்கையின் உண்மையான சங்கீதத்தை- பாடலை- நீங்கள் அறிந்தவர்கள் ஆவீர்கள்.

அங்குத்தான் உண்மையான கீதை உள்ளது. உண்மையான கீதம் உள்ளது. வேதத்தை நீங்கள் அறியாதிருக்கலாம். ஆனால் உண்மை வேதத்தை நீங்கள் அறிவீர்கள்-அந்த வேதம் கடவுளாலேயே எழுதப்பட்ட வேதம்!-ஆம்-அதில் ஐயமில்லை.

இந்த வாழ்க்கை இறைவனின் புத்தகம். இந்த வாழ்க்கை அவனது விவிலியம். இந்த வாழ்க்கை அவனது குர்ஆன். மனனம் செய்யுங்கள் இதை! இந்த வாழ்க்கையை மனப் பாடம் செய்யுங்கள். பாடுங்கள் இதை! இதை ஆடுங்கள்! இதனுடன் நேசத்தில் இருங்கள். வெகுவிரைவில் இந்த வழி என்னவென்று அறிந்து விடுவீர்கள். வெகுவிரைவில் நீங்கள் அதிகமாக-மேலும் அதிகமாக-ஆனந்தமாயிருங்கள்.

எவ்வளவு அதிகமாக ஆனந்தம் அடைகிறீர்களோ அவ்வளவு அதிகமாக இந்த வழியுடன்-சரியான வழியுடன்-பரிச்சயம் ஆவீர்கள்.

எப்பொழுதெல்லாம் கோட்டிலிருந்து ஓர் அடி விலகுகிறீர்களோ, உடனடியாக நீங்கள் வலியை உணர்வீர்கள்.

வலி என்பது ஓர் அறிகுறி. சட்டத்தைவிட்டு நீங்கள் விலகியதற்கான அடையாளம். மகிழ்ச்சி இருந்தால் அது நீங்கள் சட்டத்தோடு ஒன்றியிருக்கிறீர்கள் என்பதன் அறிகுறி.

மகிழ்ச்சி ஓர் உடன்- விளைபொருள். சட்டத்திற்கு நீங்கள் இணங்கிச் சென்றால் நீங்கள் மகிழ்வாக இருக்கிறீர்கள். மகிழ்ச்சியின்மை என்பது ஒரு விபத்து. நீங்கள் சட்டத்திலிருந்து விலகி வெகுதூரம் சென்று விட்டதன் அடையாளமே அது.

மகிழ்ச்சியையும் மகிழ்ச்சியின்மையையும் உங்கள் அடிப்படைத் தத்துவமாக ஆக்கிக் கொள்ளுங்கள். அதனால்தான் நான் ஓர் 'இன்பியலாளன்' என்று என்னைப் பற்றி நான் சொல்லிக் கொள்கிறேன்.

உண்மையில் புத்தர் ஓர் இன்பியலாளர்; மகாவீர், கிருஷ்ணர், முகம்மது அனைவருமே இன்பியலாளர்களே. ஏனென்றால் அவர்கள், நீங்கள் அனைவரும் பிரம்மாண்டமாக மகிழவேண்டும் என்று விரும்புகிறார்கள்.

மேலும் அதற்கான பாதையையும் அவர்கள் காட்டுகிறார்கள். பாதை இது தான்:-எளிமையாக ஆகு; அதிகமாக நம்பு; மிகக்குறைவாகவே சந்தேகப்படு. நீங்கள் உண்மையிலேயே சந்தேகப்பட விரும்புகிறீர்களா, சந்தேகத்தைச் சந்தேகியுங்கள். அவ்வளவுதான். சந்தேகத்தைச் சந்தேகப்படுங்கள். நம்பிக்கையை நம்புங்கள்-நீங்கள் ஒருபோதும் இழக்கவே மாட்டீர்கள்.

**வழிகடைப்பிடிக்கும் பிறர்கண்டு கொண்டாடுவோர்**
**பொழியப் பெறுவார் பலப்பல ஆசிகள்**

"வழியைக் கடைப்பிடிப்போர் மட்டுமல்ல, வழி கடைப்பிடிப்போர் கண்டு மகிழ்ச்சியடைவோர்கூட மகத்தான

வாழ்த்துகளைப் பெறுகிறார்கள்-மாபெரும் நன்மை அடைகிறார்கள்.

ஆம். அது அப்படித்தான். அவர்கள் பலர் தியான நிலையில் உள்ளதைக் கண்டு கொண்டாடுவார்கள். "நல்லது. நான் இன்னும் செய்யவில்லையே எனக்கு இன்னும் துணிச்சல் வரவில்லையே. ஆனாலும் பலமக்கள் தியானம் செய்கிறார்கள்- நல்லது" என்று நினைக்கிறீர்கள். இப்படி நினைப்பதனால் அந்த எண்ணமே அவர்கள் கதவுகளைத் திறந்துவிடும்.

நீங்கள் அவர்களைக் கண்டிக்கவில்லை, தியானம் அசாத்தியம் என்று நீங்கள் சொல்லவில்லை. "அது சாத்தியம்தான். ஆனால் நான் இன்னும் போதுமான துணிச்சலைப் பெறவில்லை" என்கிறீர்கள். ஆனால் அந்த வழியில் தான் நீங்கள் செல்கிறீர்கள். மகிழ்ச்சியாகச் செல்லுங்கள். "உங்களுக்கு என் பாராட்டுக்கள். என் வாழ்த்துக்கள்! ஒருநாள், உங்களிடம் வந்து உங்களைப் பின்பற்றுவேன் என்று நம்புகிறேன்" என்று நீங்கள் சொல்கிறீர்கள்.

'ஒரு துறவியை நீங்கள் வாழ்த்தினால் உங்கள் எதிர்காலத்தையே வாழ்த்தியவர் ஆவீர்கள்' என்று புத்தர் கூறுகிறார்.

'நீங்கள் யாரோ ஒருவர் பாதையில் செல்வதைப் பார்த்து மகிழ்கிறீர்கள். மகத்தான மகிழ்ச்சி அடைகிறீர்கள்- உங்களுக்கு நன்றாகத் தெரியும் நீங்கள் அந்தப் பாதையில் செல்லவில்லை என்றும் நீங்கள் அந்தப் பாதையில் செல்ல இன்னும் தயாராகவில்லை என்றாலும் நன்றாக அறிவீர்கள்- ஆனால் நீங்கள் அந்த மனிதரைக் கண்டிக்கவில்லை- உண்மையில் நீங்கள் மகிழ்கிறீர்கள். அவர் பாதையில் செல்ல நீங்கள் துணை செய்கிறீர்கள்-அதுபோதும்.

நீங்கள் அந்தப் பாதையில் செல்லத் தொடங்கி விட்டீர்கள் என்று உணருங்கள்.

இதைத்தான் ஆரம்பத்திலேயே நான் உங்களிடம் சொன்னேன். வாழ்க்கையில், யாராவது துறவியாகிவிட்ட தாகக் கேட்டால், உடனே நீங்கள் அவரைக் கண்டிக்கத் தொடங்கி விடாதீர்கள்-மகிழ்ச்சி கொள்ளுங்கள். வேறு யாராவது தியானத்தைத் தொடங்கியுள்ளார் என்றால் அவருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்பது போல எதுவும் கண்டித்து விடாதீர்கள்-மகிழ்ச்சி கொள்ளுங்கள்.

நீங்கள் மகிழ்வதன் மூலம், உங்கள் தியான வாய்ப்பு களை உங்களை நோக்கி அருகில் அழைத்து வந்திருக் கிறீர்கள் என்று பொருள்.

நீங்கள் மகிழ்வதன் மூலம், துறவுநிலையை நீங்கள் மிகவும் ஆழமாக எடுத்துக்கொண்டு விட்டீர்கள் என்று பொருள். உள்ளுக்குள் அது ஏற்பட்டுவிட்டது. வெளியில் அது வரும். வெளியில் தெரிவது ஒன்றும் அவ்வளவு முக்கியமானது அல்ல.

வழிகடைப் பிடிக்கும் பிறர்கண்டு கொண்டாடுவோர்
பொழியப் பெறுவார் பலப்பல ஆசிகள்

அதனால் தான் இந்த நாட்டில் ஒரு துறவி மிகவும் மகத்தான மதிப்பைப் பெறுகிறார்.

ஆரஞ்சு நிற ஆடை அங்கி-அணிந்தவர் துறவியாக இல்லை என்றாலும் மதிக்கப்படுகிறான். 'கொண்டாடுங் கள்' என்று புத்தர் சொல்கிறார். ஏனென்றால் ஒருவர் உண்மைத் துறவியா? இல்லையா என்று தீர்மானிக்க நாம் யார்? சொல்லுங்கள் பார்க்கலாம்.

நான் கேட்ட ஒரு பழைய கதையை உங்களுக்குச் சொல்கிறேன், கேளுங்கள். ஒரு பெரிய கொள்ளைக்காரன்,

ஓர் அரசனின் அரண்மனையில் கொள்ளையடித்தான். அவன் தப்பித்துக் கொண்டிருந்த நேரத்தில், விஷயம் தெரிந்து, காவலர்கள் பின்தொடர்ந்தனர். அவனுக்கு மிகப் பெரிய ஆபத்து. எப்படியோ ஓர் ஆற்றங்கரையருகே வந்து சேர்ந்தான். சிப்பாய்களின் குதிரைகள் அவனைப் பின்தொடர்ந்தன. மிக அருகில் அந்த ஒலியை அவன் கேட்டான். ஆறு மிகப் பெரியதாக இருந்தது. ஆனால் அதில் எந்தப் பாலமும் இல்லை. அஞ்சி நடுங்கினான். பயங்கரக்குளிர். இரவு நேரம். என்ன செய்ய?

எதுவும் வாய்ப்பில்லை; எதுவும் சாத்தியம் இல்லை; அந்தத் தருணத்தில் அங்கே ஒரு தருவின் அடியில் ஒரு துறவி அமர்ந்து கொண்டிருந்தார். தன் ஆடைகளைத் தூக்கி எறிந்தான். நிர்வாணமானான்; கண்ணை மூடித் தியானம் செய்தான்- ஆம் உண்மை-தியானம் செய்வது போல் பாசாங்கு செய்தான். ஏனென்றால் தியானம் என்றால் என்ன என்றே அவனுக்குத் தெரியாதே! ஆனால் பாசாங்கு செய்ய முடியும் அல்லவா? ஆகவே கண்களை மூடிக் கொண்டான். பத்மாசனத்தில் அமர்ந்தான்- அதாவது தாமரை ஆசனம்!

காவலர்கள் வந்தனர். அங்கே யாருமே இல்லை. இந்த இரண்டு துறவிகள் தாம் இருந்தார்கள். அவர்கள் பாதங்களைத் தொட்டார்கள். உள்ளே இருந்த மனிதன்- அதாவது கொள்ளைக்காரனின் உள்ளத்துக்குள் இருந்த மனிதன்-மிகமிகக் குற்ற மனப்பான்மை கொண்டான்.

"இது நல்லதில்லை. நான் ஒரு திருடன், கொள்ளைக் காரன். இவர்கள் என் பாதங்களைத் தொட்டுக் கும்பிடுகிறார்கள். நான் ஒரு போலித் துறவி. ஒரு போலித் துறவிக்கே இவ்வளவு மரியாதை என்றால், நான் உண்மை யாகவே துறவியானால் என்ன நடக்கும்?" என்று கொள்ளைக்காரன் உள்ளுக்குள் சிந்தித்தான்.

ஓர் ஒளிக் கீற்று அவன் வாழ்க்கையில் நுழைந்தது. தன் பழைய வழிகளையெல்லாம் விட்டுவிட்டு அவன் உண்மையாகவே துறவியானான்.

அவன் புகழ் புவியெங்கும் பரவியது. ஒருநாள் அரசனே வந்து அவன் பாதங்களைத் தொட்டு வணங்கினான்.

"எப்படி நிகழ்ந்தது? நீங்கள் எப்படி உலகைத் துறந்தீர்கள். என்றாவது ஒருநாள் எனக்கும் மகத்தான ஆசீர்வாதம் கிடைக்கும். எனக்கும் இந்த உலகத்தைத் துறக்கும் துணிச்சலைக் கடவுள் கொடுப்பார் என்று முழுமையாக நம்புகிறேன் சொல்லுங்கள். எனக்கு அது தைரியத்தைக் கொடுக்கும்'' என்று அரசன் அந்தத் துறவியிடம் சொன்னான்.

அந்த மாஜி கொள்ளைக்காரன் சிரிக்கத் தொடங்கினான். அவன் சொன்னான். "நான் சொல்கிறேன் நீங்கள் தான் எனக்கு உதவி செய்தீர்கள்-நீங்கள் என்னைப் பின்தொடர்ந்தீர்கள்."

'என்ன சொல்கிறீர்கள்' என்று ஆச்சரியப்பட்டுக் கேட்டான் அரசன். மாஜி கொள்ளைக்காரன் தன் முழுக்கதையையும் சொன்னான். "என்னைப் போன்ற ஒரு போலித்துறவி–கொள்ளைக்காரன்– கொலைகாரன். இந்த அளவிற்கு மதிக்கப்படுகிறபொழுது என் பழைய வழிகளுக்குத் திரும்பவும் செல்வது எனக்கு அசாத்தியமாகத் தென்பட்டது.

என் பாதங்களை அவர்கள் தொட்டபோது மிகவும் நான் அழகானவன் என்பதுபோல உணர்ந்தேன். 'ஒரு போதும் அது போன்று நான் அதற்கு முன்பு உணர்ந்ததேயில்லை. அது அந்த அளவுக்கு அழகுமிக்க கணமாக அமைந்தது. அந்த நேரத்திலிருந்து நான் தியானம் செய்து கொண்டிருந்தேன். அதிலிருந்து உண்மையாகவே நான்

உலகைத் துறந்து விட்டேன். நான் மிகப்பெரிய அளவில் மகிழ்ச்சியாய் உள்ளேன் நான் என் இலட்சியத்தை அடைந்து விட்டேன்."

'பிறர் சட்டத்தைப் பின்பற்றுவது கண்டு குதூகலம் கொள்வோர் கூட என்று' கூறுகிறார் புத்தர்.

ஒருபோதும் கண்டிக்காதீர்கள். ஒரு சில வேளைகளில் அது சாத்தியமானாலும் கூட! எப்போதுமே இது சாத்தியம் தான்!

அசல் நாணயங்கள் இருக்கும்போது கள்ள நாணயங் களும் கட்டாயம் இருக்கத்தான் செய்யும்.

துறவிகளுக்கு இவ்வளவு மதிப்புக் கொடுக்கப்படும் போது, ஏமாற்றுக்காரர்களும் கட்டாயம் இருக்கத்தான் செய்வார்கள். அது விஷயமில்லை. என்ன ஏமாற்றி விடுவார்கள்? என்னதான் அவர்கள் மோசடி செய்ய முடியும்? என்ன பெற்றிருக்கிறீர்கள்? ஆனால் குதூகலியுங் கள்.

ஒரு சிரமணர் புத்தரைக் கேட்டார்.

"எப்பொழுதாவது இவ் ஆசியை அழிக்க முடியுமா?" என்று.

பிறர் தியானத்தில் இருக்கும்போது நாம் குதூகலிப்பது சும்மா தற்காலிகமானது தானா?

நீங்கள் தியானம் செய்தால் உங்களுக்கு நிரந்தர ஆனந் தம் கிடைக்கும் என்று சிரமணர் கேள்விப்பட்டிருக் கிறார். ஆனால் பிறர் அடைவதைப் பார்த்து நாம் குதூகலித்தால், இந்த ஆசியை எப்போதேனும் அழிக்க முடியுமா?

புத்தர் கூறுகிறார்:

ஏற்றப்பட்ட விளக்கினது எரிகின்ற சுடர்தன்னால்
ஏற்றப்பட்ட மற்ற விளக்கை ஏந்திக்கொண்டு மக்கள்
பல்லோர் வருவர் உணவு சமைப்பர் இருளை அணைப்பர்
அசல் விளக்கது தானே. எரிந்து கொண்டிருக்கும்
எப்போதும் சுடருடன் அதுதான் நடக்கும் ஆனந்த
வழியிலும்.

வழியைப் பின்பற்றுவோர் ஆனந்தமயமாக ஆகிறார்கள் என்று புத்தர் கூறுகிறார்.

வழியைப் பின்பற்றுவோரைப் பார்த்துக் குதூகலிப்பவர்களும்கூட ஆனந்தமயமானவர்களே என்றும் கூறுகிறார்.

தற்காலிகமாக மட்டுமன்று, கணப்பொழுது மட்டுமன்று, அவர்களது ஆனந்தமும் நிலையானது தான்.

உண்மையில் அவர்களது குதூகலத்தினாலேயே அவர்களும் சகபயணிகளாக ஆகிவிட்டார்கள்.

ஆழமாக உள்ளத்திற்குள்ளே, அவர்கள் பயணம் சென்று விட்டார்கள். வெளிப்புறம் உள்புறத்தைப் பின்தொடரும்– அது ஒரு அடிப்படை விஷயமல்ல.

ஆனால் பாதையில் செல்வோரை நீங்கள் கண்டிக்கும் போது, பிரார்த்தனை செய்வோரை, தியானம் செய்வோரைக் கண்டிக்கும்போது, இருளில் தட்டுத்தடுமாறி வழியில் செல்ல முயல்வோரைக் கண்டிக்கும்போது, உங்களை நீங்களே சபித்துக் கொள்கிறீர்கள். அப்போது உங்கள் கதவுகள் மூடப்பட்டுவிடும். உங்கள் ஆற்றல் விதையாகவே தங்கியிருக்கும். அது ஒருபோதும் உண்மையாக மலராமல் போய்விடும்.

நீங்கள் விதையைப் போல் இருக்கிறீர்கள். யாராவது ஒருவர் பூக்க வைத்திருந்தால், கண்டு குதூகலியுங்கள்.

அந்தக் குதூகலத்திலேயே நீங்கள் முளைக்கத் தொடங்கு வீர்கள்.

உங்களுக்கு நிகழவில்லை என்ற காரணத்தினாலேயே உலகத்திலேயே பூக்கள் இல்லை என்று சொல்லாதீர்கள்.

உங்களுக்கு நிகழாததனால், அது மற்றவர்க்கும் நிகழாது என்று-அதாவது பூக்களே உலகில் இல்லை என்று சொன்னால்...

பிரடரிக் நியட்சே இதையே கூறுகிறார்: ஏதாவது ஒரு கடவுள் எப்படி இருக்க முடியும்? ஒருவேளை கடவுள் என்று ஒருவர் இருந்தால், நான் தான் அந்தக் கடவுள். நான் இல்லையென்றால், வேறெங்கும் எந்தக் கடவுளும் இருக்கமுடியாது. என்னைத் தவிர வேறு யாரோ ஒருவர் கடவுள் என்பதை என்னால் எப்படிப் பொறுத்துக் கொள்ளமுடியும்? அசாத்தியம், என்னால் இக்கருத்தை அனுமதிக்கவே முடியாது. 'கடவுள் இறந்துவிட்டார்; கடவுள் இருக்கவில்லை' என்று அவர் கூறுகிறார்.

ஆனால் மனிதன் திரிசங்கு சொர்க்கத்தில் விடப்படு கிறான். அங்கிருந்து மேலே செல்வதற்கு இடமில்லை. அப்புறம் நீங்கள் வயதானவர் ஆவீர்கள். ஆனால் ஒருபோதும் வளர்ச்சி பெறுவதில்லை. 'வளர்ந்தவராக' நீங்கள் ஒருபோதும் ஆகமுடியாது.

ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். வயதானவராக ஆவது மேலே வளர்வதாகாது-மேலே வளர்வதாவது - அப்படியே பொருள் கொள்ளலாம்-மேலே-மேலும் மேலே வளர்வதாகும். மேல்நோக்கிய வளர்ச்சியாகும்.

வயதில் வளர்வது என்பது படுக்கைக் கோடு போன்றது! -மேல் நோக்கிய வளர்நிலை என்பது, செங்குத்தானது.

மேலே வளர்வது என்பது மரத்தைப் போல வளர்வது என்று பொருள். வயதில் வளர்வது என்பது படுக்கைக் கோடு போன்றது-நதியைப் போன்றது-

அது தன் மட்டத்தை-தளத்தை மாற்றிக் கொள்வதே யில்லை. அப்படியே தான் இருக்கிறது.

யாரோ ஒருவர் மேல் வளர்ச்சி பெறுகிறார் என்றால் குதூகலம் கொள்ளுங்கள், கொண்டாடுங்கள்; குறைந்த பட்சம் ஒரு மனிதராவது அல்லது மனிதரது இருத்தலாவது புத்தராக ஆகியிருக்கிறது.

நல்லது. அவர் வழியைக் காட்டியிருக்கிறார். உண்மை யில் அனைத்து மனித உயிர்களும், சாராம்சத்தில் புத்தர்களாக ஆகியிருக்கிறார்கள்.

ஏனென்றால், மனித இருத்தலில் யாரோ ஒருவருக்கு நிகழ்ந்தது மற்ற அனைவருக்கும் கூட நிகழ்வது சாத்தியமே.

பல வாழ்க்கைகளை ஒன்றுசேர்த்துக் குவித்துப் பார்த்தாலும் நாம் புத்தராக வர முடியாமல் போகலாம். அது ஒரு பிரச்சினையே அல்ல.

ஒரு மனிதர் புத்தர் ஆகியுள்ளார். அவர் அந்தச் சாத்தி யத்தைக் காட்டியிருக்கிறார். நாம் நீண்ட நேரம் காத்திருக்க வேண்டி இருக்கலாம். நாம் காத்திருக்கலாம். காரணம், காலை நெருக்கமாக வந்து கொண்டே இருக்கும்! அது நிச்சயம் உதித்துத்தான் ஆக வேண்டும். அது வந்தே தீரவேண்டும். அது நமக்கு வரவும் செய்யும். இப்போது இருட்டாய் இருக்கிறது. இரவு வர நேரம் நீள்கொண்டே செல்லும். ஆனால் இப்போது நம்பிக்கை நட்சத்திரம் சுடர் வீசுகிறது.

புத்தரோடு சேர்ந்து குதூகலிப்பது என்பதற்கு உங் களுக்கு நம்பிக்கையை நீங்களே உருவாக்கிக் கொள்கிறீர்கள் எனப் பொருள்.

அதனால் உங்கள் வாழ்க்கை இனிமேல் சலிப்பில்லை. அப்புறம் உங்கள் வாழ்க்கை நம்பிக்கையற்றதாக இருக்காது. ஒரு மனிதர் புத்தர் ஆகியிருக்கிறார்.

நம்பிக்கையல்லாத வாழ்க்கை சலிப்பு நிறைந்த வாழ்க்கை; ஒரு நம்பிக்கையுள்ள வாழ்க்கை மிகவும் சாத்தியம் ஆக்கும். பலப்பல வாழ்க்கைகளுக்குப் பிறகு அது நிகழலாம். அதைப்பற்றிப் பரவாயில்லை, காத்திருக்கலாம். ஆனால் நிச்சயம் ஒருவர் நம்பிக்கையோடு காத்திருக்கலாம்.

ஏற்பட்ட விளக்கினது எரிகின்ற சுடர்தன்னால் ஏற்றப்பட்ட
மற்ற விளக்கை ஏந்திக் கொண்டு மக்கள் பல்லோர்
வருவர். உணவு சமைப்பர். இருளை அணைப்பர் அசல்
விளக்கானது தானே. எரிந்து கொண்டிருக்கும்
எப்போதும் அவருடன் அதுதான் நடக்கும்
ஆனந்த வழியிலும்.



*உண்மையான தேடுவோரைக் காணும்போது, குதூகலம் கொள்ளுங்கள் என்று எங்களிடம் சொன்னீர்கள். உண்மையில், புதியவர்கள் துறவி களாவதும், தியானம் செய்யத் தொடங்குவதும் காண நேரும்போது அது ஒரு சிலிர்க்க வைக்கும் அனுபவம்தான். ஆனால் உண்மையிலேயே அழகிய நேர்மையான இளையோர், தங்கள் சர்வத்தையும் தியாகம் செய்து, அழிவுச் சக்தியை, பொய்யை, போலி தீர்க்கதரிசிகளை, சுயலாப, அரசியல்லாப வேட்டையாளர்களைப் பின்பற்றும்போது நாங்கள் எப்படிக் குதூகலம் கொள்ள முடியும்?*

*'மூன்' என்னும் மனிதர் ஒவ்வொரு நாளும் மிகுதியாகச் சீடர்களைப் பெறுகிறார். அதே நேரத்தில் அவர் மேற்கில் பகைவர்கள் பலபேரை உருவாக்கிக் கொண்டிருக்கிறார்; அவரைக் கடுமை யாக விமர்சிக்கிறார்கள். அவரது முறைகளைத் தாக்குகிறார்கள்.*

*ஆனால், அவரது குருட்டு முட்டாள் மாணவர் கள், இந்தச் சித்திரவதையைத்தான், இவர்தான் உண்மையானவர் (இயேசு) என்பதற்கான நிருபணம் என்று நம்புகிறார்கள்.*

இது ஒரு சிக்கலான விஷயம். நீங்கள் இதுபற்றி மிகவும் நுட்பமாக இருக்கவேண்டும். முதலாவது இது உங்களுக்குச் சம்பந்தமில்லாத விஷயம். யாரோ ஒருவர், மூன் என்பவரையோ,

முக்தானந்தா என்பவரையோ பின்பற்றுகிறார் என்றால், அது உங்களுக்குத் தொடர்பற்ற விஷயம். அதைப்பற்றிய எந்தக் கருத்தும் உங்களுக்குத் தேவையில்லை. அதைப்பற்றி தீர்மானிக்க நீங்கள் யார்?

'முன்' சரியானவரா தவறானவரா என்று நீங்கள் எப்படித் தீர்மானிக்க முடியும்? ஏன் நீங்கள் தீர்மானிக்க வேண்டும்? நீங்கள் அவரைப் பின்பற்றவில்லையே. நீங்கள் அப்பால் இருக்க வேண்டும். ஏனென்றால் வெளியே இருந்து எதையும் தீர்மானிக்க இயலாது.

இதே விஷயம் உண்மையில் இயேசுவைக் கூட எதிர்த் துச் சொல்லப்பட்டுள்ளது. இயேசுவுக்கு எதிரான மக்களும் இதே விஷயத்தைத்தான் மக்களிடம் கூறினார்கள். 'நீங்கள் ஏன் இந்த மனிதரோடு செல்கிறீர்கள்? அவர் ஒரு பொய்யான தீர்க்கதரிசி' இயேசுவுக்கு எதிராக யூதர்கள் கூறியது இதுதானே. இப்போது கூட இதைத்தான் அவர் கள் கூறுகிறார்கள். அவர்கள் அதை உரக்கச் சொல்லாமல் இருக்கலாம்-ஏனென்றால் பல நூற்றாண்டுகளாக அவர்கள் அடிமையாக்கப்பட்டு விட்டார்கள்-இருப்பினும் இப் போதும் அவர்கள் சொல்லத்தான் செய்கிறார்கள்.

யார் தீர்மானிப்பது? எப்படித் தீர்மானிப்பது?

இதே மக்கள் என்னை எதிர்த்தும் சொல்லிக் கொண் டுள்ளார்கள். நீங்கள் என்னைப் பின்பற்றுகிறீர்கள். நீங்கள் ஆபத்தான மனிதரின் கைகளில் விழுந்துவிட்டதாக மக்கள் சொல்வார்கள்! அவர் உங்களை மூளைச்சலவை செய்து விட்டார், அவர் உங்களை அழித்துவிட்டார், அவர் உங்களை வசியப்படுத்திவிட்டார். மேலும்...பல...இந்த மாதிரியெல்லாம்... சொல்வார்கள்.

முதலாவதாக இந்த விஷயங்களில் நீங்கள் ஒருபோதும் சம்பந்தப்படக்கூடாது. உங்கள் நேரத்தை வீணாக்கக்

கூடாது. 'மூன்' என்பவருடன் இருப்பதை யாரோ ஒருவர் நல்லதாக உணர்ந்தால், அது அவரது விஷயம். தீர்மானிப்பது அவர்தான். நீங்கள் 'உண்மையான அழகிய மக்கள்' என்றெல்லாம் சொல்கிறீர்களே, அவர்கள் உண்மையாகவே நேர்மையானவர்களாக இருந்தால், தாமதமாகவோ சீக்கிரமாகவோ அவர்கள், தங்கள் தீர்க்கதரிசி பொய்யானவர் என்று கண்டு கொள்வார்கள். அவர்களது நேர்மை, தீர்க்கதரிசியின் பொய்மையை வெளிப்படுத்தவில்லை என்றால், வேறு யாரால் அதனை வெளிப்ட:டுத்த முடியும்? ஆகவே அவர்கள் முழுமனதோடு செல்லட்டும். அவர்கள் தவறான மனிதரோடு பழகினால், விரைவாகவோ தாமதமாகவோ, அவர்களால் புரிந்துகொள்ள முடியும். அவர்களால் அதைப் புரிந்துகொள்ள முடியவில்லை என்றால் அப்போதும் கூடத் தேர்ந்தெடுப்பது என்பது அவர்களுடைய விருப்பம்!

உண்மையில், எந்த அளவுக்கு, மூனையும் மற்றோரையும் நீங்கள் விமர்சிக்கிறீர்களோ, அந்த அளவுக்கு சீடர்கள் தங்களைத் தாங்களே பார்த்துக் கொள்வதை அசாத்தியம் ஆக்கிவிடுகிறீர்கள்.

எந்த அளவுக்கு நீங்கள் அவர்களை விமர்சிக்கிறீர்களோ, அந்த அளவுக்கு அவர்கள் தற்காப்பு வாதம் செய்வார்கள்.

அளவியல்- தர்க்கம்- என்பது இருமுனையும் கூர்மையுடைய வாளைப்போன்றது.

நீங்கள் அளவுக்கு அதிகமாக எதிர்ப்புக்காட்டும்போது "பாருங்கள், இப்படித்தான் நிகழ்ந்தது இயேசுவுக்கும். இதேதான் எனக்கும் நிகழ்கிறது. மக்கள் எனக்கும் எதிர்ப்பாக இருக்கிறார்கள். மகத்தான தீர்க்கதரிசிகளுக்கு மக்கள் எதிர்ப்பாகத்தான் இருப்பார்கள் என்பது எப்போதும் நடக்கும் விஷயம் தான்" என்று மூன் சொல்கிறார்.

நீங்களை அவரை எதிர்த்துக் கொண்டிருப்பதன்மூலம், அவர் முக்கியமானவர் என்று நீங்கள் நிரூபிக்கிறீர்கள். அவருக்கு நீங்கள் அதிக முக்கியத்துவம் அளவுக்கு மீறி அளிக்கிறீர்கள்.

இயேசுவைப்பற்றி யூதர்கள் கவலைப்படாமல் இருந்திருந்தால், கிறிஸ்துவமதமே இருந்திருக்காது. இயேசு சரியானவர் என்றோ தவறானவர் என்றோ நான் எதுவும் கூறவில்லை. ஆனால் 'கிறிஸ்துவ மதம் என்று ஒன்று இருக்காது' என்று மட்டும் நான் சொல்கிறேன். அளவுக் கதிகமான எதிர்ப்பிரசாரம், அவரது சீடர்களிடம் ஒரு தற்காப்பு மனப்பான்மையை உருவாக்கிவிட்டது. அவர்கள் சண்டைபோடத் தொடங்கினார்கள். வாதமிடத் தொடங் கினார்கள்.

ஆர்வமின்றி இருங்கள். உங்களால் குதூகலமாக இருக்க முடியவில்லையென்றால், குறைந்த பட்சம் ஒன்று செய்யுங்கள். ஆர்வமின்றி இருங்கள். நீங்கள் குதூகலிக்க முடிந்தால், நல்லது–

மூனைப் பின்பற்றும் யாரோ ஒருவர் குறைந்தபட்சம், தேடுகிறார். ஒருவேளை தவறான திசைகளாக அவை இருக்கலாம்-இருப்பினும், அவர் தேடுகிறார் அல்லவா? தேடாதவர்கள் இருக்கிறார்களே அவர்களைவிடத் தேடுகிறவர்கள் சிறந்தவர்கள் அல்லவா? அதனால் குதூகலம் கொள்ளுங்களேன். தவறான மனிதரோடு பழகு கின்றனர். ஆனால் பழகுகின்றனர் அல்லவா? இருட்டில் தட்டுத் தடுமாறி நகர்கிறார்கள். கதவுக்கு மிகத் தொலை வில், ஆனால் நகர்கிறார்கள். இருட்டில் கூட. இருட்டி லேயே அமர்ந்துகொண்டு, கொஞ்சம்கூட நகராமல் உட்கார்ந்து கொண்டு இருக்கிறார்கள்–அவர்களைவிட நகருபவர்கள் சிறந்தவர்கள் அல்லவா?

கிறிஸ்துவர்களைவிட, இந்துக்களைவிட, முகமதியர் களைவிட, சமணர்களைவிட, பௌத்தர்களைவிட, அதாவது அமைதியாக இருட்டில் உட்கார்பவர்களை விட, அவர்கள், அதாவது தேடுவோர், சிறந்தவர்கள்.

ஏனென்றால் உட்கார்ந்திருப்பவர்களின் தேடுதல், நகர்தல் நிறுத்தப்பட்டுள்ளது. அவர்கள் கண்டுபிடித்து விட்டதாகக் கருதுகிறார்கள்.

பிறப்பினால்தான் நீங்கள் கிறிஸ்துவர்கள் ஆகிறீர்கள். கிறிஸ்துவ மதம் உங்கள் தேர்வல்ல-பிறப்பினால் வந்த ஒரு விபத்து அது. பிறப்பினால் மட்டுமே நீங்கள் ஓர் இந்து. தங்கள் சொந்தத்தில், யாரோ ஒருவர், குறைந்தபட்சம், நகருகிறாரே, அது சிறந்தது.

ஆபத்து அதில் உண்டு. ஆனால் முழுவாழ்க்கையும் ஆபத்துத்தான். இறந்துவிட்ட இயேசுவின் சீடராக இருப்பதைவிட 'உயிருள்ள' மூன் என்பவரின் சீடராக நீங்கள் இருப்பது சிறந்தது.

அவர் தவறானவர் என்றோ சரியானவர் என்றோ நான் கூறவில்லை. அவர் தவறாகவே இருக்கலாம். ஆனால் குறைந்தபட்சம் அந்த மனிதர் பின்பற்றுகின்ற, தேர்ந்தெடுக்கிற துணிச்சல் உடையவர், ஆவார்.

அவர் தவறானவர் என்றால், விரைவாகவோ தாமதமாகவோ அவரது சொந்த அனுபவம் அவர் தவறு என்று நிரூபித்து விடும்.

ஆனால் சும்மா இருட்டில் அமர்ந்து கொண்டிருப்பவர் கள், தாங்கள் தவறா சரியா என்றே ஒருபோதும் அறிந்து கொள்ள மாட்டார்கள். ஆகவே உண்மையான கஷ்டம் இத்தகைய மக்களுடன் தான் என்று புரிந்துகொள்ள வேண்டும்.

நீங்கள் கிறிஸ்துவர் என்று நீங்களாகவே முடிவுக்கு வந்துவிட்டீர்கள். நீங்கள் எப்படிக் கிறிஸ்துவர் ஆவீர்கள். உயிரோடு இயேசுவைப் பின்பற்றிய ஒரு சில கிறிஸ்தவர் களே இருந்தார்கள். அவர்கள் தங்கள் உயிரைப் பணயம் வைத்தார்கள். தாங்கள் சரியானவரைப் பின்பற்றுகிறார் களா இல்லை தவறானவரையா என்பது அவர்களுக்கே தெரியாது. இதுதான் மிகப்பெரிய ஆபத்து.

அதுதான் அவர்களது மிகப்பெரிய ஆபத்து அல்லது பணயம். பழைய சர்ச்சோடு அவர்கள் இருந்திருந்தால்-அவர்கள் யூதர்களாகவே தங்கியிருந்திருந்தால்-அவர் களுக்கு எந்த ஆபத்தும் இல்லை. பாரம்பரிய மரபினால் விஷயங்கள் நிலைநிறுத்தப்பட்டன. நூற்றாண்டுக்கணக்கில் ஒவ்வொன்றும் நிலைநிறுத்தப்பட்டது. ஒவ்வொரு கோட்பாடும் நிலைநிறுத்தப்பட்டது.

இந்த மக்கள் தங்களுக்குத் தாங்களே பார்த்துக் கொள்ளத் தொடங்கினார்கள். அவர்கள் தங்கள் கண்களைத் திறக்க முயன்று கொண்டிருந்தார்கள். இயேசு சரியானவரா தவறானவரா என்பதைப் பற்றியெல்லாம் நான் கவலைப்படவில்லை. ஆனால் இந்த மக்கள், அதிக உயிர்த்துடிப்புள்ள மக்கள்.

ஆம், முக்தானந்தாவிடம்கூட, அவருடன் பழகுவது, நகருவது, நல்லதுதான்; நீங்கள் உண்மையான தேடுநர் என்றால், உங்களை எவ்வளவு காலத்திற்கு முக்தானந் தாவோ மூனோ ஏமாற்றிவிட முடியும்? எவ்வளவு காலம்? உங்கள் நேர்மையே உங்கள் பாதுகாப்பு. வேறெதுவும் இல்லை. மேலும் செல்லுங்கள்-மேலும் மேலும் நீண்ட தூரம் செல்லுங்கள்- சரியான கதவைத் தட்டுவதற்கு முன்னால் ஒருவர் பல கதவுகளைத் தட்ட வேண்டி யிருக்கிறது.

வேறு வழியே இல்லை.

ஆகவே விமரிசிக்காதீர்கள். தேவையே இல்லை. அது உங்கள் வேலையும் இல்லை. நீங்கள் 'மூன்' என்பவரைப் பின்பற்ற விரும்பினால், அது பற்றி நீங்கள் சிந்திக்க வேண்டும். மற்றவர்கள் பின்பற்றுகிறார்களா–அவர்கள் சிந்திக்கட்டுமே. அவர்களது பொறுப்பை நீங்கள் ஏன் உங்கள் தோள்களில் சுமக்க வேண்டும்? பிறர்மீது நீங்கள் ஏன் அதிகாரம் செலுத்த எண்ணுகிறீர்கள்? ஒரு முட்டாளைப் பின்பற்றுவது என்று ஒருவர் முடிவுகட்டி விட்டால் அது அவரது தீர்மானம். அவருக்கு ஒரு முட்டாளைப் பின்பற்றுகின்ற சுதந்திரம் உண்டு. கட்டாயப்படுத்தப்பட்டு-நீங்கள்–உலகத்திலேயே மகத்தான அறிவாளியாக இருக்கும்-ஒரு புத்தரைப் பின்பற்றினால் கூட-அப்போதுகூட மிகவும் அசிங்கம். ஏனென்றால் உங்கள் சுதந்திரத்தைக் கொன்று விடுகிறது.

உங்கள் சொந்த விருப்பத்தோடு நீங்கள் ஒரு முட்டாளைப் பின்பற்றுவது என்றாலும், அது அழகானது. என் அழுத்தம்–அக்கறை–உங்கள் சுதந்திரத்தின் மீதுதான். மூன் என்பவருக்கு எதிராக இருக்கும் மக்கள், ஏன் எதிராக இருக்கிறார்கள்? இயேசுவுக்கு எதிராக என்ன காரணங்களோ அதே காரணங்களுக்காகத்தான். ஏனென்றால், மூனின் செல்வாக்கு மேலும் மேலும் வளரத் தொடங்குமானால், கிறிஸ்துவர்கள் மறைந்துபோய் விடுவார்கள். அவர்கள் 'மூனைட்ஸ்' அல்லது 'மூனியர்' ஆகிவிடுவார்கள்.

இந்த மக்க்ள ஹரே கிருஷ்ணா இயக்கத்தலைவர் பக்தி வேதந்தாவுக்கு எதிரானவர்கள். ஏனென்றால் மேலும் மேலும் மக்கள், இந்துக்களாக ஆகிறார்கள். கிறிஸ்துவர்கள் மறைகிறார்கள்.

இந்த மக்கள் மகரிஷி மகேஷ்யோகிக்கு எதிரானவர்கள். ஏனென்றால் அவர்கள் கிறிஸ்துவப் பிரார்த்தனையை விட்டுவிட்டு வேறு மந்திரத்தைத் தொடங்குகிறார்கள். இதே கதை எங்கும் நிகழ்கிறது.

இங்கே மக்கள் எனக்கு எதிராக இருக்கிறார்கள்; நீங்கள் என்னுடன் வந்தால், வெகுவிரைவில் நீங்கள், பார்ஸி ஆக இருக்க மாட்டீர்கள். இந்துவாக இருக்க மாட்டீர்கள். கிறிஸ்துவராக இருக்கமாட்டீர்கள். நீங்கள் ஒரு புனிதமான மனித இருத்தலாக ஆவீர்கள்.

ஓர் எளிய மனித இருத்தலாக-எந்த அடைமொழிகளும் இல்லாதவராக-நீங்கள் ஆவீர்கள்.

ஆகவே, அடைமொழிகளோடு வாழ்பவர்கள், எப்படி இதைச் சும்மா பார்த்துக் கொண்டிருக்க முடியும்? அவர்களுக்கு அச்சம், அவர்களது நிறுவனம் படிப்படியாக அழிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறது.

அவர்கள் ஒவ்வொரு வழியிலும் முயல்வார்கள். என்னிடம் எவருமே வரக்கூடாது என்று அவர்கள் உண்மையில் விரும்பினால், அவர்கள் என்னிடம் அலட்சியமாக இருக்கவேண்டும் என்று அவர்களுக்கு ஆலோசனை கூறிக்கொள்கிறேன்.

எந்த அளவுக்கு எனக்கு அவர்கள் எதிராக இருக்கிறார்களோ, அந்த அளவுக்கு என்னை அவர்கள் முக்கியத்துவம் உடையவர்கள் ஆக்குகிறார்கள்.

அவர்களது இந்த எதிர்ப்புணர்ச்சியே என்னிடம் பலபேர்களை ஆர்வமுள்ளவர்களாக ஆக்க உதவுகிறது.

என்னால் எந்தக் கவலையும் இல்லாமல், அசிரத்தையாக அல்லது அலட்சியமாக என்னிடம் இருப்பது ஒன்றுதான், அவர்கட்குச் சிறந்த வழியாகும்.

மக்கள் என்னிடம் வரட்டும். கண்டுபிடிக்கட்டும். என்னுடன் இருப்பதில், அதிக வளர்ச்சியை, தங்கள் பழைய சர்ச்சில் அவர்கள் கண்டதைவிட, கோவில்களில் கண்டதைவிட, மசூதிகளில் கண்டதைவிடக் கண்டார்கள் என்றால், அவர்கள் தங்கள் விருப்பமானதைத் தேர்ந்தெடுக் கட்டும். என்னிடம் போதுமான வளர்ச்சியைக் கண்டு பிடிக்காதவர்கள், என்னைவிட்டு நகர்ந்து விடுவார்கள். அவர்கள் தேடிக் கொண்டே செல்கின்றார்கள்.

ஆனால், மக்கள் எனக்கு எதிராக இருந்தால் நீங்கள், தற்காப்பு முயற்சியில் இறங்குகிறீர்கள். உங்கள் கண்கள் கோட்பாட்டுக் கண்கள் ஆகி விடுகின்றன. அப்புறம் நீங்கள், விவாத உணர்வு உடையவராக இருக்கின்றீர்கள்.

உங்கள் ஆச்சாரியர் சரியானவர் என்றும், அவர் ஒருவர் தான் சரியானவர் என்றும் எப்படியாவது நிரூபிக்க வேண்டிய கட்டாயத்திற்கு ஆளாகின்றீர்கள்.

தவறுகளை, பிழைகளை, குறைபாடுகளை, சில சமயங் களில், நீங்கள் என்னிடம் கண்டால்கூட நீங்கள் அதைக் கண்டுகொள்வதில்லை.

உங்கள் ஆச்சாரியர், எப்படித் தன் வாழ்வில் குறையும் தவறும் உள்ளவராக இருக்க முடியும். சொல்லுங்கள் பார்க்கலாம். உங்கள் ஆச்சாரியர் அவர்-நிச்சயம் தவறு செய்யமாட்டார். இப்படி நீங்கள் மறைத்துக் கொண்டே செல்கின்றீர்கள்.

வெகுவிரைவிலேயே, என்னை எதிர்க்கின்ற மக்களின் போக்கில் நீங்கள் என்னைப் பற்றி மிகவும் உறுதியாகத் தீர்மானத்திற்கு வருகிறீர்கள்.

அவர்கள் என்னை எதிர்த்துப் பேசுகிறார்கள். நீங்கள் எனக்காகப் பேசுகிறீர்கள்.

ஒருவகையில், அவர்கள் எனக்கு உதவுகிறார்கள்.

இதுதான் என் ஆலோசனை. நீங்கள் எதற்காகவும் கவலை கொள்ள வேண்டாம். உலகம் பரந்து விரிந்தது. ஒவ்வொருவரும் தாங்கள் தேர்ந்தெடுக்கும் உரிமை உள்ளவர்.

'மூன்' என்பவருடன் இருக்கும்போது ஒருவருக்கு ஏதோ ஒன்று கிடைப்பதாக உணர்கிறார் என்றால்-மூன் தவறாக இருக்கலாம்-எனக்குத் தெரிந்தவரை அவர் தவறானவர் என்று அறிவேன்-ஆனால் இருந்தாலும்கூட, யாராவது ஒருவர் அவரைப் பின்பற்றினால், அவரை நான் திசை திருப்ப மாட்டேன்.

இதுதான் என் மனப்பான்மை-ஆம் அவர் தவறானவர் என்பது தான்-அவர் தவறானவராக இருந்தால்கூட, யாராவது ஒருவர் அவரால் நன்மையடையக் கூடும்.

வாழ்க்கை மிகவும் மர்மமானது. உங்கள் தவறுகளால் கூட நீங்கள் பாடம் கற்றுக் கொள்கிறீர்கள்.

பிறருக்குக் கொடுக்க ஒன்றுமில்லாத முக்தானந்தா போன்ற பலரை நான் அறிவேன்.

முக்தானந்தா போன்றவர்கள்கூடக் 'குருவாக' ஆக முடியும் என்பது ஓர் அதிசயம். ஆனாலும், இருந்த போதிலும், யாராவது ஒருவர் முக்தானந்தாவைப் பின்பற்றி னால், அவரை நான் தடுக்கமாட்டேன். மேலும் மேலும் தொடர்ந்து செல்லுங்கள் என்று நான் சொல்லுவேன். ஏனென்றால் அது தான் கண்டுபிடிப்பதற்கும், அடையா ளம் காண்பதற்கும் இருக்கும் ஒரே வழியாகும்.

"திறந்த கண்களோடு மேலும் மேலும் செல்லுங்கள். இப்படித்தான் உங்கள் வாழ்க்கை வளர்வதாக இருக்கக்

கூடும்'' என்று நான் சொல்வேன். அதில் ஒன்றும் தவறில்லை. ஏன் அவ்வளவு அச்சம்!

அறிவாளிகளிடமிருந்து ஒருவர் எந்த அளவுக்குக் கற்க முடியுமோ அந்த அளவு முட்டாள்களிடமிருந்தும் கற்கமுடியும். அதேபோல் உண்மையான குருமார்களிடம் எந்த அளவுக்கு ஒருவர் கற்கிறாரோ அதே அளவு போலி குருமார்களிடமும் கற்கலாம்.

அவர்கள் ஓர் அதிசயத்தின் பல பாகங்கள். உண்மையில், உங்கள் தகுதிக்கேற்ப நீங்கள் பெறுகிறீர்கள். இப்போது சிலர் முக்தானந்தாவைப் பெறும் தகுதி உள்ளவர்கள். என்ன செய்வது? அவர்களது வாழ்க்கையின் மூலம் அவர்கள் முக்தானந்தாவைச் சம்பாதித்து இருக்கிறார்கள். கர்மாக்களின் பலவாழ்க்கைகள், அவை முக்தானந்தவைச் சம்பாதித்துள்ளன. இப்போது அவர்களைத் தடுக்க நான் தான் யார்? நீங்கள் தான் யார்? ஏன்? அவர்கள் அதற்குத் தகுந்தவர்களே; அது அவர்களது வளர்ச்சி; அவர்கள் அதைக் கடந்து வரத்தான் வேண்டும்.

ஒருநாள், முல்லா நசிருதீன் என்னிடம் வந்தார்; அவர் மிக அதிகமான கவலையுடன் இருந்தார். "நானே ஒரு குருவாக ஆகவேண்டும் என்று விரும்புகிறேன்" என்று என்னிடம் சொன்னார்.

நான் சதிக்கு ஆளானேன். 'நல்ல வாய்ப்புகள் உள்ளன. ஏன் இல்லை, நீங்கள் முயலுங்களேன்' என்று நான் கூறினேன்.

'ஆம், அதனால் தான் நான் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். கணேஷ் புரியின் முக்தானந்தா குருவாக ஆக முடியுமானால் நான் ஏன் கூடாது? ஓஷோ, ஒரே ஒரு வேண்டுகோள். என் முதல் சீடரை நீங்கள் எனக்கு வழங்குங்கள்" என்று அவர் கேட்டார்.

'ஆம். அதனால் தான் நான் சிந்திக்கிறேன், கணேஷ் புரியின் முக்தானந்தா குருவாக முடியுமானால், நான் ஏன் ஆகமுடியாது!' என்று கூறிய அவர் என்ன சொன்னார்? ஓஷோ, ஒரு வேண்டுகோள். என் முதல் சீடரை நீங்கள் எனக்கு வழங்குங்கள்' என்று.

தாழ்வு மனப்பான்மையில் தவிக்கின்ற ஒருவர் அருகில் உட்கார்ந்திருந்தார். பெரிய பெரிய உளவியலாளர்களைப் பார்த்துள்ளார். பிராய்டியலாளர்கள், ஜங்கியலாளர்கள், ஆட்லேரியன்கள்-இவர்கள் அனைவரையும் தோற்கடித்து விட்டார், மேலும் மேலும் தாழ்வுமனப்பான்மை அவரைத் தாக்குகிறது. உண்மையில் அவர் அதில் திறமை வாய்ந்தவர் ஆகிவிட்டார்.

எந்த அளவுக்கு அவர் உளவியல் பகுப்புச் செய்யப் பட்டாரோ, அந்த அளவுக்கு அவர் அதில் நிபுணத்துவம் பெறுகிறார். உண்மையில் அவர் அதை ஆனந்தமாக அனுபவிக்கிறார்.

"நீங்கள் இந்த மனிதரை ஏற்றுக் கொள்ளுங்கள். முயலுங் கள். இவர் தாழ்வுமனப்பான்மையில் வருந்துகிறார்" என்று அவரை முல்லாவிடம் அனுப்பி வைத்தேன்.

நசிருதீன் அவரை அழைத்துச் சென்றார். அவருடன் அமர்ந்தார். அவர் கண்களுக்குள் உற்றுநோக்கினார். சிறிது தியானம் செய்தார். கண்களை மூடிக் கொண்டார். "நான் உங்களுக்கு ஒரு நல்ல செய்தி சொல்லப் போகிறேன்; உங்களுக்குத் தாழ்வு மனப்பான்மைச் சிக்கல் எதுவும் இல்லை. நீங்கள் உண்மையிலேயே தாழ்ந்தவர்" என்று இறுதியாகச் சொன்னார்.

உண்மையிலேயே தாழ்ந்தவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் முக்தானங்களுக்கும், 'மூன்களுக்கும் அவர்கள்

போன்ற மக்களுக்கும் தகுந்தவர்களே. முட்டாள் மக்கள் கூட உள்ளார்கள். என்ன செய்வது? முட்டாள் குருக்களும் தேவைப்படுகிறார்கள். முட்டாள் மக்கள் மறையும் வரை முட்டாள் குருமார்களும் மறைய முடியாது. அது ஒரு நுட்பமான பொருளாதாரச் சட்டம். உங்கள் தேவை பூர்த்தி செய்யப்பட வேண்டும். உங்களுக்குத் தேவையான பொருள்களை எங்கிருந்தோ யாரோ ஒருவர் வழங்கியாக வேண்டும்.

மூன் அல்லது சுரண்டுகின்ற மக்களைப் பற்றித் தான் மக்கள் சிந்திக்கிறார்கள். இல்லை. நீங்கள் சுரண்டப் படுவதை விரும்புகிறீர்கள். நீங்கள் சுரண்டப்படாதவரை ஓய்வு எடுக்கமாட்டீர்கள். பின்பற்றுவோர் அனைவரும் அப்பாவிகள் என்று மக்கள் நினைக்கிறார்கள். இது முட்டாள்தனம். நீங்கள் ஓர் அப்பாவி மனிதனைச் சுரண்ட முடியாது. அவர்கள் தந்திரக்காரர்கள். சீடர்கள் தந்திரக்காரர்கள். அப்புறம் அவர்கள் அதிகத் தந்திரக்காரர் களால், அதாவது சிறந்த தந்திரக்காரர்களால் சுரண்டப் படுகிறார்கள்.

ஓர் அப்பாவி மனிதர். ஒரு தந்திரக்காரனால் சுரண்டப் பட முடியாது. ஏனெனில் அப்பாவித்தனம் என்பது மிகவும் தூய்மையானது. அந்தத் தூய்மையாளனால், இந்த முழுவிஷயம் முட்டாள்தனம் என்று உடனே கண்டு கொள்வார். எனவே ஓர் அப்பாவி நபரை உங்களால் சுரண்டமுடியாது. நீங்கள் ஒரு தந்திரக்காரனை மட்டுமே சுரண்ட முடியும்.

நான் ஒரு சிறு நகரத்தில் தங்கியிருந்தேன். முல்லா நசிருதீன் யாரோ ஒருவரை ஏமாற்றி விட்டார். தந்திரத் தினால் ரூபாய்களை இரட்டிப்பாக்க முடியும் என்று அவர் கூறினார். அந்தத் தந்திரத்தைச் செய்து காட்டினார்.

அவர் நூறுரூபாய் நோட்டு ஒன்றை இரட்டிப்பாக்கிக் காட்டினார்; அது ஒரு தந்திரம்தான். ஆனால் அந்த மனிதர் அதனால் மிகவும் கவரப்பட்டார். அந்த மனிதர் தன்னிடமிருந்த எல்லாவற்றையும் கொண்டுவந்து அவரிடம் கொடுத்தார். அவர் ஒன்றும் மிகப்பெரிய பணக்காரரர் இல்லை. என்னென்ன அவரிடம் இருந்ததோ- ஆபரணங்கள், தங்கம், விலையுயர்ந்த வைரக் கற்கள், பணம்-அனைத்தையும் நசிருதீன் முன்பு கொண்டு வந்து கொடுத்தார்.

அவர் ஆட்டத்தை ஆடினார்; எல்லாவற்றோடும் அவர் காணாமற்போனார்.

இப்போது அந்த மனிதர் என்னிடம் வந்தார். “ஏன் நீங்கள் இப்படிப்பட்ட தந்திரக்காரர்களையெல்லாம் உங்களுடன் இருக்க அனுமதிக்கிறீர்கள்" என்று கேட்டார்.

“நீங்கள் தான் தந்திரக்காரர். அதனால் தான் அவரால் உங்களைச் சுரண்ட முடிந்திருக்கிறது'' என்று நான் சொன்னேன். எந்த உழைப்புமின்றி, உங்கள் பணம் இரட்டிப்பாக்கப்பட வேண்டும் என்று நீங்கள் விரும்பினீர் கள்-அதனால்தான் அவரால் உங்களைச் சுரண்ட முடிகிறது. நீங்கள் ஓர் அப்பாவியாக இருந்தால் நீங்கள் எப்படிச் சுரண்டப்பட முடியும்? உங்கள் தர்க்கமும் அவரது தர்க்கமும் வித்தியாசமானதல்ல.

அவரிடமிருந்து நீங்கள் என்ன எதிர்பார்த்தீர்கள்? அவர் உங்கள் பேராசையைப் பயன்படுத்திச் சுரண்டினார். நீங்கள் சுரண்டப்படுவதற்குத் தயாராக இருந்த காரணத் தால், அவர் சுரண்டினார். முழுமுட்டாள்தனத்தையும் உங்களால் பார்க்க முடியவில்லையா?'' இது என் அதிகாரத்தில் இருந்தால், உங்கள் இருவரையுமே நான் சிறைக்கு அனுப்பி வைப்பேன். ஏனென்றால் நீங்கள் ஒரு

பங்கேற்றவர்கள். அவர் மட்டுமே பொறுப்பானவர் அல்லர். உண்மையில் அவரது பொறுப்பு உங்களுக்கு அடுத்தபடியானதுதான். நீங்கள் தயாராக இல்லையென் றால், அவர் எப்படி உங்களைச் சுரண்ட முடியும்? தந்திரக் காரர்களால் சுரண்டப்பட்டவர்களை, உண்மையானவர் கள், அப்பாவிகள் என்று அழைக்காதீர்கள். இல்லை. அவர்கள் தங்களுக்குள் தந்திரம் உடையவர்களாகத் தான் இருக்க வேண்டும். அவர்கள் நிர்வாணம் அடைவதற்கான குறுக்கு வழிகளை எதிர்பார்த்திருக்க வேண்டும். அப்பொழுது எவரும் உங்களை ஏமாற்றலாம்.

யாரோ ஒருவர் வருகிறார் "இது போதும். ஒரே ஒரு மந்திரம். காலையில் இருபது நிமிடங்கள் திரும்பத்திரும்பச் சொல்ல வேண்டும். மாலையில் இருபது நிமிடங்கள் திரும்பத் திரும்பச் சொல்ல வேண்டும். அவ்வளவுதான். நீங்கள் முழு ஆனந்தத்தை அடைவீர்கள்' என்று கூறுகிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள்.

அவர் மிக மலிவான ஒரு விஷயத்தைச் சொல்கிறார்- நீங்கள் அதைச் சூழ்நிலை தியானம் அல்லது வேறு ஏதோ ஒன்று- நீங்கள் விரும்புமாறு அழைக்கிறீர்கள். அப்படியென்றால், அதற்கு நூறு டாலர் கட்டணம் வசூலித்தால் அதில் என்ன தவறு இருக்கிறது. நீங்கள் 'இந்த மனிதர் ஏமாற்றுகிறார்' என்று சொல்கிறீர்கள்! அப்பாவித்தனத்தை அவர் சுரண்டவில்லை. அப்பாவித் தனம் சுரண்டப்பட முடியாது. ஓர் அப்பாவி மனிதன் நன்றாகப் புரிந்து கொள்வான். "எப்படி அது முடியும்? காலையும் மாலையும் ராமராமராம என்று ஜெபிப்ப தனால் மட்டுமே எப்படி மனிதன் ஞானம் பெற்றவனாக ஆகமுடியும்?" என்று அவன் புரிந்து கொள்வான்.

காரண அறிவோடு இருங்கள். நீங்கள் காரண அறி வின்றி இருந்து அவர் நூறு டாலர் கட்டணம் கேட்டால்,

உங்கள் தருக்கத்திற்கு அவரது தருக்கம் ஒத்துப்போகிறது. நீங்கள் நூறு டாலர் கட்டணம் தருகிறீர்கள், அப்புறம் நீங்கள் சரண்டப்படுவதாக நினைக்கிறீர்கள்./ நீங்கள் சரண்டப்படத் தயாராய் இருந்தால் ஒழிய ஒருவராலும் உங்களைச் சரண்ட முடியாது.//

"நீங்கள் ஏமாற்றப்படுவதற்குத் தயாராக இருந்தால் ஒழிய ஒருவராலும் உங்களை ஏமாற்ற முடியாது. உங்களுடையதுதான் அந்தப் பொறுப்புணர்ச்சி, உஷாராய் இருங்கள். காரணகாரிய அறிவோடு இருங்கள். முட்டாளாக இருக்காதீர்கள். யாரோ ஒருவர் உங்கள் குருவாக வரத்தான் செய்வார். அப்புறம் நீங்கள் சரண்டப்பட்டு விட்டதாக அதைப் பற்றிக் கத்திக் கொண்டும் அலறிக் கொண்டும், அதைப்பற்றி அதிகமாக அலட்டிக் கொண்டும் இருக்காதீர்கள்.

நீங்கள் மிகவும் மலிவாக 'நிர்வாணம்' (மோட்சம்) அடைய நினைத்தீர்கள்.

எப்போதுமே நினைவுகொள்ளுங்கள். நீங்கள் அடிமையாக ஆக விரும்பியதனால், நீங்கள் கொத்தடிமைத்தனத்தில் விழுந்தீர்கள். நீங்கள் சுதந்திரமாகத் தங்கியிருக்க முடியாது. அதனால் ஒருவகையான அடிமைத்தனத்தில் விழுந்தீர்கள். ஆனால் நீங்கள் தான்–உங்களைத் தவிர வேறு யாராலும் முடியாது–உங்களைச் சிறைபிடித்துக் கொள்கிறீர்கள். உங்களுக்குச் சுதந்திரம் என்றால் பயம், உங்களுக்கு வளர்வது என்றால் பயம், உங்களுக்கு/வாழ்க்கையை அது இருப்பதைப் போலவே சந்திக்கப் பயம்./

ஆகவே ஏதோ ஓரிடத்தில், சில சமயங்களில் கொரியாவிலிருந்து– மூன் கொரியாவிலிருந்து வருகிறார்; சில சமயங்களில் இந்தியாவிலிருந்துகூட. முக்தானந்தா இந்தியாவிலிருந்து வருகிறார்–சில சமயங்களில் ஜப்பானிலிருந்து

கூட... ஆம் உண்மையில் இந்த மக்கள் அனைவருமே கிழக்கிலிருந்து தான் வரவேண்டியிருக்கிறது. ஏனென்றால் கிழக்கிற்குச் சமயரீதியாகவும் ஆன்மிகமாகவும் இருக்கின்ற பெருமை எப்போதுமே உண்டல்லவா?

அதேபோலத்தான், ஒரு பொறியாளர் ஜெர்மனியிலிருந்து வருகிறார் என்றால், அவருக்கு ஏகப்பட்ட கௌரவம் இந்தியாவில் இருக்கும். ஒரு டாக்டர் இங்கிலாந்திலிருந்து வருகிறார் என்றால் இந்தியாவில் அலாதியான கௌரவம் இருக்கிறது. இந்திய டாக்டர், இங்கிலீஷ் டாக்டரைப் போன்றே படித்திருக்கக் கூடும்; ஆனாலும் இந்தியாவில் இங்கிலீஷ் டாக்டருக்குக் கௌரவம் அதிகம் ஏன்? ஏனென்றால் அவர் விஞ்ஞான உலகத்திலிருந்து வருகிறார். அவருக்கு ஓர் ஒளி வட்டம் உள்ளது. இது எது போன்றது தெரியுமா?

நீங்கள் இந்தியாவில் தயாரிக்கப்பட்ட ஹெச்.எம்.டி. கடிகாரத்தைக் கட்டிக் கொண்டுள்ளீர்கள்; இந்தியாவில் செய்யப்பட்ட சாதாரண கடிகாரம்தான் அது. உங்களிடம் சுவிஸ் தயாரிப்புக் கடிகாரம் ஒன்று உள்ளது. அதற்கு 'ஒளி வட்டம்' உள்ளது. இறக்குமதி செய்யப்பட்டது.

இதே விஷயம், சமயம் சார்ந்தவர் என்ற முறையில் நிகழ்கிறது. அமெரிக்காவில், உங்களுக்கு இறக்குமதி குருமார்கள் தேவைப் படுகிறார்கள். இந்தியாவிடம் ஏற்றுமதி. மொத்தமாக நாம் அவர்களை ஏற்றுமதி செய்கிறோம். ஏனென்றால் அவர்கள் அனைவரும் ஒளி வட்டம் பெற்றவர்கள்.

இங்கே அவர்களுக்குச் சீடர்கள் கிடைப்பது கடினம். ஆனால் அவர்கள் கிழக்கிலிருந்து வருகிறார்கள். அவர்கள் அந்த ஜகஜ்ஜோதியான கிழக்கிலிருந்து, புத்தர்களின்

மஹாவீரர்களின் கிருஷ்ணர்களின் பூமியிலிருந்து வருகிறார் கள்-அதாவது அவர்கள் ஒளிவட்டம் தாங்கியுள்ளனர்.

எந்தத் திறமையும் இல்லாத மிகச் சாதாரண மக்கள், எந்த மேதையும் இல்லாதவர்கள், எந்த நுண்ணறிவும் அற்றவர்கள். அங்கே சும்மா உட்கார முடியும். அது நிகழத் தொடங்கிவிடும். அப்புறம் நீங்கள் 'அவர்கள் ஏதோ செய்து கொண்டிருக்கிறார்கள், என்று எண்ணுகிறீர்கள்.

ஏதாவது உங்களுக்கு நடந்தாக வேண்டும். நீங்கள் ஏங்குகின்றீர்கள். மேற்குத் திசை மிகவும் சலிப்பால் நிறைந் துள்ளது. ஏதோ ஒன்று கட்டாயம் நடந்தாக வேண்டும்.

இப்போது, எப்போதும் தேவையாக உணர்ந்த பொருள் கள்- ஆசைப்பட்ட பொருள்களை நீங்கள் அடையலாம்- ஒவ்வொன்றையும் அடையலாம். உலகாயதப் பொருள்கள் அனைத்தும் உள்ளன.

முதன்முதலாக மேற்கு நாடுகளில் ஆன்மிகம் என்பது தேவைப்படும் ஒன்றாக விழிப்புணர்ச்சி ஏற்பட்டுள்ளது. ஆன்மிகத் தொடர்பு ஏதோ ஒன்று தேவைப்படுகிறது என்று அவர்களால் உணரப்பட்டுள்ளது.

எப்போதும் இது நடக்கிறது. ஒரு சமூகம் எப்பொழு தெல்லாம் செல்வமும் வளமும் பெற்றதாக ஆகிறதோ, அப்பொழுதெல்லாம்தான் சமயத்தின் தேவை உணரப் படுகிறது.

ஓர் ஏழை நாடு சமயவுணர்வுள்ளதாக ஆக முடியாது. வேண்டுமானால் அப்படி நடிக்கலாம். ஒருபோதும் உண்மையாக அப்படி இருந்ததில்லை. இருக்க முடியாது.

ஓர் ஏழை மனிதன் சமயவுணர்வுள்ளவனாக ஆக முடியாது என்று நான் சொல்லவில்லை. தனிநபர்கள் விதி விலக்குகளாக இருக்க முடியும்- ஒரு கபீர், ஒரு நாயக்-

ஆனால் ஏழைச் சமூகங்கள் அப்படி இருக்க முடியவே முடியாது.

அவர்களது அடிப்படைத் தேவைகள் பூர்த்தி செய்யப்படவில்லை/ சமயம் என்பது மிக உயர்ந்த தேவை./

நீங்கள் பசியோடிருப்பது போன்றது அது; அந்த நேரத்தில் அழகிய இன்னிசையைக் கேட்க எவன்தான் நினைப்பான்.

/ உங்களுக்குப் பசிக்கும்போது உங்கள் தேவை உணவு. உங்களுக்கு இசை தேவையில்லை. பீத்தோவனால் உங்களை எதுவும் செய்ய முடியாது; மொசார்ட் உங்களுக்கு அர்த்தம் இல்லாதது. உங்களுக்குப் பசியிருக்கும் போது பட்டினி கிடக்கும் போது, ஷேக்ஸ்பியரால், சுதேயாஸ் காளிதாசரால் ஆவதென்ன? இதற்கு எந்தப் பயனுமில்லை./

/உங்கள் அடிப்படைத் தேவைகள் பூர்த்தி செய்யப்படும் போது, உங்கள் உடல் ஆரோக்கியமாக உள்ளது. உங் களுக்கு வாழ்வதற்கு ஏற்ற சுகாதாரமான உலகம் உள்ளது. ஒரு நல்ல வீடு, நல்ல துணிமணிகள், நல்ல சத்து நிறைந்த உணவு இவைகளும் உள்ளன-இப்போது திடீரென்று உங்களுக்கு அழகுணர்வுடைய உலகம் தேவைப்படுகிறது. இசை, கலை, கவிதை... இவை போன்றவை தேவைப் படுகின்றன/.

பிகாசோவும் வேன்கோக்கும் உங்களுக்குப் பிரியமான வர்கள் ஆகிறார்கள். பேப்லோ நெருடாவை உங்களுக்கு மிகவும் பிடித்துப் போகிறது-இப்போதுஆயிரம் கதவுகள் திறக்கின்றன.

உங்கள் அழகுணர்ச்சித் தேவைகள் கூடப் பூர்த்தி செய்யப்படும் போது, பீத்தோவனும் மொசார்ட்டும்

சலிப்பூட்டும்போது, திடீரென்று இன்னொரு கதவு திறக்கிறது. புத்தர், கிருஷ்ணர், கிறிஸ்து ஆகியோரின் கதவு அது. அதுதான் மிகத் தலைசிறந்த தேவை.

ஒவ்வொரு கீழான தேவையும் பூர்த்தி செய்யப்பட்ட பின் ஆன்மிகம் எழுகிறது.

மேற்கில் கீழான தேவைகள் பூர்த்தி செய்யப்பட்டு விட்டன. இப்போது திடீரென்று ஓர் ஆசை மேற்கைப் பிடித்துக் கொண்டிருக்கிறது. முழுமைக்கான- நிறைவுக் கான-ஆசை மேற்கு முழுவதும் பிடித்து உலுக்குகிறது. அதுவும் குறிப்பாகப் புதிய தலைமுறையிடம் இந்த ஆசை கொழுந்துவிட்டு எரிகிறது. ஒரு சிலிர்ப்பு, அறியாததை அறிந்து கொள்ளும் ஒருவகை தாகம்-அவர்களிடம் உள்ளது; ஆம் இது ஒரு மிகவும் சிக்கலான தருணம்.

இந்தத் தருணத்தில், இந்தத் தேவையைப் பயன்படுத்திக் காசாக்கிக் கொள்ளப் பல மக்கள் இருப்பார்கள். ஏனென் றால், மேற்கு ஒரு குழந்தையைப் போன்றது- ஆம். ஆன்மிக உலகத்தில் ஒரு குழந்தை.

அவர்கள் ஆன்மிகம் பற்றிய அரிச்சுவடி கூட அறியாத வர். அவர்களுக்குத் தேவை உள்ளது. அது மட்டுமே அவர்கள் அறிவார்கள். 'நான் உங்கள் தேவையைப் பூர்த்தி செய்வேன்' என்று எவர்முன் வந்து சொன்னாலும், அறிவாளிகளைப் போலப் பாசாங்கு செய்வதில் எவர் குறைந்தபட்சம் திறமைசாலியோ, அவரை நீங்கள் பின்பற்றுவீர்கள். ஆனால் இது இயற்கையானது.

விரைவாகவோ தாமதமாகவோ, மூடர்களும், முக்தானந் தாக்களும் முடிவுக்கு வருவார்கள். வெகுவிரைவில் அவர் களிடம் சரக்கு இல்லை என்பது உங்களுக்குத் தெரியவரும். எவ்வளவு நாள் தான் இப்படியே போய்க் கொண்டிருக் கும்? அப்பொழுது தான் உண்மையான ஆச்சாரியர்

களிடம் உங்களுக்கு ஆர்வம் வரும். கிருஷ்ணமூர்த்தி அல்லது குர்ட்ஜிப் அல்லது ராமன் உங்கள் நினைவுக்கு வருவார்கள். அப்புறம் அவர்களிடத்தில் ஆர்வம் வரத் தொடங்கும்.

ஆனால் இது இயற்கையானது. ஆரம்பத்தில் இது இப்படித்தான் இருக்கும். உங்களுக்கு உண்மையான ரோஜாக்கள் பற்றித் தெரியாது. எனவே, காகித ரோஜாக் களையும், பிளாஸ்டிக் ரோஜாக்களையும் நீங்கள் வாங்கி விடுகிறீர்கள்.

ஏனென்றால் உண்மை ரோஜாக்கள் பற்றி உங்களுக்குத் தெரியாததால், உங்களுக்கு ஒப்பிட்டுப் பார்க்க எதுவுமே இல்லாததால், கர்கித, பிளாஸ்டிக் ரோஜாக்களைத் தானே வாங்கியாக வேண்டும். ஆனால், எவ்வளவு நாள் தான் அது செல்லுபடியாகும்!

ஆகவேதான், மேற்கே செல்லக் கூடாது என்று நான் தீர்மானம் செய்தேன். இப்போதிலிருந்து அது ஒரு சூப்பர் மார்க்கெட். தங்களின் சோப்புப் பெட்டிகளின் மீது நின்று கொண்டும் கத்திக்கொண்டும், விற்றுக் கொண்டும், விளம் பரம் செய்து கொண்டும் உள்ளார்கள்–அது பயனற்றது என்று அலறுகிறார்கள்.

நான் இங்கேயே காத்திருக்கத் தீர்மானித்தேன். மூன், முக்தானந்தா இவர், அவர் என்று பல பேர்களிடம் தங்களுக்குக் கொடுப்பதற்கு எதுவும் இல்லை என்று தெரிந்து கொண்டு கிழக்கு நோக்கித் தேடி வருவார்கள். அவர்களுக்காக இங்கேயே காத்திருக்க நான் தீர்மானித் தேன். அதே நேரத்தில் அங்குச் செல்லக்கூடாது என்றும் தீர்மானித்தேன்.

ஏனென்றால், தேடுநர் ஒருவர் வரும்போது, அதுவும் இவ்வளவு தூரம் பயணம் செய்து வரும்போது, அவரது

தேடுதல் ஆசை மிகவும் உண்மையானது. அவர் ஆபத்துகளைத் தாங்கத் தயாராயிருக்கிறார். தன் முழு வாழ்க்கையையே அவர் பணயம் வைக்கின்றார்.

அவரும், ஞான மார்க்கத்தின் வழியாக அதனைக் கடந்து வந்தவராக இருந்தால், இன்னும் சிறந்தது.

ஆகவே அவர் அறிகிறார்.

எப்போதாவது யாராவது என்னிடம் நேரடியாக வந்து விடுவார்களானால் அவரிடம் எனக்கு அதிக ஆர்வம் இல்லை. ஏனென்றால் சரியான வாசல் மூலமாகக் கடந்து செல்வது சிறந்தது என்று நான் அறிவேன். முக்தானந்தா, முதலிய வாசல்களைக் கடந்து என்னிடம் வரும்போது உடனடியான தொடர்பு விரைவான தொடர்பு கிடைக்கிறது.

ஆகவே ஒருவகையில் அவர்கள் உதவுகிறார்கள். மேற்கில் உள்ள எல்லா வகையான இயக்கங்களிலும் இருந்தவர்கள் பலர் இங்கே இருக்கிறார்கள்.

இது நல்லது. நல்ல பயிற்சி. உங்களுக்கு ஏதோ ஒரு பின்னணி உள்ளது. எடை போடுவதற்கு ஒரு குறிப்பிட்ட அனுபவம் உள்ளது.

அதனால் முதல் விஷயமாக... பிறர் உண்மையான தேடுநர்களாக இருப்பதைப் பார்த்துக் குதூகலம் கொள்ளச் சொன்னீர்கள். தொடங்குவதைக் காண்கையில் அது ஒரு பரவச அனுபவமாகத் தான் இருக்கின்றது. ஆனால் உண்மையிலேயே அழகான, நேர்மையான மக்கள், தங்கள் சர்வத்தையும் தியாகம் செய்து அழிவுச்சக்தியையும் பொய்ச்சக்தியையும், போலி தீர்க்கதரிசிகளையும், அதாவது பொதுவாகத் தங்கள் சொந்தப் பொருளாதார அரசியல் லாபங்களுக்காகப் பிறரைப் பயன்படுத்துகிறவர்களையும்-

பின்பற்றும்போது எப்படிக் குதூகலம் கொள்ள முடியும்? என்று கேட்கிறீர்கள்.

அவர்கள் போகட்டும். அவர்கள் அங்கே போக நீங்கள் உதவுங்கள். உண்மையாக இறுதிவரை போகச் சொல்லுங்கள். அவர்களது தேடுதல்-அது உண்மையானால், அவர்கள் வெளியே வருவார்கள். ஆனால் அப்படியே வரும்போது அதிகப் பக்குவம் பெற்றவர்களாக-குறைந்த குழந்தைத் தனம் உள்ளவர்களாக-அவர்கள் இருப்பார்கள். அவர்கள் அதிக அனுபவமுள்ளவர்களாகத்தான் வெளியே வருவார்கள். அதைப்பற்றிக் கவலைப்பட எதுவுமில்லை. உண்மையிலேயே எங்காவது போகும் ஒருவரை ஒருபோதும் தடுக்காதீர்கள். அவர் போகட்டும். கற்க ஒரே ஒருவழிதான் உள்ளது. அது அனுபவத்தின் மூலம்தான்! வேறு வழி எதுவும் இல்லை.

எங்காவது அவர் காணாமல் போய் விடுவார் என்று நீங்கள் நினைத்தால், அவர் அதற்குத் தகுந்தவர்தான். இப்போது அவருக்குத் தேவைப்படுவது அதுதான்.

உங்களுக்குத் தகுதியில்லாத எதுவும் உங்களுக்கு நிகழ்ந்து விடுவதில்லை, எது நிகழ்கிறதோ அதற்கு நீங்கள் தகுதியானவர் தான் பிறரால் சுரண்டப்படும் தேவையில் நீங்கள் இல்லாவிட்டால், ஒருவரும் உங்களைச் சுரண்டி விட முடியாது.

சுதந்திரத்திற்கு அஞ்சுபவராக இருந்து, உங்களை நீங்கள் அடிமை-ஆக்கிக் கொள்ளத் தயாராய் இல்லாத வரைக்கும் உங்களை யாராலும் அடிமையாக ஆக்கவே முடியாது.

தன்னுணர்வு உள்ள மனத்திலோ, தன்னுணர்வு அற்ற மனத்திலோ உங்களுக்கு விருப்பமாக இல்லாத எதுவும், நீங்கள் ஏங்கிக் கொண்டிருக்காத எதுவும் உங்களுக்கு நிகழ்வதேயில்லை.

ஆகவே இது உங்கள் வாழ்க்கை, உங்கள் சுதந்திரம். ஓர் இரவில் இது நிகழ்ந்தது. தொலைபேசி மணி காலை 4 மணிக்கு ஒலித்தது. 'என்ன வேண்டும் உங்களுக்கு" என்று நான் கத்தினேன். 'எதுவுமில்லை' என்பது எனக்குக் கிடைத்த பதில்.

'இரவின் நடுவில் என்னை ஏன் அழைத்தீர்கள்' -என் வினா.

"ஏனென்றால் கட்டணம் மிக மலிவு"-கிடைத்த பதில். அப்போதிலிருந்து என் அறையில் தொலைபேசி வைத்துக் கொள்வதை நிறுத்திவிட்டேன். ஏனென்றால் முட்டாள் பேர்வழிகள் உள்ளார்கள்; கட்டணம் மலிவாக இருப்ப தால்-அந்த ஒரே காரணத்திற்காக-உங்களைத் தொலை பேசி மூலம் அழைப்பார்கள்.

'மூன்' என்பவரோடு நீங்கள் சென்றால் கட்டணம் மிகவும் மலிவு. முக்தானந்தா கூடச் செல்வதற்கும் இதுவே காரணம். நான் என்ன சொல்ல வருகிறேன். தெரிகிற தல்லவா? அவர்கள் உங்களை மாறச் சொல்லவில்லை. ஆனாலும் உங்களுக்கு அவர்கள் சிலவற்றை வாக்குறுதி களாக அளிக்கிறார்கள். கட்டணம் மிகவும் மலிவு; உங்கள் பங்கிற்கு நீங்கள் எந்தவகையிலும் மாறாமலே, கடவுள் உங்களுக்குச் சாத்தியம் என்று அவர்கள் கூறுகிறார்கள். 'சும்மா இந்த மந்திரத்தை இருபது நிமிடங்களுக்குச் சொல்லுங்கள் போதும்' என்கிறார்கள்.

என்னிடம் நீங்கள் வரும்போது இது இருபது நிமிட விஷயம் இல்லை. உங்கள் முழு வாழ்க்கையும் விஷயம் மாற்றிக் கொண்டாக வேண்டும். நான் புரட்சிகரமான- ஒட்டுமொத்தமான- மாற்றத்தைக் கேட்கிறேன்.. எதிர்பார்க் கிறேன்.

உங்கள் பழைய மதிப்புகளை நீங்கள் இழக்க வேண்டும். உங்கள் பழைய ஒழுக்கம், பழைய கோட்பாடுகள், பழைய உலகப் பார்வை அனைத்தையுமே விட்டுவிட வேண்டும்.

உங்கள் இறந்தகாலத்தோடு, ஏறத்தாழ, நீங்களும் சேர்ந்து இறந்துவிட வேண்டும்.

அப்பொழுது மட்டும்தான் உங்கள் எதிர்காலம் முளைவிடத் தொடங்குகிறது.

நான் உங்களைச் சிலுவையில் அறைந்து கொள்ள வேண்டும் என்று சொல்கிறேன். அதனால் நீங்கள் உயிர்த்தெழ முடியும்.

நான் இறப்பு போன்றவன்-ஆம் துறவு என்பதன் பொருள் அதுதான்-நீங்கள் என்னில் இறக்கிறீர்கள்; மொத்தமாக, முழுமையாகப் புதிய நபர் ஒருவர் பிறக்கிறார்.

உங்கள் வாழ்க்கை எளிதாகி விடும் என்று நான் கூற வில்லை. இது மிகவும் கடினமாகலாம். நான் உங்களுக்கு ரோஜாத் தோட்டங்களை வாக்குறுதியளிக்கவில்லை.

ஒன்றே ஒன்று மட்டும் என்னால் வாக்குறுதி அளிக்க முடியும். "ஆபத்துகளைச் சந்திக்கத் தயாராக இருந்தால்-ஏராளமான மிகுதியான கஷ்டங்களைச் சந்திக்க தயாராக இருந்தால்-நீங்கள் வளரத் தொடங்குவீர்கள். என்னால் வளர்ச்சியை மட்டுமே வாக்குறுதியாக அளிக்க முடியும். வளர்ச்சி எப்போதுமே கடினமானது, வேதனை மிக்கது; உங்களுக்குள்ள பல விஷயங்களை நீங்கள் அழிக்க வேண்டும், இடித்து நொறுக்க வேண்டும், இருத்தலின் புதிய வழிகளைக் கற்றாக வேண்டும். புதிய வாழ்க்கை முறைகளைப் பயின்றாக வேண்டும். இது மிகவும் வேதனை யானது" இது என் வாக்குறுதி.

மகரிஷிமகேஷ்யோகி சொல்வது போல், நீங்கள் பணக்காரர்கள் ஆவீர்கள் என்று கூறவில்லை.

"நீங்கள் தியானம் செய்தால் வெற்றியாளர்கள் ஆவீர் கள்; பணக்காரர்கள் ஆவீர்கள்" என்று மகரிஷி மகேஷ் யோகி சொல்கிறார். நான் இப்படிச் சொல்லவில்லை.

"என்னுடன் வந்தால், உண்மையாகவே நீங்கள் மேலும் அதிகமாகத் தோல்வியாளர் ஆவீர்கள்; என்னோடு வந்தால் நீங்கள் பணக்காரர் ஆகவே மாட்டீர்கள் என்று நான் சொல்கிறேன்."

"ஏனென்றால் நீங்கள் என்னோடு வந்தால், நீங்கள் மிகக் குறைந்த, மிகமிகக் குறைந்த ஆசையுடையவராக ஆவீர்கள். என்னோடு நீங்கள் வந்தால், மிக மிகக் குறைந்த ஆதிக்க-ஆக்கிரமிப்பு உணர்வுள்ளவராக ஆவீர்கள், மிக மிகக்குறைந்த வன்முறை உள்ளவராக ஆவீர்கள்" இதுதான் என் வாக்கு.

ஆசை என்பது வன்முறை. உலகில் வெற்றி பெற வேண்டும் என்று முயல்வதேகூட வன்முறைதான். வெளி உலகத்தைப் பொருத்தவரை. நீங்கள் ஒரு தோல்வியாள ராக– இழப்பாளராக–இருக்கக்கூடும். இதைப்பற்றி எதுவும் என்னால் சொல்ல முடியாது.

நீங்கள் ஒரு சாதாரண பிச்சைக்காரராகக் கூட ஆக வேண்டியிருக்கலாம்.

ஆனால் ஒன்று மட்டும் என்னால் சொல்ல முடியும். நீங்கள் உள்ளே வளர்ந்து கொண்டிருப்பீர்கள், உள்ளுக்குள் நீங்கள் செழுமை பெற்றிருப்பீர்கள். நீங்கள் அதிக ஆனந்த மயமாக ஆவீர்கள். நீங்கள் அதிக வெற்றிகரமானவராவீர் கள் என்று நான் கூறவில்லை. அதிக ஆனந்தமானவராக ஆவீர்கள் என்று கூறுகிறேன்.

நீங்கள் அதிக ஓய்வுள்ளராக ஆவீர்கள். நீங்கள் அதிக இளைப்பாறுதல் உள்ளவர் ஆவீர்கள். ஆனால் நீங்கள் அதிக பணம், வெற்றி இது போன்றவை பெறுவீர்கள் என்று கூறவில்லை.

என்னோடு சேர்ந்தால், நீங்கள் அதிகமாக இழக்க வேண்டியது இருக்கும். நீங்கள் மட்டும் அறியக்கூடிய விதத்தில்-வேறு எவராலும் அறிய முடியாத வகையில்-உங்களுக்கு அந்தளவு உள்ளார்ந்த லாபம் அடையமுடியும் என்று கூறுவேன். அதை நீங்கள் வெளிக்காட்ட முடியாது. நீங்கள் எவருக்குமே அதைக் காட்ட முடியாது. லாபமானது மிகவும் உள்ளார்ந்ததாகவும் மிகவும் நுட்பமானதாகவும் இருக்கும். இழப்பு என்பது பருப்பொருளாகவும், மிகவும் வெளிப்படையானதாகவும் இருக்கும்.

ஒவ்வொரு நாளும் நீங்கள் இழந்து கொணடிருப்பதை அறிவீர்கள்.

நேற்று இரவுதான். இந்தியத்துறவி ஒருவர், என்னிடம் வந்து "என் முழு ஆசையும் போய்விட்டது. எல்லா வெற்றிகளிலும் நான் அக்கறையற்றவனாக ஆகிவிட்டேன். இனிமேல் நான் போராடுவதற்காகவே எந்த உணர்வும் இல்லாதவன் ஆகிவிட்டேன். 'போனால் போகட்டும் போடா' மனப்பான்மையில் இருக்க நான் ஆழமாக விரும்புகிறேன்' என்று கூறினார். "மிகவும் நல்லது. அப்படித் தான் இருக்கும் இருக்கவேண்டும்'' என்று நான் சொன்னேன்.

ஒரு விஷயம்பற்றி அவர் தொல்லையடைந்தார். "ஆனால் ஏதோ ஒன்று நிகழ்ந்து கொண்டிருக்கிறது. இனி மேலும் நான் தியானத்தில் கூட ஆர்வம் இல்லாதவனாக மாறிவிட்டேன். நான் மகிழ்வாக உணர்கிறேன். அமைதி யாக உள்ளேன். இனிமேல் எனக்குத் தியானத்தில் ஆர்வ

மில்லை" என்றார்., ஆம், இறுதியில் ஒரு மனிதன் அடைய வேண்டிய நிலை அதுதான்-அதையும் விட்டு விடுங்கள்'.

இதுபற்றி மட்டும் கொஞ்சம் அவர் குழம்பிப்போனார். தியானத்தை விட்டு விடுவதா இல்லையா-இப்போது அவர் நிம்மதியாக இருப்பதற்குத் காரணமான அந்தத் தியானத்தை விட்டுவிடுவதா-அதேபோல் அவரது ஆசைகள் அனைத்தும் மறைந்து கொண்டிருந்தன. தியானத்தோடு ஒட்டிக் கொள்ள நினைத்தார். 'அதையும் கூட விட்டுவிடுங்கள்" என்று நான் கூறியபோது அவரது கடைசித் தடுப்புகள் உடைந்து நொறுங்கியது.

இந்த நபரை நீங்கள் பார்த்தால், என்ன நடக்கிறது என்பதைக் காண்பதற்குக் கடினமாக இருக்கும்.

இப்போதிருப்பதைக் காட்டிலும் முன்பு அந்த நபர் மிகவும் பிரகாசமாகக் காட்சியளித்திருக்கக் கூடும். ஏனென்றால் இப்போது அவர் மௌனமாய் உள்ளார். அவரது முழுஆற்றலும் அமைதியாய் உள்ளது. அவர் சிரித்துக் கொண்டிருப்பதை நீங்கள் காணமுடியாது. அதிக பட்சமாக அவர் புன்முறுவல் பூப்பார். அவ்வளவுதான். அதுவும்கூட ஒரு கடின முயற்சி செய்துதான் புன்னகைக்கவே முடியும்.

அவர் மகிழ்வில்லாமல் இருப்பதால் வந்த நிலையல்ல இது; அவர் மகிழ்வாக மட்டுமே உள்ளார். அதுதான் அவரது நிலை.

/நீங்கள் மகிழ்வின்மையால் தான் சிரிக்கிறீர்கள். இருபத்து நான்குமணி நேர மகிழ்வின்மை, நீங்கள் மகிழ்வின்மையைத் திரட்டுகிறீர்கள், அதிலிருந்து வெளியே வருவதற்கு ஏதாவது செய்தாக வேண்டும் அல்லது-நீங்கள் சிரிக்கிறீர்கள்/

/ஒரு மனிதன் உண்மையாகவே மகிழ்ச்சியாக ஆனால், சிரிப்புக்கான தேவையே மறைந்து விடுகிறது.[

வெளிப்பக்கத்தைப் பார்த்து உள்பக்கத்தில் நடந்திருக்கும் ஏதோ ஒன்றைப் பற்றித் தீர்மானத்துக்கு வருவது மிகவும் கடினமாகும்.

இதுதான் துறவறம் என்பது; உலகத்திலிருந்தே மறைந்து கொண்டிருக்கிறார்.

இந்த உருமாற்றத்திற்கு மிகச்சிலர்தான் ஆயத்தமாய் இருக்கிறார்கள். ஆயத்தமாய் இல்லாதவர்கள், அவர்கள் கூட எங்காவது போக வேண்டும் அல்லவா? எங்காவது சென்று தேட வேண்டும் அல்லவா?

அவர்களுக்கும் ஒரு குரு, ஓர் ஆச்சாரியர் தேவைப்படுகிறார். நல்லது. அதில் எந்தத் தவறும் இல்லை. உங்களுக்குத் தகுந்ததை மட்டுமே நீங்கள் பெறுகிறீர்கள் என்று நினைவு கொள்ளுங்கள். அவர்கள் யாரையாவது காண்பார்கள்.

அரசியல்வாதி ஒருவர் என்னிடம் வருவது வழக்கம். 'நீங்கள் ஏன் என்னிடம் வருகிறீர்கள்' என்று கேட்டேன். "உங்கள் ஆசிர்வாதத்திற்காகத்தான் நான் உங்களிடம் வருகிறேன். பன்னிரண்டு வருஷமாகக் கடினமாக உழைக்கிறேன். ஆனால் என்னால் மந்திரியாகத்தான் இருக்க முடிகிறதே ஒழிய, முதலமைச்சர் ஆக முடியவில்லை. ஒவ்வொரு மந்திரிக்கும் ஒரு குரு இருக்கிறார். எனக்கு உங்களை மட்டும்தான் தெரியும். அதனால் நான் உங்களிடம் வருகிறேன்."

"நீங்கள் ஒரு தவறான குருவைத் தேர்ந்தெடுத்து விட்டீர்கள். நீங்கள் சத்யசாயி பாபாவிடம் செல்லுங்கள்-நீங்கள் இங்கே அடிக்கடி வரத் தொடங்கினால், நீங்கள் மந்திரியாகக்கூட இருக்க மாட்டீர்கள். நான் சொல்வதைக்

கேட்காதீர்கள். என்னை நெருங்கி விடாதீர்கள். அது மிகவும் அபாயமானது" என்று கூறினேன்.

அவர் மாயமாய் மறைந்துவிட்டார்; அவருக்கு விஷயம் புரிந்திருக்க வேண்டும்.

என்னோடு இருந்தால் / நீங்கள் இந்த உலகில் தோற்றுவிடுவீர்கள். உண்மையில் மிகச் சிலரே வாழ்வில் தோற்க நினைக்கிறார்கள். உள்ளார்ந்து நீங்கள் வெற்றி பெறலாம்–ஆனால் மிகச்சிலரே அதற்கு ஆசைப்படுவ தற்குப் பக்குவப்பட்டிருக்கிறார்கள். /

ஆகவே வளர்ச்சிக்குப் பலபடிகள் உள்ளன. பலரகமான மக்கள் உள்ளார்கள். பல நூறாக ஒன்றாக வாழ்கிறார்கள். இப்போது சாய்பாபாவிடம் செல்லும் ஒரு நபரும், என்னிடம் வரும் ஒரு நபரும், சம காலத்தவர்கள் என்று சொல்ல முடியாது. அப்படி இருக்க முடியாது.

/ சத்யசாய் பாபாவிடம் செல்லக்கூடிய நபர், அதிசயங் கள் நடப்பதனால் அவரிடம் செல்கிறார். அப்படி யென்றால் அப்படிப்பட்டவர்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் இருக்கிறார்கள்.

அந்தக் காலத்தில் தான் இவை ஆன்மிகம் என்று மக்களால் கருதப்பட்டது. இவையனைத்தும் சாதாரண மந்திரமாய ஜாலத் தந்திரங்கள். புத்தர் இத்தகைய தந்திரங் கள் எதுவும் செய்யாதவர் ஆவர்.

இரண்டாயிரம் ஆண்டுகள் கடந்துவிட்டன. ஒரு சில மக்களின் ஆதிகால மன நிலையிலேயே தங்கிவிட்டது. அவர்கள் அங்கே செல்கிறார்கள். அவர்களால் எளிய விஷயங்களைக் காண முடியாது. அதைப்பற்றியெல்லாம் விவாதிக்க வேண்டிய அவசியம் இல்லை–எந்தச் சாதாரண

மந்திரவாதியாகவும் இந்தச் செயல்களைத் தெருவிலே செய்துவிட முடியும்.

/ ஆனால், ஒரு மந்திரவாதி இந்தச் செயல்களைச் செய்யும்போது சாதாரணமாக அவர் ஒரு மந்திரவாதி என்று தான் எண்ணுகிறீர்கள்.

ஆனால் ஒரு சமயவாதி இதே செயல்களைச் செய்யும் போது இவை 'அதிசயங்கள்' 'புதுமைகள்' 'அற்புதங்கள்' என்றெல்லாம் எண்ணுகிறீர்கள். ஆனால் இவை அதே செயல்கள் தாம்-அதாவது. மந்திரவாதியின்- செயல்கள் தாம்!/

இப்போது பெங்களூர் பல்கலைக்கழகம், பன்னிருவர் அடங்கிய ஒரு சிறு குழுவை நியமித்து, சத்யசாயி பாபாவைத் தங்களுக்கு உதவக் கோரியிருக்கிறார்கள்.

அந்த அதிசயங்கள் குழுவின் முன்னால் செய்து காட்டப்பட்டால் அவற்றின் விஞ்ஞானபூர்வத் தன்மை பற்றி ஒரு முடிவுக்கு வரமுடியும் என்று அவர்கள் சொன்னார்கள்.

ஆனால் அவர் பதிலளிக்கவில்லை. மூன்று கடிதங்கள் துணைவேந்தரிடமிருந்து சென்றன. ஆனால் அவர் பதில் அளிக்கவில்லை.

பிறகு துணைவேந்தர் தன் கடிதங்களைப் பத்திரிகை களில் வெளியிட்ட பின்பு சாய்பாபா மிகவும் கோபம் கொண்டார்.

ஒரு பொதுக்கூட்டத்தில் அவர் பதில் அளித்தார். ஆனால் அந்தப் பதில் நம்பமுடியாத அளவுக்கு ஆன்மிக மில்லாததாக அமைந்திருந்தது. அந்தப் பதில் அறிவில்லாத தாகவும் இருந்தது.

"இந்த மக்கள் என்னை ஆழம் பார்க்க விரும்புகிறார்கள். ஓர் எறும்பு கடலின் ஆழத்தைப் பார்க்க முயல்வது போன்றது இச்செயல். இவர்கள் என்னைக் கீழே இழுக்க நினைக்கிறார்கள். இது எப்படிப்பட்டது தெரியுமா? நாய்கள் குரைத்து நட்சத்திரங்களை விழவைக்க முடியும் என்று நம்புவது போன்றதாகும்" என்று அதில் அவர் கூறியிருந்தார்.

இது மிகவும் சமயவுணர்வில்லாத மொழி. சமயத்திற்கு மாறான மொழி!-கண்ணியமானதாகக் கூட இல்லை.

நீங்கள் உண்மையிலேயே அதிசயங்கள் செய்பவராக இருந்தால், ஏன் அஞ்சவேண்டும். அவர்கள் வரட்டுமே. நீங்கள் நிரூபிப்பதற்கான நல்ல வாய்ப்புதானே அது? ஏன் அவர்களை அனுமதிக்கக் கூடாது? அவர்கள் உங்கள் சீடர்களாக ஆவார்களே! நீங்கள் ஒரு சித்தர், நீங்கள் ஓர் அதிசய மனிதர் என்று முரசறைந்து முழங்குவார்களே பார் முழுவதும்? அவர்களை ஏன் நீங்கள் அனுமதிக்கக் கூடாது? ஏன் நீங்கள் அஞ்சவேண்டும்? அவர்கள் சாதாரணமாகக் கவனிக்கத்தானே விரும்புகிறார்கள்?

ஒரே ஒரு விஷயம் பெங்களூர் பல்கலைக்கழகத் துணை வேந்தருக்கு ஓர் ஆலோசனை. அவர் அமைத்திருக்கும் குழுவில் உள்ளவர்கள் சரியான மக்கள் அல்லர்.

அந்தக் குழுவில் இருப்பவர்கள், தத்துவப் பேராசிரியர்கள், உளவியல் அறிவியல்-அதாவது இயற்பியல் மற்றும் வேதியல்-பேராசிரியர்கள் மட்டுமே. இவர்களால் ஒரு மந்திரவாதியை எடைபோட முடியாது. அவர்களுக்கு அதற்கான பின்னணி இல்லை. இயற்பியலுக்கும் அதற்கும் என்ன சம்பந்தம்.? இவர்கள் எளிய மக்கள். மிகவும் அப்பாவி மக்கள். அவர்கள் கணக்கில் வாழ்ந்தவர்கள்.

அந்தக் குழுவில் ஒரு கோகியா பாஷா, ஒரு கேலால் போன்றோர் இடம் பெற்றிருக்க வேண்டும். அப்போது மட்டுமே இத்தகைய மக்கள் பூமிக்குக் கொண்டு வரப்பட முடியும்.

ஒரு கோகியா பாஷா-மந்திரவாதி-தேவை ஏன் சொல்கிறேன் என்றால் சத்ய சாய்பாபா என்ன செய்கிறார் என்பதை அவர் அறிவார்.

அவர் என்ன செய்கிறார் என்பது ஒவ்வொரு மந்திரவாதிக்கும் தெரியும். பேராசிரியர்களால் எந்தப் பயனும் இல்லை! பாவம் அவர்கள் அப்பாவி மக்கள். அவர்களால் என்ன செய்ய முடியும்? 'மந்திரஜாலம்' பற்றிய கோட்பாடு அவர்களுக்குத் தெரியாது.

நீங்கள் ஒரு மந்திரவாதியின் உண்மையை அறிய நினைத்தால் மந்திரவாதிகளை உங்களுடன் அழைத்துச் செல்லுங்கள். அவர்களுக்குத் தான் அதுபற்றித் தெரியும்.

மந்திரவாத உலகம் மிகவும் தந்திரமயமானதாகும். மிகவும் மகத்தான திறமை தேவைப்படுகிறது. ஏமாற்றுவது அவ்வளவு எளிதானதன்று, அது ஒரு கலை, மகத்தான கலை.

ஆனால் மக்கள் இருக்கிறார்கள்-சத்யசாயிபாபா பற்றி நீங்கள் வெளிப்படுத்தினால்கூட-அது பற்றிக் கவலை இல்லை-இன்னொரு பாபா உதிப்பார்-ஏனென்றால் இந்த மக்களுக்கு ஒரு தேவை உள்ளது.

"ஆம். அந்த பாபா போலிதான். ஆனால் இந்த பாபா உண்மையானவர்" என்று அவர்கள் சொல்வார்கள்.

வெளிப்படுத்திக் கொண்டே நீங்கள் செல்லலாம். அதில் எந்த வித்தியாசமும் இல்லை. ஏனென்றால், அடிப்படை யிலேயே ஒரு தேவை மக்களுக்கு இருக்கிறது. விழிப்புணர்வு

நிலையில் அவர்கள் உயர்ந்தால் ஒழிய, சத்யசாய் பாபாக்கள் தொடர்ந்து கொண்டே தான் இருப்பார்கள்.

ஒருவராலும் முடியாது. நீங்கள் ஒரு சத்யசாய் பாபாவை வெளிப்படுத்த இன்னொருவர் பிறப்பார்; நீங்கள் அவரை வெளிப்படுத்தலாம். இன்னொருவர் பிறப்பார்; ஏனென்றால் மக்களுக்கு உண்மையான தேவை உள்ளது. அதை விட உயர்ந்த மதம் பற்றி அவர்கள் அறிய மாட்டார்கள். எல்லாரும் சமகாலத்தவர்கள் அல்லர். என்னிடம் வருகின்ற மக்கள் ஒட்டுமொத்தமான வித்தியாசமான மக்கள்.

உண்மையில் அவர்கள், தங்கள் காலத்திற்கும் முன்னால் செல்லக் கூடியவர்கள். அவர்கள் புரிந்து கொள்ளப்பட மாட்டார்கள். நீங்கள் பூனா மக்களிடம் செல்லும்போது, உங்களைப் பற்றியோ, நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்பது பற்றியோ மக்களால் புரிந்து கொள்ள முடியாது. ஏனென்றால் நீங்கள் இந்த நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள் இல்லை.

உங்கள் காலத்தை விடக் கொஞ்சம் முன்கூட்டியே நீங்கள் வந்துவிட்டீர்கள்.

ஒரு துறவி எப்படிக் கையோடு கை சேர்த்துக்கொண்டு பெண்ணுடன் பழக முடியும் என்று அவர்களால் நம்பமுடியாது. அசாத்தியம்.

நான் கொடுத்துள்ள விஷயம்-உங்களுக்கு-இருபத்தியோராம் நூற்றாண்டில் சாத்தியமாகும்-ஒரு நூறு ஆண்டுகள் இன்னும் அதிகம் தேவைப்படுகின்றன.

மதம் என்பது அப்போது வாழ்க்கைக்கு விரோதமானதாக இருக்காது. மதம் என்பது அப்போது வாழ்க்கைக்கு உடன்பாடுடையதாக இருக்கும்.

அப்போது மதம் என்பது காதலுக்கு விரோதமாக இருக்காது. காதலின் மிகப்பெரிய விடுவிப்பாக மதம் அப்போது இருக்கும். அப்போது, பாலுணர்ச்சிக்கு எதிரானதாக மதம் இருக்காது. ஏனென்றால் பாலுணர்ச்சி விரோதமானது என்றால் அது வாழ்க்கைக்கே விரோத மானதாகும்.

வாழ்க்கை கொடுக்கும் அனைத்தும் ஒட்டுமொத்தமாக மதத்தால் ஏற்கப்படும். வாழ்க்கையின் அனைத்துப் பேரின்ப நிலைகளும் அப்போது ஏற்கப்படும்.

அப்போது மதம் என்பது, கடவுளுக்குச் செலுத்தப்படும் ஆழமான நன்றியுணர்வாக இருக்கும். அவரால் கொடுக்கப் பட்டுள்ள அனைத்து விஷயங்களோடும் அன்போடு பழக்கம் வைத்துக்கொள்ள வேண்டும். நேசிக்க வேண்டும். அனுபவிக்க வேண்டும், கடந்து செல்லவும் வேண்டும்- ஆனால் விரோத மனப்பான்மை சிறிதளவும் கூடாது.

ஆகவே, நீங்கள் பூனாவுக்குச் செல்லும்போது அந்த நகர மக்கள், உங்களைத் துறவிகள் என்றே நம்பமாட் டார்கள். கடந்த காலக் கோட்பாடுகள்-அவர்களுக்குச் சொந்தமானவை-அவர்களிடமே இருக்கின்றன.

ஒரு துறவி என்றால் அவர் வாழ்க்கைக்கு விரோதி; நீங்கள் அப்படி இல்லை. இப்போது என் துறவிகளில் ஒருவர் குதிரைப் பந்தய மைதானத்திற்குச் செல்கிறார். அவர் பெயர், பரிதோஷ். என்ன செய்வது. அது மட்டு மில்லை. அவர் அதில் ஜெயித்துக் கொண்டிருக்கிறார். ஆனால் நல்லது. நான் அதை அங்கீகரிக்கிறேன். உங்கள் வாழ்க்கையை அழிப்பதற்காக நான் இல்லை. உங்கள் மகிழ்ச்சியை, சந்தோஷங்களை நான் அழிக்கமாட்டேன். நான் அவற்றை விரிவுபடுத்துவேன். நீங்கள் மேலும்

எளிதாக முன்னேறுவதற்கு உதவுவதற்காகவே நான் உள்ளேன்.

என்னைப் பொருத்தவரை துறவு என்பது–வாழ்க்கையை மிகவும் தீவிரமாகக் கருதுவதில்லை–அதில் விளையாட்டுணர்வோடு ஈடுபடுங்கள்.

குதிரைப்பந்தய மைதானமும் கூட வாழ்க்கையின் ஓர் அங்கம் தான். நீங்கள் அனுபவித்தால் அது முழுமையாக நல்லது. அதில் எதுவுமே தவறு இல்லை.

ஆகவே எதை நீங்கள் பின்பற்றினாலும், நினைவு கொள்ளுங்கள். அது அவருக்குத் தேவைப்படும். அவரைப் போகவிடுங்கள்; அவருக்கு உதவுங்கள். குறைந்த பட்சம் ஏதாவதொன்றைக் கண்டுபிடிக்க முயல்கின்றார்.

எங்கே தலை வணங்க முடியும் என்று என்றாவது ஒருநாள் அவர் கண்டுபிடிப்பார் என்றும், எங்கே கண்டடைய வேண்டும் என்றும், எங்கே அவரை ஏமாற்ற மாட்டார்கள் என்றும் அவர் கண்டுபிடிப்பார் என்றும் நாம் நிச்சயமாக நம்பலாம்.

உண்மையில், விவாதத்தைத் தொடங்கினால், அவர்கள் தற்காப்புக்கு முயல்வார்கள்.

தன் குருவைக் காப்பது என்பது சீடனின் ஆணவத்தின் ஒரு பகுதிதான். என்னைப்பற்றி யாராவது எதிர்த்துக் கூறினால், உடனே அது உங்களை எதிர்ப்பதாகவே நீங்கள் உணர்கிறீர்கள். ஆம் அது இயற்கையானதுதான். நீங்கள் எனக்குச் சொந்தம். ஆகவே நான் உங்களுக்குச் சொந்தம். என்னை எதிர்த்து யாராவது கூறினால் உங்கள் மனம் புண்படுகிறது. நீங்கள் உடனே என்னைக் காப்பாற்ற நினைக்கிறீர்கள். அவரது விமரிசனத்தில், அவர் மிகை யாகப் பேசினால், நீங்கள் எனக்கு ஆதரவாக மிகையில்

இறங்குகிறீர்கள். இருவருமே பொய்யாக ஆகிறீர்கள். நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.

ஒரு மாதிரியான-கல்யாணமாவதற்கு முன்பே குடித் தனம் நடத்தும் தம்பதிகள்-கல்யாணம் செய்து கொண்டு மூன்று மாதங்கள் ஆயின. ஓர் அழகான பெண் குழந்தையை மனைவி பெற்றெடுத்தாள். மனைவியின் தாய், மிகவும் பெருமையோடு தெருவில் சென்று கொண்டிருந்த போது 'என்ன, உங்கள் ரோஸிடாவுக்குக் கல்யாணமாகி மூன்று மாதங்களுக்குள் குழந்தை பிறந்திருக்கிறதே' என்று அண்டை வீட்டுக்காரி கூறினாள்.

"உங்களுக்கு ஆச்சரியமா? என் ரோஸிட்ட,ா பாவம் அவ்வளவு அப்பாவி. ஒரு குழந்தையை எத்தனை மாதம் சுமக்க வேண்டும் என்றுகூட அவளுக்குத் தெரியவில்லை" என்றாள் பிறந்த குழந்தையின் பாட்டி.

ஒருபோதும் வாதிடாதீர்கள். அது பயனற்றது. அப்புறம் நீங்கள் அடுத்த நபரைத் தற்காப்புச் செய்து கொள்ள வைக்கிறீர்கள். பிறகு துருவங்கள்!-அதாவது மிகைகள்.

பொதுவாக, ஆர்வத்தினால் பல மக்கள் அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருக்கிறார்கள். அதுவும் நல்லது தான். ஆர்வமில்லாது இருத்தல் என்பது உயிரோடு இல்லாமல் இருப்பதற்குச் சமம். அதுவும் நல்லது தான்.

ஆனால், ஆன்மிக வளர்ச்சிக்கு ஆர்வம் மட்டுமே போதாது.

கீழைநாடுகளில் மூன்று சொற்கள் உள்ளன. ஆர்வத் தைக் 'குதூகல்' என்று அழைக்கிறோம். அது சிறு பிள்ளைத் தனமானது; நீங்கள் எதிலும் துணிந்து இறங்குவதில்லை. 'மரங்கள் ஏன் பச்சைப் பசேல் என்று இருக்கின்றன என்று

நீங்கள் கேட்டுவிட்டு, அவ்வளவுதான், அதைப்பற்றியே அறவே மறந்து விடுகிறீர்கள்

ஒருவருமே பதில் அளிக்கவில்லை என்றால், நீங்கள் அதைப்பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பதில்லை. உலகை யார் படைத்தார்கள். உங்களுக்கு உண்மையிலேயே ஆர்வ மிருக்கிறது என்று பொருளல்ல-சும்மா மனதில் மிதக்கும் எண்ணம் அது.

இந்தக் கேள்விக்காக உங்கள் உயிரையே பணயம் வைப்பீர்களா என்பதல்ல-உண்மையைக் கண்டுபிடிக்க வேண்டும் என்பதும் இல்லை-அதனால் பரவாயில்லை.

அடுத்து-விசாரணை-'ஜிக்யாஸா' என்று நாங்கள் அழைக்கிறோம். விசாரணை என்றால் என்ன? உங்கள் ஆர்வம்- உங்கள் ஆர்வம் வெறுமனே வெறும் ஆர்வம் மட்டுமல்ல-அது உங்களுக்குள் ஆழமாக வேர்விட்டிருக் கிறது. அது உங்கள் வாழ்க்கையின் ஓர் அங்கமாக ஆகி வருகிறது. நீங்கள் கேள்வி கேட்பதற்காகவே, கேள்வி கேட்பதில்லை. நீங்கள் உண்மையில் அதற்குள்ளே செல்ல நினைக்கிறீர்கள்.

அப்புறம் மூன்றாவதாக ஒரு வார்த்தை-முமுக்ஷா- ஆங்கிலத்தில் இதற்குச் சமமான சொல்லே இல்லை.

ஆர்வம் என்பது பரவசநிலை, ஒரு மகிழ்ச்சியான நிலை; விசாரணை என்பது அதிக விஞ்ஞானபூர்வமானது; முமுக்ஷா என்பதன் நேரடிப் பொருள் 'ஆசை'. அதாவது ஆவேசமான ஆசை, உண்மையை அறிய வேண்டும் என்னும் உன்னதத் துடிப்புள்ள ஆசை.

ஆர்வம் உங்களை எங்கும் கொண்டு செல்லாது. நீங்கள் ஒரு செய்தித்தாள் வாசிப்பவராக இருப்பீர்கள்; அவ்வளவு தான். ஒவ்வொரு நாளும் நீங்கள் செய்தித்தாளை வாசிக்

கிறீர்கள். ஆனால் அது ஓர் ஆர்வம் மட்டுமே. அப்புறம் அதைத் தூக்கி எறிந்து விடுகிறீர்கள்.

விசாரணை, உங்களை ஒரு விஞ்ஞானபூர்வ வேலையாளாக ஒரு தத்துவஞானியாக, ஒரு தருக்கவியலாளராக ஆக்க முடியும். இருந்தும், அது உங்களை ஒரு சமயவாதியாக, ஆன்மிகவாதியாக இருத்தலாக ஆக்கிவிடாது.

உங்கள் விசாரணை மிகவும் ஆவேசமானதாக-எந்த அர்த்தத்தில் இந்த வார்த்தையை நான் சொல்கிறேன் என்றால்-அது ஒரு ஜீவமரணப் போராட்ட விஷயமாக-(முமுக்ஷா) ஆகிறபோது, உண்மையைக் கண்டால் ஒழிய உங்களால் நிம்மதியாக இருத்தல் இயலாது. நீங்கள் அதற்காகச் சாகத் தயாராக இருக்கும்போது உங்கள் விசாரணைக்காகச் சாகத் தயாராக இருக்கும்போது, அப்போது மட்டும் தான், (முமுக்ஷா) உண்மை ஆசானை-ஆச்சாரியரை-நீங்கள் கண்டுபிடிக்க முடியும்.

ஆகவே மூன்று விதமான ஆச்சாரியர்கள்-ஆசான்கள் உள்ளனர். உங்கள் ஆர்வத்தைப் பூர்த்தி செய்வோர் ஒரு விதம். உங்கள் விசாரணையைப் பூர்த்தி செய்வோர் இரண்டாவது விதம். உங்கள் முமுக்ஷாவைத் தீவிர அதீத ஆசையை-உண்மையை அறியும் வேட்கையைப் பூர்த்தி செய்வோர் மூன்றாவது விதம். ஆக எல்லாம் உங்களைப் பொருத்த விஷயம் தான்.

ஆர்வம் உடையோர் முக்தானந்தா, மூன் ஆகியோரிடம் செல்லலாம்; அது போதும். அவர்கள் ஆழமாக ஈடுபட ஆயத்தமாய் இல்லை. அவர்கள் வெறும் பார்வையாளர்கள்தாம். உண்மை தான். அவர்கள் பல சிக்கல்களில் சிக்கிக் கொள்கிறார்கள்.

நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.

ஒரு யூதன், ஒரு சாக்கடை மூடியின் மேல் நின்று கொண்டு மேலும் கீழும் குதித்துக்கொண்டே, 'அறுபத்தி ஒன்பது, அறுபத்தி ஒன்பது, அறுபத்தி ஒன்பது' என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

ஒரு ஜெர்மானியன் அந்தப் பக்கம் வந்து 'என்ன செய்து கொண்டு இருக்கிறீர்கள்' என்று அவனைக் கேட்டான்.

யூதன், மூடியை விட்டு வெளியே வந்து, ஜெர்மானியனின் கையைப் பிடித்து இழுத்து, 'இதைச் சிறிது நீங்கள் முயலுங்கள்' என்று சொன்னான்.

ஜெர்மானியன் சாக்கடை மூடியின் மீது நின்று கொண்டு குதிக்கத் தொடங்கினான். யூதன் மூடியை நீக்கினான். ஜெர்மானியன் புதை சாக்கடையில் விழுந்து விட்டான். 'ஆகா' என்று ஆச்சரியப்பட்டு ஆரவாரம் செய்தான் யூதன்; மீண்டும் அந்த மூடியை வைத்து சாக்கடைத் திறப்பை அடைத்துவிட்டு, மூடியின் மீது நின்று மேலும் கீழும் குதித்துக் கொண்டே "எழுபது! எழுபது!" என்றான்.

ஆர்வம் என்பது இது போன்றது தான். யாரோ 'அறுபத்தி ஒன்பது அறுபத்தி ஒன்பது அறுபத்தி ஒன்பது' என்று கத்திக் கொண்டிருந்தார். உங்கள் மனதில் ஓர் எண்ணம் உதிக்கிறது. அறுபத்தி ஒன்பது என்றால் என்ன என்று! என்ன அது? அறுபத்தி ஒன்பது என்ன? இப்போது நீங்கள் இல்லை... அதோடு எதுவும் செய்வதற்கில்லை. நீங்கள் உண்மையிலேயே கொஞ்சம் விழிப்புணர்வோடு இருந்திருந்தால், நீங்கள் கடந்து சென்றிருப்பீர்கள். அவன் 'அறுபத்தி ஒன்பது' 'அறுபத்தி ஒன்பது' என்று அலறட்டும். அவன் கத்தட்டும். நீங்கள் ஏன் அதில் கவனம்

செலுத்துகிறீர்கள். அதற்கும் உங்களுக்கும் என்ன தொடர்பு இருக்கிறது?

ஆனால் மனிதன் ஒரு குரங்கு. யாரோ ஒருவர் கத்திக் கொண்டிருந்தால் திடீரென்று நீங்கள் ஆர்வம் கொள்கிறீர்கள். என்ன விஷயம்? இப்படித்தான் விஷயங்கள் நடக்கின்றன. ஒரு முக்தானந்தா கத்திக்கொண்டே செல்கிறார். 'குண்டலினி குண்டலினி குண்டலினி' என்று கத்துகிறார்.

குண்டலினி என்றால் என்ன? அவ்வளவுதான் அறுபத்தி ஒன்பது எழுபது ஆகிறது.

ஆகவே நீங்கள் பிணிக்கப்படுகிறீர்கள் முதலில்! அப்புறம் அதிலிருந்து வெளியே வருவது மிகவும் கடினமாக இருக்கிறது.

ஏனென்றால் உங்கள் ஆணவத்தின் ஈடுபாடாக ஆகிறது.

ஏழு வயதுச் சிறுவனுக்கு, ஒரு சிறுமியிடம் நடனமாட அழைப்பது எப்படி என்று சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார் ஆசிரியர். அரைமணிநேரம் கழித்து ஆசிரியரைச் சிறுவன் கேட்டான். "சரி. இப்போது அவளை விட்டு விலகுவது எப்படி?"

ஒரு சிறுமியை உங்களுடன் ஆட அழைப்பது எளிது. உண்மையான சிக்கல் எங்கே எழுகிறது தெரியுமா? எப்படி அவளிடமிருந்து விலகுவது? என்பதில் தான்.

காதலில் வீழ்வது மிகவும் எளிது. அதை விட்டு வெளியே வரவேண்டும் என்று நீங்கள் நினைத்தால் அப்போது தான் பிரச்சினை உதயமாகிறது. உண்மையில், நீங்கள் ஒருபோதும், சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களையும் சிந்தித்ததில்லை.

நீங்கள் எவரிடமாவது சென்றால், ஓர் ஆர்வத்தின் கோளாறால் செல்லக் கூடும். யாரோ ஒரு நண்பர் அங்குச் செல்கிறார்; உங்கள் பக்கத்து வீட்டுக்காரர் அங்குச் செல்கிறார். அவர்கள் சொல்கிறார்கள் 'நம்பமுடியாத அதிசயம் "நம் பாபா!" ஆக நீங்கள் போக வேண்டியது தான்-அறுபத்தி ஒன்பது!

அப்புறம் உங்களுக்கென்று அபிலாஷைகள்-அதன்பின் நோக்காடுகள்-அதாவது சுகவீனங்கள்-நீதிமன்றத்தில் உங்களை எதிர்த்து ஒரு வழக்கு பைசலாகாமல் உள்ளது-அப்புறம் ஆயிரத்தோரு பிரச்சினைகள் உங்களுக்கு உள்ளன.

நீங்கள் பாபாவிடம் செல்கிறீர்கள். அங்குள்ளோர் சொல்கிறார்கள். 'அதிசயம்' நடக்கும்! எல்லாம் அதிசயம் எதுவுமில்லை! ஆனால் எல்லாம் நடக்கிறது என்றெல்லாம் சொல்கிறார்கள்.

உடனே உங்கள் ஆசை கொழுந்து விட்டெரிகிறது. "எதுவுமில்லாததிலிருந்து இவரால் பொருள்களை உருவாக்க முடியுமானால் என் நோய் குணமாக, என் வழக்கு எனக்குச் சாதகமாகத் தீர்ப்பாக, என் அபிலாஷை பூர்த்தியடைய, என் வாழ்வில் வெற்றிபெற இவரால் உதவமுடியும்" என்றெல்லாம் சிந்திக்கத் தொடங்குகிறீர்கள்.

அப்பொழுது நீங்கள் பிடிக்கப்படுகிறீர்கள். அப்புறம் மக்கள் 'நீங்கள் ஒரு தவறான தீர்க்கதரிசியிடம் செல்வதாகச் சொல்கிறார்கள். நீங்கள் தற்காத்துக் கொள்கிறீர்கள். அது உங்கள் ஆணவத்தின் சிக்கல்! நீங்கள்- எப்படி ஒரு போலி தீர்க்கதரிசியிடம் செல்வீர்கள்- நீங்களே போகிறீர்கள் என்றால் அவர் நிச்சயமாக உண்மையானவராகத் தான் இருக்க முடியும். நீங்கள் பொய்யாளரிடம் போகவே முடியாது. நீங்கள் அப்படி ஒரு அறிவாளியான மனிதர்!

அவ்வளவு நுண்ணறிவு! உங்களுக்கு எப்படி ஒரு போலி தீர்க்கதரிசி கற்பிக்க முடியும்! நடக்கவே நடக்காது. அப்புறம் அவர் பொய்யல்ல என்று நிரூபிக்க முயல்கிறீர் கள்.

நீங்கள், உலகில் சொந்த விருப்பத்தின் பேரிலேயே. கண்ணியில் சிக்குகிறீர்கள். ஒருநாள் அதிலிருந்து வெளியே வரவேண்டுமென்றால் உங்களால் வரமுடியாத நிலை ஏற்படும். அப்போது நீங்கள் துப்பிய எச்சிலை நீங்களே விழுங்க வேண்டி வந்துவிடும். அவர் மகத்தான ஆசான் என்று இதுவரை சொல்லி வந்துள்ளீர்கள். அப்புறம் ஒருநாள் விடுபட விரும்புகிறீர்கள். இப்போது எப்படி விடுபடுவது? உங்கள் சொந்த வற்புறுத்தலுக்கு எதிராக அது செல்கிறது. அதில் ஆணவம் ஈடுபட்டுவிட்டது.

ஒரே ஒரு விஷயம் மட்டும்தான் என்னால் சொல்ல முடியும். எங்கே விரும்புகிறீர்களோ அங்கே செல்லுங்கள். எந்தக் காரணம் கொண்டும் ஆணவ ரீதியாக ஒரு விஷயத்தில் ஈடுபடாதீர்கள். விழிப்புணர்வோடு இருங்கள். உஷாராகவும் கவனமாகவும் இருங்கள். நீங்கள் ஏதாவது கற்றுக்கொள்ள முடியுமானால், கற்றுக்கொள்ளுங்கள். அங்கு எதுவும் கற்றுக்கொள்ள முடியாது என்று கண்டுபிடித்து விட்டீர்கள் என்றால், அங்கிருந்து விடுபட-கிளம்பத் தயாராகுங்கள்.

ஒருவன் சம்மதத்தோடு நீங்கள் அதைவிட வேண்டும் என்று பொருள்இல்லை. அவருக்கு எதிராக நீங்கள் இருக் கும் போதுதான் நீங்கள் விட்டு விட்டு வரவேண்டிய தில்லை. நீங்கள் ஒரு பகைவராகத் தான் இருக்க வேண்டும் என்று தேவை இல்லை. சும்மா விட்டுவிடுங்கள். எதிலும் அதிக பற்றோடு இருப்பது என்பது தீயது. மிகவும் அதிகமாக வெறுப்போடிருப்பதுவும் கெடுதல் தான்.

ஒரு நபரிடம் செல்லுங்கள். எந்த அளவு கற்றுக் கொள்ள முடியுமோ அந்த அளவு கற்றுக் கொள்ளுங்கள். உங்கள் குறிக்கோளை அடைந்துவிட்டதாக நீங்கள் உணர்ந்தால், அது உங்களுக்கு நல்லது.

அது இல்லை உங்கள் இலக்கு என்று உணர்கிறீர்களா, அப்படியென்றால், விட்டு விடுங்கள். அவர் என்னவெல்லாம் செய்தாரோ அவையனைத்துக்கும் நன்றி சொல்லுங்கள்.

ஒருவேளை ஒன்றுமே உங்களுக்குச் செய்யாமல் இருந்திருக்கலாம். அப்படியிருந்தாலும் குறைந்தபட்சம் அவரால் உங்களுக்கு ஒன்றும் கிடைக்க முடியாது என்கின்ற விழிப்புணர்வு உங்களுக்கு வந்ததற்கும், நீங்கள் அவருடைய இரையாகவும் ஆகிவிடுவதற்கு முன்பு விழிப்புணர்வு பெறும் வகையில் அவர் நடந்து கொண்டதற்கும் அவருக்கு நன்றி கூறுங்கள்.

வேறு எவருக்கும் அவ்வளவு எளிதில் நீங்கள் இரையாக மாட்டீர்கள். அதற்காக அவருக்கு நன்றி கூறுங்கள்.

ஒரு குடையின் கீழ் மூன்று தருக்கவாதிகள் நின்று கொண்டிருந்தனர். 'இது மிகவும் அற்புதம்!' ஒருவன் சொன்னான். "ஒருவர்கூட நனையவே இல்லை' என்றான் இன்னொருவன்.

'எதனால் என்றால் இப்போது மழையே பெய்யவில்லை' என்றான் மூன்றாமவன்.

பாபாவினால் தாங்கள் மகிழ்ச்சியாக இருப்பதாக நினைப்பவர் பலபேர்கள் உள்ளார்கள். ஏனென்றால் பாபாவின் ஆசிர்வாதம் அவர்களை மகிழ்ச்சியாக இருக்கச் செய்கிறது. பாபா ஒரு குடை என்று அவர்கள் நினைக்

கிறார்கள்; ஆனால் முதலில், மழை பெய்கிறதா இல்லையா என்று பாருங்கள்!

இது என் அனுபவம். ஒரு பாபாவிடம் நூறு நபர்கள் வருகிறார்கள் என்றால் ஐம்பது பேர்கள் அவரைச் சுற்றுபவர்களாக ஆகிறார்கள். ஐம்பது பேர்கள் விலகுகிறார்கள். ஏனென்றால் அந்த ஐம்பது பேருக்கு எந்த நிறைவும் ஏற்படவில்லை. இன்னொரு ஐம்பது பேர்கள், ஏதோ ஒரு வகைத் திருப்தி பெறுகிறார்கள். ஆனால் அது பாபாவினால் அல்ல.

இது ஒரு சாதாரணப் புள்ளி விவரம். ஒரு நூறு நோயாளிகள் வந்தால், ஏறக்குறைய ஐம்பது சதவிகிதம் பேர்கள் உதவி செய்யப்படுகிறார்கள். பாபாவினால் அல்ல; அவர்கள் பாபாவிடம் செல்லவில்லை என்றாலும் ஆரோக்கியம் அடைந்திருப்பார்கள். அவர்கள் ஆரோக்கியம் அடைந்ததன் காரணம், அப்போது மழை பெய்யவில்லை.

ஏதாவது ஒன்றை நீங்கள் விநியோகம் செய்து கொண்டே செல்கிறீர்கள்-தண்ணீர் என்று வைத்துக் கொள்ளுங்களேன். நீங்கள் இதை முயற்சி செய்யுங்கள். நீங்கள் சென்று ஒரு மரத்தினடியில் உட்கார்ந்து கொண்டு மக்களுக்குத் தண்ணீரை விநியோகம் செய்கிறீர்கள்.

ஒரு வாரத்திற்குள் பலபேர்கள் உங்களுக்காகத் தொங்குபவர்களாக-அதாவது உங்கள் பக்தர்களாக-உருவாவார்கள்.

என்ன நடந்து விட்டது? பலபேர்கள் 'நீங்கள் ஓர் அதிசயம்' என்று சொல்லத் தொடங்குவார்கள்.

பல ஆண்டுகளாக எனக்கிருந்த தலைவலி இப்போது மறைந்து விட்டது. இன்னொருவர், தனக்கு வயிற்றுவலி

இருந்ததென்றும் அது மறைந்து விட்டதென்றும் சொல்கிறார். உங்களுக்கு ஆச்சரியம் ஆகிவிடும். வெகுவிரைவில் எல்லாம் நல்லபடியாக நடக்கும். ஆக, உங்களுக்குத் தன்னம்பிக்கை வந்துவிடும்.

நீங்கள் அதிக தன்னம்பிக்கை உள்ளவரானால், விஷயங்கள் அதிகமாக நடக்கும். உங்களால் உதவி பெற்றிருப்பதாக நம்பும் உங்கள் பக்தர்கள், உங்களுக்கு ஒரு ஒளிவட்டத்தை உங்களைச் சுற்றிலும் உருவாக்கி விடுகிறார்கள்.

ஒரு புதிய மனிதர் வரும்போதெல்லாம் நிச்சயம் அது நடக்கத்தான் போகிறது. முழுமையாக அது நடக்கப் போகிறது. பாருங்கள்-எங்கள் அனைவருக்கும் நடந்துள்ளதே!

இந்த மனிதருக்குத் தலைவலி இருந்தது, அந்த மனிதருக்கு வயிற்றுவலி இருந்தது. இந்த மனிதர் இதிலிருந்து கஷ்டப்பட்டான். அந்த மனிதன் அதிலிருந்து கஷ்டப்பட்டான். பாருங்கள் இப்போது நாங்கள் எல்லோருமே குணமடைந்துவிட்டோம்.

இது ஒருவகை ஆழமான ஊனத்திறனை உருவாக்கி விடுகிறது. பலபேர்கள் உதவி செய்யப்பட்டிருக்கும்போது, நீங்கள் ஏன் கூடாது? உங்களுக்கு நம்பிக்கை மிகுகிறது. விசுவாசம் உதிக்கிறது, அப்புறம் என்ன? தண்ணீர் வேலை செய்கிறது.

எளிய விஷயங்கள் வளர்ந்து கொண்டே செல்கின்றன. இவை எளிய சுய ஆலோசனைகள். ஒரு பனிக்கட்டி பனியில் உருண்டு கொண்டே செல்வது போன்றது இது. உருண்டு கொண்டே செல்வதனால், பனியை அதிகமாக அது சேர்த்துக் கொள்கிறது. சுற்றிலும், பெரிதாக, இன்னும் பெரிதாக, இன்னும் இன்னும் பெரிதாக ஆகிக் கொண்டே இருக்கிறது. பனிக்கட்டி மனித முட்டாள்தனம் இருக்கிறதே

அது மகத்தானது. மனிதன் இத்தகைய அறியாமையும் முட்டாள்தனமுமான வழியில், பலகாலங்களாக வாழ்ந்து விட்டான். ஆனால் இது இயற்கை வழியாகத் தோற்றம் அளிக்கிறது. விஷயங்கள் எப்படி வேலை செய்கின்றன என்று ஒருவருக்கும் தெரியாது. புரியாது. இருப்பினும் எப்படித்தான் விஷயங்கள் வேலை செய்கின்றன என்று அப்படியே அப்பட்டமாக அறிய மாட்டார்கள். ஆனால் அடிப்படை விஷயங்கள் அறியப்பட்டுவிட்டன. விஷயங்கள் எப்படி வேலை செய்கின்றன? -அவை ஆழ்நம்பிக்கை மூலமாக வேலை செய்கின்றன. ஒருவரும் வேலை செய்யவில்லை. ஒருவரும் எதுவும் செய்யவில்லை. உங்கள் சொந்த ஆழ்நம்பிக்கைதான் வேலை செய்கிறது.

இயேசு உண்மையானவர். அவர் மீண்டும் மீண்டும் சொல்வதென்ன?... மக்கள் வருகிறார்கள், குணமாகிறார்கள். அவர்கள் நன்றிகூற விரும்புகிறார்கள். "எனக்கு நன்றி கூறாதே. உன் ஆழ்நம்பிக்கை உன்னைக் குணப்படுத்தி விட்டது" என்கிறார் இயேசு. ஆம். அவர் உண்மையான மனிதர். "எனக்கு நன்றி கூறாதீர்கள், நான் எதுவும் செய்து விடவில்லை. உங்கள் ஆழ்நம்பிக்கை உங்களைக் காப்பாற்றி விட்டது" என்று கூறுகிறார், இயேசு.

இந்த பாபாக்களும் புரிந்து கொள்ளவில்லை. நடக்கின்ற விஷயங்கள் உங்களுக்கு எப்படி மர்மமாக உள்ளதோ அதே போல அவர்களுக்கும் மர்மமாகத் தான் உள்ளது.

முல்லா நசிருதீன் ஒரு தேர்தல் முகாமில் நாள் முழுவதும் பேசிவிட்டார். மிகவும் களைத்து அலுத்துச் சோர்ந்து போய் வீடு திரும்பினார். 'இன்று உங்கள் பேச்சுக்கள் எப்படி அமைந்தன' என்று அவர் மனைவி கேட்டாள்.

"எல்லாம் சரிதான். நான் ஊகிக்கிறேன். நான் சொன்ன சில விஷயங்களைச் சபையில் சில பேர்கள் புரிந்து

கொள்ளவில்லையோ என்று அஞ்சுகிறேன்" என்றார் கவலையுடன்.

'எதனால் அப்படி எண்ணுகிறீர்கள்' என்றாள் மனைவி. 'ஏனென்றால், எனக்கே அந்த விஷயங்கள் புரியவில்லை' என்று இரகசியமாகச் சொன்னார் முல்லா.

உங்கள் மனம் எப்படி இயங்குகிறது என்று சும்மா கவனியுங்களேன். உங்கள் மனம் மூடநம்பிக்கை கொள்வதற்கு எவ்வளவு துடிக்கிறது? உங்கள் மனம் ஆணவமுடையதாக இருக்க எவ்வளவு முனைகிறது? உங்கள் மனம் தற்காப்புச்செயல் கொள்ள எப்படி ஆசைப் படுகிறது? காரணகாரியப்படுத்த உங்கள் மனம் எப்படி விரும்புகிறது? என்றெல்லாம் சும்மா கவனியுங்களேன். இந்த உண்மையான வேலை உங்கள் மனதுள் செய்யப்பட வேண்டிய உள்ளார்ந்த வேலை.

மூன் பற்றியும் மற்றவர்கள் பற்றியும் கவலைப்பட வேண்டாம். உங்கள் சொந்த மனத்தைப் பற்றி மட்டும் நினையுங்கள். வெகுவிரைவில் உங்களுக்குத் தெளிவு பிறக்கும்.

மனதின் எந்திரவியலைப் புரிந்து கொண்டுவிட்டால், அவன் எந்திரவியலிலிருந்து விடுதலை அடைகிறான். விழிப்புணர்ச்சி பெறும்போது ஒருவன் மனதிற்கும் அப்பால் செல்கிறான். மனதிற்கு அப்பால் இருக்கும் நிலை தான் சுதந்திர நிலை. அப்போது உங்களை யாருமே சுரண்ட முடியாது. அப்போது உங்களை எவருமே எந்த வகைச் சிறைவாசத்தையும் உங்கள் மீது திணித்துவிட முடியாது. அப்புறம் உங்களை யாரும் ஏமாற்றவோ, முட்டாளாக்கவோ முடியாது.

சாந்தி சுதீரிடமிருந்து கடைசிக் கேள்வி:- அவர் என்னிடம் ஒரு வெற்றுக் காகிதத்தை அனுப்பியுள்ளார்.

ஒவ்வொரு நாளும் அநேகமாகப் பல கேள்விகளை எழுதுவது அவர் வழக்கம். உண்மையில் அவருக்கு ஒருபோதும் நான் விடையளித்ததே இல்லை. இது அவரது கடைசி முயற்சி-அவநம்பிக்கை முயற்சி! அவர் தான் இங்கிருப்பவர்களிலேயே மகத்தான கேள்வியாளர்; ஆனால் அவரது கேள்விகளின் விஷயம் முழுவதும் தலையிலிருந்து வருபவை; ஒருபோதும் அதற்குப் பதிலளிக்க நினைத்ததில்லை. ஏனென்றால் அவை அறிவார்ந்த குப்பை; அவற்றுக்கும் அவருடைய இருத்தலுக்கும் எந்த விதச் சம்பந்தமும் இல்லை. அவருக்கும் அவரது கேள்விகளுக்குமேகூட எந்தத் தொடர்பும் இல்லை. 50 சதவிகிதம் பிறர் பற்றியது. 50 சதவிகிதம் புத்தகமயமானது.

அவர் ஒரு நல்ல வாசகராக இருக்க வேண்டும். அவர் எனக்குப் புத்தகங்களை அனுப்பிக் கொண்டே இருக்கிறார். அவர் நிறைய படித்திருக்க வேண்டும். அதுதான் அவர் மனதை இயக்கிக் கொண்டே இருக்கிறது. அப்புறம் கேள்விகள் எழுகின்றன.

அவர் இருத்தலோடு அல்லது அவர் வளர்ச்சியோடு அவர் கேள்விகளுக்குத் தொடர்பு இல்லை. இந்தக் கேள்விகள் பயனற்றவை. அவை விசாரணை கூட அல்ல. ஆர்வக் கோளாறினால் வந்தவை. 'முமுக்ஷா'வினால் எழுந்த கேள்விகளுக்கு மட்டும் பதில் அளிக்க நான் விரும்புகிறேன். உண்மை உலகத்தில் உங்களைச் செலுத்தி, மாயை உலகத்திலிருந்து உங்களை விலக்குவதற்கும் தான் நான் பதிலளிக்கிறேன்.

உண்மையாகவே ஜீவமரணக் கேள்வியாக உள்ளவற்றுக்குத்தான் நான் விடையளிக்கிறேன். ஒரு வேளை அத்தகைய கேள்வி வரவில்லையென்றால் இரண்டாவது நான் ஜிக்யாசா அல்லது விசாரணை உணர்வுடைய

கேள்விக்குப் பதிலளிக்கிறேன். அதுவும் இல்லையென்றால் ஆர்வத்தினால் வரும் கேள்விகளுக்கு விடையளிக்கிறேன்.

நீங்கள் ஒரு கேள்வி கேட்டு விட்டீர்கள் என்ற காரணத்திற்காகவே நான் பதிலளித்துவிடப் போவதில்லை. நான் தேர்ந்தெடுக்க விரும்புகிறேன். ஏனென்றால் உங்களுக்கே நீங்கள் என்ன கேட்கிறீர்கள், ஏன் கேட்கிறீர்கள் என்று தெரியாமல் இருக்க வாய்ப்பிருக்கிறது. உங்கள் கேள்விகளுக்கு நான் விடையளிக்கவில்லையென்றால் அது தான் விடை. ஏதோ ஒரு வகையில் அந்தக் கேள்வி பொருத்தமில்லாததாகவும், தகுதியற்றதாகவும் இருக்கிறது.

அதனால் நான் ஒருபோதும் சாந்தி சுதீருக்கு விடையளித்ததில்லை. அவர் ஒரு நல்ல ஆத்மா. மிகவும் அப்பாவி; ஆனால் அளவுக்கு அதிகமாகத் தலையில் உள்ளது. அவரைக் கொஞ்சம் கீழே இதயத்திற்கு அருகே இழுக்க நினைக்கிறேன்.

இது அவரது, நம்பிக்கையில்லாத முயற்சியாகும்- இருப்பினும் சிறந்த செயலைத்தான் செய்திருக்கிறார்- அதனால் தான் அவருக்குப் பதிலளிக்கிறேன். அவர் எதுவும் கேட்காவிட்டாலும்கூட அவரது இதயத்தின் சிறிய அம்சத்தை அது காட்டுகிறது... இந்த வெற்றுத் துண்டுத் தாள், தலை அளவுக்கு அதிகமாக நிரம்பி வழிகிறது. மிகுந்த நெருக்கடி அங்கே, இதயம் தூய்மையாக, நிர்மலமாக மேகம் இல்லாததாக உள்ளது.

ஆம், அவரது இதயம், இந்தத் துண்டுத்தாளைப் போல் உள்ளது. ஒரே ஒரு வேறுபாடு, தாளில் பெயர் உள்ளது. இந்தக் கேள்வியில் நான் கண்டுபிடிக்கும் குறை அது ஒன்றுதான். இந்தப் பெயரும் இல்லாமல் இருந்திருந்தால் அது முழுமையாக இருந்திருக்கும். ஒரு சின்ன ஆணவம்...

நீங்கள் சின்ன ஆணவத்தை உங்கள் இதயத்தில் சுமக்கலாம். ஆனால் அது முழு இதயத்தையும் மாசு படுத்துகிறது.

அவர் மட்டும் வெற்றுத் துண்டுத்தாளைப் பெயரே இல்லாமல் அனுப்பியிருந்தால், அது மகத்தான மதிப்புடையதாக இருந்திருக்கும்.

என்னிடமிருந்து தங்கள் பெயரைக் காதால் கேட்க வேண்டும் என்பதற்காகவே கேள்வி கேட்பவர்கள் பலர் இருக்கிறார்கள். அவர்கள் எந்தக் கேள்விகளிலும் ஆர்வமில்லாதவர்கள். அவர்களுக்கு அவர்கள் பெயர்களில் மட்டுமே விருப்பமும் ஆர்வமும். அப்புறம் நான் என்ன செய்தேன் தெரியுமா? பெயர்களைச் சொல்வதில் அக்கறையில்லாமல் இருந்தேன்.

கேள்வியை அக்கறையோடு கேட்டுப் பெயர்களில் ஆர்வம் இல்லாதவர்கள் இருக்கிறார்களா என்று பார்த்துப் பெயரைச் சொல்வேன். எனக்கேயுரிய சொந்தவழிகள் பல உள்ளன.

ஆனால் சாந்தி சுதீரு நான் சொல்கிறேன். எதையாவது கற்றுக் கொள்ளுங்கள். இந்தத் துண்டுத்தாள்- வெற்றுத் தாள்- உங்கள் உண்மைத்தன்மை ஆகவேண்டும்.

பெயரைக்கூட விட்டுவிடுங்கள். ஆனால் சும்மா-காலியாக வெற்றாக இருங்கள்/ மனம் ஆயிரம் கேள்விகள் கேட்கலாம். ஆனால் பதில் எதுவும் இல்லை. இதயத்திற்குக் கேள்விகளே இல்லை. அதனிடம் உள்ளது பதில் மட்டுமே. இதுதான் முரண்பாடு. மனம் கேள்வி கேட்டுக் கொண்டே சென்று கொண்டிருக்கிறது. ஆனால் பதில் இதுவரை கண்டுபிடிக்கவில்லை. ஆனால் இதயம் கேள்வி கேட்பதில்லை. அதனிடம் எப்போதும் பதில் உள்ளது.

முதல் நாள் இரவு, கோவிந்தா திரும்பி வந்தார்- இவர் ஒரு துறவி. ஓர் அரிய இருத்தல். இவர் உலகப் புகழ்வாய்ந்த ஒரு கட்டிடக்கலை நிபுணர். உங்களுக்கு ஏதேனும் கேள்வி கள் உண்டா என்று கேட்டேன். “பகவான், இந்தமுறை நான் கேட்க எந்தக் கேள்வியும் இல்லை. நான் சும்மா இங்கே இருப்பதற்காகத் தான் வந்துள்ளேன்." என்று கூறினார். “அப்படியானால் நீங்கள் பதிலைப் பெறுவீர்கள்” என்று நான் அவரிடம் சொன்னேன்.

நீங்கள் என்னருகில், எந்தக் கேள்வியும் இல்லாமல் உட்கார்ந்திருந்தால், யாரால் பதிலைத் தடுக்கமுடியும்? எப்படி விடை தடுக்கப்பட முடியும்? அது உங்கள் மீது பொழிந்து கொண்டிருக்கும். அப்புறம் அது உங்களை வந்து சேரும்.

இதுதான் சத்சங்-நல்லோர் இணக்கம்-என்பதன் பொருள் ஆகும். எந்த மனமும் இன்றி, ஆசானுடன் இருப்பது, சும்மா அவரோடு இருப்பது-அதன் மூலம், ஆற்றல்கள் சந்தித்துப் பிரவாகமாகப் பெருக்கெடுத்து ஓடவேண்டும். நீங்கள் காலியாக இருந்தால் நான் முழுமையாக உள்ளே பூர்த்தி செய்ய முடியும். நீங்கள் நிரம்பி வழியத் தொடங்குவீர்கள்.

ஆனால் ஏற்கனவே நீங்கள் முழுமையாகக் கேள்வி களால் நிரம்பியிருந்தால் அப்புறம் எனக்கு உங்கள் உள்ளுக் குள் செல்வது மிகவும் கடினமாக இருக்கும் அசாத்தியம்.

வெற்றுத் துண்டுத்தாளாக ஆகுங்கள். அதன்மீது உங்கள் பெயரைக்கூட எழுதாதீர்கள். வெறுமனே காலியாகுங்கள். காலி-வெற்றிடத்தில் முழுமை இறங்குகிறது.

நீங்கள் இல்லையென்றால், கடவுள் இருக்கிறார்.

புத்தர் கூறினார்:—

நூறு தீய மனிதர்க்கு உணவளிப்பதைக் காட்டிலும் ஒரு நல்ல மனிதனுக்கு உணவளிப்பது சிறந்தது.

ஆயிரம் நல்ல மனிதர்க்கு உணவளிப்பதைக் காட்டிலும் புத்தரின் ஐந்து நல்லொழுக்க விதிகளைக் கடைப்பிடிக்கும் ஒருவர்க்கு உணவளிப்பது சிறந்தது.

புத்தரின் ஐந்து நல்லொழுக்க விதிகளைக் கடைப்பிடிக்கும் பத்தாயிரம் பேர்க்கு உணவளிப்பதைக் காட்டிலும் ஒரு ஸ்த்ரோதபன்னாவுக்கு உணவளிப்பது சிறந்தது.

பத்துலட்சம் ஸ்ரோதபன்னாக்களுக்கு உணவளிப்பதைக் காட்டிலும் ஒரு ஸ்கிருதாகாமினுக்கு உணவளிப்பது சிறந்தது.

ஒரு கோடி ஸ்கிருதாகாமின்களுக்கு உணவளிப்பதைக் காட்டிலும் ஒரு அனகாமினுக்கு உணவளிப்பது சிறந்தது.

பத்துக் கோடி அனகாமின்களுக்கு உணவளிப்பதைக் காட்டிலும் ஒரு அர்ஹத்திற்கு உணவளிப்பது சிறந்தது.

நூறு கோடி அர்ஹத்களுக்கு உணவளிப்பதைக் காட்டிலும் ஒரு பிரத்யக்புத்தருக்கு உணவளிப்பது சிறந்தது.

ஆயிரம் கோடி பிரத்யக் புத்தர்களுக்கு உணவளிப்பதைக் காட்டிலும் நிகழ்கால அல்லது இறந்தகால அல்லது எதிர்கால புத்தர் ஒருவர்க்கு உணவளிப்பது சிறந்தது.

நிகழ்கால இறந்த கால எதிர்கால புத்தர்கள் பத்தாயிரம் கோடிப்போர்க்கு உணவளிப்பதைக் காட்டிலும் அறிவுக்கும், பாரபட்சத்திற்கும், கட்டுப்பாட்டிற்கும், ஞானத்திற்கும் மேம்பட்ட அப்பாற்பட்ட ஒருவர்க்கு உணவளிப்பது சிறந்தது.



முதலில் மனிதன் என்று அழைக்கப்படும் நோயைப் பற்றிச் சிறிது பேசுவோம். மனிதன் ஒரு நோய். ஏனென்றால், மனிதனின் இருத்தலின் ஆழத்தின் கீழே மனிதன் பிளவுபட்டிருக்கிறான்; ஒன்றாக இல்லை, பலவாக இருக்கிறான்.

எனவே தொடர்ச்சியாக சுகம்-இன்மை, ஆரோக்கியமின்மை, ஏக்கம், கோபம், ஆவேசம் எல்லாம் உள்ளன.

அலுவல்களின் இயல்பான நிலையைத்தான் 'ஸ்கிசோப்ரேனியா' (மனப்பிளவு நோய்) என்று குறிப்பிடுகின்றனர். சில மனிதர்கள் மட்டுமே ஸ்கிசோப் (மனப்பிளவு

நோயாளியாக) ரேனிக்காக இருக்கிறார்கள் என்பதல்ல; மனிதன் ஸ்கிசோப்ரேனிக்காகத் (மனப்பிளவு நோயாளி யாக) தான் பிறக்கிறான். இது புரிந்து கொள்ளப்பட வேண்டும்.

மனிதன் சுகம்-இன்மையில் பிறக்கிறான். சுகம் இன்மையாகவே பிறக்கிறான். நீங்கள் உங்கள் அம்மாவின் கருவில் நுழைந்தபோது உங்கள் வாழ்க்கையின் முதல் கணமே பெற்றோர், தாய்தந்தை ஆகிய இருவரின் அடிப்படையில் தான் அமைகிறது.

உங்கள் முதல் தொடக்கமே இரட்டையானது, பிரிக்கப் பட்ட-ஆண்/பெண், யின்/யாங், உடன்பாடு/எதிர்மறை ஆகியவை. உங்கள் இருத்தலின் முதல் ஒற்றுமையின் அடிப்படை. ஏற்கெனவே ஏற்பட்ட பிரிவில்தான் உங்களில் ஒரு பாதி ஒரு பெற்றோரிடமிருந்தும், மறுபாதி இன்னொரு பெற்றோரிடமிருந்தும்தான் வந்தது.

ஆகவே ஆரம்பத்திலிருந்தே நீங்கள் இரண்டாவதாகத் தான் இருந்துகொண்டிருக்கிறீர்கள்.

ஆகவே மனப்பிளவு நோய் என்பது ஏதோ ஒரு சில துரதிர்ஷ்டசாலிகளுக்கு ஏற்படும் நோய் அன்று. சாதாரண இயல்பான அலுவல் நிலைதான் அது.

மனிதன் பிளந்துதான் பிறக்கிறான். ஆகவே தொடர்ச்சி யாக இருமை உள்ளது; தீர்மானமின்மை, அலைபாய்தல் இவை உள்ளன.

நீங்கள் யாராக இருக்க விரும்புகிறீர்களோ அதை நீங்கள் தீர்மானம் செய்யமுடியாது. நீங்கள் எங்கே போக வேண்டும் என்று நீங்கள் தீர்மானிக்க முடியாது.

இரண்டு வெவ்வேறான விஷயங்களில் ஒன்றை உங்களால் தேர்ந்தெடுக்க முடியாது.

நீங்கள் குழப்பவாதியாகவே தங்கிவிடுகிறீர்கள்.

நீங்கள் எதைச் செய்தாலும், உங்களின் ஒரு பகுதி உங்களுக்கு எதிர்ப்பாக உள்ளது. உங்கள் செய்கை ஒருபோதும் முழுமையாக இல்லை.

முழுமையாக இல்லாத எந்தச் செய்கையும் பூர்த்தி யளிப்பதாக இருக்க முடியாது. உங்களின் இருத்தலின் செய்கையில் ஒரு பகுதி தேர்ந்தெடுப்பதை மறுபகுதி எதிர்க்கிறது. இதனால் மேலும் மேலும் உங்கள் இருத்தலில் அதிக பிளவு உருவாகிறது. இதை நன்றாகப் புரிந்துகொள்ள வேண்டும்.

ஒற்றுமை என்பது முடிவில் உள்ளது; தொடக்கத்தில் இல்லை. நீங்கள் ஒருமைப்பட்ட இருத்தலாக ஆக முடியும், நீங்கள் இருமையல்லாத நிலையை அடைய முடியும், நீங்கள் யோகாவுக்கு வரமுடியும். யோகா என்றால் ஒற்றுமை, ஒருமை, ஒருமைப்பாடு, ஒருமுகத்தன்மை. ஆனால் அது முடிவில் தானே தவிர ஆரம்பத்தில் இல்லை.

ஆரம்பத்தில் இருமை உள்ளது, ஆரம்பத்தில் பிரிவு உள்ளது. ஆரம்பத்தில் சுகம்-இன்மை உள்ளது.

ஆகவே நீங்கள் புரிந்து கொள்ளவில்லையென்றால், அதை உருமாற்ற முயற்சி செய்யவில்லையென்றால், இணைப்பு இதுவரை நடைபெறவில்லை- உடல் மட்டத்தில்!

உடல் மட்டத்தில், நீங்கள் ஒருவராக ஆகிவிட்டீர்கள், உங்கள் தாயும், தந்தையும் உருகிவிட்டார்கள்-உடல் தளத்தில்! நீங்கள் ஓர் உடலாக ஆகி விட்டீர்கள்.

இரண்டு உடல்களிலிருந்து ஒரு புதிய ஒற்றுமை உதித்துள்ளது. ஆனால் அது உடல் அளவில் மேலே மட்டும்தான். உடலுக்குள், உடலைக் காட்டிலும் ஆழத்தில் அது அப்படி ஆகவில்லை.

உங்கள் மனதின் ஆழத்தில் நீங்கள் பிளவுபட்டிருக் கிறீர்கள். நீங்கள் மனதில் பிளவுபட்டிருக்கும்போது

உங்கள் மனத்திற்கும் அப்பால் எங்கும் கடந்து செல்வதற்கு வழியில்லை.

ஒற்றுமையாக, ஒருமைப்பட்டு, ஒன்றாக இருக்கும் மனம் மட்டுமே அப்பால் கடந்து செல்வதற்கு வழி உண்டு.

புத்தரின் இந்த வாய்பாடு மகத்தான வகையில் குறிப்பிடத் தக்கது. எளிய வாய்பாடுதான். ஆனால் அதை நேரடியாக அர்த்தம் கொள்ளாதீர்கள். உண்மையில், நேரடியாகவும், இது உண்மையானது தான். ஆனால், இது முழுமையான முன்னேற்றம். ஒன்றாக ஆவது எப்படி? உங்கள் இருத்தலின் எல்லா மட்டங்களிலும் இருமையைக் கரைப்பது எப்படி? பருப்பொருளிலிருந்து நுண்பொருள் வரை, சுற்றுப்புறத்திலிருந்து மையம் வரை, எப்படி இருமையை விலக்குவது? நீங்கள் ஒன்று என்னும் புள்ளிக்கு உடனடியாக எப்படி வருவது?

அந்தப் புள்ளிதான் சமயங்கள் அனைத்திற்கும் குறிக்கோள் ஆகும். யோகங்களின் குறிக்கோளும் அது தான். எல்லாம் பிரார்த்தனைகளின் குறிக்கோள், எல்லாம் தியானங்களின் குறிக்கோள், இஸ்லாத்தின் அனைத்துக்கும் குறிக்கோள்–எல்லாத் தேடுநர்களின் குறிக்கோளும் இதுதான்.

ஏனென்றால் ஒரு தடவை நீங்கள் ஒன்றாகிவிட்டால், அவ்வளவுதான் உங்கள் துன்பம் மறைகிறது.

துன்பம் ஏன் வருகிறது என்றால் பிணக்கினால்தான். உங்கள் வீடு பிளவுபட்டால் துன்பம், நீங்கள் ஒன்றாகி யில்லை என்றால் துன்பம். நீங்கள் 'ஒரு கூட்டம்'. ஆயிரத் தொரு குரல்கள் உங்கள் உள்ளுக்குள்ளே இருந்து உங்களை இழுக்கின்றன. எல்லா வழிகளிலும் எல்லாத் திசைகளிலும், அந்தக் குரல்கள் உங்களைத் தள்ளவும் செய்கின்றன.

நீங்கள் ஒரு குழப்பம், ஒரு கலகம். அதிசயம் என்ன வென்றால் பைத்தியம் பிடித்துப் போகாமல் நீங்கள் உங்களைச் சமாளித்துக் கொள்வது தான்.

ஏனென்றால் நீங்கள் பைத்தியத்தோடு கொதித்துக் கொண்டிருக்கிறீர்கள். நல்ல மனநிலையோடு நீங்கள் தொடர்ந்து இருந்து சமாளிப்பது அதிசயமானது தான். நீங்கள் கூட்டத்தில் உங்களைத் தொலைத்து விடாமல் இருப்பது பெரிய விஷயம் தான்.

ஆனால், தொலைந்து போனாலும் இல்லையென்றாலும், நீங்கள் எரிமலையின் மீது உட்கார்ந்து கொண்டிருக் கிறீர்கள்; அது எந்தக் கணத்திலும் வெடித்துச் சிதறக்கூடும்.

நினைவில் கொள்ளுங்கள். பைத்தியம் என்பது ஒவ் வொருவருக்கும் ஏற்படக் கூடிய ஒரு விஷயம். பைத்தியம் என்பது உங்கள் உள்ளுக்குள்ளேயே தூங்கிக் கொண்டிருக் கின்ற ஒரு விதை போல ஒரு விஷயம்-அது எந்தக் கணத்திலும் முளைத்து விடும்.

அது ஒரு சரியான பொருத்தமான பருவ நிலைகள், சரியான தட்பவெப்பம், சரியான வாய்ப்பு, இதற்காக மட்டுமே காத்திருக்கிறது.

ஒரு சிறிய விஷயம் கூட அதையும் உங்களையும் முடுக்கி விட்டுவிடக் கூடும். சாதாரணமாக நீங்கள் கட்டுக் கடங்காத வெளி-ஆவேசம்-கொள்வீர்கள். நீங்கள் ஆவேசம் கொள்ளக் காரணமே, உங்கள் அடித்தளம் பிளவுபட்டால் தான். அது ஒன்றாகச் சேர வாய்ப்பு இருக்கிறது. ஆனால், அதற்கு ஒரு மனிதன் மிகவும் விழிப்புணர்வோடும், முழுச்சூழ்நிலையிலும் உஷார் ஆகவும் இருக்க வேண்டும்.

நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.

முல்லா நசிருதீன் தனது மனநல மருத்துவரிடம் சென்று தன்னுடைய ஆளுமையைப் பிளக்க முடியுமா என்று கேட்டார்.

"ஆளுமையை பிளப்பதா? நான் ஏன் அந்த மாதிரி செய்ய வேண்டும்?" என்று அந்த மருத்துவர் கேட்டார்.

"உங்கள் அளவுக்குத் தனிமையில் இருக்கிறேன். தனியாக உணர்கிறேன், அந்த அளவுக்கு, இப்போது புரிகிறதா ஏன் என்று" என்று சொன்னார் முல்லா நசிருதீன்.

சும்மா சிரித்து விடாதீர்கள்; ஒருவேளை நீங்கள் ஒன்றாக ஆகாமல் இருக்கக் கடுமையாக உழைப்பதற்குக் காரணம் இதுவாகவும் இருக்கக்கூடும்.

ஏனென்றால் இந்த இருமை இருக்கிறதே இது, உங்களுக்கு ஒருவகையான தோழமையை அளிக்கிறது.

நீங்களே உங்களுடன் பேசிக் கொள்ளலாம். உரையாடல் செய்து கொள்ளலாம்-ஒவ்வொருவரும் உரையாடல் செய்துகொண்டுதான் இருக்கிறார்கள், தொடர்ச்சியாக.

உங்கள் நாற்காலியில் அமர்ந்து கொண்டு, உங்கள் கண்களை மூடிக்கொண்டு, நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? தொடர்ச்சியாக உரையாடல் நடக்கிறது. நீங்கள் கேள்வி கேட்கிறீர்கள், நீங்களே பதிலும் சொல்லிக் கொள்கிறீர்கள். இந்தப் பக்கத்திலிருந்தும் அந்தப் பக்கத்திலிருந்தும் இரண்டும் நிகழ்கின்றன.

இந்த உரையாடலைக் கவனியுங்கள். இந்த உரையாடல் நின்றுபோய் விட்டால், நீங்கள் மிகவும் தனிமையை உணர்கிறீர்கள் அல்லவா? நீங்கள் மிகவும் தனித்து விடப்பட்டதாக உணரமாட்டீர்களா? அந்த உரையாடல் ஆனதாக உணரமாட்டீர்களா?

எல்லா ஒலிகளும் திடீரென்று மறைந்து விட்டனவே என்று வருந்த மாட்டீர்களா?

அமைதியைத் தவிர எதுவுமில்லையே என்று அச்சம் கொண்டு அல்லற்பட மாட்டீர்களா?

அதனால் நீங்கள் இந்த உரையாடலைப் போஷித்துக் கொண்டே இருக்கிறீர்கள். இந்த உரையாடல் இருக்க வேண்டும் என்று உதவி செய்து கொண்டே இருக்கிறீர்கள்.

நீங்கள் பிறரிடம் பேசுகிறீர்கள் அல்லது அது நடக்க வில்லையென்றால் நீங்கள் உங்களுடனேயே பேசிக் கொள் கிறீர்கள்; ஏனெனில் மற்றவர்கள் எப்போதும் கிடைப்பது சாத்தியம் இல்லை.

நீங்கள் விழித்துக் கொண்டிருக்கும்போது, நீங்கள் மற்றவர்களோடு பேசிக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் தூங்கிக்கொண்டிருக்கும்போது உங்களுடனேயே பேசிக் கொண்டிருக்கிறீர்கள்.

உங்கள் கனவு என்ன? நீங்கள் தன்னந்தனிமையில் எந்த அளவுக்கு இருக்கிறீர்கள் என்றால், உங்கள் இருத்தலின் உள்ளுக்குள்ளே ஒரு சமூகம் படைத்து நாடகத்தை உருவாக்கிக் கொள்கிறீர்கள்.

உங்கள் கனவினில் நீங்கள் தான் இயக்குநர். நீங்கள் தான் கதாசிரியர், நீங்கள் தான் நடிகர், நீங்கள் தான் திரை, மற்றும் நீங்கள் தான் அவையோர், நீங்கள் தனியாக உள்ளீர்கள். ஆனால் நீங்கள் அழகிய நாடகம் உருவாக்கு கிறீர்கள். முழுப்பகலும் முழு இரவும் நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? உங்களுடனேயே பேசிக் கொண் டிருப்பதா? இந்த நிலையான பேசுதல், இந்த நிலையான உரையாடல், உங்களுடன்கூட- இது சலிப்படைய வைக்கவில்லையா?

ஆம். நீங்கள் சலிப்படைகிறீர்கள். ஆம் நீங்கள் உங்களுட னேயே சலிப்படைகிறீர்கள். ஆனால் இருந்தும் நீங்கள் குறைந்த தீமையைத் தேர்கின்றீர்கள்- இந்த உரையாடல் நிற்குமானால், நீங்கள் இன்னும் கூடக் கொஞ்சம் சலிப் படைவீர்கள். குறைந்தபட்சம் ஏதோ ஒன்று சொல்ல வேண்டியுள்ளது. ஏதோ ஒன்று உள்ளுக்குள் செய்ய வேண்டியுள்ளது.

உரையாடல் இல்லாமல் தனியாக விடப்பட்டால், நீங்கள் காணாமல் போய்விடுவீர்கள். இந்த உரையாடல் உங்களைக் கொஞ்சம் உயிர்த்துடிப்பு உள்ளவராக

வைத்துள்ளது. வாழ்க்கையுடன் அதிர்ந்து கொண்டுள்ளது. முல்லா சரியாகச் சொன்னார். அவர் சொன்னார். "நான் அந்த அளவுக்குத் தனிமையை உணர்ந்து கொண்டிருக் கிறேன்."

நினைவு கொள்க. சாதனையின் முழுமுயற்சியும் உங்களைத் தனிமையாக ஆக்கிக்கொள்ள உதவுவது தான். ஏனென்றால் நீங்கள் தனியாக இருக்கத் தயாராக இருந்தால்தான், நீங்கள் உங்கள் உள்ளார்ந்த மௌனத்தில் விழத் தயாராய் இருந்தால்தான், நீங்கள் இந்த நிலைபோன பேச்சோடு ஒட்டிக் கொள்ளாமல் இருந்தால் தான் அதாவது உள்ளார்ந்த பேச்சு-நீங்கள் ஒற்றுமையாக வரமுடியும்.

ஏனென்றால், இந்த நிலையான உள்ளார்ந்த பேச்சு உங்களை இரட்டையாகப் பிரிந்தவராக இருக்கச் செய்ய உதவுகிறது.

சற்றே இன்னொரு இரவில், ஒரு துறவி என்னிடம் வந்தார். அவர் சிலசமயங்களில் படுக்கையிலிருந்து விழுந்து விடுகிறாராம். காலையில் விழிப்புணர்வு கொள்கிறாராம். ஒருநாள் படுக்கையிலிருந்து பத்தடி தள்ளி அவர் இருந்திருக்கிறார். ஆகவே கனவுகள் பயங்கரக் கனவுகள் பார்த்துக் கொண்டிருக்கவேண்டும். படுக்கையிலிருந்து பத்தடி தள்ளி அவர் தன்னைக் கண்டிருக்கிறார். அவரது தூக்கம் என்பது மயக்க நிலையைப் போன்றதாக இருந்திருக்க வேண்டும்.

நான் அவரிடம் ஒரு விஷயம் கேட்டேன். பகலில் நீங்கள் அதிகம் பேசுகிறீர்கள்?! அவர் இல்லை என்றார்! அவ்வளவு தான். அதுவே இதை விளக்குகிறது.

உலகில் இருவகையான மக்கள் உள்ளார்கள். பேசுவோர், கேட்போர், பே-மக்கள்; கே-மக்கள். பேசுவோர் முழுநேரமும் பேசுகிறார்கள். இரவில், அப்புறம் அவர்கள் கேட்கிறார்கள். அப்புறம் அவர்கள் ஒரு சமயச் சொற்பொழிவு அல்லது ஏதோ ஒன்றைக் கேட்கிறார்கள்.

அவர்கள் கனவில் சர்ச்சுக்குச் செல்கிறார்கள். பகல் முழுவதும் அவர்கள் பேசிக் கொண்டே இருக்கிறார்கள். நஷ்ட ஈடுசெய்ய வேண்டும். தங்கள் கனவுகளில் தாங்கள் கேட்கிறார்கள். இரவில் அதிக நேரம் பேசுகிறார்கள். அவர்கள் கத்துகிறார்கள். பகலில் அவர்கள் சொல்ல விரும்பிய, ஆனால் சொல்ல முடியாத எல்லாவற்றையும் இரவில் பேசுகிறார்கள்-அவர்கள் பேசுவதைக் கேட்க யாரும் ஆயத்தமாய் இல்லை.

அவர்கள் உளப்பகுப்பாய்வாளர்களிடம் செல்லும் போது, உளப்பகுப்பாய்வாளர்கள் அவர்கள் பேசுவதைப் பொறுமையாகவும் கவனமாகவும் கேட்கும்போது அது நிகழ்கிறது. உண்மையில் அவர்கள் கேட்பதற்குப் பணம் பெறுகிறார்கள். அதன்பிறகு அவர்களின் கனவுகள் மாறத் தொடங்குகின்றன. கனவுகளில் அவர்கள் பேசிக் கொண்டிருப்பது வெகு விரைவில் குறையத் தொடங்குகிறது. கனவில் தரம் மாறுபடுகிறது. ஏனென்றால் அவர்கள் பேசுவோராக ஆகிவிட்டார்கள். அவர்கள் பேசுவதை கவனமாகக் கேட்க ஒருவர் கிடைத்து விட்டார்.

அவர்களது கனவுகள் இப்போதெல்லாம் அதிக அமைதியாக இருக்கின்றன. இரவு நேரம் கத்துவதில்லை. பேசுவதுமில்லை. அவர்களது இரவுகள் அதிக மௌனமாக, அதிக நிம்மதியுள்ளனவாக ஆகிவிட்டன.

நினைவு கொள்க. நீங்கள் பகல் நேரத்தில் எதை இழக்கிறீர்களோ அதைக் கனவில் செய்கிறீர்கள்.

கனவு நிரப்பும் தன்மையுடையது; பகலில் நிரம்பாதவற்றை அது நிரப்பிவைத்து ஈடுகட்டுகிறது. பகலில் நீங்கள் பிச்சைக்காரன் என்றால் உங்கள் கனவில் நீங்கள் சக்கரவர்த்தியாய் இருப்பீர்கள்.

பகலில் நீங்கள் சக்கரவர்த்தி என்றால் இரவு நேரத்தில் நீங்கள் புத்தராக ஆகியதாகக் கனவு காண்கிறீர்கள்-புத்தர் ஒரு பிச்சைக்காரர்.

இப்படித்தான் அது நடந்தது. புத்தர்சக்கரவர்த்தியின் அரண்மனையில் பிறந்திருந்தார். ஆனால் அவர், பிச்சைக் காரனாக ஆவது பற்றிக் கனவுகள் கண்டார்.

பன்னிரண்டு ஆண்டுகள் கழித்து, வீடு திரும்பிய நேரத்தில் ஞானம்பெற்ற நிலையில் வந்த நேரத்தில் அவர் தந்தை கூறினார். "இந்த முட்டாள்தனத்தை நிறுத்து. நீ என் ஒரேமகன். விருப்ப மகன். திரும்பி வா; நான் உனக்காகக் காத்திருக்கிறேன். இந்த முழு ராஜாங்கமும் உன்னுடையது. நம்முடைய குடும்பத்தில் ஒரு பிச்சைக் காரன் ஒருபோதும் இருந்ததில்லை" என்றார்.

புத்தர் சிரித்து விட்டுக் கூறினார். "இருக்கலாம். ஐயா, உங்கள் குடும்பத்தில் ஒருபோதும் பிச்சைக்காரர் இருந்த தில்லை. ஆனால் என்னைப் பொருத்தவரை, எத்தனையோ வாழ்க்கைகளாக நான் பிச்சைக்காரன் ஆவதற்குக் கனவு கண்டு வந்திருக்கிறேன்."

நீங்கள் மிகவும் பணக்காரர்கள் ஆகும்போது, ஏழைகள் மிகவும் மகத்தான அழகிலும் நிம்மதியிலும் வாழ்கிறார்கள் என்று நினைக்கிறீர்கள்.

நீங்கள் நகரத்தில் வாழும்போது, அதாவது, மிகப் பெருநகரமாகிய மும்பை, டோக்கியோ, நியூயார்க் முதலியவற்றில் வாழும்போது, நீங்கள் கிராமங்கள் அழகியவை என்று நினைக்கிறீர்கள்.

கிராமவாசிகளைக் கேளுங்கள். எப்படியாவது, மும்பையை அல்லது டோக்கியோவை, அல்லது நியூயார்க்கை அடைந்து விட வேண்டும் என்று ஏங்கிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் கனவு காண்கிறார்கள். நீங்கள் ஏழையாய் இருந்தால் பணக்காரர் ஆவது பற்றிக் கனவு காண்பீர்கள். நீங்கள் பணக்காரராய் இருந்தால் ஏழையைப் பற்றிக் கனவு காண்பீர்கள்.

உங்கள் கனவுகளைக் கவனியுங்கள். பகலில் குறையாக இருக்கும். ஏதோ ஒன்றைப் பூர்த்தி செய்வது போலத்தான்

கனவுகள் இருக்கின்றன. பகலில் உங்கள் துருவத்தன்மை யின் ஒரு பாகமாக இருக்கிறீர்கள். இரவில், உங்கள் துருவத் தன்மையின் இன்னொரு பகுதியாக ஆகிறீர்கள். நீங்கள் இரண்டாக இருக்கிறீர்கள். உங்கள் கனவில் உரையாடல் தொடர்கிறது என்பது மட்டுமல்லாமல், விழித்திருக்கும் கணங்களிலே கூட ஓர் உரையாடல் இருக்கும்.

விழிப்பில் நீங்கள் கெட்டவராக இருந்தால், தூக்கத்தில் நீங்கள் மகானாக ஆவீர்கள். விழிப்பில் நீங்கள் மகானாக இருந்தால் உறக்கத்தில் பாவியாக ஆவீர்கள். அதனால் தான் மகான்கள் என்று சொல்லப்படுவோர் உறக்கத்தைப் பற்றி மிகவும் அஞ்சுபவர்கள். அவர்கள் உறக்கத்தைக் குறைத்துக் கொண்டே வருகிறார்கள். ஏனென்றால் முழுப் பகலும் அவர்கள் எப்படியோ மகான்களாகத் தங்கியிருப்ப தில் சமாளித்து விட்டார்கள். ஆனால் இரவு நேரத்தில் என்ன செய்வது? பகல் நேரத்திலெல்லாம் புனிதமானவர் கள், பெண்களின் முகத்தைப் பார்க்காதவர்கள், வாழ்க்கையை அவர்கள் தவிர்த்து விட்டார்கள். ஆனால் இரவு நேரத்தில் என்ன செய்வது? அவர்கள் தவிர்த்து விட்ட முகங்கள் அனைத்தும் இரவில் அவர்களின் இருத்தலில் மேலெழும்பி வருகின்றனவே!

அழகிய பெண்கள், பகல் நேரத்தில் பார்த்ததை விடவும் அதிகமாக அழகு படைத்தவர்கள், திடீரென்று வெளியே கிளம்பி வருகிறார்கள்.

சொர்க்கத்தின் அதிபதியாகிய இந்திரன் தன் தேவ மாதர்களை அனுப்பி அவர்களை அழிப்பதாக நினைக் கிறார்கள். யாரும் எந்தத் தேவமாதுவையும் அனுப்ப வில்லை. யாருக்கும் இந்தப் பாவப்பட்டவர்கள் மீது ஆர்வ மில்லை. எதற்காக இந்திரன் ஆர்வம் கொள்ளவேண்டும்? எதற்காக.

இல்லை. இது ஈடுகட்டல் முயற்சி. பகல் நேரத்தில் அவர்கள் தங்கள் 'மகான்' தன்மையைக் கட்டுப்படுத்திக் கொள்கிறார்கள். இரவு நேரத்தில்-அவர்கள் ஓய்வாக

இருக்கும்போது-அவர்கள் ஓய்வு எடுத்தேயாக வேண்டியிருக்கிறது. அவர்கள் ஓய்வெடுத்துத் தளர்வாக இருக்கும்போது- திடீரென்று அவர்களை அழுத்திக் கொண்டிருந்தவை அனைத்தும் மேலெழும்பி வருகின்றன.

உங்கள் பகலும் உங்கள் இரவும் நிலையான உரையாடல். உளப்பகுப்பாய்வாளர்கள் என்ன கூறுகிறார்கள்? “பகல் வாழ்க்கையைக் கவனிப்பதைப் போன்ற அளவு, இரவு வாழ்க்கையைக் கவனிப்பது அவ்வளவு முக்கியமானது அன்று. ஏனென்றால், பகல்வாழ்க்கையில் நீங்கள் பாசாங்குக்காரர்கள், போலிகள். இரவில் நீங்கள் அதிக உண்மையானவர்; நீங்கள் கனவிலே போலிகளில்லை, இனியும் பாசாங்குக்காரர்கள் இல்லை. உங்களுக்கு முகமூடி இல்லை. அதனால் தான் உளப்பகுப்பாய்வாளர்கள் உங்கள் கனவுகளை அலச நினைக்கிறார்கள்.

இதுதான், வினோதமானது. ஆனால் உண்மையானது- உங்கள் கனவு உங்கள் பகலைக் காட்டிலும் உண்மையானது. விழிக்கும்போது இருப்பதை விட, நீங்கள் தூங்கும்போது, உண்மையானவராக இருக்கிறீர்கள்.

இது துரதிர்ஷ்டவசமானது தான். ஆனால் இது அப்படித்தான். மனிதன் அந்த அளவுக்கு ஏமாற்றுக்காரனாக ஆகிவிட்டான்.

நான் என்ன சொல்கின்றேன் என்றால் இதுதான். “நீங்கள் ஒருமையாக ஆனால் ஒழிய இது தொடரும்”. பகல் நேரத்தில் உங்களால் கட்டுப்படுத்திக் கொள்ள முடியும். நீங்கள் ஒரு நல்ல மனிதராக ஆகமுடியும். இரவில், நீங்கள் கெட்டமனிதராக ஆவீர்கள், நீங்கள் உங்கள் கனவில் கெட்ட மனிதராக ஆவீர்கள்.

நீங்கள் எதையெல்லாம் செய்யக்கூடாது என்று பகலில் கட்டுப்படுத்தி வைத்திருந்தீர்களோ அதையெல்லாம் இரவில், கனவில் அப்படியே செய்து கொண்டிருப்பீர்கள்-

அதே விஷயங்களை, அப்படியே-கனவில் செய்து கொண்டிருப்பீர்கள்.

/பகலில் பட்டினி கிடந்திருந்தால் கனவில் அறுசுவை விருந்து உண்பீர்கள். உங்கள் மறுக்கப்பட்ட பகுதி, பழிவாங்கும். இரண்டு வழிகளிலும் ஒரே நேரத்தில் நீங்கள் செல்ல முடியாது. அதுதான் மனிதன் என்று அழைக்கப் படும் நோய். அதுதான் ஏக்கம், வேதனை-நீங்கள் இருவழி களில் செல்ல முடியாது. ஒரே நேரத்தில் நீங்கள் நல்லவராகவும் கெட்டவராகவும் இருக்க முடியாது. ஒரே நேரத்தில் நீங்கள் மகானாகவும் பாவியாகவும் இருக்க வழியில்லை. இதுதான் பிரச்சினை! கடினம்!/

நீங்கள் தேர்ந்தெடுக்க வேண்டும். நீங்கள் ஒரு விஷயத் தைத் தேர்ந்து எடுக்கும் போது, நீங்கள் பிளவு பட்டுப் போவீர்கள். நீங்கள் தடுமாற்றத்தில்-ஊசலாட்டத்தில்-இதுவா அதுவா என்னும் நிலையில் உள்ளீர்கள்.

நீங்கள் தேர்ந்தெடுக்கும் கணத்திலேயே, பிரச்சினை உதிக்கிறது. அதனால்தான் பலமக்கள் தேர்ந்தெடுக்காமல் இருப்பதைத் தேர்ந்தெடுக்கிறார்கள். அதாவது தேர்ந் தெடுக்க விரும்புவதில்லை.

அவர்கள் வாழ்வது ஒரு பிளவு வாழ்க்கை-எது நடக்கிறதோ? நடக்கிறது. அவர்கள் தேர்ந்தெடுப்பதில்லை. எந்தக் கணத்தில் அவர்கள் தேர்ந்தெடுக்கிறார்களோ அந்தக் கணமே பதட்டம் உருவாகிறது.

நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? உற்றுக் கவனித்திருக் கிறீர்களா? நீங்கள் தீர்மானத்திற்கு வரவேண்டிய பொழுதி லெல்லாம், மிகமிக பதட்டம் உள்ளவர்களாக ஆகிறீர்கள். அது ஒரு சாதாரணத் தீர்மானமாகக் கூட இருக்கலாம். நீங்கள் ஒரு ஜோடி காலணிகள் வாங்குகிறீர்கள்-எந்த ஜோடி என்று உங்களால் தீர்மானிக்க முடியவில்லை-பதட்டம் எழுகிறது. இப்போது இது ஒரு குப்பை-ஆனால், இருப்பினும், பதட்டம் எழுகிறது.

மாபெரும் தீர்மானங்களோடு சம்பந்தப்பட்டதல்ல பதட்டம். மாறாக தீர்மானம் செய்வதோடு சம்பந்தப் பட்டது பதட்டம். ஏனெனில் நீங்கள் தீர்மானம் செய்ய முயலும்போது இரண்டு பாகமாகி விடுகிறீர்கள். உங்கள் இரண்டு பாகங்களும் உங்களை ஆதிக்கம் செலுத்த முயல் கின்றன.

உங்கள் தாய் ஆதிக்கம் செலுத்த நினைக்கிறாள். உங்கள் தந்தை ஆதிக்கம் செலுத்த நினைக்கிறார். உண்மையில், உங்களுக்கு நன்றாகத் தெரியும். அவர்கள் எதைப்பற்றியும் ஒத்துக்கொள்ளவில்லை. அவர்கள் உங்களில்கூட சம்மதிக்கவில்லை.

உங்கள் அம்மா 'இந்த ஜோடி நல்லது' என்று சொல்கிறாள். 'அவள் சொல்வதைக் கேட்காதே. அவள் முட்டாள்தனமானவள், இந்த ஜோடி நல்லது" என்று சொல்கிறார் உங்கள் அப்பா.

உங்கள் ஆண் ஆற்றல் ஒரு விஷயத்தைச் சொல்கிறது. உங்கள் பெண் ஆற்றல் மற்றொரு விஷயத்தைச் சொல்கிறது. உங்கள் பெண் ஆற்றல் வித்தியாசமான மனப் பான்மைகளை உடையது. அது அந்தக் காலணியின் அழகை, வடிவத்தை, அமைப்பை, நிறத்தை, அழகியலைப் பார்க்கிறது.

ஆண் ஆற்றலோ வித்தியாசமான மனப்பான்மை உடையது. அந்தக் காலணியில் உழைக்கும் தன்மை, விலை, சக்தி-அது ஒரு சக்தி வாய்ந்த வடிவமைப்பு உடையதாக இருக்கிறதா- ஏனென்றால் அப்படி இருந்தால் தான் வீதியில் நடை செல்லும்போது உங்கள் ஆண் ஆணவத் தன்மை அதன்மூலம் வெளிப்பட முடியும்- என்று கவனிக் கும்.

ஆணின் ஆணவம் தேர்ந்தெடுக்கும் அனைத்தும் ஆற்றலின் அடையாளமாக இருக்கவேண்டும். ஆணின் ஆணவம், ஒரு காரை வேகமான காரா என்று பார்த்துத்

தேர்ந்தெடுக்கிறது. அதாவது ஆற்றலின் அடையாளம் சக்தி வாய்ந்ததாக இருக்க வேண்டும்.

எப்போதுமே நீங்கள் சக்தியற்ற மக்கள், மகத்தான சக்தியுள்ள கார்களில் உட்கார்ந்திருப்பதைக் காணலாம்- சக்தியில்லாத மக்கள். எவ்வளவு அதிகமாக அவர்கள் சக்தியற்றவர்களோ அவ்வளவு அதிக சக்தி வாய்ந்த கார் அவர்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறது. ஏன்? அவர்கள் தங்கள் சக்தியின்மையை ஈடுகட்ட வேண்டும் அல்லவா! அதுதான்.

ஆணின் ஆணவம், தன்னைப் பூர்த்தி செய்யும் வகையில்தான் எப்பொழுதும் தேர்ந்தெடுத்துக்கொள்கிறது. நான் சக்தி வாய்ந்தவன். அதுதான் அடிப்படைக் கணிப்பு. பெண்ணின் தன்மை வேறுவகையான சக்தி ஒன்றைத் தேர்ந்தெடுக்கிறது- நான் அழகானவள். ஆகவே அவர்கள் ஒருபோதும் இணங்கிப் போவதில்லை. அவர் இணங்குவதற்காகப் படைக்கப்படவில்லை. அவர்களது பார்வைகள் வித்தியாசமானவை.

இது நடந்தது:

முல்லா நசிருதீன் பல பெண்களைத் திருமணம் செய்ய முயன்று பார்த்தார். ஆனால் அவருடைய அம்மா அவர்கள் எல்லாரையும் எதிர்த்தார்.

அதனால் அவர் என்னிடம் வந்தார். "ஐயா எனக்கு உதவுங்கள். நான் யாரைத் தேர்ந்தெடுக்கிறேனோ, அவளை உடனே மறுக்கிறாள் என் அம்மா. என் அம்மா அவ்வளவு ஆதிக்கவுணர்வும், ஆக்கிரமிப்புணர்வும் மிக்கவராக இருப்பதால் உடனடியாக மறுக்கிறாள். நான் களைத்து விட்டேன். வாழ்க்கை முழுவதும் இப்படியே நான் பிரம்மச் சாரியாகவே இருந்துவிட வேண்டியதுதான்'' என்று வேதனைப் பட்டார்.

"நீங்கள் ஒரு விஷயம் செய்யுங்கள். உங்கள் அம்மாவின் விருப்பு வெறுப்புகளைப் பூர்த்திசெய்யும் ஆர்வமுள்ள ஒரு

பெண்ணை நீங்கள் தேர்ந்தெடுங்கள். அப்பொழுதுதான் அவள் அங்கீகரிப்பாள்" என்று நான் யோசனை கூறினேன்.

இறுதியாக, அவர் ஒரு பெண்ணைக் கண்டுபிடித்தார். அவருக்கு மிகவும் மகிழ்ச்சி. "என் அம்மா மாதிரியே நடக்கிறாள், என் அம்மா மாதிரியே உடுத்துகிறாள். அதே நிறங்களைத் தேர்ந்தெடுக்கிறாள், அதே மாதிரி சமைக்கிறாள். ஆகவே என் அம்மா விரும்புவாள் என்று நினைக்கிறேன்" என்று சொன்னார்.

'நீங்கள் சொல்லுங்கள்' என்று சொன்னேன். என் அம்மா விரும்பினாள். என் தாய் மிகப் பெரிய அளவில் விரும்பினாள். முல்லா வந்தார். ஆனால் அவர் மிகவும் வருத்தப்பட்டார். 'நீங்கள் ஏன் வருந்துகிறீர்கள்' என்று கேட்டேன்.

"நான் வாழ்நாள் முழுவதுமே பிரம்மச்சாரியாகவேதான் இருப்பேன் போலிருக்கிறது" என்று சொன்னார்.

'என்ன நடந்தது? உங்கள் அம்மா விரும்பவில்லையா?' என்று நான் கேட்டேன்.

அவர் சொன்னார்: "என் அம்மா விரும்பினாள், விரும்பினாள், அவ்வளவு விரும்பினாள். ஆனால்- என் தந்தை? அவர் மறுக்கிறார். இப்போது இது அசாத்தியமானது. "அவள் உன் அம்மாவைப் போலவே இருக்கிறாள். ஒருத்தி போதும்! நான் சலித்துவிட்டேன். அதே சிக்கலில் நீயும் சிக்குவதை ஒத்துக்கொள்ள மாட்டேன். நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? மீண்டும் அதே தவறா?

இந்த இரண்டு வகை துருவங்கள்தாம், உங்கள் பதட்டத்தின் அடிப்படை ஆகும். ஒரு புத்தர் அல்லது ஒரு குரு, இந்த இருமைக்கும் அப்பால் நீங்கள் செல்வதற்கான முயற்சிக்குத் தன் முழு ஒத்துழைப்பையும் அளிப்பார்.

இந்த வாய்பாடு மிகவும் முக்கியமானதாகும். அந்த வாய்பாட்டைப் படிக்கும் முன்பு நான் உங்களுக்கு ஒரு

மிக முக்கியமான உவமைக் கதையைச் சொல்ல விரும்புகிறேன். 'தி மாகுஸ்' என்கின்ற அவரது அழகான புத்தகத்தில் இந்த உவமைக் கதையை எழுதியிருக்கிறார்.

**இளவரசனும் மந்திரவாதியும்**

முன்பு ஒரு காலத்தில் ஓர் இளவரசன் இருந்தான். அவன் எல்லா விஷயங்களையும் நம்பினான், மூன்று விஷயங்கள் தவிர.

'இளவரசிகளில்' அவனுக்கு நம்பிக்கையில்லை.

'தீவுகளில்' அவனுக்கு நம்பிக்கையில்லை.

'கடவுளில்' அவனுக்கு நம்பிக்கையில்லை.

இளவரசனின் தந்தையாகிய அரசர், இந்த விஷயங்கள் உலகத்திலேயே இல்லை என்று கூறினார்.

அந்த நாட்டில், இளவரசிகளோ, தீவுகளோ, கடவுளின் அறிகுறிகளோ தென்படாத காரணத்தால், இளவரசன் தந்தை சொல்லை நம்பினான்.

ஆனால் பிறகு ஒரு நாள், தன் அரண்மனையிலிருந்து ஓடிப்போன இளவரசன், வேறொரு நாட்டைச் சென்றடைந்தான்.

அங்கே, ஒவ்வொரு கடற்கரையிலும் அவன் தீவுகளைப் பார்த்து ஆச்சரியப்பட்டான்.

அந்தத் தீவுகளில் மிகவும் விநோதமான, தொல்லைப் படுத்தும் பிராணிகள் அங்கே இருந்தன. பெயர் தெரிந்து கொள்ள அஞ்சினான். ஒரு படகுக்காகத் தேடிக்கொண் டிருந்த இளவரசன், மாலை உடை அணிந்திருந்த ஒருவன், தன்னை அந்தக் கடற்கரையில் நெருங்கி வருவதைக் கண்டான்.

"அவை உண்மையான தீவுகளா" என்று கேட்டான் இளவரசன். 'உண்மைதான். அவை உண்மையிலேயே தீவுகள் தான்' என்று சொன்னான், மாலையுடை மனிதன்.

"அதோ அந்த வினோதமான, தொல்லையளிக்கும் பிராணிகள் யார்?" என்று இளவரசன் கேட்டான்.

"அவர்கள்தான் உண்மையான அசல் இளவரசிகள்" என்று மாலை உடை மனிதன் சொன்னான்.

"அய்யோ அப்படியானால் கடவுளும் இருக்க வேண்டும்" கத்தினான் இளவரசன்.

"நான்தான் கடவுள்" என்று மாலையுடை மனிதன் கூறினான், அவன் வில்லும் வைத்திருந்தான்.

இளவரசன், எவ்வளவு சீக்கிரமாகத் தன் நாட்டிற்குத் திரும்ப முடியுமோ அவ்வளவு சீக்கிரமாகத் திரும்பி விட்டான். 'ஆக... நீ திரும்ப வந்து விட்டாய்' என்று தந்தையாகிய அரசன் கூறினான்.

'நான் தீவுகளைப் பார்த்தேன். இளவரசிகளைப் பார்த்தேன். கடவுளையும் பார்த்தேன்' என்று மிகவும் வெறுப்போடு கூறினான்.

அரசர் அசைந்து கொடுக்கவே இல்லை. அலட்டிக் கொள்ளவும் இல்லை. அவர் உறுதியாகச் சொன்னார்:

"தீவுகள் இல்லை, இளவரசிகள் இல்லை; கடவுளும் இல்லை" என்று.

"நான் பார்த்தேன்." –இது இளவரசன்.

"கடவுள் எப்படி உடையணிந்திருந்தார் என்று சொல்" என்றான் அரசன்.

"அவர் முழுமையான மாலை நேர உடையில் இருந்தார்."

"அவருடைய அங்கியின் கைப்பட்டிகள் பின்னால் சுருண்டிருந்ததா" என்று கேட்டார்.

இளவரசன் 'ஆம்' என்றான். அரசன் புன்னகைத்தான். "அது ஒரு மந்திரவாதியின் சீருடை. நீ ஏமாற்றப்பட்டு விட்டாய்" என்று மேலும் சொன்னான், அரசன்.

இளவரசன் அடுத்த நாட்டிற்குத் திரும்பவும் சென்றான். அதே கடற்கரை. அதே முழு மாலையுடையணிந்த மனிதன். 'அரசராகிய என் தந்தை நீ யாரென்று சொல்லி விட்டார்' என்றான் இளவரசன், வெறுப்போடு.

"நீ என்னை ஏமாற்றிவிட்டாய், சென்றமுறை; இப்போது முடியாது. ஏனென்றால், நான் நன்கு அறிவேன். இவை உண்மைத் தீவுகள் இல்லை. உண்மை இளவரசிகளும் இல்லை. ஏனென்றால் நீ ஒரு மந்திரவாதி!"

கடற்கரையில் இருந்த மனிதன் புன்னகைத்தான். 'நீ தான் ஏமாற்றப்பட்டுவிட்டாய், தம்பி! உன் தந்தையின் அரசாங்கத்தில் பல தீவுகள் உள்ளன. பல இளவரசிகளும் உள்ளனர். ஆனால் நீ உன் தந்தையின் மந்திரத்தில் கட்டுண்டிருக்கிறாய்; அதனால் உன்னால் அவற்றைக் காண முடியாது' என்றான் கடற்கரை மனிதன். அதாவது மாலையுடை மனிதன்.

இளவரசன் மிகவும் சிந்தனைவசப்பட்டு அரண்மனை திரும்பினான். தந்தையைப் பார்த்தபோது தந்தையைக் கண்களில் நேருக்கு நேர் பார்த்தான். "தந்தையே, நீங்கள் உண்மையில் அரசர் இல்லை என்பதும் உண்மையில் மந்திரவாதி தான் என்பதும் உண்மை தானா?"

அரசன் புன்னகைத்தான். தன் சட்டை மடிப்புகளைப் பின்னால் மடித்துக் கொண்டான். 'ஆம் மகனே. நான் மந்திரவாதி மட்டும்தான்!' என்று கூறினான்.

'அப்படியானால் அடுத்த கடற்கரையில் உள்ளவர் கடவுள் தானே' என்று கேட்டான்.

'அந்தக் கடற்கரையில் உள்ள மனிதன் இன்னுமொரு மந்திரவாதி' என்றான்.

'நான் உண்மையை அறியவேண்டும். மந்திரவித்தையைத் தாண்டிய உண்மையை நான் அறிய வேண்டும்' என்று அலறினான். மந்திரவித்தையை தாண்டிய உண்மை என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

'மந்திரவாதத்தைத் தாண்டி அதற்கும் மேல் உண்மை என்று எதுவுமில்லை' என்றான் அரசன்.

இளவரசன் மிகவும் துயரப்பட்டான். நான் தற்கொலை செய்து கொள்ளப் போகிறேன். மந்திரவித்தையைக் கடந்து உண்மை இல்லையென்றால் நான் உயிரோடு வாழ்ந்து என்ன பயன்? என்னை நான் தற்கொலை செய்து கொள் வேன். நான் நேர்மையாக உண்மையைச் சொல்கிறேன்" என்று சொன்னான் இளவரசன்.

அரசன் தன் மந்திரவித்தையால், 'சாவை'த் தோன்றச் செய்தான். சாவு வாசற் கதவருகே நின்றது. அவனைக் கையசைத்து அழைத்தது. இளவரசன் நடுநடுங்கினான். அவன் அழகிய ஆனால் உண்மையற்ற தீவுகளை நினைவுபடுத்திக் கொண்டான். உண்மையற்ற ஆனால் அழகிய இளவரசிகளை நினைவுபடுத்திக் கொண்டான். 'ரொம்ப நல்லது. நான் இதைத் தாங்க முடியும். ஒவ்வொன்றும் மந்திரவித்தை தான் என்றால், மந்திர வித்தைக்கு அப்பால் எதுவுமே இல்லை என்றால், நான் சாவைக்கூட ஏற்றுக்கொள்ள முடியும்" என்று கூறினான்.

'என் அருமை மகனே, நீயும் ஒரு மந்திரவாதியாகத் தொடங்கிவிட்டாய்' என்று கூறினான்.

இப்போது இந்த உவமைக்கதை மிகமிகக் குறிப்பிடத் தக்கது. ஒரு மந்திரவாதத்தை இன்னொன்றாக மாற்றுவது மிக எளிது. ஒரு கோட்பாட்டிலிருந்து இன்னொரு கோட்பாடு எளிது. ஒரு ஹிந்துவாக இருந்து ஒரு கிறிஸ்துவனாக மாறுவது எளிது. அல்லது கிறிஸ்துவராக இருந்து இந்துவாக மாறுவது எளிது. உலகத்திலிருந்து மாறி ஒரு மடத்திற்குச் செல்வதோ, மடத்திலிருந்து மீண்டும் உலகத்திற்கே திரும்பி வந்து திருமணம் செய்து கொள்வதோ இரண்டுமே மிகவும் எளியது தான். மிகவும் எளியது; ஆனால் விட்டுச் செல்வதும் மாறுவதும் எதுவு மில்லை. ஆனால் மந்திரவித்தை உலகங்கள்தான்.

உங்களை நீங்கள் யாரென்று புரிந்து கொள்ளாதவரை முக்கிய விஷயத்திற்கு நீங்கள் வராதவரை யார் இந்த ஏமாற்றப்பட்டவர்? யார் இந்த விழிப்புணர்ச்சி? மாயை தன் லீலைகளை இதன் மூலம் தானே செய்கிறது? அது வசியப்படுத்துவதாக, கவர்ந்திழுப்பதாக இருக்கிறது. யார் இந்த அடிப்படை விழிப்புணர்ச்சி? ஆம். ஒரு கனவு பொய்யாக இருக்க முடியும். ஆனால் கனவு காண்பவன் பொய்யாக இருக்க முடியாது?

கனவு இருக்க வேண்டுமென்றால்கூட உண்மையான கனவு காண்பவன் ஒருவன் தேவைப்படுகிறான்.

இதுதான் ஒட்டுமொத்தமான கீழைநாடுகளின் உண்மைத் தேடுதல் ஆகும். இது உங்களுக்குத் தெளிவாகட்டும்.

பகலில் நீங்கள் ஓர் உலகத்தில் வாழ்கிறீர்கள். நீங்கள் அதை உண்மை என்று எண்ணுகிறீர்கள்.

உங்கள் எண்ணத்தினால் எதுவும் பாதிப்பில்லை. ஏனென்றால், இரவு நேரத்தில், இந்த உண்மை உலகத்தை முழுமையாக மறந்துவிடுகிறீர்கள்.

நீங்கள் மறந்து விடுவதோடு மட்டுமல்லாமல், அதை நீங்கள் அறிந்திருந்தீர்கள். எப்பொழுதோ என்று கூட உங்கள் ஞாபகத்திற்கு வராது.

இந்த முழு உண்மையும் முழுமையாக மறைகிறது. கனவுலகத்தில் இருக்கும்போது கனவுகள் உண்மையானவை என்று எண்ணத் தொடங்குகிறீர்கள்.

கனவும் கூடக் காணும்போது இந்த உலகம் போலவே உண்மையாகத் தான் தோன்றுகிறது.

இப்போது, சரியாக நீங்கள் என் முன்னால் உட்கார்ந்திருக்கிறீர்கள். உண்மையிலேயே நீங்கள்தான் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருப்பது என்று தீர்மானிக்க ஏதாவது வழி இருக்கிறதா? அல்லது நீங்கள் என்னைப் பற்றிக் கனவு

காண்கிறீர்கள் என்று தீர்மானிக்க முடியுமா? தீர்மானிக்க ஏதாவது ஓர் அளவுகோல் இருக்கிறதா? நீங்கள் அப்படியே தூங்கிப் போய்க் கனவு கண்டுகொண்டிருக்கலாம் அல்லவா? அல்லது நான் தூங்கிப்போய் உங்களைப் பற்றிக் கனவு கண்டு கொண்டிருக்கலாம். உண்மையாகவும் இருக்கலாம். ஆனால் எப்படித் தீர்மானிப்பது?

சும்மா உண்மை என்று நாம் உணர்வதாலேயே உண்மை என்று நாம் நம்பிவிட முடியாது. ஏனென்றால், கனவு காணும்போது கனவு உண்மையாகத் தான் தோன்றுகிறது.

ஆகவே உண்மைத் தன்மைக்கு உத்திரவாதமாக உங்கள் உணரும் தன்மை மட்டும் போதாது.

ஏனென்றால் உண்மையைப் போல் தோன்றுவதாக நீ உணர்வாயானால், அதில் எந்தப் பொருளும் இல்லை. உண்மையில் கனவில் நீங்கள் அதை முழுமையாக உண்மை என்று தான் உணர்கிறீர்கள். ஒருபோதும் உங்கள் கனவில் சந்தேகப்பட்டதில்லை. உண்மையில் நீங்கள் சந்தேகப்படுகிறீர்கள். எப்போது, கனவிலிருந்து வெளியே வரும்போதுதான். ஆனால் அது முக்கிய விஷயமல்ல.

ஏதோ ஒருநாள், விழிப்பு வாழ்க்கை என்று நீங்கள் அழைக்கும் கனவு முறிந்து விட்டால்– ஒருநாள் முரிந்து விடும்போது– அதுதான் புத்தராக ஆவதன் அர்த்தம் ஆகும்.

இந்த விழிப்புக் கனவு முறியும்போது, திடீரென்று ஒருவருக்கு எல்லாமே மந்திரவித்தை என்பது புரியும். மாயை என்பதும் புரியும். கனவில் நீங்கள் வாழ்ந்து வந்ததும் உங்களுக்குப் புரியும். அப்போது அது உண்மையல்லாததாக ஆகும். ஒவ்வொரு காலையிலும் நீங்கள் விழித்துக் கொள்ளும்போது முழு இரவும் கண்ட கனவுலகம் மறைகிறது. திடீரென்று நீங்கள் புரிந்து கொள்கிறீர்கள்– எதுவுமில்லை இதில் என்று.

இரவில் கனவு உண்மையாகத் தோன்றுகிறது; பகலில் 'உண்மைத் தன்மை' என்று நீங்கள் அழைப்பது உண்மை என்று தோன்றுகிறது; ஆனால் அவை சந்தேகத்திற் குரியவை. ஏனென்றால் இரவில் பகல் என்னும் உண்மைத் தன்மை மறைகிறது; பகலில், இரவென்னும் உண்மைத் தன்மை மறைகிறது. அதற்குப் பின் உங்களால் ஒருபோதும் ஒப்புநோக்க முடியவில்லை. ஏனென்றால் அவை இரண்டையும் ஒரே நேரத்தில் நீங்கள் அடைய இயலாது. ஒப்புநோக்குதல் என்பது எப்போது சாத்தியம்? ஒரு பக்கம் கனவுக் குவியல்களும், இன்னொரு பக்கம் உண்மைத் தன்மை எனப்படும் குவியலும் ஒரே நேரத்தில் இருக்க முடியுமானால் நீங்கள் ஒப்பிட முடியும். ஆனால் நீங்கள் அவை இரண்டையும் ஒரே நேரத்தில் பெற முடியாது.

கனவு இருந்தால் உண்மைத் தன்மை இருக்க முடியாது- அதாவது உண்மைத் தன்மை- என்று சொல்லப்படுவதைப் பற்றிக் குறிப்பிடுகிறேன். உண்மைத் தன்மை இருக்கு மானால் கனவு இருக்க முடியாது. எப்படி ஒப்பிடுவீர்கள் நீங்கள்? ஒப்பிடுவதற்கு எந்த வழியும் இல்லை.

ஆகவே கீழைநாட்டு முனிவர்கள் தேவையில்லை என்று சொல்லி வந்திருக்கிறார்கள். உண்மை என்னும் ஒரே விஷயம், அல்லது எதைப்பற்றி நீங்கள் நிச்சயமாக இருக்க முடிவது? நீங்கள் பார்ப்பது அல்ல; ஆனால் பார்ப்பவர் ஆகிய நீங்கள்.

கனவு இருக்க வேண்டும் என்றால்- கனவு உண்மையா பொய்யா என்பது இங்கே தேவையில்லை- கனவு காண்பவர் இருக்க வேண்டும்.

அதாவது கனவாளர் இல்லையென்றால் கனவே இல்லை. கனவு இருக்க வேண்டும் என்றால், கனவாளர் வேண்டும்.

இரவில் நீங்கள் இருப்பது உண்மை. ஆனால் உங்கள் கனவு உண்மையில்லை. பகலில் கனவு எங்குமில்லை.

நீங்கள் மட்டும் இருக்கிறீர்கள்; மீண்டும் இன்னொரு கனவு விரிகிறது.

ஒருவருக்கு ஞானம் வந்து விடுமானால், அந்தக் கனவும் மறைந்து விடுகிறது. ஆனால் நீங்கள் மீண்டும் உண்மையாய் இருக்கிறீர்கள். நீங்கள் மட்டும் உண்மையாய் இருக்கிறீர்கள். ஒரே ஒரு உண்மைத் தன்மைதான் உண்டு. அதுதான் உங்கள் உள்ளார்ந்த விழிப்புணர்வு, உங்கள் சாட்சி சொல்லும் ஆன்மா. இதைத் தவிர எதுவும், உண்மையாக, பொய்யாக இருக்கலாம். அதைத் தீர்மானம் செய்ய எதுவுமில்லை.

'சூவாங்சூ'வைப் பற்றிச் சொல்லப்படுகிற விஷயம் இது: ஓர் இரவில், அவர் வண்ணத்துப்பூச்சியானதாகக் கனவு கண்டார். அவர் ஒரு பூவிட்டு மறு பூவிற்கு நகர்கிறார். தோட்டத்தில் பறக்கிறார்.

காலையில் எழுந்தபோது பெரும்புதிராக இருந்தது அவருக்கு; அவர் மிகப் பேராசான், பெரிய குரு, உலகில் தோன்றிய மகத்தான புத்தர்களில் அவரும் ஒருவர். அவரது மாணவர்கள் ஒன்று கூடினார்கள். அவரைக் கண்டார்கள். அவர் மிகவும் வேதனையாக இருந்தார்.

'ஆசானே, தாங்கள் எப்போதுமே வருத்தமாக இருந்த தில்லை. என்ன நடந்தது, சொல்லுங்கள்?'

"ஒரு சிக்கல் உள்ளது. அது உங்களால் தீர்க்கப்பட வேண்டும். சிக்கல் இதுதான். சூவாங்சூவான நான் இரவில், வண்ணத்துப்பூச்சி ஆனதாகக் கனவு கண்டேன்."

சீடர்கள் சிரித்தார்கள். "கனவு போய்விட்டது. நீங்கள் விழித்துக் கொண்டுவிட்டீர்கள். அதைப் பற்றி ஏன் கவலைப்படுகிறீர்கள்?" என்று கூறினார்கள்.

சூவாங்சூ கூறினார்: "முழு விஷயத்தையும் கேளுங்கள்."

சிக்கல் ஒன்று எழுந்துவிட்டது. சூவாங்சூ கனவு காண முடியுமானால், கனவில் வண்ணத்துப்பூச்சியாக மாற

முடியுமானால், அது ஏன் மறுதலையாக நடக்கக்கூடாது? ஒரு வண்ணத்துப்பூச்சி கனவு காணலாம். அதன் கனவில் அது சூவாங்சூவாக மாறுகிறது. இப்போது யார் யாராக உள்ளார்? இப்போது இதுதான் புரியவில்லை.

சூவாங்சூவின் கனவில் வண்ணத்துப்பூச்சி வந்ததா?

வண்ணத்துப்பூச்சியின் கனவில் சூவாங்சூ வந்தாரா?

இந்தச் சிக்கல்தான் என்னை வாட்டி வதைக்கிறது என்றார்.

இந்த விடுகதையின், புதிரின் முடிச்சை அவிழ்ப்பது சீடர்களுக்குச் சாத்தியமாய் இருக்காது என்று கூறப் படுகிறது. எப்படித் தீர்ப்பது இச்சிக்கலை? யார், எவர் என்று எப்படித் தீர்மானம் செய்வது?

ஆனால் அங்கு யாராவது ஆழமான தியானம் செய்பவர் இருந்திருந்தால் அவர் நிச்சயம் இதற்கு விடை கண்டுபிடித்திருக்க முடியும்.

உண்மையில் சூவாங்சூ இந்தக் கேள்வியைக் கேட்டதோ, அவர் சீடர்களில் யாராவது உண்மையான தியான நிலையை அடைந்துள்ளனரா என்பதை அறிந்து கொள்வதற்காகத்தான்.

ஏனென்றால், வண்ணத்துப்பூச்சியும் உண்மையில்லை, சூவாங்சூவும் உண்மையில்லை. ஆனால் யார் புரியாத வராக இருந்தாரோ அவர்- அந்த ஒருவர்- வண்ணத்துப் பூச்சியைப் பார்த்தாரோ அவர்- எந்த ஒருவர் சூவங் சூவைக் கவனித்தாரோ அவர்- எந்த ஒருவர் சூவாங்சூ வண்ணத்துப்பூச்சியாக ஆனதையும், வண்ணத்துப்பூச்சி சூவாங்சூ ஆனதையும் கவனித்தாரோ அந்த ஒருவர்- தான் உண்மை.

அதாவது அந்த முழுக்கவனம், அந்த விழிப்புணர்வு, அந்தச் சான்று, அந்தச் சாட்சி அதுதான்- அது மட்டுமே- உண்மைத்தன்மை.

இதுதான் மாயாவாதத்தின் கோட்பாடு ஆகும். நீங்கள் எவற்றை எல்லாம் பார்க்கிறீர்களோ அவை பொய். பார்ப்பவர் மட்டுமே உண்மையானவர். பார்ப்பவரை நோக்கிச் சென்று கொண்டேயிருங்கள். இல்லாவிட்டால் நீங்கள் ஒரு மந்திரவித்தை உலகத்தில் வாழ்கிறீர்கள் என்று பொருள்.

நீங்கள் ஒரு மந்திர உலகத்திலிருந்து மறு மந்திர உலகத்திற்குச் செல்கிறீர்கள். மனிதன் பொய்களில் வாழ்கிறான். மக்கள் தங்கள் பொய்களைத் தத்துவங்கள் என்கிறார்கள்.

ஃபிராய்ட் எங்கோ ஓரிடத்தில் சொல்லியிருக்கிறார். மிகவும் கூர்மையாக ஊடுருவும் அகதரிசனம் அவருக்கு- "மனிதன் பொய்களில்லாமல் வாழ முடியாது" என்று.

மனிதன் இருப்பதைப் பார்க்கும்போது ஃபிராய்ட் கூறுவது சரி என்று தோன்றுகிறது. மனிதன் பொய்கள் இல்லாமல் வாழ முடியாது. பொய்களில்லாத மனிதன் கடினம்; ஏனென்றால் அப்போது மிகவும் தைரியம் தேவைப்படுகிறது.

உங்கள் பொய்கள் வாழ்க்கையை மென்மையாக்குகின்றன. அவை மசகு எண்ணெய் போலச் செயல்படுகின்றன. அவை உங்களை மிகவும் எளிதாக இயங்கச் செய்கின்றன.

ஒருவர் ஒரு கடவுள் மீது நம்பிக்கை வைத்திருக்கிறார். அது அவரது வாழ்க்கையை மென்மையானதாக ஆக்குகிறது. உங்கள் பொறுப்புணர்ச்சியை வேறு யார் மீதாவது போட முடியும். இன்னொருவர் மறுவுலகம் இருப்பதாக நம்புகிறார். நாம் இங்கே துயரம் உள்ளவராக இருக்கலாம். ஆனால், அங்கோ, சொர்க்கம் காத்துக் கொண்டிருக்கிறது நமக்காக. நம்மை வரவேற்கவும் காத்துக் கொண்டிருக்கிறது. அது உதவுகிறது.

மார்க், 'மதம் மக்களுக்கு அபினி போன்றது' என்று கூறியிருக்கிறார். ஆம், அவரும் கூட ஒரு வகையில் உண்மையைத்தான் கூறியிருக்கிறார்.

எல்லா நம்பிக்கைகளும் பொய்களே. எதிர்காலம் பற்றிய எதிர்பார்ப்புகள் அனைத்தும் பொய்களே. ஆம். மதம் அபினியாக இருக்கமுடியும். ஆனால் அதேபோலத்தான் பொதுவுடைமையும்- எதுவானாலும், எதிர்காலத்திற்கு நம்பிக்கை கொடுப்பது எதுவானாலும்- இந்த உலகத்தில் அல்லது மறுவுலகத்தில்- நிகழ்காலத்தைத் தியாகம் செய்ய எது உதவியாயிருந்தாலும்- அது நடக்கலாம், நடக்காமலும் இருக்கலாம்.

ஏதோ ஓர் அர்த்தம் உள்ளதாக உணரக்கூடிய எதுவா யிருந்தாலும் நீங்கள் ஒரு கதாநாயகன் என்று உணர்த்தும் எதுவாயிருந்தாலும்- உங்கள் ஆணவத்தை ஊட்டி வளர்க் கும் எதுவாயிருந்தாலும்- அது பொய்தான். பொய்யேதான்.

ஒரு தடவை, ஒரு தொடர் சொற்பொழிவுக்காக, குவாலியர் மகாராணி என்னைக் குவாலியருக்கு அழைத் திருந்தார்.

முதல் பேச்சைக் கேட்டவுடனேயே அவர் மனம் மிகவும் குழம்பிவிட்டதாகக் கூறினார்.

மிகவும் ஹிந்து மதத்தில் ஊறிய மனம், மிகவும் சம்பிரதாயமான மனம்- வைதிகம்- பழைய பாணியுடைய மனம். அவர் மிகவும் குழம்பிப் போனார். அவர் மிகவும் என்னிடம் வந்து, "ஐயா, தாங்கள் என்ன கூறினாலும் அது எடுபடுகிறது. ஆனால் அபாயகரமானது. நான் உங்களை வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன். அருள்கூர்ந்து மக்களின் ஆழ்நம்பிக்கையைக் குலைக்காதீர்கள்" என்று கூறினார்.

'ஓர் ஆழ்நம்பிக்கை, குலைக்கப்பட முடியுமானால், அது தகுதியானது அன்று. ஓர் ஆழ்நம்பிக்கையானது அழிக்கப் பட முடியுமானால், அந்த ஆழ்நம்பிக்கை பொய்களில்

உள்ளது ஓர் ஆழ்நம்பிக்கை உண்மையாக இருக்குமானால், அழிக்கப்படுவது பற்றிய அச்சம் சிறிதுமின்றி அது நிலைத்து இருக்கும். அது நிச்சயமாக அழிக்கப்பட முடியாது. ஏனென்றால் உண்மை அழிக்கப்படவே முடியாது! என்று நான் பதில் அளித்தேன்.

இந்துக்கள் அஞ்சுகிறார்கள், கிறிஸ்துவர்கள் அஞ்சுகிறார்கள், முகம்மதியர்கள் அஞ்சுகிறார்கள், சமணர்கள் அஞ்சுகிறார்கள், ஒவ்வொருவரும் அஞ்சுகிறார்கள்- எங்கள் ஆழ்நம்பிக்கையை அழிக்காதீர்கள்.

அவர்களது ஆழ்நம்பிக்கையில், அவர்கள் தங்கள் பொய்களை ஒளித்துக் கொள்கிறார்கள், தங்கள் மந்திரவித்தை உலகங்களை ஒளித்துக் கொள்கிறார்கள். தங்கள் கனவுகளையும், எதிர்பார்ப்புகளையும் கூட ஒளித்துக் கொள்கிறார்கள்.

அவர்கள் தொட்டால் சிணுங்கிகள். அவர்கள் விலா எலும்புகளில் கை வைத்தால் அவர்கள் ஆழ்நம்பிக்கை தோல் அளவு ஆழம்கூட இல்லை. அவர்கள் உடனடியாக எரிச்சலடைந்து விடுகிறார்கள். அவர்களது ஆழ்நம்பிக்கை எதுவும் இதயத்தில் ஆழமாக இல்லை; அது ஒரு வெற்று நம்பிக்கையாக- மனதில்- தான் உள்ளது.

குவாலியர் மகாராணி, "நான் என் மகனை அழைத்துக் கொண்டு வர விரும்பினேன். அவன் மிகவும் ஆர்வமுள்ளவன். உங்கள் பேச்சைக் கேட்டு அவன் மிகவும் கவரப்பட்டு விட்டான். ஆனால் நான் அவனைத் தடுத்து விட்டேன். நான் அவனை உங்களிடம் அழைத்துக் கொண்டு வரவில்லை. நீங்கள் அபாயகரமானவர். அவன் இளைஞன்- அவன் உங்கள் கருத்துக்களால் மிகவும் கவரப்படுவான். ஆகவே நான் அவனை அழைத்துக் கொண்டு வரவேயில்லை" என்றார்.

என்ன, இந்த அச்சம்? எதற்காக இந்த அச்சம்? நீங்கள் பொய்களை ஒட்டிக் கொண்டா இருக்கிறீர்கள்? பொய்கள்

தான் நொறுங்கி விடுவது பற்றி அஞ்ச வேண்டும். பொய்களுக்கு மட்டும்தான் பாதுகாப்புத் தேவை. உண்மை- அதற்குள்ளேயே- அதாவது தனக்குள்ளேயே- மிகவும் தெளிவானது. சாட்சியுடையது. நம்பிக்கை யுடையது.

நீங்கள் ஏதோ ஒரு பொய்யான ஆழ்நம்பிக்கை கொண் டிருந்தால், அது பாதுகாப்புள்ளது தான். நான் அறிவேன். உலகத்தோடு ஒட்ட ஒழுக அது பயன்படுகிறது. உதவுகிறது. நான் அறிவேன். ஆனால் அதுவே உங்களுக்கு முழுமை யாக உதவிடப் போவதில்லை.

விரைவாகவோ தாமதமாகவோ நீங்கள் விழிப்புணர்வு பெறுவீர்கள், உங்கள் கனவிலிருந்து வெளியே வருவீர்கள், உங்கள் முழு வாழ்க்கையும் வீண் என்பதை நீங்கள் காண்பீர்கள்.

வெளிப்புறத்தில் உள்ள எதிலும் ஒட்டிக்கொள்ள வேண்டிய தேவை எதுவுமில்லை. வெளியில் எது உண்மை, எது பொய் என்று தீர்மானிப்பது, இதுவரை, எந்த வகையிலும் சாத்தியமாக இல்லை.

இப்போதே உடனடியாக, உள்ளுக்குள்ளே நீங்கள் பயணிப்பது சிறந்ததாக இருக்கும்.

வெளிப்புறத்தைப் பற்றிய எல்லாவற்றையுமே மறந்து விடுங்கள். இந்து மதத்தைப் பற்றி, கிறிஸ்துவ மதத்தைப் பற்றி, இஸ்லாத்தைப் பற்றி எதுவும் கவலைப்படாதீர்கள். வேதங்களைப் பற்றியோ, கீதைகள் பற்றியோ, குர்-ஆன்கள் பற்றியோ கவலைப்படாதீர்கள்.

உள்ளே செல்லுங்கள், அப்படியே! ஒரே ஒரு குறிக்கோள் இருக்கட்டும் உங்களுக்கு!

அந்தக் குறிக்கோள் என்ன தெரியுமா? இதோ, இது தான். "யார் இந்த விழிப்புணர்வு, என்ன இந்த விழிப் புணர்வு, நான் யார் என்று தெரிந்து கொள்வதுதான்" உங்கள் ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டும்.

இந்த வாய்பாடு, உள்முகப் பயணத்திற்கான, படிப்படியான, ஓர் அறிகுறிதான். இதைக் கேளுங்கள்.

புத்தர் சொன்னார்:

நூறு தீய மனிதர்க்கு உணவளிப்பதைக் காட்டிலும்
ஒரு நல்ல மனிதனுக்கு உணவளிப்பது சிறந்தது.

யார் நல்ல மனிதன்? யார் கெட்ட மனிதன்? என்ன வரையறை? கெட்ட மனிதன், பிறரைப் பற்றி அக்கறை இல்லாதவன். பிறரைப் பயன்படுத்திக் கொண்டு ஆனால் பிறருக்கு எந்த மரியாதையும் கொடுக்காதவன். தான் மட்டுமே இந்த உலகத்தின் மையம்' என்றும் ஒவ்வொருவரும் தனக்குப் பயன்படுத்திக் கொள்ளத்தான் உள்ளனர் என்றும் கருதுபவன் கெட்ட மனிதன்.

"ஒவ்வொன்றும் அவனுக்காகவே இருக்கின்றன. தன்னுடைய மன நிறைவுக்கு வெறும் கருவிகளாக இருப்பவர்களே பிற நபர்கள்" என்று உறுதியாக எண்ணுபவன் கெட்ட மனிதன்.

இந்த வரையறையை உங்கள் மனதில் வைத்துக் கொள்ளுங்கள். பொதுவாகக் கெட்ட மனிதன் என்றால் குற்றவாளி என்று நீங்கள் எண்ணுகிறீர்கள். கெட்ட மனிதன் குற்றவாளியாக இருக்க வேண்டும் என்று கட்டாயமில்லை. எல்லாக் கெட்ட மனிதர்களும் குற்றவாளிகள் இல்லை. எல்லாக் குற்றவாளிகளும் கெட்டவர்கள். ஆனால் எல்லாக் கெட்டமனிதர்களும் குற்றவாளிகள் இல்லை. அவர்களில் ஒருசிலர் நீதிபதிகள், ஒருசிலர் மதிப்பிற்குரிய மக்கள், ஒருசிலர் அரசியல்வாதிகள், ஜனாதிபதிகள், பிரதமர்கள், ஒருசிலர் மகான்களாகக் கூட அணிவகுத்து வருகிறார்கள்.

ஆகவே இந்த வாய்பாட்டைப் பற்றி நாம் பேசும்போது, கெட்டமனிதன் என்பதற்கான வரையறையை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்.

'பிறர் பற்றிய அக்கறை எதுவும் இல்லாதவன் கெட்ட மனிதன்' என்று புத்தர் கூறுகிறார். கெட்டமனிதன், எப்பொழுதும் தன்னைப் பற்றி மட்டும் தான் நினைக்கிறான்- வாழ்க்கையின் மையமே தான்தான் என்று அவன் எண்ணுகிறான். முழு வாழ்க்கையும் தனக்காக மட்டுமே ஏற்படுத்தப்பட்டுள்ளது என்று அவன் நினைக்கிறான். தன் சொந்தத் 'தானு'க்காக ஒவ்வொருவரையும் பலியிடுவதற்குத் தனக்கு முழு அதிகாரம் உள்ளது என்று அவன் நினைக்கிறான். சாதாரணமாக அவன் கெட்டவனாக இல்லாதிருக்கலாம். ஆனால் இதுதான் மனப்பான்மை என்றால், அப்போது அவன், நிச்சயமாக ஒரு கெட்ட மனிதன்தான்.

யார் நல்ல மனிதன்? கெட்ட மனிதனுக்கு நேர் எதிர் தான் நல்ல மனிதன்; பிறரைப் பற்றிய அக்கறை உள்ளவன், தனக்கு என்ன முக்கியத்துவம் கொடுத்துக் கொள்கிறானோ அதைப் பிறருக்கும் கொடுக்கின்றவன்; உலகத்தின் மையமாக, தான் இருப்பதாக எந்த வகையிலும் பாசாங்கு செய்யாதவன், ஒவ்வொருவரும் உலகத்தின் மையம் என்று உணர்பவன். உலகம் ஒன்று. பத்து லட்சக் கணக்கான- கோடிக்கணக்கான மையங்கள் உள்ளன என்று எண்ணுபவன்.

அவன் மிகவும் மரியாதை உள்ளவன். அவன் ஒரு போதும் பிறரை ஒரு கருவியாகப் பயன்படுத்துவதில்லை. பிறர் என்பது அதற்குள்ளேயே முடிவுபெற்ற ஒன்றாகும். நல்ல மனிதனின் வணக்கவுணர்வு மகத்தானது.

கவனியுங்கள். உங்கள் சொந்த வாழ்க்கையைக் கவனியுங்கள். நீங்கள் உங்கள் பாலுணர்ச்சிக்காக மட்டுமே உங்கள் மனைவியைப் பயன்படுத்துகிறீர்களா? நீங்கள் விபச்சாரியிடம் போகாமல் இருக்கலாம். சாதாரணமாக, விபச்சாரியிடம் செல்லும் மனிதன் கெட்டவன் என்று நீங்கள் நினைக்கிறீர்கள். அது ஒரு மேலோட்டமான வரையறை. நீங்கள் உங்கள் மனைவியை வெறும் போகப் பொருளாக மட்டுமே பயன்படுத்துபவராக இருந்தால் மற்ற

கெட்டவர்களைப் போலவே நீங்களும் ஒரு கெட்டவர் தான்.

உங்களுக்கும், விபச்சாரியிடம் செல்லும் மனிதனுக்கும் ஒரே ஒரு வித்தியாசம் தான் இருக்கிறது. நீங்கள் ஒரு நிரந்தர விபச்சாரியை வைத்திருக்கிறீர்கள். உங்கள் கல்யாணம் அதற்கான நிரந்தர ஏற்பாடாகும். விபச்சாரியிடம் செல்பவர், நாள்தோறும் ஏற்பாடு செய்து கொள்கிறார். நீங்கள் உங்கள் கார்ஷெட்டில் காரை வைத்துக் கொண்டுள்ளீர்கள்; அவன் வாடகைக் காரைப் பயன்படுத்துகிறான்.

நீங்கள் உங்கள் மனைவியை மதிக்கவில்லையென்றால், உங்கள் மனைவி ஒரு விபச்சாரி- அவளுடைய சொந்த உரிமையின் பேரில் அவளை ஒரு மனுஷியாக நீங்கள் மதிக்காவிட்டால், விபச்சாரி என்று நீங்கள் நினைப்பதாகத்தான் அர்த்தம். வேறென்ன, சொல்லுங்கள். உங்கள் மனைவிக்கு விருப்பம் இல்லாத நேரத்தில் அவளை நீங்கள் கட்டாயப்படுத்தாமல் இருக்க வேண்டும். 'நான் உன் கணவன். எனக்கு உரிமை இருக்கிறது. சட்ட உரிமை' என்று நீங்கள் சொல்லமாட்டீர்கள். இல்லை. நீங்கள் மதிப்பீர்கள். அவளது நோக்கத்தை மதிப்பீர்கள். நீங்கள் இருவரும் சம்மதித்தால் நல்லது. அடுத்தவர் ஏற்காதபோது எந்த வகையிலும் கட்டாயப்படுத்தக் கூடாது.

'கணவனுக்கு மனைவி தியாகம் செய்ய வேண்டும்' என்று வேதத்தை மேற்கோள் காட்டமாட்டீர்கள். கணவனைக் கடவுளாகக் கருத வேண்டும் என்று நீங்கள் சொல்லமாட்டீர்கள்.

எல்லாம் முட்டாள்தனம். ஆண் ஆதிக்கக் கோளாறு. தன் கணவனை மனைவி ஒரு பொருளாதார விஷயமாக, பொருளாதாரப் பாதுகாப்பாக நினைக்கக் கூடாது. அப்படியானால் அது விபச்சாரம் ஆகும். நீங்கள் ஏன் விபச்சாரியைக் கண்டனம் செய்கிறீர்கள். அவள் தன் உடலைப் பணத்திற்காக விற்கும் நிலைக்கு ஆளாகிறாள்.

கணவனிடம் பணம் இருக்கிறது என்றோ பாதுகாப்பு உள்ளது என்றோ, எதிர்காலம் நிரந்தரம் என்றோ, இதயத்தில் அன்பில்லாமல், அவனோடு தங்குகின்ற தூங்குகின்ற மனைவி தன்னைத்தானே விபச்சாரத்திற்கு ஈடுபடுத்திக் கொண்டுவிட்டாள் என்று பொருள்.

அவளுடைய கருத்தில் கணவன், பணம் தான், வங்கியிருப்புத்தான் என்று ஆகிறது.

தன்னைத்தான் எப்படி மதித்துக் கொள்கிறானோ அதேபோல் பிறரை மதிப்பவன் நல்ல மனிதன் என்று புத்தர் வரையறை செய்கிறார். 'உன்னை நீ நேசிப்பதுபோல் பிறரை நீ நேசிப்பாயாக' என்று இயேசு கூறுகிறார். அதுதான் நல்ல மனிதன் பற்றிய வரையறையாகும். அவனது மரியாதை மகத்தானது. அவனது வணக்கவுணர்வு மகத்தானது.

உங்கள் வீட்டில் ஒரு குழந்தை பிறந்தால் கூட நீங்கள் உங்கள் கொள்கையை அதன் மீது திணிக்காதீர்கள்.

நீங்கள் முஸ்லீமாய் இருக்கலாம். இந்துவாகவும் இருக்கலாம். உங்கள் வீட்டில் ஒரு குழந்தை பிறந்திருக்கிறது. நீங்கள் அந்தக் குழந்தையை இந்துவாகவோ, முஸ்லீமாகவோ ஆவதற்கு வற்புறுத்தாதீர்கள்.

நீங்கள் உங்கள் கொள்கையைத் திணித்தால் அக் குழந்தைக்கு நீங்கள் மரியாதை அளிக்கவில்லை என்று பொருள்.

அந்தக் குழந்தை உதவியற்ற நிலையில் இருக்கும் வாய்ப்பை நீங்கள் பயன்படுத்திக் கொள்கிறீர்கள்.

அந்தக் குழந்தை உங்களைச் சார்ந்துதான் இருக்க வேண்டியுள்ளது. அந்தக் குழந்தை உங்களைப் பின்பற்ற வேண்டியுள்ளது. நீங்கள் கோவிலுக்கோ அல்லது மாதா கோயிலுக்கோ அழைத்துச் சென்றால் அதுவும் வரவேண்டியுள்ளது. ஏனென்றால் தன் உயிர் வாழ்க்கைக்காக நீங்கள்

என்ன சொன்னாலும் உங்களுக்கு ஆமாம் போட வேண்டியுள்ளது.

நீங்கள் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டால், நீங்கள் ஓர் உதவியற்ற குழந்தையைச் சுரண்டி ஏமாற்றுகிறீர்கள் என்று பொருள். உங்கள் குழந்தையாக இருக்கலாம், ஆனாலும் அதை நீங்கள் ஏமாற்றுகிறீர்கள்.

உலகம் நல்லவர்களைக் கொண்டிருக்குமானால், குழந்தைகள் ஒட்டுமொத்தமாகச் சுதந்திரமாக இருப்பார்கள். எந்த மதத்திலும் வற்புறுத்தப்படாதவர்களாக இருப்பார்கள்.

அப்புறம் கிறிஸ்துவர்களோ, இந்துக்களோ, முஸ்லீம்களோ இருக்கவே மாட்டார்கள். நல்ல மக்கள், வளரும் மக்கள் தான் இருப்பார்கள் என்பதோடு அவர்கள், தங்கள் விரும்பும் இடத்தைத் தாங்களே தேர்ந்தெடுத்துக் கொள்வார்கள்.

அது ஆலயமாய் இருக்கலாம், மாதா கோயிலாக இருக்கலாம், மசூதியாக இருக்கலாம், குருத்வாராவாகவும் இருக்கலாம். அவர்கள் தங்கள் மதத்தைத் தாங்களே தேர்ந்தெடுத்துக் கொள்வார்கள். அதுதான் அவர்களது சுதந்திரம். தங்கள் வாழ்க்கையைத் தாங்களே தேர்ந்தெடுத்துக் கொள்வார்கள். அதுதான் அவர்களது சுதந்திரம்.

நீங்கள் வற்புறுத்தாதீர்கள். நீங்கள் உங்கள் குழந்தையை நேசியுங்கள். ஆனால் உங்கள் அறிவைக் குழந்தைகளுக்குக் கொடுக்காதீர்கள். நீங்கள் உங்கள் குழந்தைக்கு உங்கள் நேசத்தைக் கொடுங்கள்; ஆனால் உங்கள் ஆசைகளைச் சொல்லி அதனுடைய இருத்தலை விஷமாக்காதீர்கள். நீங்கள் குழந்தையை நேசியுங்கள்; ஆனால் குழந்தையை உரிமை கொள்ளாதீர்கள். உங்களுக்கு ஏற்றவாறு வளராமல் இருக்க உங்கள் குழந்தைக்கு உதவுங்கள். ஆனால் தன் இருத்தலுக்கு ஏற்ப, தனக்குத்தானே வளர்வதற்கு உதவுங்கள். அப்போது நீங்கள் நல்ல மனிதர்.

நூறு தீய மனிதர்க்கு உணவளிப்பதைக் காட்டிலும் ஒரு நல்ல மனிதனுக்கு உணவளிப்பது சிறந்தது.

ஏனென்றால் நீங்கள் கெட்ட மனிதர்களுக்கு உணவளித்தால், நீங்கள் கெடுதலுக்கு உணவளிக்கிறீர்கள். நீங்கள் நல்ல மனிதர்க்கு உணவளித்தால், நீங்கள் நன்மைக்கு உண வளிக்கிறீர்கள்.

உலகம் சிறந்ததாக ஆவதற்கு உதவுங்கள்.

உலகத்தை நீங்கள் கண்டது போலவே விடாதீர்கள். கொஞ்சம் சிறந்ததாகச் செய்யுங்கள், கொஞ்சம் அதிக அழகியதாக ஆக்குங்கள். இன்னும் சில அதில் பாடல்கள், இன்னும் சில அதிகக் கொண்டாட்டங்கள் இருக்கட்டும். கொஞ்சம் குறைவான போர்கள் நடக்கட்டும். கொஞ்சம் குறைவான அரசியல்வாதிகள் இருக்கட்டும். அதிக நேசம் இருக்கட்டும். குறைவான வெறுப்பு இருக்கட்டும். "ஒரு நல்ல மனிதனுக்கு உணவளியுங்கள்" என்று புத்தர் கூறுவதன் பொருள் இதுதான். அது சிறந்தது, மிகவும் சிறந்தது, நூறு கெட்ட மனிதர்களுக்கு உணவளிப்பதைக் காட்டிலும்.

ஆயிரம் நல்ல மனிதருக்கு உணவளிப்பதைக் காட்டிலும் புத்தரின் ஐந்து நல்லொழுக்க விதிகளைக் கடைபிடிக்கும் ஒருவருக்கு உணவளிப்பது சிறந்தது."

இப்போது, புத்தரின் ஐந்து கோட்பாடுகளையும், அந்த ஐந்து நல்லொழுக்கங்களையும் கடைபிடிப்பவன் என்று புத்தர் அழைக்கும் ஒருவன் யார்?

உடைமையின்மை, திருடாமை, வன்முறையின்மை, உண்மைக்கு புறம்பாய் இல்லாமை, காமமின்மை ஆகிய இவையே புத்தரின் ஐந்து நல்லொழுக்கங்கள். இந்த ஐந்து நல்லொழுக்கங்களையும் கடைப்பிடிக்கும் ஒருவன், வெறும் நல்லவன் மட்டுமல்ல, மற்றவர்களிடம் நல்லவனாய் இருப்பவன் மட்டுமல்ல, வெறும் சமூக ஒழுக்கத்தைக்

கடைப்பிடிப்பவன் மட்டுமல்ல- அவன் மதத்தன்மை கொண்டவனாக இருக்கத் துவங்குபவன்.

இதுதான் நல்ல மனிதனுக்கும், மதத்தன்மை கொண்ட மனிதனுக்கும் உள்ள வேறுபாடு. நல்ல மனிதன் பகுத்தறிவின் மூலம் வாழ்பவன். அவன் எண்ணிப் பார்க்கிறான், சிந்திக்கிறான், அதன் மூலம் வழி காண முயற்சிக்கிறான். மேலும் அவன், 'நான் இருப்பதைப் போலவே, எனக்கு உரிமை இருப்பதைப் போலவே, மற்றவர்களுக்கும் இருக்க உரிமை இருக்கிறது, நான் சுதந்திரமாய் இருப்பதைப் போலவே மற்றவர்களுக்கும் சுதந்திரமாய் இருக்க உரிமை இருக்கிறது' என்பதை உணர்ந்து கொள்கிறான். இது அவன் வந்தடைந்த கருத்து. அவன் இதைப்பற்றி யோசிக்கிறான். அவன் மதத்தன்மை கொள்வது இல்லை. அவன் மிகவும் புத்திசாலியான, அறிவுக்கூர்மையான மனிதன் மட்டுமே.

பெர்னாட் ரஸல் ஒரு நல்ல மனிதன், ஒரு நல்லொழுக்கம் உள்ள மனிதன். ஆனால் அவர் மதத்தன்மை கொண்டவர் அல்ல. அவர் நல்லதென்று நினைப்பதையெல்லாம் அவர் செய்வார். ஆனால் அந்த நல்லது தர்க்கரீதியாக, வாதத்தின் முடிவாக வந்தடைந்த ஒன்று. அது சிந்தனையில் விளைந்த கருத்து.

மதத்தன்மை கொண்ட மனிதன் சிந்தனை ரீதியாக மட்டும் நல்லவனாய் இருப்பவன் மட்டுமல்ல. அவன் தனது இருப்பையே நல்லதாக மாற்றிக் கொள்பவன். அவன் தியானத் தன்மையில் வளர ஆரம்பிப்பவன். இந்த மதத்தன்மை கொண்ட மனிதன் இந்த ஐந்து நல்லொழுக்கங்களையும் கடைப்பிடிக்கிறான். அவை எல்லாமே எதிர்மறையானவை. திருடாமை, உடமையின்மை, வன்முறையின்மை, காமமின்மை, உண்மைக்குப் புறம்பாக இல்லாமை. மதத்தன்மை கொண்ட மனிதன் எதிர்மறையானவன். ஏனெனில் உண்மை என்ன என்பதை அவனே இன்னும் உணரவில்லை. அவன் உண்மையை வேறொருவர் மூலமே அறிந்திருக்கிறான். அவன் புத்தரை பின்பற்று

கிறான். அவன் குருவின் அருகாமையில் வாழ்கிறான். யாரோ ஒருவர் ஒளி வீசுவதை அவன் பார்க்கிறான், யாரோ ஒருவருக்கு அது நடப்பதைக் காண்கிறான். ஆனால் அவனுக்கு அது இன்னும் நிகழவில்லை. அவன் கவரப்பட்டுள்ளான். அவன் அந்த உண்மையை புரிந்து கொண்டுள்ளான். ஆனாலும் இன்னும் அவன் வெளியிலேயே இருக்கிறான். அவன் பின்பற்றும் ஒருவனே.

*அதனால் தான் புத்தர் கூறுகிறார்:*

**ஆயிரம் நல்ல மனிதர்க்கு உணவளிப்பதைக் காட்டிலும்**
**புத்தரின் ஐந்து நல்லொழுக்க விதிகளைக்**
**கடைப்பிடிக்கும் ஒருவர்க்கு உணவளிப்பது சிறந்தது.**

இருப்பினும் அவரது அணுகுமுறை இன்னமும் எதிர்மறையானது தெரியுமல்லவா? ஏனென்றால் உடன்பாட்டு உண்மை நீங்கள் மட்டும்தான் அடைய முடியும். சிலர் அடைந்திருக்கலாம். அவரைக் கவனித்துக் கொண்டிருப்பதன் மூலம் உங்கள் இருத்தலின் ஆழமான பரஸ்பரத்தில் 'ஆம்' என்று நீங்கள் உரைக்கும். அதில் உண்மை உள்ளது- ஆனால் அது அதன் வெளிப்புறத்தில் உள்ளது. அது உங்கள் நேரடி அனுபவமும் அல்ல.

நீங்கள் தாகமாய் இருக்கிறீர்கள். ஒருவர் நதியிலிருந்து வருகிறார். அவரது தாகம் போய்விட்டது. அவரது முகத்திலிருந்து, கண்களிலிருந்து, கனல் சுடரிலிருந்து அல்லது உயிர்ப்பிலிருந்து, அவர் தாகம் தணிந்து விட்ட நிலையை அறிந்து கொள்ளலாம். அவர் நீரின் ஆதாரத்தைக் கண்டிருக்க வேண்டும் என்று உங்களால் உணர்ந்து கொள்ள முடியும். அதனால் அவரைப் போலவே நீங்களும் நதியை நோக்கிப் போகிறீர்கள். ஆயினும் உங்கள் தாகத்தை நீங்கள் தணித்துக் கொள்ளவில்லை.

வெறும் நல்லவராக இருப்பதைவிட மிக நல்லவராக இருக்க முடியும். அப்போது உங்கள் நுண்ணறிவுப் பாதையில் மட்டும் நீங்கள் செல்லவில்லை; உங்கள் உள்ளுணர்

வின் மூலமாக வாழ்வதைத் தொடங்கிக் கொண்டிருக் கிறீர்கள்.

நீங்கள் இப்போது வெறும் தலை மட்டுமல்ல, நீங்கள் நகர்கிறீர்கள், இதயத்தின் பக்கமாகச் சாய்கிறீர்கள்.

ஆசானைக் கண்டுபிடிப்பது ஒன்றுதான் சமய மனிதனா வதற்கான வழியாகும். ஆசான் இல்லாமல், உச்சபட்சமாக நீங்கள் நல்ல மனிதராக இருக்கலாம். அறவழியில் நடக்கலாம். ஆனால் நீங்கள் சமய மனிதனாக மாறவே முடியாது. நீங்கள் இதுவரை ருசி பார்த்திராத ஒன்றை நம்பியாக வேண்டியுள்ளது. நீங்கள் ஒருபோதும் அனுபவித் தறியாத ஒன்றை எப்படி நம்புவது? வேறு யாருக்கும் நடந்து நீங்கள் பார்த்தே இராத ஒன்றை எப்படி நீங்கள் மட்டும் நம்ப முடியும்?

இந்த உலகத்தில் புத்தர் ஒருவர் வரும்போது, பல மக்கள் சிலிர்ப்படைகிறார்கள். அவர்களது ஊக்கம் மிக உயர்வாக உள்ளது. 'ஆம்' என்று அவர்கள் உணரத் தொடங்கு கிறார்கள். உலக விஷயங்களோடு மட்டுமே உலகம் முடிந்து விடுவதில்லை. அதில் இன்னும் கொஞ்சம் அதிகமாகவே உள்ளது.

புத்தரின் நேரடி இருப்பே, அவரது சுடர் வீசும் இருத்த லின் ஞானமே, உங்களைப் புத்தம் புதிய வாழ்க்கையை, தெரியாததைத் தெரிய வைக்கும் உலகைத் திறந்து விடுகிறது. புத்தரது இருப்பின் குளுமை, அவரது மௌனம், அவரது நிரம்பி வழிகின்ற பேரின்பம், கருணை, இவையனைத்தும்கூட அப்படித்தான்.

இருப்பினும், நீங்கள் பின்பற்றுகிறீர்கள் என்றுதான் புத்தர் கூறுகிறார். உங்கள் சொந்த ஒளிக்கான தகுதி உங்க ளிடம் இல்லை. உங்கள் கண்கள் பிரகாசிக்கின்றன. உங்கள் சொந்தப் பெருஞ்சோதியை நீங்கள் அடையவில்லை.

**புத்தரின் ஐந்து நல்லொழுக்க விதிகளைக்**
**கடைப்பிடிக்கும் பத்தாயிரம் பேர்க்கு உணவளிப்பதைக்**

காட்டிலும் ஒரு ஸ்த்ரோபன்னாவுக்கு உணவளிப்பது சிறந்தது.

ஒரு துறவிக்கு உணவளிப்பது மிக்க நன்மையாகும்- ஸ்த்ரோபன்னா என்றால் ஒரு துறவி- நதியில் இறங்கிய ஒருவர்- கரையில் நிற்காத ஒருவர்- மற்றவர்கள் நீந்துவதைக் கவனிக்கும் ஒருவர், சுற்றிலும் சாடிக் கொண்டு, சந்தோஷப்பட்டுக் கொண்டு, நதியின் குளுமையைக் கொண்டாடிக் கொண்டே இருப்பவர் அவர்.

சமய மனிதன் கரை மீது நின்று கொண்டிருப்பவர். அவரால், நதியிலுள்ள மக்களைப் பார்க்க முடியும். அவர்கள் மகத்தான மகிழ்ச்சியோடு இருப்பதை அவரால் உணர முடியும். ஆனால் நதியில் குதித்து முழுக்குப் போடும் துணிச்சல் மட்டும் அவருக்கில்லை.

அவருக்குக் கரையின் மீது- அதாவது இந்த உலகத்தின் மீது- மிகுந்த ஈடுபாடு உள்ளது.

அவருக்குச் சாதாரணமான, செக்குமாட்டு விஷயங் களில்- பணம், கௌரவம், குடும்பம், உடம்பு, ஆரோக் கியம் -இதுபோன்று ஆயிரத்தோரு விஷயங்கள்.

அவருக்குப் போகத்தை விட இன்னும்கூடத் துணிச்ச லில்லை.

ஸ்த்ரோயன்னா என்பது சரணாகதி அடைந்தவனைக் குறிக்கும். 'துறவு' என்ற சொல்லால் நான் குறிப்பிடுவதைத் தான் ஸ்த்ரோபன்னா என்னும் சொல் குறிக்கிறது. அவன், நதியில் இறங்கியவன் ஆவான். குதித்துவிட்ட அந்தத் தைரியமான நபர், பெரும்பாலும் பைத்தியக்காரனாகத் தான் அந்தக் காரியத்தைச் செய்ததாக நினைக்க வேண்டும். அவரைப் பார்த்துக் கரையின் மீதிருக்கும் மக்கள் கேலி செய்து சிரிக்கிறார்கள். "என்ன செய்து கொண்டிருக்கிறீர் கள்? எங்கே சென்று கொண்டிருக்கிறீர்கள்? முதலாவதாக நீச்சலைக் கற்றுக் கொள்ளுங்கள். அப்புறம் குதியுங்கள்."

நதியில் இறங்காமல் ஒருவர் எப்படி நீச்சல் கலையைக் கற்றுக் கொள்ள முடியும்? சொல்லுங்கள் பார்க்கலாம்!

அவர்களது தர்க்கம் பிழையற்றது. முதலில் கற்றுக் கொள்ளுங்கள். அப்புறம் செல்லுங்கள் என்று சொல்கிறார்கள். கரையில் நின்று முதலில் கற்றுக் கொள்ளுங்கள். இல்லையேல் உங்களுக்கு ஆபத்து; அந்த ஆறு மிக ஆழமானதாக இருக்கலாம்; திரும்பி வர முடியாமல் போகலாம். நதி எங்கே போகிறது என்று யாருக்குத் தெரியும்? நதியில் இருக்கும் மக்கள் வெள்ளத்தால் அடித்துச் செல்லப்படலாம். அவர்கள் பைத்தியக்காரர்களாக இருக்கலாம். சற்றுப் பாருங்கள். பெரும்பான்மையினர் கரையில் நின்று கொண்டிருக்கிறார்கள். சில மக்கள் மட்டுமே நதிக்குள் இருக்கிறார்கள். பெரும்பான்மையினர் தவறாக இருக்க முடியாது.

கரை மீது இருக்கும் மக்கள் "சிலர் பாவம் தவறாக இருக்கலாம். பெரும்பாலோர் தவறாக இருக்க முடியாது. உலகில் மிகச் சில துறவிகளே இருக்கிறார்கள். மிக அரிதாகத்தான் உலகில் புத்தர்கள் தோன்றுகிறார்கள்- அவர்கள் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்படலாம். அவசரப்பட்டுவிடாதீர்கள். அவர்கள் மற்றவர்களை ஏமாற்றிக் கொண்டிருப்பவர்களாக இருக்கலாம். யாருக்குத் தெரியும்? தங்களுக்கென்று சில கள்ள நோக்கங்களை அவர்கள் பெற்றிருக்கலாம்.

காத்திருங்கள். கவனியுங்கள். இப்படிப்பட்ட செயலை அவசரத்தில் செய்யாதீர்கள்" என்று சொல்கிறீர்கள்.

ஆனால் இத்தகைய விஷயங்கள் அவசரத்தில் தான் செய்யப்படுகின்றன. நீங்கள் காத்திருந்து கவனித்தால் காத்திருப்பதும் கவனிப்பதும், உங்கள் யந்திரத்தனமான பழக்கமாக ஆகிவிடுகிறது. அப்புறம் நீங்கள் சும்மா போய்க் காத்திருக்கிறீர்கள். கவனிக்கிறீர்கள். அதுதான் பல வாழ்க்கைகளாகப் பல மக்கள் செய்து கொண்டு வருகிறார்கள்.

புத்தர் கூறுகிறார்:

**புத்தரின் ஐந்து நல்லொழுக்க விதிகளைக் கடைப்பிடிக்கும் பத்தாயிரம் பேர்க்கு உணவளிப்பதைக் காட்டிலும் ஒரு ஸ்த்ரோபன்னாவுக்கு உணவளிப்பது சிறந்தது.**

ஏனென்றால் ஸ்த்ரோபன்னாவுக்கு நதியினுடைய சில அனுபவங்கள் நிச்சயம் இருக்கும். சார்ந்திருப்பதற்குத் தன் சொந்த அனுபவம் இருக்கும் அல்லவா? நதியைப் பற்றிய ஏதோ ஒரு சுவை அவர் அறிந்திருப்பார் அல்லவா? நதியின் குளுமையான அனுபவத்தை அவர் பெற்றிருப்பார். அது தளர்த்துகிறது. உலகாயதக் கவலைகளும், பதட்டங்களும் மறைகின்றன. போராடுவதை நிறுத்துகிறார். வேதனையையும் கடந்து விடுகிறார். வெகுவிரைவில் வெகு தூரத்திற்கப்பால் சென்று விடுகிறது. சாதாரணக் கவலைகள் பதட்டங்கள் மறைகின்றன.

மிகவும் ஒருமைப்பாடும், அமைதியும் உடையவராக ஒருவர் மாறி விடுகிறார். ஆனால் ஒரு துறவியை மட்டுமே அதாவது ஸ்த்ரோபன்னாவால் மட்டுமே இதனை அறிய முடியும்.

துறவி வாழ்க்கையில் ஒரு அடி எடுத்து வைத்திருக்கிறார். அவர் (பாதாளத்தில்) இறங்கியிருக்கிறார். அவர் தன் வாழ்க்கையை பணயம் வைத்திருக்கிறார்.

தன் வாழ்க்கையை ஆபத்துக்குள்ளாக்கியிருக்கும் ஒருவனை மதிக்க வேண்டும். அவனுக்கு உணவளிக்க வேண்டும் என்று புத்தர் கூறுகிறார். ஆனால் இன்னும் துணிச்சல் உள்ளவராக நீங்கள் இல்லாமல் இருக்கலாம். ஆனால் துணிச்சல் உள்ளவர்களுக்கு நெருக்கமாக இருங்களேன். மற்ற எல்லாவற்றையும் போல் துணிச்சல்கூடத் தொற்றிக் கொள்ளக்கூடியதுதான். நதியில் இறங்கியுள்ள மக்களைக் கண்டுபிடியுங்கள். அவர்களோடு இருங்கள். அவர்களுக்கு உணவளியுங்கள். சிலருக்கு என்ன நடந்து

கொண்டிருக்கிறது என்பது பற்றிக் குறைந்தபட்சம் ஒரு எண்ணம் உதிக்கும்.

நீங்கள் கனவு காணத் தொடங்கலாம் அதைப் பற்றி! அதைப் பற்றி விரும்பவும் தொடங்கலாம்.

உங்களுக்குள் ஒளிந்திருந்த ஆற்றல்கள் அனைத்தும் மேலெழும்பி வரலாம். அறியாத பகுதியின் சவாலை நீங்கள் உணரத் தொடங்கலாம்.

சமய மனிதன் எதிர்மறையானவன், ஸ்த்ரோபன்னா உடன்பாடானவன். சமயமனிதன் வேறு ஒருவரைப் பின்பற்றுகிறான். ஸ்த்ரோபன்னாவோ, வாழ்க்கை நதியில் இறங்கிவிட்டான், விழிப்புணர்வு நதியில் இறங்கிவிட்டான் என்றும் கொள்ளலாம்.

அவன் தன் ஆணவத்தை விட்டுவிட்டான். இப்போது இனிமேல் அவன் புத்தரின் சீடன் அல்லன். இது புரிந்து கொள்ளப்பட வேண்டும்.

சாதாரணமாக நீங்கள் என் துறவிகள் என்றால் உங்களை என் சீடர்கள் என்றோ, பின்பற்றுவோர் என்றோ உங்களைப் பற்றிச் சொல்வார்கள்.

நீங்கள் துறவியாக வருவதன் மூலம், உண்மையில் நீங்கள், என் அங்கமாக ஆகிவிட்டீர்கள்; இனிமேலும் நீங்கள் என்னைப் பின்பற்றுவோர் இல்லை. துறவியாக ஆவதற்கு முன்பு வேண்டுமானால் நீங்கள் என்னைப் பின்பற்றுபவராக அதாவது சீடராக இருந்திருக்கலாம்.

அப்புறம் நீங்கள் பின்பற்றுவது மட்டும் போதாது என்று முடிவெடுத்து விட்டீர்கள்; என்னோடு, எந்தப் பின் விளைவுகளையும் பற்றிச் சிந்திக்காமல், எந்த யோசனையோ நிபந்தனையோ இன்றி, என்னோடு சேர்ந்து வர ஆயத்தமாகி விட்டீர்கள். அப்புறம் என்ன? நான் எங்கே போனாலும் நீங்களும் என்னோடு வரத் தயாராய் இருக்கிறீர்கள்.

நீங்கள் ஒரு துறவியாக இருக்கிறீர்கள் என்றால் நீங்கள் சீடர் அல்ல, நானாக இருக்கிற ஆற்றலின் அங்கம் நீங்கள். நீங்கள் என்னோடு ஒன்றிவிட்டீர்கள்.

"நாங்கள் துறவு ஏற்கவில்லை என்றால் நீங்கள் எனக்கு உதவ முடியுமா? உங்களால் எங்களுக்கு உதவ முடியாதா?" என்று மக்கள் என்னைக் கேட்கிறார்கள். "நான் உதவி செய்வேன். அது ஒரு சிக்கல் இல்லை. ஆனால் உங்களால் அதை ஏற்றுக்கொள்ள முடியாது. ஏனென்றால் நீங்கள் தனியாகவே தங்கியிருப்பீர்கள், நீங்கள் கரையிலேயே தங்கியிருப்பீர்கள்!" இதுதான் என் பதில்.

நதி உங்களைக் கடலுக்கு எடுத்துச் செல்லத் தயாராக இருக்கிறது. உங்களுக்கு அழைப்புக் கொடுக்கப்பட்டாகி விட்டது. அது ஒரு நிலையான அழைப்பு. ஆனால் நீங்கள் கரை மீது நின்று கொண்டிருக்கிறீர்கள்.

நதி என்ன செய்ய முடியும்? உங்களைக் கரையிலிருந்து பறித்துக் கொள்ள நதியால் முடியாது. அது நல்லதும் அல்ல; முடிந்தாலும் கூட. ஏனென்றால் உங்கள் சொந்த விருப்பத்தின் பேரில் நீங்கள் நதிக்குள் இறங்கிவிட வேண்டும்.

அப்போதுதான் அது சுதந்திரம். நதியால் நீங்கள் பாதிக்கப்பட்டால், நான் உங்களைப் பலவந்தமாக எடுத்துக் கொண்டால், அது உங்களுக்கு உதவாது. அது உங்களை அழிக்கலாம். ஆனால் உங்களுக்குச் சுதந்திரம் கொடுக்க முடியாது. மோட்சம் அல்லது இறுதிச் சுதந்திரத்தை அது எப்படி அளிக்க முடியும்? தொடக்கத்திலிருந்து அது ஒரு அடிமைத்தளை ஆகும்.

ஆகவே ஒரு காட்டாற்று வெள்ளம் மக்களை எடுத்துக் கொள்வதுபோல் நான் உங்களை எடுத்துக் கொள்ள மாட்டேன்.

நான் காத்திருக்க வேண்டும். நீங்களாக என்னிடம் வரவேண்டும். நீங்களாக நதியில் இறங்கிட வேண்டும். நீங்களே நதியின் ஒரு பாகமாக ஆகவேண்டும்.

ஸ்த்ரோபன்னா அல்லது துறவி நேர்மறையானவர். இப்போது உண்மையல்லாததுக்குப் பதிலாகப் அவருக்குள் உண்மை எழுகிறது; உண்மையல்லாத என்பது ஒரு தயாரிப்பு. அது இருந்தால் தான் உண்மை உள்ளே நுழைய முடியும். வன்முறையின்மை, அல்லது வன்முறை அல்லாத தன்மைக்குப் பதிலாக அன்பு, கருணை, அவருக்குள் எழுகிறது. வன்முறையின்மை அல்லது அகிம்சை அதற்கான முன் தயாரிப்பே ஆகும்.

வன்முறையின்மை, பொய்மையின்மை மற்றும் பிற எதிர்மறைகள் எல்லாம் சும்மா மருந்து மாதிரிதான்.

நீங்கள் நோயில் இருக்கிறீர்கள். உங்கள் நோயை அழிப்பதற்கு உங்கள் மருத்துவர் மருந்து கொடுக்கிறார். நோய் அழிந்தவுடன் ஆரோக்கியம் உதயமாகிறது. மருந்து ஒருபோதும் ஆரோக்கியம் தருவதில்லை. அது நோயை அழிக்க மட்டும் செய்கிறது. ஆரோக்கியம் மருந்தால் கிடைக்காது; ஆரோக்கியம் கொடுக்கும் மருந்து கிடையாது. ஆரோக்கியம் உங்கள் உள்ளார்ந்த இருத்தல், உங்கள் இடையூறுகள் நீக்கப்பட்டவுடன் வாழ்க்கை நதி ஓடத் தொடங்குகிறது. பாறைகள் நீக்கப்பட்டவுடன், நீரூற்றுகள் வெடித்துக் கிளம்புகின்றன.

ஆரோக்கியம் என்பது இயற்கையானது. மருந்தால் அதைத் தரமுடியாது. நோய் என்பது செயற்கையானது. நோய், வெளியிலிருந்து நுழைகிறது. ஒரு வெளிப்புற மருந்து அதை எடுக்க முடியும். ஆரோக்கியம் உங்கள் உள்ளார்ந்த மையம்; அதுதான் நீங்கள்; நீங்கள் இயற்கையாக இருக்கும் போது ஆரோக்கியமாக இருக்கிறீர்கள்.

சமய மனிதன் சிகிச்சையில் இருக்கிறான், அவன் மருத்துவமனையில் படுத்திருக்கிறான். ஸ்த்ரோபன்னா வீடு

வந்து சேர்ந்துவிட்டார்; அவர் இனியும் மருத்துவமனையில் இல்லை. அவர் சிகிச்சையின் கீழும் இல்லை. அவரது ஆரோக்கியம் முளைவிடத் தொடங்கிவிட்டது. அவரது வாழ்க்கை வசந்தம் பிரமாதமாக ஓடுகிறது. அவர் நேர்மறையானவர். அவரது குறிக்கோள் வன்முறையின்மை இல்லை. உண்மையின்மையில்லை, பொய்மையின்மை இல்லை. அவரது குறிக்கோள் எதையும் நீக்குவது இல்லை. விலக்குவதற்கில்லை. அழிப்பதற்கில்லை. ஏற்கனவே குமிழியிட்டுக் கொண்டிருக்கும் ஒன்றுக்கு உதவுதல், சுடர் வீசிக் கொண்டிருக்கிறது. அவரது இருத்தலில் அதற்கு உதவுதல்- இதுதான் அவரது குறிக்கோள்.

> 'பத்து லட்சம் சம்ஸ்த்ரோத பன்னாக்களுக்கு
> உணவளிப்பதைக் காட்டிலும் ஒரு ஸ்கிருதாகாமினுக்கு
> உணவளிப்பது சிறந்தது.'

புத்தர் ஆழமாக- மிக ஆழமாகச் செல்கிறார். ஸ்கிருதோ காமின் என்பவர் ஒருமுறை இறந்து வாழ்க்கையில் மீண்டும் வருபவர். அவரது சமாதி என்பது நெருக்கமாகச் செல்வதுதான். கரையில் இருந்து நதியில் குதித்துவிட்டவர், ஸ்த்ரோதபன்னா என்றால், ஸ்கிருதோகாமின் என்பவர் கடலுக்கு அருகில் செல்கின்ற நதிபோன்றவர். அவருடைய கடைசித் தாவலைச் செய்ய (அல்லது) மிக உயர்ந்த தாவலைச் செய்ய, ஆயத்தமாகிக் கொண்டிருக்கிறார்.

ஆனால் அவர் இன்னொரு முறை வருவார். அந்த அளவுதான் வித்தியாசம். ஸ்த்ரோதபன்னா என்பவர் ஏழு தடவைகள் பிறப்பார். அந்த அளவுதான் கரைக்கும் கடலுக்கும் உள்ள வித்தியாசம்.

ஒரு ஸ்ரோத்பன்னா ஏழு தடவைகள் பிறப்பார். ஆனால் ஒரு ஸ்கிருதோகாமின் ஒருமுறைதான், ஒரே ஒரு முறைதான் பிறப்பான். அதற்கப்புறம் இந்தக் கணக்கு முடிக்கப்பட்டு விடும். வாழ்க்கையின் பட்டதாரி நிலையிலிருந்து அவன் கடந்து சென்றிருப்பான். அப்புறம் இந்த உலகம் அவனுக்கு இனிமேல் இல்லை. ஆனால்

இன்னும் ஒருமுறை வருவான். ஆம் அவனது பட்ட மேற்படிப்புக்காக அல்லது முதுகலைப் பட்டப் படிப்பிற்காக வருவான்.

**ஒருகோடி ஸ்கிருத காமின்களுக்கு உணவளிப்பதைக் காட்டிலும் ஒரு அனகாமினுக்கு உணவளிப்பது சிறந்தது.**

அனகாமின் என்பவன் வரமாட்டான். அனகாமின் என்றாலே, திரும்பி வருகின்ற நிலையைக் கடந்தவன் என்றுதான் பொருள். உலகக் கடற்கரையைத் தாண்டி விட்டான். ஒருமுறை இறந்துவிட்டால் அவன் மீண்டும் இந்த உலகிற்கு வரமாட்டான். கடலின் விளிம்பிலேயே இருப்பவன் அவன். நதியும் அங்கே தான் இருக்கிறது. அந்த முற்றத்தில், குதிக்கத் தயாராக! அவன் திரும்பிப் பார்க்கக்கூட மாட்டான்.

ஸ்கிருதாகாமின் திரும்பிப் பார்க்கிறான், கொஞ்சம் தயங்குகிறான், திரும்பவும் வருவதற்கு விரும்புவான்.

இந்த உலகம் அழகியது. இது கவர்கிறது. இது பல கொண்டாட்டங்களை உடையது. பல மலர்கள் மலர்கின்றன இங்கே. ஸ்கிருதாகாமினின் நுண்ணிய ஆழமான உணர்வற்ற மனத்தில், எங்கோ ஓரிடத்தில் ஏதோ சில ஆசைகள் இருக்கின்றன. ஆம். ஒருவன் போக வேண்டும் என்று அவன் அறிவான். ஆனால் இந்தக் கடற் கரையில் இன்னும் கொஞ்சம் தாமதிக்க நினைக்கிறான்.

கடைசித் தாவலைச் செல்வதற்கு முன்பு, நிரந்தரமாக மறைந்து போவதற்கு முன்பு, ஒரு முறை மீண்டும் வாழ்வைச் சுவைக்க விரும்புவான் அவன், ஒரு பிரிவுப சாரம் போல, 'போய் வருகிறேன்' என்று சொல்வதற்காக.

அனகாமின் திரும்பிப் பார்க்காதவன், அவன் போய் வருகிறேன் என்று கூடச் சொல்ல மாட்டான். அவன் முழுமையாக முடிந்து விட்டான்.

ஸ்கிருதாகாமினுக்கு நன்றாகவும் நிச்சயமாகவும் தெரியும், தனக்கு ஒரு சிறந்த உலகம் காத்திருக்கிறது என்று. ஆனால் கொஞ்சம் ஆசை, இறந்த காலத்தின் மீது.

உங்களுக்கு எப்போதுமே அந்த உணர்ச்சி இருக்கும். கொஞ்சம் பழைய ஞாபகம். ஒரு வீட்டை விட்டுச் செல்லும்போது, அந்த வீட்டில் இருபது ஆண்டுகள் வாழ்ந்தீர்கள்- இப்போது காலி செய்து செல்கிறீர்கள்- கவனித்திருக்கிறீர்கள், நீங்கள் திரும்பிப் பார்க்கிறீர்கள்.

அல்லது நீங்கள் பிறந்து வளர்ந்த ஊரில் இருபதாண்டு கள் இருந்த பின் அதைக் காலி செய்து வேறிடம் செல்கிறீர்கள்- நீங்கள் திரும்பிப் பார்க்கிறீர்கள்!

புகைவண்டி கிளம்பும்போது கூட, ஜன்னலுக்கு வெளியே ஈரமான கண்களோடு, இதயத்தில் சிறிது கனத்தோடு, நினைத்துப் பார்க்கிறீர்கள். பழைய நினைவுகள், கடந்த காலம் முழுமையான இறந்த காலம். நீங்கள் இங்கே நீண்ட நாட்கள் இருந்தீர்கள்.

உங்களுக்கு நண்பர்கள் இருந்தார்கள், நீங்கள் நேசித்தீர்கள். இங்கோ உங்கள் பகைவர்கள் இருந்தார்கள். நீங்கள் வெறுத்தீர்கள் இங்கே. பல வகையான அனுபவங் கள் இங்கே உங்களுக்கு நேர்ந்திருக்கின்றன. நீங்கள் மிக அதிகமாக இந்த வாழ்க்கைக்குக் கடன்பட்டிருக்கிறீர்கள். ஆம் நீங்கள் போவதற்குத் தயாராக இருக்கிறீர்கள். ஏற்கெனவே நீங்கள் புகைவண்டியில் இருக்கிறீர்கள். ஆனால் ஆசையின் கண்கள் திரும்பிப் பார்க்கின்றன.

ஸ்கிருதாகாமின் ஒருமுறை வருவான். அனாகாமின் வரவேமாட்டான். அவனது பிரிவு முழுமையானது. முற் றானது. அவன் திரும்பிப் பார்க்க மாட்டான். அவனுக்குப் பழைய ஞாபகங்கள் இல்லை.

நடந்து கொண்டிருக்கின்றன எதிர்காலம், நடக்கப் போவது மிக அதிக அழகியது. இந்த உலகம், அவனது விழிப்புணர்விலிருந்து அப்படியே விலகிவிட்டது. உங்கள்

விழிப்புணர்விலிருந்து- உணர்விலிருந்து- இந்த உலகம் அப்படியே மறைந்து விடுகிறது.

கடவுளின் தங்கச் சிகரங்கள் அவனுக்காகக் காத்திருக்கின்றன. கடவுளின் எல்லையற்ற தன்மை காத்துக் கொண்டிருக்கிறது அவனுக்காக. ஒரு நதியின் வாழ்வுக்காக இனிமேலும் அவன் ஏங்கிக் கொண்டிருக்க வேண்டிய அவசியம் இல்லை.

ஆம். ஆயிரம் பூக்கள் அங்கே இருந்தன கரையிலே; அழகிய மரங்கள், நிழல்கள், பற்பல கனவுகள் இருந்தன. ஆனால் அவை போய்விட்டன. போய்விட்டன என்றால் போய்விட்டன. அவ்வளவுதான்.

புத்தர் கூறுகிறார்:

ஒரு கோடி ஸ்கிருதகாமின்களுக்கு உணவளிப்பதைக் காட்டிலும் ஒரு அனாகாமினுக்கு உணவளிப்பது சிறந்தது.

பத்துக் கோடி அனாகாமின்களுக்கு உணவளிப்பதைக் காட்டிலும் ஒரு அர்ஹத்திற்கு உணவளிப்பது சிறந்தது.

அர்ஹத் என்பவன் கடலில் குதித்தவன். மறைந்து விட்டவன். அனாகாமின் என்பவர் கடலின் விளிம்பில், மறையும் விளிம்பில் இருப்பவன். அதாவது எல்லைக் கோட்டின் மீது மறைவதற்காக நின்று கொண்டிருப்பவன். ஓர் அடி அதிகம் எடுத்து வைத்தால், அவன் ஒரு அர்ஹத். கொஞ்ச தூரம்தான்; அவன் அர்ஹத் ஆவதற்கு; கடைசிச் சொட்டு. ஒரு துளி தேவை, கடைசி வைக்கோல் போட்டால் ஒட்டகம் நிலைகுலைந்து விடும்.

அனகாமின் தொண்ணூற்றி ஒன்பது டிகிரி கொதிநிலையில் இருப்பவன். ஒரே ஒரு டிகிரி தேவை. அர்ஹத் என்பவன், அந்த 100 டிகிரியைத் தாண்டி விட்டவன். அதோடு ஆவியாகிவிட்டவன். அர்ஹத் நீராவியாகி விட்டவன்.

புத்தர் கூறுகிறார்:

**பத்துக் கோடி அனகாமின்களுக்கு உணவளிப்பதைக் காட்டிலும் ஒரு அர்ஹத்திற்கு உணவளிப்பது சிறந்தது.**

அர்ஹத் என்பவன் ஆணவத்தை விட்டவன்; முழுமையின் அங்கமாக ஆகிவிட்டவன். அவன் அவனாக இனி மேலும் இருக்கவில்லை; அவன் பிரபஞ்சமாக இருக்கிறான், முழுமையாக இருக்கிறான். அர்ஹத் புனிதமானவன்.

கிறித்துவர்கள் பயன்படுத்துகின்ற புனிதர் என்ற பொருளில் இல்லை, இது வேறு பொருள்.

கிறிஸ்துவ வார்த்தை 'புனிதர்' (செயின்ட்) என்பது மிகவும் அசிங்கமானது.

சேங்டஸ் என்னும் அடிச் சொல்லிலிருந்து வருகிறது. திருச்சபையினால் வழங்கப்படுகிறது. சேங்ஷன் செய்யப் படுவது. அது அசிங்கமானது. நீங்கள் எப்படி வழங்க முடியும்? அதாவது சேங்ஷன் செய்ய முடியும்? சேங்ஷன் செய்பவர் யார் இருக்கிறார்? புனிதர்களுக்கு எந்த அரசாங் கமும் நற்சான்றிதழ் அளிக்க முடியாது! வாடிகனில் இருக்கும் அரசாங்கம்கூட, போப்பானவர் கூட அதற்கு அதிகாரம் அற்றவர். ஒரு புனிதர் சான்றளிக்கப்பட முடியா தவர்; ஆனால் கிறிஸ்துவவார்த்தை செயின்ட் என்பது போப்பாண்டவரால் சான்றளிக்கப்பட்டவர்.

அர்ஹத் என்ற புனிதர் அந்த வழியில் பொருள் உடைய தன்று. அர்ஹத் என்பவர் தன்னைத்தானே முழுமையில் கரைத்துக் கொண்டவர், தூய்மையாக ஆகிவிட்டவர்.

**நூறு கோடி அர்ஹத்களுக்கு உணவளிப்பதைக் காட்டிலும் ஒரு பிரத்யக் புத்தருக்கு உணவளிப்பது சிறந்தது.**

யாரிந்த பிரத்யக் புத்தர்? அர்ஹத் என்பவர் புத்தர்களை பின்பற்றித் தன் குறிக்கோளை அடைந்தவர். பிரத்யக் புத்தர் என்பவர் எவருக்கும் சீடனாக எப்போதும் இருந்திராதவர், தன்னந்தனியாகத் தேடியவர்- அவரது

பயணம், முற்றிலும் தனித்திருந்தது. அவரது பாதை முற்றிலும் தனித்திருந்தது. ஒரு பிரத்யக் புத்தர் என்பவர் ஓர் அரிய அதிசயம். பல நூற்றாண்டுகளில் பலகோடி அரஹத்கள் இருந்திருக்கிறார்கள். ஆனால் மிக மிக அரிதாக மிகமிகச் சிலர்தான் பிரத்யக் புத்தர்களாக இருந் திருக்கிறார்கள். அவர்கள் தனித்திருந்தே- போராடியவர் கள். முழுமையாகத் தனித்திருந்தே போராடியவர்கள்.

ஆம், உண்மையில் அவர்கள் தேவைப்படுகிறார்கள். அவர்கள் இல்லையேல், அர்ஹத்கள் உருவாக முடியாது.

பிரத்யக் புத்தர்கள் இருந்தால்தான், அவர்களைப் பிறர் பின்பற்ற முடியும். அவர்கள் முன்னோடிகள், அவர்கள் புரட்சியாளர்கள், அவர்கள் பாதையைப் படைப்பவர்கள்.

நன்றாக நினைவில் கொள்ளுங்கள். முதல் தடவையாக வாழ்க்கைக் காட்டில் வாழ்ந்து செல்பவர் பிரத்யக் புத்தர் ஆவார். தன் இயக்கத்தின் (நகர்வின்) மூலமாக ஒரு பாதையை அவர் உருவாக்குகிறார்.

பிறர் அவர்களைப் பின்பற்ற முடியும். அதே புள்ளியை அவர்களும் அடைய முடியும். அதே குறிக்கோளை அடைய முடியும். ஆனால் அவர்கள் அர்ஹத்கள்.

அவர்கள் பாதையை உருவாக்கவில்லை. அவர்கள் பாதையைக் கண்டுபிடிக்கவில்லை. அவர்கள் பாதையை உருவாக்கியவர்களும் அல்லர்.

பிரத்யக் புத்தருக்கு அதிக மரியாதை கொடுத்தாக வேண்டும். ஏனென்றால் பிரத்யக் புத்தருக்கு முன்பு பாதை எதுவுமில்லை, அவரே பாதையை உருவாக்கியவர்.

**ஆயிரம் கோடி பிரத்யக் புத்தர்களுக்கு உணவளிப்பதைக் காட்டிலும் நிகழ்கால அல்லது இறந்த கால அல்லது எதிர்காலப் புத்தர் ஒருவர்க்கு உணவளிப்பது சிறந்தது.**

அப்படியானால் பிரத்யக் புத்தருக்கும், புத்தருக்கும் இடையில் உள்ள வித்தியாசம் என்ன?

பிரத்யக் புத்தர் என்பவர், ஒரு பாதையை உருவாக்கினா லும், அந்தப் பாதையில் எவரேனும் பின்பற்றி வருகிறார் களா இல்லையா என்பது பற்றிய கவலையே ஒருபோதும் இல்லாதவர்கள். அவர் ஒரு தனிப்பட்ட பயணி, அவருக் குக் கருணை இல்லை. தான் கண்டுபிடிக்க முடியும்போது பிறராலும் கண்டுபிடிக்க முடியும் என்று எண்ணுபவர் அவர். அப்படியென்றால் எதற்காக மக்களிடம் போய் இதைப்பற்றிச் சொல்ல வேண்டும். அவர் குரு இல்லை அல்லது ஆசான் இல்லை.

ஒரு பிரத்யக் புத்தர், பாதையை உருவாக்குகிறார்- ஆனால் பிறருக்காக அல்ல- நினைவு கொள்ளுங்கள். அவர் நடக்கிறார்; அவர் நடையினால் பாதை உருவாக்கப் படுகிறது. ஒருவழிப்பாதை, காட்டில்! அவர் ஒருபோதும் கவலைப்படுவதில்லை, அக்கறை கொள்வதில்லை. அவர் ஒரு தனித்திருக்கும் பயணி. தனக்கு எவையெல்லாம் நேர்கிறதோ அவை பிறருக்கும் நேரும் என்று அவர் நினைக்கிறார்.

புத்தர் தானே ஞானம் பெற்றபோது இந்த இரண்டு மாற்று நிலைகள் அவர் முன்பு இருந்தன. புத்தராக ஆவதா, பிரத்யக் புத்தர் ஆவதா? ஏழு நாட்கள் அமைதியாக இருந்தார். பிரத்யக் புத்தர் ஆவதற்கான தீர்மானத்தை அவர் செய்திருக்கக் கூடும். மகத்தான மதிப்புடைய ஒன்றை, இந்த மனித இனம் இழந்தே போயிருக்கும்.

பிரம்மா, சொர்க்கத்தில் உள்ள எல்லாக் கடவுள் களுடனும் வந்தாராம். இப்படிச் சொல்லப்படுகிறது. இது ஓர் அழகிய உவமைக் கதை. அவர்கள் அனைவரும் புத்தரின் காலடியில் பணிந்து பிரார்த்தித்துக் கொண்டார் களாம்.

"உங்கள் கண்களைத் திறவுங்கள். நீங்கள் கண்டுபிடித் தவை அனைத்தையும் எங்களுக்குக் கற்றுக் கொடுங்கள்" என்று கேட்டுக் கொண்டார்களாம்.

"என்ன அர்த்தம் உள்ளது? நான் காணமுடியுமானால், பிறரும் காண முடியுமே" என்று புத்தர் பதில் கூறினாராம்.

அவர் பிரத்யக் புத்தர் ஆவதற்காக இருந்தார். அவரது தர்க்கம் சரியான ஒன்று. நான் கண்டுபிடிக்க முடியுமானால், ஏன் மற்றவர்களால் முடியாது? நான் கற்பித்தாலும் கூட, கேட்க விரும்புபவர்கள் மட்டுமே கேட்பார்கள். யார் என்னோடு வரத் தயாரோ அவர்கள் மட்டுமே வருவார்கள். அவர்கள் நான் இல்லாமலும் செல்ல முடியும். வரத் தயாராக இல்லாதவர்கள் என் பேச்சைக் கேட்க மாட்டார்கள். வீட்டுக் கூரை மேல் இருந்து கத்தினால் கூட அவர்கள் என்னுடன் வரமாட்டார்கள். அதனால் எதற்காக வீண் கவலை?

இந்த மனிதரை இணங்க வைப்பது எப்படி என்று கடவுள்கள் அவர்களுக்குள் ஆலோசித்தார்கள். இந்தப் பிரபஞ்சத்தில் ஓர் அற்புதமான மகத்தான வாய்ப்புக் கிடைத்துள்ளது; இவர் பிரத்யக் புத்தர் ஆகிவிட்டால் செய்தியை இழந்துவிட நேரிடும்.

உண்மையில் சில மக்கள் வழியைக் கண்டுபிடிப்பார்கள்; மீண்டும். ஆனால், உயர்நெடுஞ்சாலை அமைக்கும் சாத்தியம் உள்ளது. ஒருவழிப்பாதை மிகவிரைவில் காணாமற்போய்விடும். மரங்கள் அவற்றின் மீது வளர்ந்துவிடக்கூடும்.

பாதை எப்படித் தயாரிக்கப்பட வேண்டும் என்றால் பல நூற்றாண்டுகள் ஆனாலும் மக்கள் அதைக் கடைப்பிடிக்க வேண்டும். பின்பற்றக் கூடியதாக இருக்க வேண்டும்; மரங்களும் காடுகளும் அதனை அழித்துவிடக்கூடாது. மீண்டும் அவை அந்தப் பாதையை மூடிவிடக்கூடாது.

கலந்தாலோசித்தார்கள் கடவுளர்கள். தங்களுக்குள்ளே தர்க்கித்துக் கொண்டார்கள்; இறுதியாக ஒரு வாதம் அவர்களுக்குக் கிடைத்தது.

அவர்கள் மீண்டும் புத்தரிடம் வந்து இப்படிப் பேசினார்கள்:

"நீங்கள் கற்பிக்க வேண்டும். உலகம் முழுவதும் சுற்றிப் பார்த்தோம். நன்றாகக் கவனித்துள்ளோம். ஆம், நீங்கள் சரிதான். ஒருசிலர் உள்ளார்கள். அவர்கள் உடனடியாக உங்களைப் பின்பற்றுவார்கள். நாங்கள் அறிவோம், நீங்கள் கற்பிக்கவில்லையென்றாலும் அவர்கள் கண்டுகொள்வார் கள்; கொஞ்சம் தாமதமாக, இன்னும் அதிக அடிகள் வைத்து அவர்கள் கண்டுபிடிப்பார்கள். நாங்கள் அதை நிச்சயமாக நம்புகிறோம். அவர்கள் ஏற்கனவே தேடுதலில் உள்ளார்கள். ஆகவே, உங்கள் போதனை அவர்களுடைய குறிக்கோளை அடையும் நேரத்தை விரைவாக்கக் கூடும். ஆனால் வேறொன்றும் நடந்துவிடாது. நீங்கள் சரிதான்."

ஆனால் பல கோடிக்கணக்கான மக்கள் உள்ளார்கள்- அந்த மனித இனத்தின் இதயங்களின் உள்ளே புகுந்து பார்த்துள்ளோம். உங்களைப் போன்றோர் பேச்சைக் கேட்காதவர்கள்- செவிடாகி விடுபவர்கள்- அவர்கள். ஆகவே அவர்களுக்குப் பேசுவதில் எந்தப் பயனும் விளைந்துவிடப் போவதில்லை.

ஆனால் இந்த இரண்டிற்கும் இடைப்பட்ட சில மக்களை நாங்கள் பார்த்துள்ளோம். அந்த எல்லையில் அவர்கள் மறைந்திருக்கிறார்கள். சற்றே ஒளிந்திருக்கிறார் கள். நீங்கள் பேசவில்லையென்றால் அவர்கள் வர மாட்டார்கள்.

நீங்கள் பேசினால், அவர்கள் உங்கள் பேச்சைக் கேட்பார்கள். அவர்களுக்குத் தைரியம் வரும். ஆகவே தயவு செய்து, அந்தச் சில மக்களுக்காகக் கற்பியுங்கள்!

புத்தரால் வாதிட முடியவில்லை. அவர் ஒத்துக்கொள்ள வேண்டி இருந்தது. ஆகவே அவர் புத்தர் ஆனார்; பிரத்யக் புத்தர் ஆகின்ற எண்ணத்தைத் துறந்தார்.

புத்தர் என்பவர் தன் பாதையைத் தானே கண்டவர் என்பது மட்டுமன்று- அவர் பல பேர்கள் பின்பற்றக்கூடிய பாதையை உருவாக்கினார், பிறருக்காக அவர் நிறைந்த கருணை உடையவராக இருந்தார், இருட்டில் தட்டுத் தடுமாறிக் கொண்டு, போராடிக் கொண்டிருக்கின்ற, வெளிச்சத்திற்காக ஏங்குகின்ற மனிதருக்காக மகத்தான கருணை அவருக்கு இருந்தது.

> **ஆயிரம் கோடி பிரத்யக் புத்தர்களுக்கு உணவளிப்பதைக்**
> **காட்டிலும் நிகழ்கால அல்லது இறந்தகால அல்லது**
> **எதிர்கால புத்தர் ஒருவருக்கு உணவளிப்பது சிறந்தது.**
>
> **நிகழ்கால இறந்தகால எதிர்காலப் புத்தர்கள் பத்தாயிரம்**
> **கோடிப் பேர்க்கு உணவளிப்பதைக் காட்டிலும்**
> **அறிவிற்கும் பாரபட்சத்திற்கும், கட்டுப்பாட்டிற்கும்,**
> **ஞானத்திற்கும் மேம்பட்டு அப்பாற்பட்ட ஒருவர்க்கு**
> **உணவளிப்பது சிறந்தது.**

அப்புறம் அவர் கடைசி விஷயத்திற்கு வருகிறார்; அதாவது புத்தருக்கும் அப்பால் கூட ஒருவர்- அதாவது மனிதனது நுண்ணறிவு போகமுடியும் வரை- அதைப் பூஜ்ஜியப் புள்ளி என்றும் சொல்லலாம்.

புத்தர்தான் அந்தக் கடைசிப் புள்ளியாக- பூஜ்ஜியப் புள்ளியாகத் தோன்றுகிறார். அதனால்தான் கௌதம் சித்தார்த்தரைத் 'திபுத்தா' என்று அழைக்கிறோம். மொழியால் எவ்வளவு தூரம் போகமுடியுமோ அதுவரை. ஆனால் மொழிகடந்த புள்ளி ஒன்று உள்ளது; ஒரு புள்ளி இருக்கிறது, அதை நாம் விளக்க முடியாது. வெளிப்படுத்த முடியாது. அடையாளங்களுக்கு அப்பாற்பட்டதாக எடுத்து விளக்க முடியாததாக அது உள்ளது.

புத்தராக இருப்பதைவிட மேலான ஒரு பாதைக்கு- நிலைக்கு- புத்தர் அழைக்கின்றாரே, அதுவே அந்த நிலை.

இந்தச் சூழ்நிலையில் தனக்கு ஞானம் கிடைத்துவிட்ட தென்றுகூட அவர் நினைப்பதில்லை. அப்படிப்பட்ட

ஒருவருக்கு எந்தக் கட்டுப்பாடும் இல்லை- எந்தக் குண நலனும் இல்லை. ஒன்று என்பதே இல்லை. ஒன்று என்பது வெற்று வெளியாகும். காலி இடமாகும். வெற்றிடமாகும்.

ஏனென்றால் பிறருக்குக் குறைந்தபட்சம் உதவ வேண்டும் என்னும் எண்ணம், பிறருக்கான கருணை- உள்ளது. ஆனால் அதுவும் அடிமைத்தளைதான். புத்தர் இன்னும் சிந்திக்கிறார். "பிறர் இருக்கிறார்கள். நான் இருக்கிறேன். பிறருக்கு நான் உதவ முடியும்! இன்னும்கூட அந்தக் கடைசி நுண்மை ஆகிய நான், நீங்கள், எனது, உனது இவை இருக்கின்றன.

கடைசிப்புள்ளி- பூஜ்ஜியப் புள்ளி- அங்கே அறிவு மறைகிறது; அனைத்து அனுபவங்களும் மறைந்து விடுகிறது. நிர்வாண அனுபவங்கள் கூட மறைந்து விடுகின்றன- ஏனென்றால் அதை அனுபவிப்பவர் யாரும் அங்கே இல்லை.

இதைப்பற்றிச் சொல்வது மிகவும் கடினம், எதிர்மறை வரையறைகள் மட்டுமே சாத்தியம்

நீங்கள் இந்தப் புள்ளியை எல்லாச் சமயங்களிலும் காணலாம். அவைகள் வித்தியாசமான வார்த்தைகளில் சொல்கின்றன.

கிறிஸ்துவர்கள், முஸ்லீம்கள், இந்துக்கள் எல்லாரும் இந்தப் புள்ளியைக் கடவுள் என்கிறார்கள். 'அப்பால்' என்பது அவர்கள் சொல்லும் வழியாகும். பௌத்த வழி மிக மிக உயர்வானதாகத் தோன்றுகிறது. சமணர்கள், சாங்கியர்கள், யோகிகள் ஆகியோர் மோட்சம் என்று- முழுமையான விடுதலை என்று- அழைக்கின்றார்கள். அல்லது மற்றவர்கள், கைவல்யம் என்று- அதாவது முழுமையான தனித்திருத்தல் என்று அழைக்கிறார்கள்; இருப்பினும் எல்லா வார்த்தைகளும் அதைக் கட்டுப் படுத்துகின்றன. அதற்குப் புத்தர் ஒரு வார்த்தையும் பயன்படுத்தவில்லை.

நிகழ்கால, இறந்தகால, எதிர்காலப் புத்தர்கள்
பத்தாயிரம் கோடிப் பேர்க்கு உணவளிப்பதைக் காட்டிலும்
அறிவுக்கும் பாரபட்சத்திற்கும் கட்டுப்பாட்டிற்கும்
ஞானத்திற்கும் மேம்பட்டு, அப்பாற்பட்ட ஒருவர்க்கு
உணவளிப்பது சிறந்தது.

இவைகளே உங்களுக்குள் இருக்கும் சாத்தியக்கூறுகள். சாதாரணமாக நீங்கள் ஒரு கெட்ட மனிதராக இருக்கிறீர்கள். ஏணியின் கடைசிக் கீழ்மட்டக் குறுக்குச் சட்டத்தில் இருக்கிறீர்கள்.

நல்ல மனிதன் ஆவதற்கு முயற்சி செய்யுங்கள். கெட்டவனாக இருப்பதை விடச் சிறந்தது இது. இதுதான் குறிக்கோள் என்று நினைக்க வேண்டாம். இது ஒன்றுக்கொன்று ஒப்புநோக்கத்தக்கது. ஒன்றுக்கொன்று தொடர்புடையது.

நான் கேட்டிருக்கிறேன்.

முல்லா நசிருத்தீன் ஒரு பெண்ணிடம் காதல் கொண்டிருந்தார். அவர் அந்தப் பெண்ணின் தந்தையிடம் சென்று அவளைத் தான் திருமணம் செய்து கொள்ள அனுமதிக்க வேண்டுமென்று கோரினார்.

பெண்ணின் தந்தைக்கு விருப்பம். 'நான் மிகவும் மகிழ்ச்சியாய் உள்ளேன். இதற்கு ஆட்சேபணையே இல்லை. என் மனைவி ஒப்புக்கொள்ள மாட்டாள். உங்கள் ஹிப்பி மாடல் முடியும், கவிதை முறை வாழ்க்கையும், பால்காண முடியாதவகை உடையும், பார்த்தால் உங்களை அவள் 'அலி' என்று நினைக்கிறாள்.

முல்லா அதைப் பற்றி நன்றாகச் சிந்தித்து விட்டுச் சொன்னார். "அவர் சரிதான். அவளை ஒப்பு நோக்கும் போது" என்று.

ஒவ்வொரு விஷயமும் ஒப்புநோக்கத் தக்கது. நல்ல மனிதன், கெட்டவனோடு ஒப்புநோக்க நல்லவன். ஆனால் சமயவாதியை ஒப்புநோக்கினால் நல்ல மனிதன் கெட்ட

மனிதன்தான். சமயவாதியோடு ஒப்புநோக்கினால் துறவி நல்லவன் ஆவான்.

ஆனால் ஸ்கிருதாகாமினோடு அவன் ஒப்புநோக்குவது எப்படி? அல்லது அதற்கு மேலுள்ளவர்களோடு ஒப்பிடுவது எப்படி?

உள்ளார்ந்த பாதையில் நீங்கள் எந்த அளவுக்குப் பயணிக்கிறீர்களோ அந்த அளவுக்குச் சிகரங்கள் உங்களுக் குக் கிடைக்கும். கட்டம் கடைசி நிலைக்கு மிகமிக இறுதி நிலைக்கு வந்தாலொழிய நீங்கள் திருப்தி அடைந்து விடாதீர்கள். மிகவும் இறுதி எது என்றால் அப்பாற்பட்ட தன்மை- அதில் ஒன்றும் இன்மைதான் உள்ளது; தூய இருப்பு என்பது மட்டும் தான் உள்ளது.

அந்தத் தூய்மை உங்கள் குறிக்கோளாக இருக்கிறது. அந்தத் தூய்மையில் நீங்கள் ஒன்றாக ஆகிறீர்கள். தூய்மை அடையும் வரை, எப்படியாவது இருமை இருந்து கொண்டே இருக்கிறது. முதலில் மேலோட்டமாகவும் பிறகு நுட்பமாகவும் மிக மிக நுட்பமாகவும், முதலில் தன்னுணர் வில் பிறகு உணர்வு அற்ற நிலையில். ஆனால் அது இருந்து கொண்டே இருக்கிறது. மேல் விழிப்புணர்வு உணர்விலும் அது தொடர்கிறது. அது தன் நிழல்களைப் பரப்புகிறது. ஆகவே நினைவில் கொள்ளுங்கள். குறிக்கோள் முழுமை யாக மறைந்ததாகவேயாகும்.

அந்தக் குறிக்கோள் எப்படியிருக்க வேண்டும்? எல்லா இருமைகளையும் கடக்க வேண்டும், எல்லா வரையறை களையும் கடந்தாக வேண்டும். முழுமையுடன் ஒன்றாக வேண்டும் என்பதே குறிக்கோள்.



*ஆனந்த் நிர்க்கந்தாவிடமிருந்து முதல் கேள்வி:*

*கடவுள் பற்றி நிரூபிக்க முடியாது என்பதனால் புத்தர் அது பற்றிப் பேசமாட்டார் என்று நீங்கள் சொல்கிறீர்கள். அடுத்த மூச்சிலேயே அவர் பிற வாழ்க்கைகள், மறு (பிறப்பு) அவதாரம் பற்றியெல்லாம் பேசுகிறார். இது எப்படி விஞ்ஞான உண்மையுடன் பொருந்துவதாகும்?*

*ஒரு புத்தர் கூறுகிறார் 'ஆத்மா இல்லை' என்று. அப்படியென்றால் இறப்பிற்குப் பின் தங்குவது என்ன? மறு (பிறப்பு) என்றால் என்ன? நான் ஓரளவு மங்கலாகத் தங்குவது வடிவமற்றது என்று புரிந்து கொள்கிறேன். ஆனால் அது தனித்தன்மை யுடையதாக இருக்குமா? ஒரே அலையே திரும்பப் பிறப்பதில்லை.*



ந்தக் கேள்வி மிகவும் குறிப்பிடத்தக்கது. சுயம் இல்லை என்பது மனித உணர்விற்கு புத்தர் அளித்த அடிப்படைக் கொடைகளில் ஒன்று- இது மிகவும் சிக்கலானது. நீங்கள் மிகவும் அமைதியாக இருந்து உஷாராயிருந்து புரிந்து கொள்.ள வேண்டும். ஏனென்றால் நீங்கள் பதப்படுத்தப் பட்டுள்ள பாணிகள் எல்லாவற்றுக்கும் எதிர்ப்பாக அது போகிறது.

முதலில் சில ஒற்றுமைகள் அல்லது உவமைகள். அதை வைத்து நீங்கள் ஒரு குறிப்பிட்ட விஷயம் பற்றி அதாவது- சுயம் இல்லை- என்பது பற்றி ஒருவித அபிப்பிராயத்திற்கு வரமுடியும்.

உங்கள் உடல் என்பது ஒரு தோல்பை. தோல் உங்கள் உடலை வரையறுக்கிறது.

நீங்களும் உலகமும் எங்கோ தொடங்குகிறீர்கள் என்று அது வரையறுக்கிறது.

உங்களைச் சுற்றி வகுக்கப்பட்ட ஓர் எல்லை அது.

அது உலகத்திடமிருந்து உங்களைக் காப்பாற்றுகிறது. அது உலகத்திலிருந்து உங்களைப் பிரிக்கிறது. உலகத்தில் நுழைவதற்கு ஒரு சில துளைகளைத்தான் அது அனுமதிக்கிறது, அல்லது உலகம் உங்களில் நுழைவதற்கு அனுமதிக்கிறது.

தோலே இல்லாமல் இருந்தால், நீங்கள் உயிர் வாழ இயலாது ஆகியிருக்கும். உங்களைச் சுற்றியுள்ளவற்றில் நீங்கள் உங்கள் எல்லைகளை இழந்திருப்பீர்கள். ஆனால் நீங்கள் உங்கள் தோல் அல்ல. தோல் மாறிக் கொண்டே இருக்கிறது.

பாம்பு ஒன்று மீண்டும் மீண்டும் தன் பழைய தோலை (சட்டையை) உரிப்பது போன்றது தான் இது. நீங்களும் கூடப் பலதடவை உங்கள் தோலிலிருந்து வெளியே வருகிறீர்கள். அதாவது பாம்பைப் போல் நீங்கள் சட்டை உரிக்கிறீர்கள்.

உடலியலாளர்களைக் கேட்டால் அவர்கள் சொல்வார் கள். "எழுபது ஆண்டுகள் மனிதன் வாழ்ந்தால், ஏறத்தாழ பத்துத் தடவைகள், அவன் தன் தோலை மாற்றுவான்."

ஆனால் இந்தச் செயல்முறை மிகவும் மெதுவானது. அதனால் உங்களால் உணர்ந்து கொள்ளவே முடியாது. ஒவ்வொரு கணமும்-

அவ்வளவு சின்னஞ்சிறிய பகுதி. மாற்றம் பெறுகிறது. நீங்கள் உணரமுடியாத அளவுக்கு அது நிகழ்கிறது. உங்கள் உணர்வு அந்த அளவுக்கு நுட்பமானது அன்று.

ஆனால் மாற்றம் மிகவும் நுட்பமானது. தோல் மாறிக்கொண்டே இருக்கிறது. இருந்தும் நீங்கள் உங்களுக்குள் இதுதான் உங்கள் உடல் என்று சிந்தித்துக் கொண்டிருக்கிறீர்கள். இந்த உடல் அதே உடல் என்றுதான் நினைக்கிறீர்கள்.

அது அதே உடல் அல்ல; அது ஒரு தொடர்ச்சிப் பொருள்.

நீங்கள் உங்கள் அம்மாவின் கருப்பையில் இருந்தபோது முதல்நாள் நீங்கள் சற்றே ஒரு சிறிய உயிரணுவாக, சாதாரண கண்ணுக்குத் தெரியாத பொருளாக இருந்தீர்கள்.

அதுதான் உங்கள் தோல் அந்த நேரத்தில்! அதுதான் உங்கள் உடலாக அந்த நேரத்தில் இருந்தது!

அப்புறம் நீங்கள் வளரத் தொடங்கினீர்கள்.

ஒன்பது மாதங்களுக்குப் பின்னால் நீங்கள் பிறந்தீர்கள். அப்போது நீங்கள் முற்றிலும் வித்தியாசமான உடலைப் பெற்றிருந்தீர்கள். திடீரென்று ஒருநாள் வயதானவராக ஆனபின்பு, பிறந்தபோது இருந்த அதே தான் இப்போது இருக்கும். நீங்கள் என்று உங்களால் அறிந்துகொள்ள முடியாது.

அந்த அளவுக்கு நீங்கள் மாறிப்போய் விட்டீர்கள். இருப்பினும் அதுதான்- அதேதான்- என்று இன்னும்கூட நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்.

ஒருவகையில் நீங்கள் அதேதான்- ஏனென்றால் நீங்கள் அதே தொடர்ச்சிதான். ஒருவகையில் நீங்கள் அதே அல்ல, ஏனென்றால் தொடர்ச்சியாக நீங்கள் மாறிக் கொண்டிருக் கிறீர்கள்.

அதேவழியில், தோலைப் போலவே, ஆணவமும் உள்ளது. தோல் உங்களை உங்கள் உடலை ஒரு வடிவில், ஒரு வரையறையில், ஒரு குறிப்பிட்ட எல்லையில் வைக்கிறது. ஆணவம் என்பது உங்கள் மனதை ஒரு எல்லைக்குள் பிடித்து வைக்கிறது. ஆணவம் என்பது உள்ளே இருக்கும் தோல். அதனால்தான் நீங்கள் எங்கே இருக்கிறீர்கள் என்று உங்களுக்குத் தெரிகிறது. இல்லாவிட்டால் நீங்கள் காணாது போயிருப்பீர்கள். யார் யார் என்று நீங்கள் தெரிந்து கொள்ள மாட்டீர்கள். நான் யார் என்றும் பிறர் யார் என்றும் தெரிந்துகொள்ள முடியாது.

'தான்' என்பதன் சிந்தனை, நான், ஆணவம், ஒரு வரையறை, பயன்பாட்டு வரையறையை வழங்குகிறது. அது பிறரிடமிருந்து உங்களைத் தெளிவாகப் பிரிக்கிறது. ஆனால் அதுவும்கூட ஒரு தோல், மிக நுட்பமான தோல், அதுதான், உங்கள் மனதின் உட்பொருள்களைப் பிரித்து வைத்திருக்கிறது- அதாவது உங்கள் ஞாபகசக்தி, உங்கள் இறந்தகாலம், உங்கள் ஆசைகள், உங்கள் திட்டங்கள், உங்கள் எதிர்காலம், உங்கள் நிகழ்காலம், உங்கள் காதல், உங்கள் வெறுப்பு, உங்கள் கோபம், வருத்தம், மகிழ்ச்சி- எல்லாவற்றையும் அந்தப் பையில் போட்டுவைத்துக் கொண்டுள்ளது. ஆனால் நீங்கள் அந்தத் ஆணவமும் அல்ல; ஏனென்றால் அதுவும் மாறிக் கொண்டே போகிறது. உடல் தோலைவிட அதிகமாக இந்த உள்ளார்ந்த தோல் ஆணவம்- மிக அதிகமாக மாறிக் கொண்டே இருக்கிறது.

ஒவ்வொரு கணமும் அது மாறிக்கொண்டேயிருக்கிறது

புத்தர் சுடர் ஒன்றை உவமையாகக் கையாளுகிறார். ஒரு விளக்கு ஏற்றப்படுகிறது. நீங்கள் சுடரைக் காண்கிறீர்கள். ஆனால் அது தொடர்ச்சியாக மாறிக் கொண்டிருக்கிறது.

காலையில், நீங்கள் சுடரை அணைக்கும்போது, நீங்கள் ஏற்றியபோது இருந்த சுடரை அணைக்கவில்லை. அது, அந்த இரவு முழுவதும் மாறிக்கொண்டே இருந்திருக்கிறது.

ஒவ்வொரு ஒற்றைக் கணத்திலும், அந்தச் சுடர் புகையில் மறைந்து கொண்டு இருக்கிறது. புதிய சுடர் ஒன்று புதிதாக இடம்பெறுகிறது. புதிதாக இடம் பெறுதல் என்பது எந்த அளவுக்கு வேகமானது என்றால் உங்களால் பார்க்க முடியாத அளவுக்கு வேகமானது. 'சுடர் இல்லா ததை நீங்களே' காண முடிவதில்லை. ஒரு சுடர் போனது, மறுசுடர் வந்தது. ஒன்று போயிற்று. இன்னொன்று வந்தது.

அந்த இயக்கம்- நகர்வு- எவ்வளவு வேகமானது என்றால்- இவை இரண்டிற்கும் இடையில் உள்ள இடை வெளியினை நீங்கள் பார்க்க முடியாத அளவுக்கு என்றால் பார்த்துக் கொள்ளுங்கள். இல்லாவிட்டால், தொடர்ச்சி மட்டுமே அங்கு உள்ளது. அது அதே சுடர் அல்ல; இருந்தாலும், ஒருவகையில் அது அதே சுடர்தான். ஏனென்றால் அதே சுடரின் தொடர்ச்சிதான் அது. அது அதே சுடரினில் பிறந்தது தான்.

நீங்கள் உங்கள் பெற்றோர்களிலிருந்து வெளியே வந்து பிறந்தீர்கள். நீங்கள் ஒரு தொடர்ச்சி; நீங்கள் அதே அல்ல! நீங்கள் உங்கள் தந்தை அல்ல; நீங்கள் உங்கள் தாய் அல்ல; ஆயினும் நீங்கள் உங்கள் தந்தையாகவும், தாயாகவும் இருக்கிறீர்கள். ஏனென்றால், அதே மரபின் தொடர்ச்சியாக நீங்கள் உள்ளீர்கள், அதே வரிசையின், அதே பாரம்பரியத் தின் தொடர்ச்சியாக உள்ளீர்கள்.

ஆணவம் என்பது ஒரு தொடர்ச்சி என்று புத்தர் கூறுகிறார். அது ஒரு பொருள் அல்ல. ஆனால் சுடரைப் போல், நதியைப்போல, உடலைப் போல் அது ஒரு தொடர்ச்சியாகும்.

சிக்கல் உதிக்கிறது. நாம் அதைச் சரி என்று ஏற்றுக் கொள்ளலாம். அப்படியே அதுவும் இருக்கலாம். ஒரு

மனிதன் இறப்பில் இறக்கும்போது, ஒவ்வொரு விஷயமும் மறைகிறது. மிகச்சரியான உண்மை. அப்பொழுது அது ஒரு சுடராக இருக்கலாம். புத்தர் 'ஒரு நபர் மீண்டும் பிறக்கிறார்' என்று கூறுகிறார். சிக்கல் எழுகிறது. மீண்டும் பிறப்பவர் யார்? மீண்டும் சில உவமைகள். பெரிய வீடு ஒன்று எரிகிற போது அல்லது காடு தீப்பற்றி எரியும்போது பார்த்திருக்கிறீர்களா? நீங்கள் கவனித்தால் ஓர் அதிசயத்தைக் காண்பீர்கள்.

ஒரு மரத்திலிருந்து இன்னொரு மரத்திற்கு அப்படியே தீ தாவுகிறது. அது ஒரு திடப்பொருளை உள்ளே வைத்திருக்கவில்லை; வெறும் சுடர் மட்டுமே. அதற்குள்ளே எந்தத் திடப்பொருளும் இல்லை; அது ஒரு தூய்மையான ஆற்றல்; அது ஆற்றலின் பகுதி. ஆற்றலின் குறிப்பிட்ட அளவு- அது ஒரு மரத்திலிருந்து இன்னொரு மரத்திற்குச் சென்று, அங்கிருந்து மறு மரத்திற்குச் சென்று இப்படியே பரவுகிறது.

அல்லது நீங்கள் எரியாத தீப்பந்தம் ஒன்றை, எரிந்து கொண்டிருக்கும் தீப்பந்தத்தின் அருகில் கொண்டுவர முடியும்? என்ன நடக்கிறது. ஏற்றப்பட்ட தீப்பந்தத்தின் சுடர், ஏற்றப்படாத தீப்பந்தத்திற்குத் தாவி, அதை எரிய வைக்கிறது. அது ஓர் அளவான தாண்டுதல், அது ஒரு தாவுதல். தூய சுடர் அந்தத் தீப்பந்தத்திற்குத் தாவி, அடுத்த தொடர்ச்சியை உருவாக்குகிறது.

அல்லது, இப்போது, நீங்கள் என் பேச்சைக் கேட்டுக் கொண்டு இருக்கிறீர்கள்.

இப்போது வானொலிப் பெட்டியைப் பாட வைத்தால், திடீரென்று- அல்லது உடனடியாக ஒரு குறிப்பிட்ட நிலையத்தின் ஒலிபரப்பை இப்போது கேட்பீர்கள். சும்மா ஒரு 'ரிசீவர் செட்' (ஒலிவாங்கும் கருவி) மட்டும் உங்களுக்குத் தேவை. உங்களிடம் ரிசீவர் செட் மட்டும் வந்து விட்டது என்று வைத்துக் கொள்ளுங்கள், லண்டன்

அல்லது மாஸ்கோ அல்லது பீகிங் அல்லது வேறு ஏதாவது நிலையத்தின் ஒலிபரப்பைக் கேட்டுவிடலாம்.

திடப்பொருள் எதுவும் வருவதில்லை. சும்மா வெறும் நினைவு அலைகள், பீகிங்கிலிருந்து பூனாவுக்குத் தாவிக் கொண்டிருக்கின்றன. சும்மா வெறும் எண்ண அலைகள்- எதுவும் திடப்பொருள் சார்ந்தவை இல்லை. உங்கள் கைகளால் அவற்றைப் பிடிக்க முடியாது. உங்கள் கண்களால் பார்க்க முடியாது. அவை அங்கே உள்ளன. ஏனென்றால் ரேடியோ செட் அவற்றைப் பிடித்துக் கொள்கிறது. அல்லது உங்கள் தொலைக்காட்சி அவற்றைப் பிடித்துக் கொள்கிறது.

ஒரு நபர் இருக்கும்போது, அவனது முழு வாழ்க்கையின் திரட்டப்பட்ட ஆசைகளும், அவனது முழு வாழ்க்கையின் திரட்டப்பட்ட நினைவுகளும், அவனது முழு வாழ்வின் சடங்குகளும், கர்மாக்களும் ஆற்றல் அலைகள் போலப் புதிய கருப்பையில் தாவிக் குதிக்கின்றன. அது ஒரு தாவுதல். இயற்பியல் அல்லது பௌதிகத்தில் இதற்குச் சரியான வார்த்தை உள்ளது; 'அளவான தூண்டுதல்' (க்வான்டம் லீப்) 'எந்தவித உள்ளீடுமற்ற- தூய ஆற்றலின் தாண்டுதல்' என்று இதற்குப் பொருள்.

புத்தர் தான் முதன்முதல் அளவை இயல்பியலாளர் ஆவார். ஈன்ஸ்டீன், இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்குப் பின்னால் பின்தொடர்ந்தார். ஆனால் அவர்கள் இருவரும் ஒரே பாஷையில் பேசுகிறார்கள். இப்போதும் நான் சொல்கிறேன். புத்தர் விஞ்ஞானபூர்வமானவர். அவரது மொழி தற்கால இயற்பியல். தன் காலத்திற்கு இருபத்தைந்து நூற்றாண்டுகள் முந்தி வந்து விட்டவர் அவர்.

ஒரு மனிதன் இறக்கும் போது அவன் உடல் மறைகிறது. திடப்பொருள் மறைகிறது. கண்ணுக்குத் தெரியாத பொருள்; மனப்பகுதி ஓர் அதிர்வாகும். அந்த அதிர்வு விடுவிக்கப்படுகிறது. ஒலிபரப்பப்படுகிறது. இந்த

அதிர்வுக்குத் தகுந்தபடியான கருப்பை தயாராக இருக்கும் போது அந்தக் கருப்பையில் அது நுழைகிறது.

சுயம் செல்லுதல் என்பது இல்லை, யாரும் செல்ல வில்லை. அங்கே எந்தத் ஆணவமும் செல்லவில்லை. அங்கே திடமான எதுவும் போயாக வேண்டிய அவசியம் எதுவும் அங்கே இல்லை. அது ஒரு சக்தியின் உந்துதல். அவ்வளவு தான். அதே தான்மை நிறந்தமைதான் மீண்டும் குதிக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.

ஓர் உடல் வாழ முடியாத நிலைமைக்குத் தள்ளப்பட்டு விட்டது. ஓர் வீடு இடிந்துவிட்டது.

ஆனால், பழைய ஆசை, வாழ்க்கைக்கான மோகம். புத்தர் இதைத் 'தன்ஹா' என்று சொல்கிறார். அதாவது வாழ்க்கைக்கான மோகம் உயிரோடு உள்ளது. தகித்துக் கொண்டுள்ளது. அந்த ஆசைதான் ஒரு தாவு தாவுகிறது.

இப்போது தற்கால இயற்பியல் ஆளர்கள் சொல்வதைக் கேளுங்கள். திடப்பொருள் எதுவும் இல்லை என்கின்றார் கள். அவர்கள். என் பின்னால் கண்ணுக்குத் தெரிகின்ற மிகவும் திடமான சுவரைப் பார்க்கிறீர்கள் அல்லவா? இதன் வழியாக நீங்கள் கடக்க முடியாது.

நீங்கள் அதற்காக முயன்றால் இடிபடுவீர்கள். காயப் படுவீர்கள். ஆனால் தற்கால இயற்பியல் எதுவுமே திடமானது அன்று என்று கூறுகிறது. அது தூய சக்தி. அது மகத்தான ஆற்றலோடு மிகவும் இயங்கிக் கொண்டே இருப்பதன் மூலம், திடப்பொருள் இருப்பது போன்ற பொய்யை, மாயையை உருவாக்குகிறது. ஆக, சுவரும் ஒரு சக்தியின் இயக்கமே.

மிகவேகமாக ஒரு மின்விசிறி சுழல்வதை நீங்கள் சில சமயங்களில் பார்த்திருக்கலாம். அப்போது நீங்கள் மின் விசிறியின் மூன்று இறக்கைகளை அல்லது இதழ்களைப்

பார்க்க முடியாது. ஒரு தட்டு இருப்பது போலவும், ஒரு வட்டம் இருப்பது போலவும் தான் அது காட்சி தருகிறது.

இரண்டு இதழ்களுக்கு இடையில் உள்ள இடை வெளியை உங்களால் காண முடியாது. மின்னணுக்களின் இயக்கத்திற்குச் சமமான அதே வேகத்தில், ஒரு மின்விசிறி சுழலுமானால், அந்த மின்விசிறியில் நீங்கள் உட்கார்ந்து கொள்ளலாம், நீங்கள் அதிலிருந்து கீழே விழமாட்டீர்கள். ஏனென்றால் அந்தச் சுற்றின் வேகம் அவ்வளவு மகத்தானது.

நான் நாற்காலியில் உட்கார்ந்திருப்பது போல் நீங்கள் மின் விசிறியில் உட்காரலாம். அதே நேரத்தில் எந்த விதமான நகர்வையும் நீங்கள் உணர மாட்டீர்கள். அந்த நகர்வு அல்லது இயக்கம் அவ்வளவு வேகம் உள்ளது.

அதே நிலைதான் இதோ இந்த நாற்காலியிலும் நடக்கின்றது. உங்கள் காலின் கீழ் இந்தத் தரையிலும் அது தான் நிகழ்கின்றது. அது ஒரு சலவைக் கல்லாலான தரையன்று, அது ஒரு தோற்றம் தான். அதில் உள்ள சக்திக் கூறுகள் தங்கள் இயக்கத்தை எவ்வளவு வேகமாக நிகழ்த்துகின்றன தெரியுமா? அவற்றின் வேகம் உங்கள் கண்ணுக்கு ஒரு திடப்பொருள் போன்ற மாயத் தோற்றத்தை அளிக்கும் அளவுக்கு இருக்கிறது. வேகத்தால் விளைகிறது மாயம்.

திடப்பொருள் இருக்கவில்லை, ஆனால் தூய சக்தி மட்டுமே இருக்கிறது. தற்கால இயற்பியல் பொருள் இருக்க வில்லை, சக்தி இயக்கம் மட்டுமே உள்ளது எனக் கூறுகிறது. அதனால்தான் நான் புத்தர் ஒரு விஞ்ஞானி என்று கூறுகிறேன். அவர் கடவுளைப் பற்றிப் பேசவில்லை. ஆனால் அவர் பொருளாக அல்லாத சுயமற்ற தன்மை யைப் பற்றிப் பேசுகிறார். தற்கால இயற்பியல், நுண் பொருள் தத்துவத்திலிருந்து, திடப்பொருள் பற்றிய கருத்தைக் கண்டுபிடித்துள்ளது. அதுபோல் புத்தர்,

தன்னுடைய நுண்பொருள் தத்துவத்திலிருந்து தான் பற்றிய கருத்தைக் கண்டுபிடித்துள்ளார். சுயமும் திடப்பொருளும் பரஸ்பரத் தொடர்புடையவை. ஒரு சுவர் என்பது திடப்பொருள் அல்லாத ஒன்று என்று நம்புவது கடினம் அல்லவா? அது போல் தான் உங்களுக்குள் 'தான் அல்லாத தன்மை இருக்கிறது' என்பதை நம்புவதும் கடினம்.

இதை மேலும் தெளிவானதாக்குகின்ற சில விஷயங்களை இப்போது பார்ப்போமா? நீங்கள் இதைப் புரிந்து கொள்வீர்கள் என்று என்னால் கூறமுடியாது. ஆனால், நிச்சயமாக இந்த விஷயம் இன்னும் தெளிவாக வாய்ப்பு இருக்கிறது. நீங்கள் நடக்கிறீர்கள். நீங்கள் நடந்து கொண்டிருக்கிறீர்கள், நீங்கள் காலை நடைக்குச் சென்றிருக்கிறீர்கள்.

'நீங்கள் நடந்து கொண்டிருக்கிறீர்கள்' என்று சொல்லும் அந்த வாக்கியமே ஒரு சிக்கலை உருவாக்குகிறது.

அந்த வாக்கியத்தில் நமது மொழியிலேயே இந்தச் சிக்கல் உள்ளது. யாரோ நடந்து கொண்டிருக்கிறார் என்று நாம் சொல்கின்ற அந்தக் கணத்திலேயே யாரோ ஒருவர் நடந்து கொண்டிருக்கிறார் என்று ஊகம் செய்து கொள்கிறோம். நடப்பவர் இல்லையென்றால் நடப்பது எப்படிச் சாத்தியமாகும் என்று நாம் கேட்கிறோம்.

புத்தர், நடப்பவர் என்று யாரும் இல்லை. நடந்து கொண்டிருப்பது அல்லது நடப்பது அல்லது நடை என்பது மட்டுமே இருக்கிறது என்று சொல்கிறார். வாழ்க்கை என்பது விஷயங்களை, பொருள்களை உள்ளடக்கியதாக இல்லை. வாழ்க்கை என்பது நிகழ்ச்சிகளைக் கொண்டது என்கிறார் புத்தர்.

இதைத்தான் தற்கால விஞ்ஞானம் அப்படியே தெள்ளத் தெளிவாகக் கூறுகிறது. வளர்ச்சிப்படிகள் மட்டுமே இருக்கின்றன; பொருள்கள் அல்ல; விஷயங்கள் அல்ல. ஆனால் நிகழ்ச்சிகள் மட்டுமே இருக்கின்றன.

(உயிர்) வாழ்க்கை இருக்கிறது என்று சொல்வது கூடச் சரியானதல்ல, ஆயிரக்கணக்கான வளர்ச்சிப்படிகள் மட்டுமே இருக்கின்றன.

(உயிர்) வாழ்க்கை என்பது சும்மா ஒரு கருத்துத்தான். உயிர் என்று ஒரு பொருள் இல்லவே இல்லை. விண்ணிலே ஒருநாள் கருமேகங்கள் கூடுவதையும், இடி மின்னலையும் காண்கிறீர்கள். நீங்கள் மின்னலைப் பார்க்கும் போது, மின்னலுக்குப் பின்னால் ஏதாவது உள்ளதா என்று கேட்கிறீர்களா? யார் இந்த மின்னல்? மின்னல் என்பது என்ன? மின்னல் என்பது அது தான். மின்னல்தான்- அதன் பின்னால் யாரும் இருக்கவில்லை. அது ஒரு வளர்ச்சிப்படி. உள்ளபடி மின்னல் என்று ஒன்று இல்லை; அது ஒரு வளர்ச்சி நிலைதான். மின்னல் என்றால் சும்மா 'மின்னுதல்' அவ்வளவு தான்.

இருமை மொழியின் மூலமாகத்தான் ஏற்படுகிறது. நீங்கள் நடந்து கொண்டிருக்கிறீர்கள்; நடைமட்டுமே உள்ளது, வேறெதுவுமில்லை என்று புத்தர் கூறுகிறார். நீங்கள் சிந்தித்துக் கொண்டிருக்கிறீர்கள். சிந்திப்பவர் என்று யாரும் இல்லை. சிந்தித்தல் என்பது மட்டுமே இருக்கிறது என்பது புத்தர் கருத்து.

'சிந்திப்பவர்' என்பது மொழியின் படைப்பு; நாம், இருமையை அடிப்படையாகக் கொண்ட மொழியைப் பயன்படுத்துகிறோம்; ஒவ்வொரு விஷயத்தையும் இருமையாக அது பிரிக்கிறது.

நீங்கள் சிந்தித்துக் கொண்டிருக்கும் போது எண்ணங் கள் பற்பல வருகின்றன. சரி தான். ஆனால் சிந்திப்பவர் என்று யாரும் இல்லை.

நீங்கள் உண்மையில் இதைப் புரிந்துகொள்ள வேண் டுமா? நீங்கள் மிக ஆழமாகத் தியானம் செய்யவேண்டும்; சிந்தித்தல் என்ற ஒன்றே இல்லா நிலைக்கு நீங்கள் வந்தாக வேண்டும்.

உங்கள் 'சிந்தித்தல்' நின்று போய் விட்டால், உங்களுக்கே ஆச்சரியமாக இருக்கும், சிந்திப்பவரும் கூட மறைந்து விடுவார்.

சிந்தித்தலுடன் கூடச் சிந்திப்பவரும் சேர்ந்து மறைந்து விடுகிறார். இயங்குகின்ற சிந்தனைகளின் ஒருவகையான மாயத்தோற்றமே அது!

நீங்கள் ஓர் ஆற்றைப் பார்க்கிறீர்கள். ஆறு என்று ஒன்று உண்டா? அல்லது ஆறு என்பது வெறும் இயக்கம் மட்டுமா? நீங்கள் இயக்கத்தை ஆற்றிலிருந்து எடுத்து விட்டால் ஆறு என்று ஒன்று இருக்குமா? இயக்கம் இல்லாவிட்டால் ஆறு மறைந்து விடும்! ஆறு இயங்க வில்லை. ஆகவே ஆறு என்று ஒன்று இல்லை, 'ஆற்றியக்கம்' என்பது தான் உண்மை.

மொழியினால் இந்தக் கஷ்டம் வருகிறது. ஜப்பான், சீனா, பர்மா ஆகிய இடங்களில் உள்ள வித்தியாசமான முற்றிலும் வித்தியாசமான மொழியமைப்பினால், புத்தர் இந்த நாடுகளில் எல்லாம் மிகவும் முக்கியத்துவம் பெற்றார் என்று கூறலாம்.

சீனர்களின் மனதில் மட்டும் இவர் மிகவும் முக்கிய மானவராகக் கருதப்படக் காரணம் என்ன? ஏன் இந்தியர்கள் மனதில் அந்தச் சிந்தனை இல்லை? சீனாவில் இருக்கும் மொழி புத்தரின் கொள்கைக்கு மிகவும் பொருந்துகின்ற மொழியாக உள்ளது.

சீனமொழி இரண்டாக எதையும் பிரிக்கவில்லை.

சமஸ்கிருதம், இந்தி, ஆங்கிலம், கிரேக்கம், இலத்தீன் பிரெஞ்சு, ஜெர்மன் ஆகிய மொழிகளின் அமைப்பை விட முற்றிலும் மாறுபட்ட மொழிகளாக இருப்பவை தாம், சீன மொழி, கொரியமொழி, ஜப்பானிய மொழி மற்றும் பர்மிய மொழி ஆகியவை.

முதன்முதலாக, பர்மிய மொழியில் விவிலியம் மொழி பெயர்க்கப்படும் போது மிகவும் கடினமாக இருந்தது. ஏனென்றால் ஒரு சில வாக்கியங்களை பர்மியமொழியில் மொழியாக்கம் செய்யவே முடியாத நிலை.

மொழி பெயர்த்த கணத்திலேயே முழுப்பொருளும் தொலைந்து விடுகிறது. உதாரணமாக ஒரு தனி வாக்கியம் 'கடவுள் இருக்கிறார்'. இதை நீங்கள் பர்மிய மொழியில் மொழி பெயர்க்க முடியாது.

நீங்கள் இதை மொழி பெயர்த்தால், 'கடவுள் ஆகிறார்' என்று பொருள் வருகிறது.

'கடவுள் இருக்கிறார்' என்பது ஏன் மொழி பெயர்க்கப் பட முடியாது என்றால் 'இருக்கிறார்' என்ற சொல்லுக்கு இணையான சொல் பர்மிய மொழியில் இல்லை; ஏனென்றால் 'இருக்கிறார்' என்பது 'நிலை'யாக இருக்கும் தன்மையைக் குறிக்கிறது.

மரம் இருக்கிறது என்று நாம் சொல்லலாம். ஆனால் பர்மியமொழியில் 'மரம் ஆகிறது' என்று தான் மொழி பெயர்க்கமுடியுமே தவிர இருக்கிறது என்று முடியாது. 'இருக்கிறது' என்பதற்குச் சமமான சொல் பர்மிய மொழியில் இல்லை. 'மரம் ஆகிறது' மரம் இருக்கிறது என்று கூறும்போது பொருள் முற்றிலும் மாறுபட்டு விடுகிறது. எனவே 'இருக்கிறது' என்று ஏன் கூறுகிறீர்கள்? 'இருக்கிறது' என்பது தேங்கிய நிலையாக இருக்கும் பொருள் தருகிறது. அது ஆறு போன்றதொரு அதிசயம். 'மரம் ஆகிக் கொண்டிருக்கிறது' 'மரம் ஆகிக் கொண்டிருக்கிறது' என்று சொல்ல வேண்டுமானால் பர்மிய மொழியில் நான் 'மரம் ஆகுகிறது' என்று தான் சொல்ல முடியும். அல்லது "மரம் ஆகிக் கொண்டு" இப்படித்தான் சொல்ல முடியும். 'இருக்கிறது' என்ற சொல் பர்மிய மொழியில் இல்லை.

'ஆறு இருக்கிறது' என்ற வாக்கியத்தை நீங்கள் மொழி பெயர்த்தால் 'ஆறு இயங்குகிறது' என்று சொல்லலாம்;

அல்லது 'ஆறு இயங்கிக்கொண்டு' என்பது சரியான மொழிபெயர்ப்பு ஆகலாம்.

ஆனால் 'கடவுள் ஆகிக்கொண்டு' என்று சொல்வது மிகவும் கடினம். ஏனென்றால் கிறித்துவர்கள் இப்படிக் கூறிட முடியாது. கடவுள் முழுமையாக இருக்கிறார், செம்மையாக இருக்கிறார், அவர் 'ஆக' முடியாது. அவர் ஒரு வளர்ச்சிப்படி அன்று; அவருக்கு வளர்ச்சி என்னும் சாத்தியமே இல்லை. ஏற்கனவே அவர் முற்றிலும் எல்லாம் அடைந்தவர். அவரே முற்ற முழுமையானவர். 'ஆகுதல் -ஆகிக்கொண்டு' என்பதன் மூலம் என்ன பொருள் சொல்ல வருகிறீர்கள்? முழுமையற்றவராக இருப்பவர் ஒருவருக்குத் தான் 'ஆகுதல்' சாத்தியமாகும். கடவுள் முழுமையானவர். அவர் 'ஆக' முடியாது. அதனால் அப்படி எப்படி மொழிபெயர்க்க முடியும். மிகவும் கடினமாகும்.

ஆனால் புத்தர் பர்மிய, சீன, ஜப்பானிய, கொரிய மனங்களில் உடனடியாக ஊடுருவி விட்டார். உடனடியாக, அந்த மொழிகளின் அமைப்பே அதை சாத்தியம் ஆக்கி விட்டது. அவர்களால் புத்தரை மிக எளிதாகப் புரிந்து கொள்ள முடிந்தது.

வாழ்க்கையில் நிகழ்ச்சிகள் மட்டுமே உள்ளன. சாப்பிடுதல் உண்டு, சாப்பிடுபவர் கிடையாது; சாப்பிடுதலை நன்றாகக் கவனியுங்கள். சாப்பிடுபவர் உண்மையில் இருக்கிறாரா? உங்களுக்குப் பசிக்கிறது என்று உணர்கிறீர்கள் சரியா- பசி உள்ளது. பசியோடிருப்பவர் யாருமில்லை. அப்புறம் சாப்பிடுகிறீர்கள். சாப்பிடுதல் அங்கு உள்ளது. ஆனால் சாப்பிடுபவர் என்று யாரும் இல்லை. பசி திருப்தி செய்யப்படுகிறது. அப்புறம் உங்களுக்கு நிறைவு கிடைக்கிறது. அதாவது திருப்தி அங்கு உள்ளது; திருப்திப்படுபவர் என்று ஒருவர் இல்லை.

'வாழ்க்கை என்பது நிகழ்ச்சிகள் அடங்கியது' என்கிறார் புத்தர். வாழ்க்கை என்றால் 'வாழ்தல்' என்று பொருள். வாழ்க்கை என்பது பெயர்ச் சொல் அன்று. அது ஒரு வினைச் சொல். ஒவ்வொன்றும் வினைச் சொல் தான். நன்கு கவனியுங்கள், நீங்கள் பார்க்கலாம், ஒவ்வொரு விஷயமும் ஆகிறது, எதுவும் தேங்கியநிலையில் நிலையாக இல்லை.

எடிங்டன்; ஆங்கிலமொழியில் முழுமையும் பொய்யான வையாக உள்ள சில சொற்கள் பற்றிக் கூறுகிறார். உதாரண மாக 'ஓய்வு' எதுவும் எப்போதும் ஓய்வுடன் இல்லை.

அந்த வார்த்தையே தவறானதாகும். ஏனென்றால் உண்மைத்தன்மையில் அதற்குச் சமமான சொல் எதுவும் இல்லை.

நீங்கள் ஏதாவது ஒன்று ஓய்வு எடுத்துக் கொண்டிருக் கும் போது பார்த்திருக்கிறீர்களா? நீங்கள் ஓய்வாக இருக்கும் போது அது, ஓய்ந்து கொண்டு இருத்தல். அது ஓய்வு அல்ல; அது ஒரு வளர்ச்சிப்படி. ஏதோ ஒன்று நிகழ் கிறது. நீங்கள் இன்னும் கூட மூச்சு விட்டுக் கொண் டிருக்கிறீர்கள்.

கீழே கிடத்தல் தளர்வாயிருத்தல் – ஆனால் இது ஓய்வு அன்று. பலவிஷயங்கள், ஆயிரம் விஷயங்கள், அப்போது நடந்து கொண்டிருக்கின்றன.

நீங்கள் எப்போதாவது, ஏதாவது ஓய்வில் இருப்பதைப் பார்த்திருக்கிறீர்களா? இது அசாத்தியம், ஓய்வு இருக்கவில்லை, ஒரு மனிதன் இறந்திருக்கும்போது கூட, உடல், தன் வளர்ச்சிப் படிகளைத் தொடர்கிறது.

நீங்கள் கேள்விப்பட்டிருக்க மாட்டீர்கள், சில சமயம் இது நிகழ்கிறது. முஸ்லீம்கள், கிறிஸ்தவர்கள், பூமிக்குள் பிணங்கள் புதைக்கும் மக்கள், சில சமயம் இறந்திருக்கும் மனிதனின் தாடி வளர்வதையும், முடி நீளமாக ஆவதனை

யும், நகங்கள் வளர்ந்திருப்பதையும் அறிய வந்திருப்பார்கள். நபர் இறந்து விட்டார். இருந்தாலும் இவை நிகழ்கின்றன.

இது தான் மனித அறிவுக்கு மிகவும் அப்பாற்பட்டதாக இருக்கிறது. ஒரு மனிதனை நன்றாக முகம் மழித்துவிட்டுப் பின் கல்லறையில் வைத்து விடுங்கள்; ஆறு மாதங்கள் கழித்துக் கல்லறையைத் திறந்து பாருங்கள். அவனுக்குத் தாடி இருக்கிறது. என்ன சொல்கிறீர்கள் இப்போது? அந்த மனிதன் உயிரோடு உள்ளானா? இறந்து விட்டானா? நீங்கள் மிகவும் அதிகமாகப் பயந்து விடுவீர்கள்; எப்படியாவது வீட்டிற்குத் தப்பித்தோம் பிழைத்தோம் என்று ஓடி வருவீர்கள். அந்த தாடி முகம் உங்களை இரவு நேரங்களில் அச்சுறுத்திக் கொண்டே இருக்கும். என்ன நடந்து விட்டது? அந்த மனிதன் இறந்து விட்டிருந்தால் எப்படி அவனுக்குத் தாடி வளர்ந்தது? அவனது தாடி வளர முடியுமானால், அவன் உண்மையில் இறந்து விட்டானா இல்லையா? அல்லது பாசாங்கு செய்து கொண்டிருக் கிறானா?

வாழ்க்கை என்பது பல கோடிக்கணக்கான வளர்ச்சிப் படிகள். உங்கள் ஆணவம் இந்தத் தளத்திலிருந்து மறைந்து விட்டாலும், இந்த விமான தளத்திலிருந்து புறப்பட்டு விட்டாலும், ஏதாவது வேறு ஒரு கருப்பையில் சென்று தரையிறங்கி விடுகிறது. இன்னும் பல வளர்ச்சிப் படிகள் தொடர்கின்றன. எல்லா வளர்ச்சிப் படிகளும் நிற்பதில்லை. ஏனென்றால் உங்கள் ஆணவத்துடன் சம்பந்தப்படாத எத்தனையோ வளர்ச்சிப்படிகள் உள்ளன; உங்கள் தான்மை போகலாம், ஆனால் அவை தொடரும், முடி வளர்ந்து கொண்டிருக்கும், நகங்கள் வளர்ந்து கொண் டிருக்கும்... எதுவும் செய்யமுடியாது... அது அப்படித்தான்.

உடனடியாக, உங்கள் ஆணவம் உங்களை விட்டுச் சென்றவுடனே பலகோடிக்கணக்கான சிறு நுண்ணுயிர்கள் உயிர் உள்ளவை ஆகின்றன. அவை வேலை செய்யவும்

இயங்கவும் தொடங்குகின்றன. நீங்கள் பெரும்பாலும் ஒரு சந்தைத் திடலைப் போல ஆகிவிடுகிறீர்கள். அந்த வழியில் நீங்கள் முழுமையாக உயிர்த்துடிப்புடன் இருப்பீர்கள். நிறைய நடந்து கொண்டிருக்கும். பல நுண்ணுயிர்கள் ஓடிக் கொண்டிருக்கும், இங்கும் அங்கும் பாய்ந்து கொண்டிருக்கும், காதல் செய்து கொண்டு, கல்யாணங்கள் செய்து கொண்டு, இன்னும் ஒவ்வொரு விஷயமும் நடந்து கொண்டிருக்கும்.

உங்கள் உடலைவிட்டு நீங்கள் நீங்கும் கணத்தில் உங்கள் உடல் பல மக்களுக்குத் தரையிறங்கும் தளமாக ஆகிவிடுகிறது. "நீங்கள் நீங்குங்கள், நாங்கள் உள்ளே வரவேண்டும்" என்று அவை சொல்லிக்கொண்டே நாம் செல்வதற்காகக் காத்துக் கொண்டு இருக்கின்றன.

வாழ்க்கை ஒரு தொடர்ச்சியான வளர்ச்சிப்படி மட்டுமன்று. ஆனால் வளர்ச்சிப்படிகள், ஒரு தொடர்ச்சி.

தான் பற்றிய கருத்தே மொழியினால் உருவானது தான் என்று புத்தர் கூறுகிறார். உங்களுக்குப் பசிக்கிறது. நீங்கள் (நான் பசியாக இருக்கிறேன்) எனக்குப் பசிக்கிறது என்று சொல்கிறீர்கள். மொழிதான் 'நான்' என்னும் கருத்தை உருவாக்குகிறது. இதை எப்படிச் சொல்வது?

இதைச் சரியாகச் சொல்லவேண்டுமென்றால் எப்படிச் சொல்லவேண்டும் தெரியுமா? 'பசி' அதுபோதும்.

உங்கள் வளர்ச்சிப் படிகளைக் கவனியுங்கள். நீங்கள் உணர்வீர்கள். உங்களுக்கு இன்று பசியாயிருக்கிறது என்று உணர்ந்தால், சும்மா கவனியுங்கள். உண்மையாகப் பசித்தவர் யாராவது இருக்கிறார்களா? அல்லது அங்கே இருப்பது 'பசி' மட்டும் தானா? மொழியின் அமைப்புத் தான் இரண்டாகப் பிளந்துரைக்கிறது; அதனால் தான் "நான் பசியுடன் இருக்கின்றேன்' என்று நீங்கள் உணரத் தொடங்குகிறீர்கள்.

புத்தமதம் தான் இந்தச் செய்தியை உலகுக்குக் கொடுத்த முதல் மதம் ஆகும். உங்கள் மதங்கள், உங்கள் தத்துவங்கள் ஆகியவை உங்கள் மொழியமைப்பில் தான் அடிப்படை களைக் கொண்டுள்ளன. வேறெதுவும் அவ்வளவு முக்கியம் அல்ல. உங்களது மொழியை உங்களால் நன்றாகப் புரிந்து கொள்ள முடிந்தால், உங்கள் உள்ளார்ந்த வளர்ச்சிப் படிகளைப் புரிந்து கொள்ளலாம். அவர் தான் முதல் மொழியாளர், அவரது அக தரிசனம் மகத்தான வகையில் அர்த்தமுள்ளதாகும்.

**புத்தர் கடவுள் பற்றிப் பேசமாட்டார். ஏனென்றால் அது நிரூபிக்கப்பட முடியாது என்று நீங்கள் சொல்கிறீர்கள்.**

ஆம் புத்தர் கடவுள் பற்றிப் பேசமாட்டார்; ஏனென் றால் அது நிரூபிக்கப்பட முடியாது. நீங்கள் இருப்பதாக நினைக்கும் கடவுள் இருக்கவில்லை என்பதாலும் புத்தர் கடவுள் பற்றிப் பேசமாட்டார்.

மீண்டும் உங்கள் கடவுள், சுயத்தின் அதே பழைய தவறு தான். நீங்கள் உங்களுக்கு ஒரு சுயம் இருப்பதாக நினைக்கிறீர்கள். ஆகவே உலகம் முழுவதற்கும் ஒரு சுயம் இருக்க வேண்டும் என்று நினைக்கிறீர்கள். ஏனென்றால் உங்களுக்குத் சுயம் என்பது இருக்கிறது. அதனால் முழுப் பிரபஞ்சமும் உச்சக்கட்டத்தினை உடையதாகத் தான் இருக்க வேண்டும். அந்த உச்சக் கட்டம் தான் கடவுள்.

உங்களுக்கு எந்த சுயமும் இல்லை என்று புத்தர் கூறுகிறார். பிரபஞ்சம் இருக்கிறது. ஆனால், அதில் உயர்தர அல்லது உச்சக்கட்ட அல்லது தலை சிறந்த சுயம் என்று ஒன்று அதில் இல்லை.

பலகோடிக்கணக்கான வளர்ச்சிப் படிகள் உள்ளன. ஆனால் தலைசிறந்த சுயம் என்று ஒன்று இல்லை. அங்கே மையம் என்று ஒன்று இல்லை; எல்லாமே சுற்றளவுப் பரப்புத் தான்.

இதைப் புரிந்து கொள்வது மிகவும் கடினம். தியானம் செய்தால் மட்டுமே இதைப் புரிந்து கொள்ளலாம். புத்தர் அதனால் தான் ஒருபோதும் தத்துவவாத விவாதத்திற் கெல்லாம் செல்வதேயில்லை. அவர் 'தியானம் செய்' என்று தான் சொல்கிறார்.

ஏனென்றால் தியானத்தில் இந்த விஷயங்கள் அனைத்தும் மிகத் தெளிவாக ஆகி விடுகிறது. சிந்தித்தல் நிற்கும்போது, சிந்திப்பவர் மறைவதை நீங்கள் திடீரென்று காண்பீர்கள். அது ஒரு நிழல். சிந்திப்பவர் மறையும்போது நீங்கள் 'நான் இருக்கிறேன்' என்று எப்படிச் சொல்ல முடியும்? அல்லது, எப்படி உணரமுடியும்? நான் என்பது விடப்படவில்லை, நீங்கள் தூய வெளி ஆவீர்கள். இதைத்தான் புத்தர் 'ஆனந்தா' என்று அழைக்கிறார். 'தான் அல்லாத' தூய்மையான வெளியே அது. அது ஒரு மகத்தான அனுபவம்.

**...ஆயினும் அடுத்த மூச்சில் பிற வாழ்வுகளைப் பற்றியும் மறு பிறவி பற்றியும் அவர் பேசுகிறாரே...**

அவர் பேசுகிறார். புத்தமதத்தினர் அனைவரும் எப்போதும் இதனால் தான் தொல்லைக்கு உள்ளாகின்ற னர். புத்தர் கூறுவது மிகுந்த விஞ்ஞான பூர்வமானது ஆகும். அவர் எதையும் திரித்துக் கூறுவதில்லை. அவர் ஒரு விஞ்ஞான பூர்வமான மனிதர் இல்லை என்றால், அவர் ஒரு தத்துவார்த்தவாதியாக மட்டும் இருந்திருந்தால், ஒன்று அவர் சுயம் என்பதை ஏற்றுக் கொண்டிருப்பார். அல்லது மறுபிறவி பற்றிய கருத்தைக் கைவிட்டிருப்பார். சுயம் என்பதை ஏற்றுக் கொண்டிருந்தால் அவருடைய முழுத் தத்துவமும் தொடர்ச்சியாக இருப்பது போல் தெரியும். இப்போது இரண்டு முரண்பட்டிருப்பதாகத் தோன்றுகிறது. உண்மைத் தன்மையைச் சார்ந்தே அவர் இருப்பாரே தவிர தன் மனதிலிருந்து எதையும் உண்மைத் தன்மையின் மீது அவர் திணிக்கவில்லை.

அவர் இயல்பாகவும் சாதாரணமாகவும் உண்மையைச் சொல்லி விட்டார்; இது முரண்பாடாயிருக்கலாம். அதனால் என்ன? அது அப்படித்தான் இருக்கிறது" என்று சொல்கிறார்.

தற்கால அறிவியலில் இதுதான் நிகழ்ந்து கொண்டுள்ளது. சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால், பொருள் (மேட்டர்) என்பதன் மையத்திற்குள் உள்ளார்ந்த மிக மிக உள்ளார்ந்த மையத்திற்குள் நுழைந்த போது இதே போல் தான் மிகமிகக் குழப்பமடைந்தார்கள், ஏனென்றால், மின்னணுக்கள் நடத்தை மிகவும் தர்க்கத்திற்குப் புறம்பான தாக இருந்தது.

உங்களால் மின்னணுக்களைத் தர்க்கரீதியாகத்தான் நீங்கள் இருக்க வேண்டும் என்று கட்டாயப்படுத்த முடியாதே! நீங்கள் அவற்றைப் பல்கலைக்கழகத்திற்கு அனுப்பி அரிஸ்டாட்டிலிடம் கற்கச் சொல்லி வற்புறுத்த முடியாதே! 'நீங்கள் தர்க்கரீதியாகச் செயல்படவில்லை. ஆகவே தர்க்கரீதியாகத்தான் நீங்கள் நடக்கவேண்டும் இது சரியில்லை' என்று கூறமுடியாது. தர்க்கரீதியாக அவை நடக்கவில்லையென்றால், அவை தர்க்கரீதியாக நடக்கவில்லை என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். அவ்வளவு தான். அதற்கு மேல் எதுவும் செய்யமுடியாது.

தர்க்கவிரோதமானது உண்மையில் மகத்தானதாக இருந்தது. அது சாதாரண விஷயம் இல்லை. சில சமயம், அதே மின்னணு அலைபோலவும், சிலசமயம் துகள் போலவும் நடந்து கொள்கிறது. இந்த இரண்டு விஷயங்களும் அசாத்தியமானவை. அவை யூக்ளிட் மற்றும் அரிஸ்டாட்டிலின் தர்க்கத்திற்கு முரண்பட்டவை. அதாவது யூக்ளிட்டையும் அரிஸ்டாட்டிலையும், மின்னணுக்கள் நம்பவில்லை என்று வைத்துக் கொள்ளுங்களேன்? அவை என்ன செய்து கொண்டிருக்கின்றன?

அவை எப்போதாவது யூக்ளிடைக் கேள்விப்பட்டிருக்கின்றவா என்ன?

இது ஒரு சாதாரண ஜியோமிதித் தத்துவம். நாம் அனைவரும் பள்ளிக்கூடத்தில் பயின்றிருக்கிறோம். ஒரு புள்ளிக் கோடாக முடியாது; அது போலவே ஒரு கோடு புள்ளியாக முடியாது. ஒரு கோடு என்பது பல புள்ளிகள் தொடர்ச்சியாக இடம் பெறுவதாகும். ஆகவே ஒரு புள்ளி கோடு போலச் சொயல்பட முடியாது. அப்படி இல்லாவிட்டால் முழுஜியோமிதியும் குழம்பிவிடும். நீங்கள் ஒரு புள்ளியை வையுங்கள்; பாத்ரூம் செல்லுங்கள்; திரும்பி வாருங்கள்; இப்போது புள்ளி கோடாக ஆகியிருக்கிறது. இப்போது என்ன செய்யப் போகிறீர்கள்?

ஆனால் இது தான், பொருளின் (மேட்டரின்) மிக மிக உள்ளார்ந்த மையப்பகுதியில் நிகழந்து கொண்டிருப்பதாகும்.

நீங்கள் கவனித்துக் கொண்டே செல்லுங்களேன். அது ஒரு புள்ளி போலத் தோற்றமளித்தது. திடீரென்று பார்த்தால் அது ஒரு கோடு. அது கோடாக வளர்கின்ற போது பார்க்க முடியாத அளவுக்கு அந்தத் தாவுதல் அமைகிறது.

ஒரு வினாடியில் கால (கணத்தில்) கட்டத்தில் அது புள்ளி, இன்னொரு வினாடி கட்டத்தில் அது ஒரு கோடு. அது கோடாக வளர்வது கூட இல்லை. அது ஒரு தாவுதல்; அப்படியே புள்ளி தாவிக் கோடாகிவிடுகிறது. அவ்வளவு திடீரென்று அவ்வளவு தர்க்கவிரோதமாக அது தாவுகிறது.

அது மெதுவாக வளர்ந்தால், அதையும் நம்மால் நிச்சயம் புரிந்து கொள்ள முடியுமே. அது விதையைப் போல் இருக்கலாம். முளைக்கிறது. மரமாகிறது. அது சரிதான். நம்மால் புரிந்து கொள்ளமுடியும்.

ஒரு கணத்தில் அது விதையாக இருக்கிறது. இன்னொரு கணத்தில் அது வளர்கிறது. மெல்ல மெல்ல மெல்ல படிப்படியாக, அது மரமாக ஆகிறது. நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது.

ஒரு புள்ளி ஒரு கோடாக மெதுவாக ஆனால், நம்மால் புரிந்து கொள்ள முடியும்; திடீரென்று மாறினால்? திடீரென்று மட்டுமல்ல, தர்க்கவிரோதமாகவும் உள்ளது இது. இரண்டு கவனிப்பவர்கள் ஒரே கணத்தில் ஒரே நேரத்தில் ஒருசேரக் காணும்போது, ஒருவர் புள்ளியாகக் காணலாம், இன்னொருவர் அதே நேரத்திலேயே அதே புள்ளியையே கோடாகக் காணலாம். என்ன செய்வது இப்போது?

ஒரு நோக்குபவர் அதை விதையாகவும் மற்றும் ஒருவர் விருட்சமாகவும் ஒரே நேரத்தில் பார்க்க முடியுமானால் எப்படியிருக்கும்? அது போலத்தான் இதுவும்... முழுமை யான மேற்கத்திய அறிவியலும் கிரேக்கத் தர்க்கஸ்திரத் திலிருந்து வளர்ந்ததாகும்.

இந்த மின்னணுக்கள் அரிஸ்டாட்டிலின் தர்க்கத்தோடு மோதுகின்றன. அவற்றைச் சரி செய்ய வழியே இல்லை. விஞ்ஞானிகள் பலவழிகளில் முயன்றார்கள். ஏனென்றால் மனம் தன் சொந்தக் கோட்பாடுகளுக்கும், வடிவமைப்பு களுக்கும் தகுந்தாற் போல் பற்றிக் கொள்கிறது. அதிலிருந்து மீண்டு வருவது அவ்வளவு எளிதில்லையே. அதுவும் போயும் போயும் இந்த மின்னணுக்களிடம் சரணடை வதா?

ஏறத்தாழ இரண்டு மூன்று பத்தாண்டுகள், விஞ்ஞானி கள் குழம்பினார்கள், இதை விளக்குவதற்கு. ஏதாவது ஒரு வழிக்காக முயன்றார்கள். குறைந்தபட்சம், என்னதான் நடக்கிறது என்பதை அப்படியே விளக்கவாவது முயன்றார் கள். வேறுவழியின்றி, இறுதியாக அவர்கள் அதை ஏற்றுக் கொள்ள வேண்டிய கட்டாயத்திற்கு ஆளானார்கள்.

அதனால்தான் அப்போது தான் (கவான்டம்) அளவை இயற்பியல் உருவாகிறது.

கவான்டா அளவை இந்தச் சொல் புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்டது. ஒருபோதும் அது முன்பிருந்த சொல்லி வில்லை. ஏனென்றால் இப்படி ஒரு தர்க்கரீதியான ஒரு அதிசயத்தை இதுவரை மனிதன் காணவில்லையே.

கவான்டா என்றால் ஒரு புள்ளியும் கோடும் ஆக ஒரே நேரத்தில் உள்ள ஒன்று அணுவாகவும், அலையாகவும் ஒரே நேரத்தில் உள்ள ஒன்று நாம் முற்றிலும் தர்க்க விரோதமான ஒன்றிற்குப் பெயர் கொண்டு படிக்க வேண் டியுள்ளது. அதற்கு எந்த அடையாளமோ உருவகமோ இல்லை.

"எப்படி சார் நீங்கள் இதை விளக்குவீர்கள்" என்று மக்கள் விஞ்ஞானிகளைக் கேட்டபொழுது விஞ்ஞானிகள் பதில் கூறினார்கள்.

"அது தர்க்கவிரோதமானது தான். ஆனால் அப்படித்தான். நாங்கள் ஒன்றும் செய்வதற்கில் உண்மைத் தன்மையை நாம் கவனிக்கத் தான் வேண் உண்மைத்தன்மையே தர்க்கவிரோதமாக இருந்தால், நமது தர்க்க சாஸ்த்திரத்தில் தான் ஏதோ தவறு இருக்க வேண்டும். அவ்வளவுதான். நாம் நம் தர்க்க சாஸ்திரத்தை மாற்றலாம், ஆனால் உண்மைத் தன்மையை மாற்ற முடியாதே!" என்பது தான் அந்தப் பதில்.

புத்தர் இந்த உலகிற்கு வந்தபோது இது தான் நடந்தது. உங்கள் தான் எனச் சொல்லப்படும் பொருளின் உள்ளார்ந்த பகுதிக்குள் நுழைந்து பார்த்தார் அவர் குழப்பிப் போனார். என்ன செய்வது? அங்கு சுயம் என்பது இல்லை. ஆனால் மறு பிறவி இருக்கிறது.

அவர் ஒரு உண்மையான மகத்தான விஞ்ஞானியாக இல்லாமல் இருந்திருந்தால் அல்லது வேறு தத்துவமேதை யாக மட்டும் இருந்திருந்தால், இதை மறந்திருக்கக் கூடும்.

இந்த உண்மையினைப் பேசாமலே கூட இருந்திருக்கக் கூடும். "ஏதாவது ஒன்றை இல்லை என்று சொல்லி விடலாம். மறு பிறவி இல்லை ஏனெனில் 'சுயம்' என்பது அங்கு இல்லை" என்று தேர்ந்தெடுத்திருக்கலாம்! ஆனால் அது உண்மையில்லையே!

இதைத் தான் எல்லா நாத்திகர்களும், சார்வாகர்களும் 'ஆத்மாவில்' நம்பிக்கையில்லாதவர்களும் சொல்கிறார்கள்.

சுயம் என்பது இல்லை; நீங்கள் சாகும்போது நீங்கள் சாகிறீர்கள். அவ்வளவுதான், எதுவும் அதற்குமேல் இருப்ப தில்லை; மறுபிறப்பு இல்லை. மிக எளிதானது இது. தர்க்கத்திற்கு உட்பட்டது இது. அல்லது சனாதனவாதிகள், ஆத்திகர்கள் சுயத்தின் நம்பிக்கை உள்ளவர்கள் இருக்கிறார் கள். அவர்கள் சொல்வது என்ன?

"நீங்கள் சாகும் போது உங்கள் உடம்பு மட்டுமே சாகிறது. உங்கள் தான், உங்கள் மையம் உயிர் வாழ்கிறது. உங்கள் ஆத்மா இருக்கிறது. அது அழியாதது என்று இதுவும் தர்க்கத்திற்கு உட்பட்டது தான்.

புத்தர் மிகவும் தர்க்க விரோதமானவர். ஏனென்றால் அவர் உண்மைத் தன்மைக்குப் புறம்பாகச் சற்றும் புறம்போக விரும்பாதவர். உண்மைத்தன்மை எப்படி இருந்தாலும் அதை நாம் கேட்டுத்தான் ஆக வேண்டும் என்பதை அவர் முற்றிலும் வலியுறுத்துகிறார்.

நம்முடைய தத்துவங்களை நாம் திணிக்கக் கூடாது; உண்மையை அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டும். உண்மையின் மீது நம் கருத்துக்களைத் திணிக்க நமக்கென்ன அதிகாரம் உள்ளது?

இது உண்மை என்றால், நம் தர்க்க சாஸ்திரத்தில் ஏதோ தவறு உள்ளது. நம்மொழியில் ஏதோ பிழை உள்ளது. நாம் சிந்திக்கும் வழியிலேயே கூடத் தவறு உள்ளது.

நாம் அவற்றைத் தான் மாற்றியாக வேண்டும். உண்மைத் தன்மையை நம்மால் தடுக்க முடியாது. உண்மையிலிருந்து நாம் தப்பித்துக்கொள்ள முடியாது.

இதனால் உலகிலேயே மிக மோசமான சிந்தனையாளராகத் தோற்றம் தருகிறார் புத்தர். ஏனென்றால் மோசமான வாக்கியங்களில் இதுவும் ஒன்று: நீங்கள் இல்லை; ஆனால் நீங்கள் மறு பிறப்பு எடுக்கிறீர்கள்.

நீங்கள் நன்றாகப் பார்க்கலாம். இது முட்டாள்தனம். நீங்க்ள் இருக்கவில்லையென்றால் நீங்கள் எப்படி மறுபிறவி எடுக்க முடியும்?

"அது எனக்குத் தெரியாது. நீங்கள் இருக்கவில்லை. ஆனால் நீங்கள் மீண்டும் பிறக்கிறீர்கள். அந்த அளவு நான் அறிவேன். நான் பார்த்திருக்கிறேன்; நீங்கள் பார்க்க வேண்டுமா? தியானம் செய்யுங்கள். உங்கள் இருந்தலில் மிக ஆழமாகச் செல்லுங்கள். நான் என் இருத்தலுக்குள் மிக ஆழமாகச் சென்றுள்ளேன். நீங்களும் செல்லுங்கள். நீங்களும் குழப்பம் அடைவீர்கள். மிகமிகக் குழப்பம் கொள்வீர்கள். ஆனால் மெல்லமெல்ல, நீங்கள் உண்மைத் தன்மையுடன் பொருந்துவீர்கள்" என்று கூறுகிறார், புத்தர்.

புத்தர் முழுமொழியையும் மாற்றிவிட்டார். முழுத் தத்துவப் பாணியையும் மாற்றி விட்டார். இப்படிப்பட்ட அசல் மனிதன் ஒருபோதும் இருந்ததில்லை, அவருக்கு முன்னால்! அவரைப் புரிந்து கொள்வது மிகமிக அசாத்தியம் தான். நீங்கள் பேசும் மொழியை அவர் பேச வில்லை; அவர் இந்த உலகத்திற்குப் புதிய காட்சிகளைக் கொண்டு வந்தார்.

ஆத்மாவை நம்பாத மனிதன் மிகப் பழமையானவன். அதில் ஒன்றும் புதுமை இல்லை. மார்க்ஸ் புதிதாக எதையும் கூறவில்லை. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நாத்திகர்கள் ஆத்மாவை மறுத்துள்ளார்கள். அவர்கள் மறு பிறப்பையும் மறுத்துள்ளார்கள். மகாவீரரோ பதஞ்சலியோ புதிதாக எதையும் கூறிவிடவில்லை. ஏனென்றால், ஆத்மா வையும் மறுபிறப்பையும் எப்போதும் நம்பிய மக்கள் இருந் திருக்கிறார்கள்.

புத்தர் ஓர் உண்மைக் காட்சியைக் காண்பிக்கிறார். மிகவும் அசல் தன்மையுடையது. "ஆத்மா (தான்) என்பது இல்லவே இல்லை. அதே நேரத்தில் மறுபிறப்பு உள்ளது. அது ஒரு அளவுத் தாவுதல் அல்லது புள்ளிக் கோட்டுத் தாவுதல் (க்வான்டம் ஜம்ப்)

ஆகவேதான் நான் அவரை விஞ்ஞானி என்று அர்த்தத் தோடு தான் சொல்கிறேன். உங்களால் தற்கால இயற்பியல் மொழியைப் புரிந்துகொள்ள முடியுமானால் நிச்சயமாகப் புத்தரையும் புரிந்துகொள்ள முடியும். உண்மையில், தற்கால இயற்பியலைப் புரிந்து கொள்ளாமல், உங்களால் புத்தரைப் புரிந்துகொள்ளவே முடியாது.

முதல் தடவையாக, தற்கால இயற்பியல், ஓர் இணையை அளித்துள்ளது. ஹெயின்ஸ்பெர்க், பிளாஸ்க், ஐன்ஸ்டீன் ஆகியோர் அந்த இணையை அளித்துள்ளார்கள்.

பொருள் (மேட்டர்) மறைந்து விட்டது. சக்திமட்டுமே உள்ளது. அதற்குள் சுயம் என்பது கிடையாது. அது திடப்பொருள் இல்லை; புத்தர் சொல்வது இதையேதான். அனந்தா சுயம் இல்லை அல்லது சுயம் இல்லாதது!

**இது எப்படி விஞ்ஞான உண்மையுடன் பொருந்து கிறது?**

இது மிகச் சரியாகப் பொருந்துகிறது. உண்மையில் நிர்க்ரஞ்தா கேட்பது பத்தொன்பதாம் நூற்றாண்டு

விஞ்ஞானத்தைப் பற்றிய கருத்துக்குச் சம்பந்தம் உடையது; அவருக்குத் தற்கால விஞ்ஞானம் பற்றிய விழிப்புணர்வு இல்லை. அவருக்கு மிகவும் அண்மைக்கால வளர்ச்சிகள் பற்றிய தகவல்கள் தெரியவில்லை.

விஞ்ஞானம் பற்றிய அவரது கருத்து வைதிகமானது, மிகப்பழமையானது, காலத்திற்கொவ்வாதது. விஞ்ஞானம் மாபெரும் அளவில் மாறியுள்ளது.

நியூட்டன் திரும்பி வந்தால், இப்போதிருக்கும் விஞ்ஞானத்தை அவரால் முற்றிலும் புரிந்துகொள்ள முடியாது. விஞ்ஞானம் அந்த அளவுக்கு மாறிப்போய் விட்டது. அதன் அகதரிசனம் அந்த அளவுக்குக் குழப்பமாக உள்ளது. விஞ்ஞானிகள் கூடத் தத்துவார்த்த ஞானிகளைப் போலவும், சித்தர்களைப் போலவும் பேசுகிறார்கள்.

அவர்கள் இப்போதெல்லாம் கணக்கியலறிஞர்கள் போலப் பேசவில்லை. அவர்கள் இப்போதெல்லாம், சித்தர்களைப் போலவும் கவிஞர்களைப் போலவும் பேசுகிறார்கள்.

**"தங்கியிருப்பது வடிவமற்றதாக இருக்குமென்று தெளிவின்றிப் புரிந்து கொண்டுள்ளேன் நான்."**

இல்லை. நீங்கள் அதை அறிவு சார்ந்த வகையில் புரிந்து கொள்ள முடியாது. ஏனென்றால் வடிவற்றது என்பது மீண்டும் ஒரு குறிப்பிட்ட வடிவம் தான். வடிவற்றது என்பதை நீங்கள் எப்படிக் கற்பனை செய்ய முடியும்? வார்த்தை சரிதான். உடனடியாக ஒரு வடிவத்தை அது எடுத்துக் கொள்ளத் தொடங்குகிறது. ஏனென்றால் உருவம் மட்டுமே கற்பனை செய்ய முடியும். உருவமற்றதைக் கற்பனை செய்ய முடியாது. அது ஒரு வெற்றுச் சொல்.

நீங்கள் கடவுளை வடிவற்றவர், உருவமற்றவர் என்று சொல்லிக் கொண்டே போகலாம், உங்களால் அதைக்

கற்பனை செய்ய இயலாது. உங்களால் எப்படி உருவ மற்றதைக் கற்பனை செய்ய முடியும்?

உருவமற்ற கடவுள்பற்றிப் பேசுகின்ற ஆதி சங்கரர் போன்றவர் கூட வழிபடுகிறார்கள், ஓர் உருவத்தை வழி படுகிறார்கள். 'பஜகோவிந்தம் மூடமதே' என்று பாடவும் தொடங்குகின்றார்கள். மீண்டும் சிலையுண்டு, சடங்குண்டு, கடவுள் உண்டு, தேவி உண்டு, வடிவம் உண்டு.

ஆதி சங்கரர் போன்றோர் உருவமற்ற கடவுள் பற்றியும் குணமற்றவர்- நிர்க்குணம்- என்பது பற்றியும் பேசினாலும் அவரது வழிபாடு, அவரது பிராத்தனைகள், சகுணம்- அவரது குணம் உடையகடவுள்-உருவம் உடைய கடவுள் பற்றியதே! ஏனென்றால் உருவமற்ற கடவுளைக் கற்பனை செய்ய இயலாது. கற்பனை என்பது வடிவம் பற்றித்தான். அல்லது எதைப்பற்றி எல்லாம் கற்பனை செய்ய முனைகிறீர்களோ, அது ஏதாவது ஒரு வடிவத்தை எடுத்துக் கொண்டுவிடும். ஆகவே அது ஒரு வெற்றுக் கருத்துத்தான்.

நிர்க்ரந்தா என்ன கூறுகிறார்?

"நான் தெளிவில்லாமல்- மங்கலாகப் புரிந்து கொள் கிறேன்- தங்கியுள்ளது என்பது வடிவமற்றது என்று" என்று கூறுகிறார்.

இல்லை. இது தெளிவில்லாமல் புரிந்து கொள்கிற ஒரு விஷயம் இல்லை. அறிவு சார்ந்த ரீதியில் அதற்கு வழியே இல்லை. இதற்கான ஒரே வழி தியானம் செய்வது ஒன்று தான். வாழ்வியல் அது தான். உங்களால் அதை அறிவு மூலமாக இனம் காணவே முடியாது.

நீங்கள் சும்மா அதிகமாகத் தியானத்திற்குள் செல்லுங் கள், புதிய பார்வையின் பரிமாணத்தைத் திறவுங்கள். புத்த ரைப் போல யாருமே தியானம் பற்றி வற்புறுத்தவில்லை. அவரது முழுக் கோட்பாடுமே தியானம் தான்!

தியானம் என்றால் என்ன? மெல்ல மெல்ல சிந்தனை யற்றபோது தான் தியானம். தூக்கத்தில் ஆழ்வது அல்ல. நன்றாக விழிப்புணர்வோடு இருக்க வேண்டும். ஆயினும் சிந்தனை இல்லாமல் இருக்க வேண்டும். எண்ணங்கள் அல்லது சிந்தனைகள் மறைந்து விட்டால், ஒவ்வொரு விஷயமும் பளிங்கு போலத் தெளிவாகி விடும். சிந்திப்பவர் என்பது இயங்கும் சிந்தனைகள் பக்கவிளை பொருள் ஆகும்; அது ஒரு எண்ணங்களின் பக்க விளை பொருள் ஆகும்; அது ஒரு எண்ணங்களின் மூட்டை அல்லது கட்டு ஆகும். வேறு எதுவும் இல்லை. அதற்கென்று தனியான இருப்பு இல்லை.

அப்படியென்றால் நீங்கள் நடக்கிறீர்கள், ஆனால் நடப்பவர் என்பவர் அங்கே இல்லவே இல்லை. அப்புறம் நீங்கள் சாப்பிடுகிறீர்கள். ஆனால் சாப்பிடுபவர் அங்கே இல்லை! இல்லவே இல்லை. நீங்கள் தூங்குகிறீர்கள். ஆனால் தூங்குபவர் இல்லவே இல்லை, நீங்கள் வாழ்கிறீர் கள். ஆனால் வாழ்ந்து கொண்டிருக்கும் யாரும் இல்லவே இல்லை.

நீங்கள் சாகிறீர்கள், ஆனால் சாகும்யாரும் அங்கில்லை, நீங்கள் ஒரு தூயதாக இருக்கிறீர்கள். அதில் பல கோடிக் கணக்கான வளர்ச்சிப்படிகள் இருக்கின்றன. உயிர் அதன் எல்லா வளர்ச்சிப்படிகளோடும் ஓடுகிறது; ஆனால் அதனால் மாசுபடாத நிலையில் நீங்கள் தங்கியுள்ளீர்கள். நீங்கள் ஒரு திறந்த வெளிவானம் போன்றவர். மேகங்கள் வரும், போகும். புத்தருக்குக் கொடுக்கப்பட்ட அற்புதமான பெயர்களில் ஒன்று 'ததாகதா' அதன் பொருள் 'வந்தது, சென்றது'. வந்ததும் யாரும் இல்லை- சென்றதும் யாரும் இல்லை- வந்தது சென்றது மட்டுமே. குறிப்பிட்டவராக யாருமே இல்லை. இதுதான் 'ததாகதா' என்பதன் பொருள். வளர்ச்சிப்படியின் ஒரு நிலை வந்தது- போவது ஒரு நிலை. வந்தவர் யாரோ அவர் யாருமில்லை- சென்றது யாரோ அவர் யாருமாக இல்லாதவர்.

ஜென் ஆசான்கள் எப்போதும் சொல்லி வந்திருக்கிறார்கள். என்ன தெரியுமா? "இந்த மனிதர்-கௌதம்-புத்தர் என்று அழைக்கப்படும் மனிதர், ஒருபோதும் இருந்ததில்லை. ஆம், அவர் நிச்சயமாக வந்தார், போகவும் கூடச் செய்தார்; ஆனால் ஒருபோதும் அவர் இருக்கவில்லை. அது ஒரு கனவு வளர்ச்சிப்படிகள் போன்றது. ஒரு கனவு வருகிறது, போகிறது, காலையில் அது எப்போதும் இல்லை என்று நீங்கள் அறிகிறீர்கள்.

நீங்கள் உங்களைப் பற்றித் தூயவெளி என்று புரிந்து கொண்டு விட்டீர்களென்றால், பல விஷயங்கள் நடந்து கொண்டிருந்தாலும் நீங்கள் பற்றற்றவர் ஆகிறீர்கள். உங்கள் அச்சம் போய் விடுகிறது. ஏனென்றால் இழப்பதற்கு எதுவும் இல்லை அல்லவா? இழக்கின்றவர் என்றும் யாரும் இல்லை அல்லவா? அப்படியென்றால் வாழ்க்கையின் மோகம் உங்களுக்கு இருக்கவே இருக்காது அல்லவா?

அப்போது உங்களுக்கு மரணம் பற்றி அச்சமில்லை, வாழ்க்கைபற்றிய மோகமும் இல்லை.

உங்கள் இறந்த காலம் பற்றி நீங்கள் சிந்திப்பதே இல்லை. உங்கள் எதிர்காலம் பற்றியும் நீங்கள் சிந்திப்பதே இல்லை.

ஆகச் சும்மா நீங்கள் இருக்கிறீர்கள். பரந்திருக்கும் வானத்தைப் போல நீங்கள் தூய்மையாக இருக்கிறீர்கள்.

நீங்கள் உள்ளார்ந்து கூடத் தூய வானம் ஆகிறீர்கள். இந்த இரண்டு வானங்களின் சந்தியை, உள்ளார்ந்த வானமும் வெளியிலுள்ள வானமும் சந்திப்பைத்தான்-புத்தர்-நிர்வாணம்(மோட்சம்) என்று சொல்கிறார்.

**தங்கியிருப்பது வடிவமற்றது என்று நான் தெளிவில்லாமல் புரிந்து கொள்கிறேன். ஆனால், தனிப்பட்ட அடையாளம் அதற்கு இருக்க முடியுமா?**

இல்லை. அதற்குத் தனிப்பட்ட ஓர் அடையாளம் அல்லது உருவம் எதுவும் இல்லை.

அதே அலைவீச்சு திரும்பப் பிறக்கவில்லை.

உண்மை, உண்மையில் நீங்கள், அணுக்கமாகக் கவனித்தால், நதிக்குச் செல்லுங்கள், கடலுக்குச் செல்லுங்கள், அலைகளைக் கவனியுங்கள். இதற்கு முன்பு சற்றும் சிந்திக்காத ஒன்றை நீங்கள் புதிதாகக் கண்டு ஆச்சரியப்படுவீர்கள்.

ஓர் அலை உங்களை நோக்கி வரும்போது எதுவும் வந்து கொண்டிருக்கவில்லை. அலை ஒருபோதும் உங்களிடம் வரவில்லை.

உங்களை நோக்கி நகர்வதை நீங்கள் பார்க்கிறீர்கள். ஆனால் அது நகர்வதில்லை. ஓர் அலை, மற்ற அலைகள் தங்கள் பக்கத்தில் எழுவதற்கு உதவுகின்றன. அடுத்த அலை அதற்கு அடுத்தது எழுவதற்கு உதவுகிறது. ஆனால் அது மிக மிக வேகமாக உருவாகிறது; அதனால் ஒரு கானல் நீர்- ஒரு மாயத் தோற்றம் படைக்கப்படுகிறது. நீங்கள் அதே அலை தான் உங்களை நோக்கி வந்து கொண்டிருக்கிறது என்று சிந்திக்கிறீர்கள். உங்களை நோக்கி எதுவுமே வரவில்லை.

ஓர் அலை எழுகின்ற போது, அந்த அலையின் தாக்கத்தால், அடுத்த அலை எழுகிறது. அதே அணுக்கமான நடுக்கத்தில், இன்னுமொரு அலை, முதல் அலையின் ஆற்றலால், இரண்டாவது அலை; இரண்டாவது அலையின் ஆற்றலால் மூன்றாவது அலை; முன்றாவதால் நான்காவது; அப்படித்தான் அலைகள் எழுகின்றன.

ஆனால் அதே அலைதான் உங்களை நோக்கி வருகிறது போன்ற ஒரு மாயத்தோற்றத்தைத் தருகின்றன. அவை ஒரு போதும் வருவதில்லை. தொடுவானத்தில் தொலைதூரத்தில் அலை எழுவதை நீங்கள் காண நேர்ந்தால், அது அங்கேயே தான் தங்கி விடுகிறது. அது ஒரு போதும் உங்களை நோக்கி வரவில்லை.

இப்படி நடக்க முடியாது; நீரோட்டக் கட்டை ஒன்றை நதியின் நடுவில் நீங்கள் போடுங்கள். அந்தக் கட்டை உங்களிடம் வந்து சேரும். ஆனால், ஏமாந்து விடாதீர்கள். அந்த அலை உங்களிடம் வரவில்லை. கட்டைதான் வருகிறது. ஓர் அலை உயரமாக எழும்போது அடுத்த அலையிடம் அது நகர்கிறது. அடுத்த அலை நகரும்போது அதற்கடுத்த அலையிடம் நகர்கிறது. இப்படி இரண்டாவதி லிருந்து மூன்றாவது அலை-மற்றும் அடுத்தடுத்து அலைகள் எழுந்து வீழ்ந்து கட்டையை நகர்த்திக் கரை வரை கொண்டு வந்து சேர்த்து விடுகிறது. ஆனால் அலைகள் ஒருபோதும் வரவே இல்லை. இது ஒரு விஞ்ஞான பூர்வமான உண்மையாகும். அவை வந்து அடைந்து கொண்டிருப்பதைப் போலத் தோற்றம் மட்டுமே அளிக்கின்றன.

சரி, சுருக்கமாக இதைத்தான் புத்தர் கூறுகிறார். அதே அலை மறுபடியும் பிறக்கவில்லை. நீங்கள் மறுபடியும் பிறப்பீர்கள் என்று அவர் கூறவில்லை; அவர் சொல்வதெல்லாம் மறுபிறப்பு உண்டு என்று தான்.

ஆனால் ஒரு வகையில் நீங்கள் பிறக்க முடியும் என்றும் கூறலாம்; ஏனென்றால் இது ஒரு தொடர்ச்சி. அதே அலை. 'அ' அலை 'ஆ' அலையை உருவாக்குகிறது 'ஆ' அலை 'இ' அலையை உருவாக்குகிறது. இது ஒரு தொடர்ச்சி, தொடர்மம் என்பது சரியான சொல்; தற்கால அறிவியல் தருகிறது ஒரு சொல் அதுதான் 'தொடர்மம்'.

புத்தர் இதைச் 'சந்ததி' என்று அழைக்கிறார். ஒரு குழந்தை உங்களுக்குப் பிறப்பது போல அது எனலாம். ஒரு குறிப்பிட்ட வழியில் நீங்கள் தான் அவன். இருப்பினும் அவன் நீங்கள் அல்ல; முழுமையும் நீங்கள் அல்ல. அவனுக்கென்று ஒரு சொந்த ஆளுமை அவனுக்கு இருக்கும். ஆனால் நீங்கள் தான் அந்த அலைகளைப் படைத்தீர்கள்.

அது தந்தையுடைய, மற்றும் தாயுடைய சக்தியால் படைக்கப்பட்ட புதிய அலை.

இந்த அலை போய் விடும். தந்தை இறந்து விடலாம்; தாய் இறந்து விடலாம். இந்த அலை தொடர்ந்து வரும். இந்த அலை பிற அலைகளை உருவாக்கும், தன் சொந்த வழியில், தன் சொந்தக் காலத்தில்.

சந்ததி, தொடர்மம், நீங்கள் பிறக்கவில்லை. மீண்டும் பிறப்பவை உங்கள் ஆசைகளே. நீங்கள் இல்லை என்பதால் நீங்கள் பிறக்கவே முடியாது. நீங்கள் ஆசைப்படுவதை அறவே விட்டுவிட்டால் நீங்கள் மீண்டும் பிறக்கவே மாட்டீர்கள். ஆகவே, ஆசையின் பயனின்மை பற்றி முழுமையாக நீங்கள் நன்றாகப் புரிந்து கொண்டு விட்டால், நீங்கள் ஆசைப்படுவதை நிறுத்திக் கொண்டு விடுவீர்கள். ஆசைப்படுவதை விட்டு விடுவீர்கள். அப்புறம் உங்களுக்குப் பிறப்பு என்பதே உங்களுக்கு இருக்கப் போவதில்லை.

அப்படியானால் நீங்கள் ஒரு ஸ்த்ரோபன்னாவாக முதலில் ஆவீர்கள். நீங்கள் ஓடைக்குள் நுழைகிறீர்கள். விஷயங்கள் எப்படியிருக்கின்றன என்றும் விஷயங்கள் என்னென்ன என்றும் நீங்கள் புரிந்துகொள்ளத் தொடங்கு கிறீர்கள். சுயம் இல்லாமையில் வாழ்க்கை வளர்கிறது; இதைத்தான் ஸ்த்ரோபன்னாவாக ஆகுதல்-ஓடையில் நுழைதல்-என்கிறோம். ஓடை என்னும் கருத்தில் நுழைவது அதாவது வாழ்க்கை என்பது நதியைப் போன்றது- அது தேங்கியது. அன்று- அது அசைவது- சக்தியுடன் இயங்கு வது; பொருள்கள் அல்லது விஷயங்கள் எதுவுமில்லை; சம்பவங்கள் மட்டுமே- நிகழ்ச்சிகள் மட்டுமே. இயங்கியல் சக்தியியல்- ஒரு சக்தி அதிசயம்.

அப்புறம், மெல்ல மெல்ல, நீங்கள் ஓடைக்குள்ளே செல்லச் செல்ல, நீங்கள் ஸ்கிருதா காமினாக ஆகிறீர்கள். ஒரே ஒரு முறை தான் இனிமேல் பிறப்பீர்கள்.

நீங்கள் புரிந்து கொள்கிறீர்கள். இருப்பினும், உங்கள் புரிந்துணர்வு முழுமையாக இல்லை. அப்புறம் நீங்கள் அனகாமின் ஆகிறீர்கள்-நீங்கள் மறுபடியும் பிறக்கவே மாட்டீர்கள். நீங்கள் முழு அதிசயத்தையும் புரிந்து கொண்டிருக்கிறீர்கள். அந்தப் புரிந்துணர்விலேயே நீங்கள் விடுதலை அடைந்து விடுகிறீர்கள்.

மீண்டும் பிறக்காத தன்மையை அடைவதன் மூலமாக நீங்கள், அர்வறத் ஆகிறீர்கள். அர்வறத் என்றால் அடைந்த வர் அல்லது சாதித்தவர் என்பது பொருள்.

இப்போது நான் பௌத்தமில்லாத ஒரு மொழியைப் பயன்படுத்துகிறேன். அதனால் ஜாக்கிரதை. 'பௌத்தம் அல்லாத மொழியை நான் பயன்படுத்த வேண்டியுள்ளது- ஆகவே நான் சில சொற்களைப் பயன்படுத்த வேண்டி யுள்ளது. 'இடத்தை அடைந்து விட்டவர் என்று நான் கூறுகிறேன். அதைச் சொல்வதற்கு வேறு வழியே இல்லை. ஆனால் நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும் 'அடைந்து விட்டவர்' என்று நான் சொல்லும்போது' 'அடைதல்' மட்டுமே- அடைந்துவிட்டவர் இல்லை. 'அடைந்து கொண்டு' மட்டுமே-அடைதல் கூட இல்லை.

புத்தரின் பார்வை மிகவும் வாழ்வியல் கொண்டது; புத்தரின் பார்வையைப் போன்று விடுதலை தருவது எதுவுமில்லை.

ஏனென்றால் நீங்கள் ஆத்மாவை நம்பினால், நீங்கள் இந்த உலகத்தை விட்டுவிடலாம்; ஆனால் நீங்கள் சொர்க்கத்தை ஆசைப்படுவீர்கள். ஏனென்றால் நீங்கள் உங்கள் சுயத்தைவிட மாட்டீர்கள். ஆசை புதிய பரிமாணத் திற்கு இடம் மாறுகிறது. நீங்கள் பேராசையை விடுகிறீர்கள். ஆனால் உண்மையில் நீங்கள் விடவில்லை- நுட்பமான பேராசை உதிக்கிறது.

முஸ்லிம்களின் அல்லது கிறிஸ்தவர்களின் அல்லது இந்துக்களின் சொர்க்கத்தைப் பாருங்கள். அது எவ்வளவு

உலக இன்பங்களையுடையதாக, புனிதமற்றதாக-சமய விரோதமாக உள்ளது என்று யோசியுங்கள். ஏனென்றால் இந்தச் சமயங்களில் எதையெல்லாம் இங்கே விடச் சொல்லியிருக்கின்றனவோ, அவற்றையெல்லாம் மொத்தமாகத் தருபவையாக இருக்கின்றன சொர்க்கங்கள்.

"மது அருந்தாதீர்கள்"-முஸ்லீம்கள் சொல்கிறார்கள்; ஆனால் அவர்களது சொர்க்கத்தில், பிர்தௌஸ்-மது ஆறுகள் இருக்கின்றன. அங்கே வாங்க வேண்டிய தேவையில்லை. உரிமம் சுமக்கத் தேவையில்லை, குதியுங்கள், மது நதியில்! நீங்கள் குளியுங்கள், நீந்துங்கள், இப்போது இது என்ன?

முஸ்லீம் நாடுகளில், ஓரினச் சேர்க்கை என்பது மிகவும் மேலோங்கியிருக்கின்ற ஒரு விஷயம் ஆகும். அதுவும் கூட அங்கே வழங்கப்படுகிறது. அழகிய பெண்கள் மட்டும் இல்லையாம் அங்கே. அழகிய பையன்களும் வழங்கப் படுகிறார்கள் அங்கே. இது அசிங்கமாகத் தோன்றுகிறது. ஆனால் சாதாரண மனித மனம்...

நீங்கள் இங்கே எவற்றையெல்லாம் விடுகிறீர்களோ, அவற்றை மிக அதிகமாக அங்கே பெறுவதற்காகத்தான் இங்கே விடுகிறீர்கள். இது தான் அவர்களது வாதம்.

அழகிய பெண்கள்-அப்ஸரஸ்கள்-ஹிந்துக்கள் அப்படித் தான் அழைக்கிறார்கள், அழகிகளை! ஹௌரிஸ் என்று முஸ்லீம்கள் மட்டுமல்ல-ஆனால் கில்மிஸ்-அழகிய பையன்கள்-ஆண்மையழகுமிக்க பையன்கள்-இவர்களும் அங்கே கிடைப்பார்கள், ஏனென்றால் சில ஓரினச் சேர்க்கையாளர் கூடச் சொர்க்கம் அடையலாம் அல்லவா? அவர்கள் என்ன செய்வார்கள்?

நீங்கள் உங்கள் சுயத்தை விட்டால் ஒழிய நீங்கள், அதே முட்டாள்தனத்தைத் தான் மீண்டும் நிரந்தரமாகத் தொடர்ந்திருக்கச் செய்து கொண்டேயிருப்பீர்கள். உங்கள் சொர்க்கம்-உலகத்தின் நீட்சியாகத்தான் இருக்குமே தவிர-

வேறொன்றும் இல்லை-அதே உலகம், திருத்தப்பட்டு, மேலும் அழகியதாக்கப்பட்டு, மேலும் அலங்காரம் செய்யப்பட்டு இருப்பதாகத் தான் இருக்கும், பூமியில், பெண்கள் முதுமை அடைகிறார்கள். ஆனால் இந்துக் களின் சொர்க்கத்தில் பெண்கள் முதுமை அடைவதே இல்லை; எல்லோரும் என்றும் பதினாறுதான். அதற்கப் புறம் அவர்கள் வளர்வதே இல்லை.

உண்மையில், ஒவ்வொரு பெண்ணின் ஆசையும் அதுதான். பதினாறிலேயே நின்றுவிட வேண்டும் என்பது தான். இது ஒருபோதும் இங்கே நடப்பதில்லை. ஆனால் அங்கே. பதினாறுக்குப் பிறகு பெண்கள் மிகவும் விருப்ப மின்றி வளர்கிறார்கள். மூன்று நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் அவர்களது பிறந்த நாள் வருகிறது. மிகவும் விருப்பமில்லாமல்!... ஆனால் அது தான் ஆசையாக இருக்கிறது-அழகை நிரந்தரமாக்கிக் கொள்ள.

இங்கே அது அசாத்தியம். எல்லாவகை விஞ்ஞான இயந்திரங்கள், கருவிகள், அழகுபடுத்தும் கொள்கைகள், பிளாஸ்டிக் அறுவை சிகிச்சை, இது. அது.. என்று இவை எல்லாம் இருந்தாலும் கூட இங்கே இது அசாத்தியம்.

ஒருவர் நிச்சயம் முதுமை அடைந்தாகத்தான் வேண்டும். ஆனால் சொர்க்கத்தில்- ஹிந்து- முஸ்லீம், கிறிஸ்தவ, யூத-சொர்க்கத்தில் அந்த அதிசயம் நடந்திருக் கிறது. கடவுள், அழகிய அவர்களுள்ள தோட்டம் கொண்ட சொர்க்கத்தைத் தயார் செய்திருக்கிறார். அவர் காத்திருக்கிறார். நீங்கள் புண்ணியசாலியாக இருந்தால், நீங்கள் அவரைக் கீழ்ப்படிந்தால் நீங்கள் மகத்தான முறையில் பரிசளிக்கப்படுவீர்கள். நீங்கள் கீழ்ப்படியாவிட் டால், அப்புறம் நரகந்தான்.

எனவே தான் இங்கே இருக்கிறது-ஆசையின் மைய மாக-கடவுள் இருக்கிறார்-அந்த ஆசையை நிறைவேற்றும் மையமாக.

'இரண்டும் இல்லை. இரண்டிலிருந்தும் விலகுங்கள்' என்று புத்தர் கூறுகிறார். கடவுளும் இருக்கவில்லை. 'சுயமும்' இருக்கவில்லை. உண்மையைப் பாருங்கள். ஆசைகளில் நகராதீர்கள்.

கற்பனை விநோதங்களை விட்டு விடுங்கள். கனவு காண்பதை நிறுத்துங்கள். என்ன இருக்கிறதோ அதைப் பாருங்கள். வளர்ச்சிப்படிகளின் நிலையற்ற உலகம் தான்-அது மட்டும் தான்-உள்ளது. இந்தத் தொடர் மாற்றம் உள்ள உலகில்-இந்த உண்மைத் தன்மையாகிய நீர்ச் சுழலில்... ஒவ்வொன்றும் நிரந்தரமற்றது, மாறுவது-எதுவும் நிலையானது அன்று.

இதுதான், சுயம் இல்லாமை என்பதன் பொருளாக அவர் வற்புறுத்துவது. ஏனென்றால் ஏதோ ஒன்றை உங்களில் நிலையானதாக ஆக்க நீங்கள் முயல்கிறீர்கள்.

நீங்கள் சொல்கிறீர்கள், உடல் மாறுகிறது என்று, சரி உலகம் மாறுகிறது, சரி, உறவுகள் மாறுகின்றன, அழுங்கிப் போகின்றன சரி- ஆனால் இந்தத் தான் என்பது அழியாதது. ஆம், இந்தக் கண்ணுக்குத் தெரியும் உலகம் மாறுகிறது- ஆனால் கண்ணுக்குத் தெரியாத கடவுள்-அவர் அழியாதவர்-நீங்கள் ஏதோ ஒன்றை அழியாததாக விரும்புகிறீர்கள், ஆகவே விரக்தியோடு, அதை நம்பத் தொடங்குகிறீர்கள், வேறு வழியில்லாததால். அது அழியாதது. ஏதாவது இருக்க வேண்டும் என்பது உங்கள் ஆசை.

'எதுவும் அழியாதது இல்லை' என்று புத்தர் கூறுகிறார். ஒவ்வொரு விஷயமும், நிலையற்றது. ஒவ்வொன்றும் ஓட்டத்தில் பாய்ச்சலில் உள்ளது. இதைப் புரிந்து கொள்ளுங்கள்.

இந்தப் புரிந்துணர்வு உங்களை விடுதலை செய்யும்.

நினைவில் கொள்ளுங்கள். பிறர் விடுதலை பற்றிப் பேசும்போது சுயத்தின் விடுதலை பற்றி அவர்கள் பேசு

கிறார்கள். விடுதலை பற்றி பேசும்போது சுயத்திலிருந்து பெறும் விடுதலை பற்றிப் புத்தர் பேசுகிறார். அது ஒரு மகத்தான அறிவுப்புரட்சியான நிலைப்பாடு அல்லவா? நீங்கள் விடுதலை அடைவீர்கள் என்பதல்ல, உங்களி லிருந்து விடுதலை செய்யப்படுவது பற்றிப் பேசுகிறார் புத்தர்.

புத்தர் சொல்கின்ற சுதந்திரம் தான் உண்மையான சுதந்திரம், உங்களிலிருந்து பெறும் சுதந்திரம். இல்லாவிட் டால், உங்கள் மனம் பல விளையாட்டுக்கள் விளையாடும். புதிய புதிய வரைதுணிகளில், புதிய ஆசைகளைப் புத்தம் புதிதாக வண்ணம் தீட்டிக் கொண்டே இருக்கும். எதுவும் மாறாது. வரைதுணிகளை நீங்கள் மாற்றலாம். சந்தை வெளியிலிருந்து நீங்கள் வெளிச் செல்ல முடியும். ஆலயத் தில் நீங்கள் உட்கார முடியும். எதுவும் மாறாது. உங்கள் மனம் அதே ஆசைகளை மேலுலகத்திலும் சொர்க்கத்திலும் தீட்டிக் காட்டும்.

இந்த மனத்தைப் பாருங்கள். இதன் ஆசைகளைப் பாருங்கள். கவனியுங்கள். விழிப்புணர்வோடு ஆகுங்கள். மீண்டும் மீண்டும், உங்களுக்கு நினைவூட்ட வேண்டி யிருக்கும். ஏனென்றால் நான், பௌத்தமல்லாத மொழி யில் பேசுகின்றேன்.

எனவே விழிப்புணர்வோடு இருங்கள் என்று கூறுகிறார் புத்தர். விழிப்புணர்வாக இருக்கச் சொல்கிறார். விழிப் புணர்வோடு இருப்பவர் ஒருவரும் இல்லை, விழிப்புணர்வு மட்டும் தான் இருக்கிறது.

ஆம், நீங்கள் ஒருபோதும் மீண்டும் பிறக்கப் போவ தில்லை. நீங்கள் இருக்கிறீர்கள் என்னும் கருத்தை நீங்கள் தாங்குவதாக இருந்தால், நீங்கள் ஒரு தொடர்மத்தில் தங்கியிருப்பீர்கள். சுயம் என்னும் கருத்தையே நீங்கள் விட்டு விடுவதாக இருந்தால், தொடர்மம் மறைந்து விடுகிறது. நீங்கள் நீராவியாகிவிடுவீர்கள்.

'நிர்வாணா' என்பது அதுதான். நீங்கள் ஒரு தீபத்தை அணைக்கிறீர்கள், வெளிச்சம் போய்விடுகிறது, மறைகிறது. நீங்கள் உங்கள் ஆசைப்படும் மனதை அணைக்கிறீர்கள். எல்லாத் துன்பங்களும், எல்லாக் குடிபெயர்வுகளும், நின்று விடுகின்றன. திடீரென்று நீங்களே இல்லாமல் போய் விடுகிறீர்கள்-அல்லது நீங்கள் அங்கே இல்லை.

ஆனால், அதன் பொருள் சூனியம் இருக்கிறது என்பதல்ல- இல்லாவிட்டால், சார்வாகருக்கும், பௌத்த மதத்தினருக்கும் வித்தியாசம் இருக்காது. அப்புறம் புத்தருக்கும் நாத்திகருக்கும் இடையில் எந்த வித்தியாசமும் இருக்காது. ஆனால் மகத்தான வித்தியாசம் இவர்களுக்கிடையில் இருக்கிறது.

நீங்கள் இல்லை என்று புத்தர் கூறுகிறார். உண்மைத் தன்மை வெற்றி பெறுகிறது. அதற்கு அவர் ஒருபோதும் எந்தப் பெயரும் அளிக்கவில்லை. ஏனென்றால் பெயரிடுதல் சாத்தியமல்ல. அதற்குப் பெயரிடுவது அதைப் பொய்யாக்கிவிடும். இதைச் சொல்வது, அதற்கு உண்மையல்லாததாக இருப்பதாக ஆகும். அவர் அமைதியாயிருக்கிறார்.

முற்றிலும் மௌனமாய் இருக்கிறார், அதனைப்பற்றி. ஆனால் அதை அனுபவிக்கும் வழியைச் சுட்டிக் காட்டுகிறார். அவர் உடனே துள்ளிக்குதித்து அதைச் சுற்றி ஒரு தத்துவத்தை உருவாக்கவில்லை

**நீங்கள் பலதடவைகள் எங்களிடம் சொல்லியுள்ளீர்கள் "சுயநலமாய் இருங்கள்' என்று. சுயநலமாய் இருப்பது என்றால் என்ன?**

சுயத்தை- விடுங்கள். ஏனென்றால் உங்களுக்கு நிகழக்கூடிய அனைத்திலுமே அழகியது தான். அது தான் தங்களுக்கு ஏற்படும் மிகமிகப் பெரிய மன நிறைவாக இருக்கும்.

சுயத்தை விட்டு விடுங்கள், நீங்கள் உண்மையில் சுயநல மாய் இருந்தால். நீங்கள் உண்மையில், ஆனந்தமயமாக இருக்க விரும்பினால், சுயத்தை விட்டு விடுங்கள்- ஏனென்றால் அதுதான் உங்களுடைய அனைத்துத் துன்பங் களுக்கும், உங்கள் அனைத்து நரகங்களுக்கும் காரணம்.

கடினம் ஏனென்றால் அது ஒரு முரண்பாடு போலத் தோன்றுகிறது இல்லை. ஆனால் நீங்கள் கவனித்திருக் கிறீர்களா? எல்லாத்துன்பங்களும் வருவது உங்கள் 'தானால்' தான், ஆணவத்தால்தான்!

மீண்டும் மீண்டும் துன்பத்திற்காளாகுகிறீர்கள். ஆணவத் தின் காரணமாக நீங்கள் மிகவும் துயரப் படுகிறீர்கள். அது ஒரு காயம் போன்றது, அதுவும் ஒருபோதும் ஆறவே ஆறாத காயம் போன்றது. எதுவாயினும், தென்றல் கூட, குளுமையான தென்றல் கூட உங்களைத் துன்புறுத்துகிறது, யாரோ ஒருவர் புன்னகைக்கிறார். அது துயரப்படுத்துகிறது. யாரோ சிரிக்கிறார், அது துன்புறுத்துகிறது. யாரோ தன் வழியே செல்கிறார். அவர் சுய நினைவில்லாமல் சென்றிருக்கக்கூடும். உங்களைக் கண்டு கொள்ளவில்லை. அப்போது அது துன்புறுத்துகிறது.

முல்லா நசிருதீன், "இனிமேலும் என்னை நீ துன்புறுத் தாதே. நீ என்னை எரிச்சலடையச் செய்து கொண்டே இருக்கிறாய்!" என்று தன் மனைவியிடம் சொல்லிக் கொண்டிருந்தார். உண்மையில் அவருக்குப் பைத்தியம் பிடித்து விட்டது.

'நான் ஒன்றுமே சொல்லவில்லையே. நான் என் வேலை யைச் செய்து கொண்டிருக்கிறேன்' என்று அவர் மனைவி சொன்னாள்.

"அதனால் தான்; நீ அந்த அளவுக்கு அமைதியாக இருக் கிறாய்; அது எனக்கு எரிச்சலைத் தருகிறது; கடவுளுக்காக, ஏதாவது பேசு".

ஆக, நீங்கள் அமைதியாகவே இருந்தாலும் கூட அப்போது கூட ஒரு சிலர் எரிச்சலடையக் கூடும்.

நீங்கள் பேசினால் அதுவும் தொல்லை தான். ஆணவம் என்பது துன்புறுத்தப்படுவதற்குத் தயார் நிலையில் உள்ளது. அது தான் துன்பப்படுத்தப் படுவதற்கான வழிகளையும் காரணங்களையும் தேடிக் கொண்டே இருக்கும். எனவே ஆணவத்துடன் வாழும் ஒரு நபர், தானுடன் வாழும் நபர், உண்மையில் சுயநலமான மனிதன் அல்லன். அவன் ஒரு முட்டாள் மனிதன். ஏனெனில் அவன் வருத்தம் அடைகிறான். நீங்கள் வருந்திக் கொண்டே இருந்தால், எத்தகைய சுயமற்ற சுயநலம் இது? எண்ணிப் பாருங்களேன்.

நான் வழிகாட்டுகிறேன் உங்களுக்கு, சுயத்தை விடுங்கள்; ஆணவம் பற்றி மறந்து விடுங்கள். நீங்கள் இல்லாதது போல் இருங்கள். வெற்றுத் தன்மை போல இருங்கள். அப்புறம் பாருங்கள். பல கோடிக்கணக்கான அழகிய அனுபவங்கள் உங்களுக்குக் கிடைத்துள்ளது. ஒவ்வொரு விஷயமும், ஆழமான, திருப்திகரமான அனுபவமாக ஆகிறது. ஒவ்வொரு விஷயமும் ஒரு நன்கொடையை, ஓர் அருளைக் கொண்டு வருகிறது. ஒவ்வொரு விஷயமும் ஆசீர்வாதமாக ஆகிறது.

ஆணவம் எப்போதுமே எதிர்பார்த்துக் கொண்டே இருக்கிறது. அதனால், எப்போதுமே, விரக்தியாகவே இருக் கிறது. ஆணவமற்ற நபர், எதையும் எதிர்பார்ப்பதில்லை. அதனால் ஒவ்வொரு விஷயமும் நிறைவேறுவதாக உள்ளது.

எது நடந்தாலும் மகத்தானதாக இருக்கிறது. எது நடந்தாலும் அற்புதமாக இருக்கிறது. அவன் ஒரு சிறிய புல்லின் பூவைக் கடந்து வரநேர்ந்தாலும் அதனால் அவன் வசியப்படுத்தப்படுகிறான். பரவசம் கொள்கிறான். "ஆகா, எவ்வளவு அழகிய பூ' நான் எதுவுமே செய்யவில்லையே! நான் அதற்குத் தகுதியாக இல்லையே! அடடே! எனக்காக

அல்லவா அது காத்துக் கொண்டிருக்கிறது!" என்று மகிழ் கிறான். வானத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டே மனநிறைவைக் கொள்கிறான். பறவைகளின் இன்னிசை, அவன் இதயத்தில் மாபெரும் சங்கீதத்தை உதிக்கச் செய்கிறது.

ஒவ்வொரு விஷயமும் அவனுக்கு நிறைவளிக்கிறது; நினைவு கொள்ளுங்கள், விரக்தி என்பது எதிர்பார்ப் பினால் வருகிறது, ஆணவம் எப்போதுமே எதிர்பார்த்துக் கொண்டே இருக்கிறது. இந்தத் ஆணவம் என்பது ஒரு பிச்சைக்காரன்.

நான் ஓர் அழகான சூபி கதையைக் கேட்டிருக்கிறேன். அது தான்:-

ஒரு பிச்சைக்காரன் சக்கரவர்த்தி ஒருவனிடம் வந்து "நீங்கள் எனக்கு எதையாவது கொடுக்கப்போகிறீர்கள் என்றால் ஒரு நிபந்தனை!" என்று சொன்னான். சக்கர வர்த்தி பல பிச்சைக்காரர்களைப் பார்த்துள்ளார்- ஆனால் நிபந்தனை போடும் பிச்சைக்காரர்கள்? ஆனால் இந்தப் பிச்சைக்காரன் உண்மையிலேயே அதிசயமானவன். ஒரு மிகவும் சக்தி வாய்ந்த மனிதன். அவர் ஒரு சூஃபிஞானி. அவரிடம் அழகு உள்ளது, தேஜஸ் உள்ளது, அவரது ஆளுமை ஒளிவட்டம் கொஞ்சம் பொறாமை கொண் டான். நிபந்தனைகள்...?! சக்ரவர்த்தி 'என்ன சொல்கிறீர் கள்? உங்கள் நிபந்தனை என்று எதைச் சொல்கிறீர்கள்' என்று கூறினார்.

பிச்சைக்காரர் "இது தான் என் நிபந்தனை, என் பிச்சைப் பாத்திரத்தில் முழுமையாகக் கொள்ளும்படி பிச்சையிட்டால், நான் ஏற்றுக் கொள்கிறேன்"... என்று தன் நிபந்தனையைக் கூறினார்.

அது ஒரு சிறிய பிச்சைப் பாத்திரம். "நான் யார் என்று நீ நினைத்தாய்? நான் என்ன பிச்சைக்காரனா? இந்தச்

சிறிய அழுக்குப் பிச்சைப் பாத்திரத்தை என்னால் நிரப்ப முடியாதா?" என்று சக்கரவர்த்தி கர்ஜனை செய்தார்.

பிச்சைக்காரர் சொன்னார் "முன்பே சொல்லிவிடுவது நல்லது என்று தான் சொல்லிவிட்டேன். ஏனென்றால் உங்களுக்குக் கஷ்டம் ஏற்படக் கூடாது அல்லவா? நீங்கள், நிரப்ப முடியும் என்று நினைத்தால், நிரப்புங்கள்," என்று சொன்னார்.

சக்கரவர்த்தி தன் மந்திரியை அழைத்து, அந்தப் பாத்திரத்தை வைர வைடூரியங்களால், மாணிக்கங்களால், விலைமதிப்பான கற்களால் நிரப்பச் சொன்னார். இந்தப் பிச்சைக்காரருக்குத் தான் யாருடன் பேசிக் கொண்டிருக்கிறோம் என்று தெரிய வேண்டும் அல்லவா?

ஆனால் அந்தோ, மிகவும் கடினமாகிவிட்டது. அந்தப் பாத்திரத்தில் கற்கள் போனவுடன் மறைந்துவிட்டது. பற்பல தடவைகள் நிரப்பப்பட்டன. ஆனால் மீண்டும் மீண்டும் காலியாய் ஆனது. இப்போது மிகுந்த கோபம் கொண்டார் சக்ரவர்த்தி. தன் மந்திரியிடம் "என் முழு சாம்ராஜ்யமே போனாலும் போகட்டும், என் அனைத்துக் கருவூலங்களும் காலியானாலும் ஆகட்டும். ஆனால் இந்தப் பிச்சைக்காரர் என்னைத் தோற்கடிக்க நான் அனுமதிக்க மாட்டேன். இது ரொம்ப அதிகம்!" என்று கூறினான்.

எல்லாக் கருவூலங்களும், போடப்பட்டு மறைந்து விட்டன என்று சொல்லப்படுகிறது. மெல்ல மெல்ல சக்ரவர்த்தி பிச்சைக்காரன் ஆனான். மாதங்கள் சென்றன. பிச்சைக்காரர் இருந்தார், சக்ரவர்த்தியும் இருந்தார். தலைநகரம் இருந்தது! ஒவ்வொருவரும் என்ன நடக்கப் போகிறதோ என்று அதிசயப்பட்டுக் கொண்டிருந்தனர். முடிவில் என்னதான் நடக்கப்போகிறதோ என்று இருந்தனர்.

ஒவ்வொன்றும் அப்படி அப்படியே மறைந்து கொண்டிருந்தன. இறுதியாகச் சக்கரவர்த்தி பிச்சைக்காரன்

காலடிகளில் விழுந்தார். "என்னை மன்னித்து விடுங்கள். நீங்கள் இந்த இடத்தை விட்டுச் செல்லும் முன்பு ஒன்று மட்டும் சொல்லுங்கள். இந்தப் பிச்சைப் பாத்திரத்தின் ரகசியம் என்ன? எல்லாமே இதற்குள் மறைந்துவிட்டது எப்படி?" என்று கேட்டார்.

பிச்சைக்காரர் சிரிக்கத் தொடங்கினார். "இது மனிதனின் ஆசையினால் செய்யப்பட்டது. ஒரு மனிதத் பேராசையிலிருந்து இந்தப் பிச்சைப் பாத்திரம் செய்திருக் கிறேன். ஒவ்வொரு விஷயமும் அதில் மறைந்து விடுகிறது. எதுவும் அதை நிரப்புவது கிடையாது."

இது ஒரு மகத்தான அழகிய கதை. அது தான் உங்களுக்கு நடந்து கொண்டிருக்கிறது. இது ஒரு கதை அன்று. இது தான் உங்கள் வாழ்க்கை. உங்கள் பிச்சைப் பாத்திரத்தில் போட்டுக் கொண்டே இருக்கிறீர்கள், வீடுகள், கார்கள், வங்கியிருப்புகள்– ஒவ்வொரு விஷயமும் மறைந்து விடுகிறது.

மீண்டும் நீங்கள் காலி– ஒருபோதும் எந்தத் திருப்தியும் இல்லை. ஒருபோதும் எந்த மன நிறைவும் இல்லை. மீண்டும் நீங்கள் பிச்சை எடுத்துக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் இதனைப் பல வாழ்க்கைகளாகச் செய்து கொண்டுள்ளீர்கள்.

இது உங்கள் கதை. இது எழுத்துக்கெழுத்து உண்மை. இது ஒரு உருவகத்தால் மட்டும் உண்மையாக இல்லை. ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் இது உண்மையாக உள்ளது.

நாம் பிச்சைக்காராகவே தங்கி விடுகிறோம். இந்தப் பிச்சைப் பாத்திரம் காலியாகவே தங்கிவிடுகிறது.

அதற்கு அடிப்பகுதியே இல்லாதது போலக் காட்சி அளிக்கிறது. நீங்கள் எதை வேண்டுமானாலும் போடுங்கள். அது மறைந்து விடுகிறது.

ஆணவம் ஒருபோதும் நிறைவு பெறுவதில்லை. ஆகவே ஆணவமுள்ளவன் எவன் என்றால் மிகமிகச் சுயநலமே இல்லாத ஒருவன் ஆவான். இந்த முரண்பாட்டை நினைவு கொள்ளுங்கள்.

தான்மையாளன் என்பவன் மிகவும் சுயநலமற்றவன். ஏனென்றால் அவன் ஒருபோதும் நிறைவடைவதில்லை. தான்மையில்லாதவன் மிகவும் சுயநலமானவன். ஏனெனில் அவன் மன நிறைவுள்ளவன். அவன் ஆனந்த நிலையை அடைகிறான்.

**தினந்தோறும் நீங்கள் மடித்த கைகளோடு வருகிறீர்கள். புன்னகைக்கிறீர்கள், அதே வழியில், பிரசங்கத்தின் பின் சென்று விடுகிறீர்கள்? இந்தப் பாவனையின் அர்த்தம் என்ன?**

நான் பேசுகிறேன் புன்னகையுடன் வருகிறேன், புன்னகையுடன் போகிறேன். அதுதான் ததாகதாவின் அர்த்தம் இப்படி வந்தது; இப்படிப் போனது. இப்படி வருவதும் போவதும் ஒரு புன்னகையாக மட்டுமே இருக்கட்டும். இதைவிடத் திடமான எதுவும் வேண்டாம். புன்சிரிப்புத்தான் உலகிலேயே உள்ள திடமில்லாத பொருள்களில் மிகவும் திடமில்லாதது. உங்களால் அதனைப் பிடிக்க முடியாது. அது நழுவுகிறது. அது வழுக்குகிறது. சொல்லில் அடங்காதது.

உங்கள் வாழ்க்கை ஒரு புன்சிரிப்பாக இருக்கட்டும் புன்னகைத்துக் கொண்டே வாருங்கள். புன்னகைத்துக் கொண்டே செல்லுங்கள்.

உண்மையில், மடித்த கைகளோடு, இல்லாவிட்டால் யாராவது துன்புறக் கூடும்– உங்கள் கைகள் மடிக்காமல், நீங்கள் புன்னகை செய்தால், யாருடைய ஆணவமாவது துன்புறக்கூடும்.

'என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய். என்னைப் பார்த்துச் சிரிக்கிறாய்?" எனவே எந்த அனர்த்தத்தையும்- அதாவது தவறாக அர்த்தப்படுத்திக் கொள்வதையும்- அது காக்கக் கூடும்.

ஆனால் அதன் ஒரு வெற்று- பாவனையாக மட்டும் செய்ய முயல வேண்டாம். ஒரு பொய்யான புன்னகை என்பது உலகில் கற்றுக்கொள்ள வேண்டிய மிகவும் பயங்கரமான விஷயங்களுள் ஒன்று. ஒருபோதும் பொய்யாகப் புன்னகைக்க வேண்டாம். ஏனென்றால், பொய்ப் புன்னகையை ஒரு முறை தொடங்கிவிட்டால், உண்மையாகச் சிரிப்பது எப்படி என்பதை நீங்கள் மறந்து விடக் கூடும்.

ஒருபோதும் உங்கள் புன்னகையை மாசு படுத்தாதீர்கள். ஊழலுக்காளாக்காதீர்கள். இல்லையென்றால் அது ஒரு பாசாங்கு ஆகிவிடும். அதுவும் அபாயகரமான பாசாங்கு ஆகும். நீங்கள் பிறரை மட்டும் ஏமாற்றுவதாக எண்ணிவிட வேண்டாம். நீங்கள் உங்களையே ஏமாற்றிக் கொள்ளக் கூடும்.

உங்கள் புன்னகை, உங்கள், உள்ளார்ந்த மிகவும் அடிப்படையிலிருந்து வரட்டும். சுயம் இல்லாமையின் மிகவும் அடிப்படை மையத்திலிருந்து புன்னகை எழட்டும். அது உங்களைச் சுற்றிலும் பரவட்டும், அடிவேர்களிலிருந்தே எழுகின்ற பூவாக அது இருக்கட்டும்.

ஜீவதாது அந்த வேர்கள் வழியாக உச்சி வரைக்கும் பூ வரைக்கும் சென்று சேர்க்கிறது.

உங்கள் புன்னகை உங்கள் மிக உண்மையான வாழ்வியல் அடிப்படை மையத்தின் அடியிலிருந்து எழட்டும். அது வண்ணம் தீட்டப்படக் கூடாது. நான் கேள்விப் பட்டிருக்கிறேன்.

இதோ அது!

வயதான, சமயப்பற்றுள்ள யூதன் ஒருவன் தன் குழந்தைகளுக்கு உடலோடு ஒட்டிய ஆடைகளை அளித்தான். அவர் கிறிஸ்துவமதத்திற்கு மாறி விட்டார் என்று அவர்கள் நினைத்தார்கள். ஏனென்றால், ஒவ்வொரு முறையும் வீட்டைவிட்டுச் செல்லும்போது அவர் சிலுவை போடுவதுபோல் அவர்களுக்குத் தோன்றியது.

அவர்கள், அவனிடம் கேட்டபோது அவன் இப்படிச் சொன்னான்!

"முட்டாள்! நான் என் வலது பக்கத்தைத் தொடுவது என் மூக்குக் கண்ணாடிகள் இருக்கின்றனவா என்று பார்ப்பதற்காக. என் இடது பக்கத்தைத் தொடுவது என் கைக்குட்டை உள்ளதா என்று பார்க்க. தலையில் நான் கைவைப்பது என் குல்லாய் தலைமேல் உள்ளதா என்று பார்ப்பதற்காக. சட்டையைத் தொடுவது பட்டன் சரியாகப் போடப்பட்டிருக்கிறதா என்று பார்ப்பதற்காக."

உங்கள் சிலுவை இப்படி இருக்கலாம். உங்கள் புன்னகையும் இப்படி இருக்கலாம். பயனில்லாத பாவனைகளை ஒருபோதும் சொரிய வேண்டாம். உண்மையாக இருங்கள். உண்மையான துயரம், போலிப் புன்சிரிப்பை விடச் சிறந்தது. குறைந்தபட்சம் அது உண்மையானது அல்லவா? ஓர் உண்மையான கண்ணீர் போலித்தனமான சிரிப்பைக் காட்டிலும் சிறந்ததாகும். குறைந்தபட்சம், அது உண்மையானது நம்பகமானது. அது உங்களை வளரச் செய்கிறது. நம்பகத்தன் மூலம் ஒருவன் வளர்கிறான்.

அதனால் நான் புன்னகைக்கக் கற்றுக் கொள்ளுங்கள் என்று சொல்லவில்லை. சிரிப்பை அடையுங்கள் என்கிறேன். கற்றுக் கொள்ளச் சொல்லவில்லை. புன்னகைக்கு வரவேற்பு கொடுங்கள். என்று கூறிக் கொள்கிறேன்.

**சிலசமயம் ஆடுபோல நான் இருப்பதாகவும், சிலசமயம் நரிபோல நான் இருப்பதாகவும், சில சமயம், சீடனைப் போல இருப்பதாகவும் உணர்கிறேன். அன்பா, புரிந்துணர்வா எது ஒருவரைச் சீடனாக மாற்றுகிறது?**

இது ஓர் உண்மையான கவனிப்பு, ஆய்வு. இப்படித்தான் ஒவ்வொருவரும் இருக்கின்றனர். இந்தக் கேள்வி பிரேம் அஷீஷ் கேட்டிருக்கிறார். அது ஓர் உண்மையான உற்று நோக்கல். இப்படித்தான் விஷயங்கள் இருக்கின்றன.

சிலசமயம் ஆடு போலவா?

நீங்கள் ஆடுபோல இருந்ததால், சீடனாக இருக்க முடியாது. உண்மையில் பல ஆடுகள் தங்களைச் சீடர்கள் என்று எண்ணிக் கொள்கின்றன. பயத்தினால் மட்டுமே நீங்கள் என்னைப் பின்பற்றுவதாக இருந்தால் நீங்கள் என்னையல்ல, பயத்தைத் தான் பின்பற்றுகிறீர்கள். உங்களிலிருந்து ஆடுகளை உருவாக்குவதற்காகவா நான் இங்கே இருக்கிறேன்! இல்லை! சமூகம், அரசியல் வாதிகள் மத குருமார்கள் தங்களால் முடிந்தவரை போதுமான கெடுதல்களைச் செய்து விட்டார்கள்– இனிமேல் அது சிறிதும் தேவைப்படவில்லை.

பல நூற்றாண்டுகளாக, நீங்கள் கோழைகளாகக் குறைக்கப்பட்டு விட்டீர்கள்; ஒவ்வொருவரும் உங்களைக் கோழையாக இருக்க வேண்டுமென்று கட்டாயப் படுத்தி இருக்கிறார்கள்.

ஒவ்வொருவரும் உங்களை ஒரு பீதிகொண்ட இருப்புக் குக் பலவந்தப்படுத்தி உள்ளார்கள்.

நீங்கள் எப்போதுமே நடுங்கிக் கொண்டிருக்கிறீர்கள்.

உங்கள் நடுக்கத்தை நீங்கள் விடுவதற்கு நான் இங்கே உதவி செய்கிறேன். அஞ்சவருவது எதுவுமில்லை; ஏனென் றால் இழப்பதற்கு எதுவுமே இல்லை. மரணத்திற்குக் கூட

நீங்கள் அஞ்ச வேண்டிய அவசியம் இல்லை. ஏனென்றால் இங்கே சாவதற்கு யாருமே இல்லை.

உங்களுக்கு எந்தத் தீங்கும் செய்ய முடியாது. நீங்கள் இதைப் புரிந்துகொண்டு விட்டால், ஆடு மறைந்து விடுகிறது.

ஆடு வேண்டுமானால் பின்பற்றுபவராக இருக்கலாம்; சீடராக இருக்க முடியாது.

பின்பற்றுபவர் என்பவர் சீடராகத் தான் இருந்தாக வேண்டும் என்னும் அவசியமில்லை.

தான் பாதுகாப்பாக இருக்கத் தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்கு, பின்பற்றுபவர் என்பவர் பல வழிகளையும் கருவிகளையும் கண்டுபிடித்துக் கொண்டிருக்கிறார்.

பின்பற்றுபவர் ஒருவர் தன் பொறுப்புகளை வேறு யாருடைய தோள்களிலாவது சுமத்த முயன்று கொண்டிருக்கிறார். பின்பற்றுபவர், தன்னைத் தொலைத்துக் கொள்வதற்கு ஒரு சரியான குழுவைத் தேடிக் கொண்டிருக்கிறார். அவரது சொந்த அச்சங்கள் இனியும் அவருக்கு இல்லை. ஏனென்றால் அவர் அங்கே தனித்திருக்கவில்லை. அவருக்குத் தேவைப்படுவது தோழமை, நட்புறவு. அவரால் தனித்திருக்க இயலாது. அவர் தனித்திருப்பதற்கு அஞ்சுகிறார். அவர் தன்னைத் தானே நம்பமுடியாதவர்.

பின்பற்றுபவர் என்பவர் தன்மீது நம்பிக்கையில்லாதவர் ஆவார். ஆனால் சீடர் என்பவர் தன்னைவிட மேலும் சிறிது சென்றுள்ள ஒருவரிடம், கற்றுக் கொள்வதற்குத் தன் மீதுள்ள நம்பிக்கையின் அடிப்படையில், வந்துள்ளார்.

சீடர் என்பவர் ஒரு பின்பற்றுபவர் அல்லர், தன் குருவைப்போலவே அப்படியே செய்து காட்டுபவர் அல்லர், அவர் பாதுகாப்பைத் தேடவில்லை.

அவர் புரிந்துணர்வைத் தேடிக் கொண்டிருக்கிறார். அந்தப் புரிந்துணர்வால், மேலும் பாதுகாப்பின்மை மிகுதியானால் கூட, அவர் அதற்குத் தயாராக இருக்கிறார்.

பின்பற்றுபவர் என்பவர், ஒருபோதும் பாதுகாப் பின்மைக்குத் தயாராக இல்லை. தனக்கு ஒரு பாதுகாப்புக் காக, ஒரு அடைக்கலத்திற்காக, இன்னொருவர் பின்னால் தன்னை ஒளித்துக் கொள்வதற்காக, அவர் ஒரு குருவைத் தேடி, ஓர் ஆசானைத் தேடி வருகிறார்.

அவருக்கு ஒரு தந்தை உருவம் தேவைப்படுகிறது; அவரைத் தான் தேடிக்கொண்டிருக்கிறார்.

ஆனால் சீடர் ஓர் ஆசானைத் தேடிக் கொண்டிருக் கிறார்– தந்தை உருவத்தை அன்று.

அவர் வாழ்க்கை என்றால் என்ன என்று கற்றுக் கொள்ள விரும்புகிறார். வாழ்க்கையே அபாயமானதாக, பாதுகாப்பில்லாததாக இருந்தாலும், அதைப் பற்றியெல் லாம் அவர் கவலைப்படவில்லை. அவர் கற்றுக் கொள்ளத் தயாராக உள்ளார்.

வாழ்க்கை மரணத்தைக் குறிப்பிட்டாலும், அதைப் பற்றியெல்லாம் அவர் கவலைப்பட மாட்டார், பொருட் படுத்தமாட்டார், ஆனால் கற்றுக்கொள்வார், அதற்கு ஆயத்தமாக இருப்பார்.

பின்பற்றுபவருக்குத் தேவை ஒரு வரைபடம். சீடர் விரும்புவது ஒரு சாகசப் பயணம். அவருக்கு வரை படம் பற்றியெல்லாம் கவலையே இல்லை. அவர் ஒரு சவாலை விரும்புகிறார். "என்னிடம் சவால் விடுங்கள்" என்கிறார் சீடர். "என்னை என் மதிமயக்கத்திலிருந்து இழுத்து வெளியே விடுங்கள்" என்கிறார் சீடர்.

"என்னைச் சாகசம் செய்ய அனுப்பி வையுங்கள்" என்கிறார் சீடர். பின்பற்றுபவர் என்ன சொல்கிறார் தெரியுமா?

"என்னைக் காப்பாற்றுங்கள். ஒருபோதும் என்னைத் தனித்திருக்க அனுமதிக்காதீர்கள். நீங்கள் இல்லாமல் நான் ஒன்றுமில்லை. என்னை வெளியே எங்கும் அனுப்பி விடாதீர்கள். உங்கள் பின்னால் நான் ஒளிந்து கொள்ள நீங்கள் என்னை அனுமதியுங்கள்" என்று கூறுகிறார்.

நினைவிருக்கட்டும் சீடர் ஒரு தேடுநர்; பின்பற்றுபவர் சும்மா பயம் என்னும் நோய் கொண்டவர்.

**சிலசமயம் நான் ஆடு போல இருப்பதாக உணர் கிறேன்...**

அந்த நேரங்களில் நீங்கள் சீடனாக இருக்க முடியாது; குறைந்தபட்சம், எனக்குச் சீடனாக இருக்க முடியாது.

**சிலசமயம் நான் நரியைப் போல இருப்பதாக உணர்கிறேன்.**

ஆம். ஒரு நரியும் கூடச் சீடனாக இருக்க முடியாது. நரி என்பது மிகவும் தந்திரசாலி, கணக்குப் போடுபவர், அறிவுக்கு வேலை கொடுப்பவர். நரியின் மனம் என்பது எப்போதும் புதிய தகவல்களை, புதிய அறிவைத் தேடிக் கொண்டேயிருக்கும்- அதிகப் புரிந்துணர்வை அது தேடுவ தில்லை.

எங்கிருந்தெல்லாம்- எந்த ஆதாரத்திலிருந்தெல்லாம் அறிவைப் பறித்துக் கொள்ள முடியுமோ. அங்கிருந் தெல்லாம் அறிவைப் பறித்துக் கொண்டு, அதிக அறிவை உடையவராக ஆகுதல் தான் நரியின் மனத்திற்கு உகந்ததாகும்.

ஏனென்றால் அறிவு, அதிகாரத்தைக் (சக்தியை) கொண்டு வருகிறது. நரி சக்தியைத் தேடுகிறது; ஆடு தன்னைக் காப்பாற்றும் சக்தியுள்ள நபரைத் தேடுகிறது. நரி சக்தியைத் தேடுகிறது.

பலசமயங்களில் நரி, ஆடு மாதிரிப் பாசாங்கு செய்து, எவரிடமிருந்தாவது இன்னும் கொஞ்சம் அறிவு கிடைக்காதா என்று பார்க்கிறது. ஆழத்தில், நரி கற்றுக் கொள்வதே, இன்னும் அதிகமாகத் ஆணவக்காரராக ஆவதற்குத் தான் என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

விரைவாகவோ தாமதமாகவோ தான் ஓர் ஆசானாக வேண்டும் என்பதற்காகவே சிலர் ஆசானிடம் வருகிறார்கள். அது தான் அவர்களது ஒரே இலட்சியம்.

அவர்கள் கற்றுக்கொள்ள வரவில்லை. உண்மையில், அடியாழத்தில் அவர்கள் வந்திருப்பது கற்றுக் கொடுப்பதற்காக.

வேறு வழியில்லாமல், அவர்கள் கற்றுக் கொள்கிறார்கள். கற்றுக் கொள்ளாமல் கற்றுக் கொடுப்பது முடியாது அல்லவா? அதனால் விருப்பமின்றிக் கற்றுக் கொள்கிறார்கள்.

நரியானது, பணிவுடன் இருப்பதாக மிகவும் தந்திரமாக இருந்திருக்கிறது. மிகவும் தந்திரமாகத் தன் ஆசானுடன் பழகித் தன்னிடம் இருக்கும் அறிவுத் திறனையும் 'கணக்குப் போடும்' மதி நுட்பத்தையும் கொண்டு ஆசானிடம் நல்ல நேசம் கொண்டு ஆழமான உறவுகளை வளர்த்துக் கொள்ளும் வகையில் அது நடந்து கொள்கிறது.

ஆடு சீடனாக முடியாது. ஏனென்றால் அதன் அடியாழத்தில் சக்திக்கான ஆசை கொழுந்து விட்டெரிகிறது.

ஆனால் இவை இரண்டும் இருக்கின்றன. அஷீஷ் மிக மிகச் சரியாக, மெத்தவும் சரியாக, உண்மையிலேயே உற்றுக் கவனித்திருக்கிறார் என்று உறுதியாகச் சொல்லலாம்.

**சிலசமயம் நான் ஆடுபோல் இருப்பதாக உணர்கிறேன். சில சமயம் நரிபோல் இருப்பதாக உணர்கிறேன். சில சமயங்களில் மட்டும்தான் நான் ஒரு சீடனாக இருப்பதாக உணர்கிறேன்.**

அந்தக் காரணங்கள், சீடராக உங்களை நீங்களே உணரும் தருணங்கள் விலையுயர்ந்தவை. அவற்றை வளர்த்திடுங்கள்; மேலும் மேலும் அதிகமாக அந்தக் கணங்கள் வளர்க்கப்படவேண்டும். அதனால் மெல்ல மெல்ல அந்தக் கணங்கள் உங்களுக்கு அதிகமாக வரும். மேலும் மேலும் அதிகமாக உங்களுக்கு நிகழட்டும்.

நீங்கள் சீடராக இருக்கும் பொன்னான தருணங்களில், உங்கள் ஆடு, நரி இரண்டையுமே, சரணடையச் செய்யுங்கள்.

ஒரு சீடர் அஞ்சுவதுமில்லை, அதிகாரம் அல்லது சக்தியைத் தேடி அலைவதும் இல்லை. வாழ்க்கை என்றால் என்ன என்று அறிவதற்காகத் தேடுதலில் இருப்பவர் தான் சீடர்.

அவர் வெற்றி பெறுதற்கு நினைப்பதில்லை. தானும் 'ஓர்ஆள்' என்பதை இந்த உலகத்தில் தன்னைப் பற்றிப் பிறருக்கு நிரூபிப்பதற்கு அவர் விரும்பவில்லை. "நான் யார்?" என்று- அதை மட்டும் தெரிந்து கொள்ளத்தான் அவர் விரும்புகிறார்.

அவர் யாருக்கும் நிரூபிப்பதற்காக ஆர்வம் கொண்டிருக்கவில்லை. சும்மா அவர் அறிந்து கொள்ள விரும்புகிறார்.

"எனக்கு ஏற்பட்டுள்ள மர்மம் என்ன?" என்று தான் அறிய விரும்புகிறார். அதுவும் ஆழமான, அழுத்தமான பணிவுணர்ச்சியுடன் அவர் இதற்கு விடை தேடுகிறார்.

ஆர்வத்தினால் வந்த கேள்வி அல்ல இது; விசாரித்துத் தெரிந்து கொள்ளும் போக்கு மட்டுமல்ல, அவர் ஓர் உண்மையான நேர்மையான தேடுநர்- ஆகவே அவர் ஒரு முமுக்ஷா- அவரது தேடுதல் முமுக்ஷா- மிகவும் ஆவேசமான ஆசை, வாழ்க்கை என்றால் என்ன தெரிந்து கொள்ளும் வெறி- அவருக்கு உள்ளது.

வாழ்க்கையிடம் தீவிரமான நேசம் உடையவர்தான் சீடர். வாழ்க்கை என்றால் என்ன என்று அறிய விரும்புகிறார். இந்த மர்மச் சுரங்கத்தில் அவர் நுழைய விரும்புகிறார்.

**புரிந்துணர்வா, நேசமா எது ஒருவரைச் சீடனாக மாற்றுகிறது?**

நேசம் மட்டுமே உங்களைச் சீடனாக ஆக்காது. புரிந்துணர்வு மட்டுமே கூட உங்களைச் சீடனாக ஆக்க முடியாது. நேசித்தலும், புரிந்து கொள்ளுதலும் சேர்ந்துதான் ஒரு சீடனை உருவாக்குகின்றன. என்னை நீங்கள் எளிதாய் புரிந்து கொண்டால், நீங்கள் மிகவும் தொலைதூரத்தில் தங்கி விடுவீர்கள். அங்கே தொலைதூரம் இருக்கும். ஏனென்றால் பாலம் இருக்காது. நேசம் இல்லாமல் பாலம் இல்லை. நீங்கள் புரிந்து கொள்வீர்கள். ஆனால் உங்கள் புரிந்துணர்வு மிகவும் வறண்டு இருக்கும். நீங்கள் என்னுடன் இணைக்கப்பட்டிருக்க மாட்டீர்கள். நான் உங்களுக்குள் பொங்கிவழிந்து கொண்டிருக்க மாட்டேன். நீங்கள் என்னை உங்களுக்குள் வெள்ளப் பெருக்கெடுக்க அனுமதிக்க மாட்டீர்கள், உங்களுக்குள் பெருக்கெடுக்க அனுமதிக்க மாட்டீர்கள், உங்களை அதன்மூலம் உருமாற்றுவதற்கு அனுமதிக்க மாட்டீர்கள்.

நீங்கள் தனியாகத் தங்கிவிடுவீர்கள். கணக்கியல் இது. அதே நேரத்தில் நேசம் மட்டுமே உதவிட முடியாது. நேசம் என்பது மிகவும் மகிழ்ச்சியானது. அது புரிந்து கொள்ள மறந்து விடுகிறது. நேசம் மிகவும் கொண்டாட்டம் மிக்கது. அது புரிந்துகொள்ள மறந்து விடுகிறது.

நேசத்தில் முழுமையான ஈடுபாடு இருப்பதால், புரிந்துணர்வுக்குத் தேவையான பற்றின்மை அதில் இல்லை.

ஓர் ஆசானைப் புரிந்து கொள்வது என்பது, போதுமான அளவுக்கு நீங்கள் பற்றற்றவராக இருந்தால் தான்

சாத்தியம். அதே நேரத்தில் புரிந்து கொள்ளப் போதுமான அளவுக்கு நீங்கள் ஆசானுடன் உறவு நேசம்- கொண்டவ ராகவும் இருந்தாக வேண்டும்.

ஒரு பாலம் இருக்கிறது, "நேசிக்கும் புரிந்துணர்வு" என்று நான் அதை அழைக்கிறேன்.. அப்போது என்னுடன் பங்கேற்கிறீர்கள், என்னோடு சிலிர்ப்படைகிறீர்கள். அந்தச் சிலிர்ப்பால் நீங்கள் மூழ்கிவிடுவதில்லை, அந்தச் சிலிர்ப்பால் நீங்கள் குடிகாரர் ஆகி விடுவதில்லை. உங்களால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு குடியுங்கள். ஆயினும் கூட, உஷாராக இருங்கள், ஜாக்கிரதை, நீங்கள் அதில் கரைந்து போகாதீர்கள், தொலைந்து விடாதீர்கள், காணாமல் போய் விடாதீர்கள்.

இது ஒரு முரண்பட்ட நிலைமைதான். நேசிக்கும் புரிந்துணர்வு. அப்போது நீங்கள் என்னோடு ஆழமாகப் பங்கேற்கிறீர்கள். இருப்பினும் நீங்கள் தனிப்பட்டவராகத் தங்கி விடுகிறீர்கள். நீங்கள் என்னுடன் ஒன்றாக உள்ளீர் கள், இருப்பினும் நீங்கள் தனிப்பட்டவராக இருக்கிறீர்கள் அப்பொழுது மட்டுமே- அப்பொழுது மட்டுமே நீங்கள் ஒரு சீடனாக ஆகிறீர்கள்.

**அம்மா, அன்னை, தாய் ஆகியவற்றுக்கிடையே உள்ள வித்தியாசம் என்ன?**

எனக்கு அதிகம் தெரியாது. ஆயினும் என்னால் முடிந்த அளவுக்கு நான் முயல்வேன். அம்மா (மம்மி) என்பவள் அன்னையாக இருப்பது போல் பாசாங்கு செய்பவள். ஆனால் அவள் அன்னை அல்ல. அன்னையாக இருக்க நினைக்கிறாள், ஆனால் அப்படி இல்லை. ஏனெனில் அன்னையாக இருப்பது என்பது மிகமிகக் கடினமானது. அம்மா(மம்மி)வாக இருப்பது மிகவும் சுலபம். பெற்று எடுப்பது ஒன்று போதும், அம்மாவாக இருப்பதற்குப் புரிந்துணர்வு தேவையே இல்லை.

உலகம் முழுவதும் அம்மாக்கள் (மம்மிகள்) உள்ளனர். அன்னையைக் காண்பது மிகவும் கடினமாக இருக்கிறது. அன்னை என்பவள்(மதர்) யார் தெரியுமா? உங்களை நீங்களாக இருக்கச் செய்ய உங்களுக்கு உதவுபவளே அவள். அம்மா என்பவள் உங்களை நேசிப்பதாகச் சிந்திப்பவள்; நம்புபவள், ஆனால் தன்னைத்தான் நேசிக்கிறாள் அவள். அவளது பேராசையினுடைய நீட்டிப்பாக- தொடர்ச்சியாக- நீங்கள் இருக்க வேண்டும் என்று எண்ணுபவள். அதேபோலத் தான் அப்பாவும் கூட.

அம்மாவும் அப்பாவும் (டேடி) எங்கு வேண்டுமானாலும் காணப்படுவர். அவர்கள் முழு உலகையும் மாசுபடுத்தி விட்டார்கள். கறைப்படுத்திவிட்டார்கள் அம்மாக்களும் அப்பாக்களும்.

நரம்புநோயில், ஆழமாகப் பார்த்தால், முடிவில், அம்மாதான் காணப்படுகிறாள் என்று பிராய்டு கூறுகிறார். எல்லா மனப் பகுப்பாய்வுகளும், இறுதியாகவும், உறுதியாகவும், அம்மாவினால் உருவாக்கப்பட்ட ஏதோ ஒரு சிக்கலால் தான் மனநோய் ஏற்படுவதாகக் கூறுகின்றன. ஆகவே அம்மா என்பது அன்னையின் பாசாங்கு தான்– ஆன்மிக அன்னையின் உடல்ரீதியான சமநிலையாளர் ஆவார்.

அன்னையாக இருப்பது மிகவும் கடினமாகும். இலட்சியத்தை அடைந்தவர் மட்டுமே அன்னையாக இயல்பானது, இயற்கையானது. உயிரியல் ரீதியானது. ஆனால் அன்னையாக இருப்பது என்பது ஆன்மிகத்தோடு கொஞ்சம் தொடர்புடையது.

அம்மா, தன்னை நீங்கள் பின்பற்ற வேண்டும் என்பாள். அவள் உங்களை ஆதிக்கம் செய்ய நினைப்பாள், சொந்தம் கொண்டாட நினைப்பாள். அவளுக்கு நீங்கள் ஒரு பகுதியாக- விலைமதிப்புள்ள சொத்தாக நீங்கள் ஆகவேண்டும்

என்பதற்காகப் பாடுபடுவாள்; அவள் உங்களையே ஒட்டிக் கொண்டும் பற்றிக்கொண்டும் இருப்பாள்.

ஆனால் அன்னை, நீங்கள் சுதந்திரமாக ஆவதற்கு உதவி செய்பவள். நீங்கள் 'தனிநபர்' ஆவதற்காக உதவுவாள். அவள் உங்களை நேசிப்பாள். ஆனால், உங்கள் மீது எதையுமே திணிக்க நினைக்க மாட்டாள். அவள் தன் நேசத்தை அன்பை உங்களுக்கு அளிப்பாள். ஆனால் தன் அறிவை உங்களுக்குத் தரமாட்டாள். அவள் உங்களை இந்த உலகத்திற்குள் அனுப்பி வைத்து, உங்கள் சொந்த உண்மையை நீங்களே கண்டுபிடிக்க உதவியாக இருப்பாள். அவள் ஒரு முன் மாதிரியோ, வடிவமைப்போ எதையும் அளிக்க மாட்டாள். அவள் உங்களை வடிவமைக்க மாட்டாள். உங்களால் என்னவாக இருக்க முடியுமோ அதற்கு அவள் உங்களுக்கு உதவுவாள். அன்னை என்பவள் இலட்சியம், அது எப்போதாவது தான் நிகழ்கிறது. அம்மாவை நீங்கள் எங்கும் காணலாம் அன்னை என்பவள் வெறும் இலட்சியம் தான்- கற்பனாவாத லட்சியம்தான். அதாவது உங்கள் ஆத்மாவுக்குப் பின்புறம் கொடுக்கக் கூடியவள்.

புத்தர் மட்டுமே உங்கள் அன்னையாக இருக்க முடியும், மீரா உங்கள் அன்னையாக இருக்க முடியும், அல்லது ஒரு கிருஷ்ணர், ஒரு முகம்மது உங்கள் அன்னையாக இருக்க முடியும். உங்களுடைய ஆத்மாவை உங்களுக்கு அளிப்பவர், உங்கள் விதியை உங்களுக்கு அளிப்பவர், உங்கள் அன்னையாக இருக்க முடியும்.

அம்மா என்பது உயிரியல் ரீதியானது.

'அன்னையின்' கோட்பாடு ஆன்மிகமானது. தாய் எனப்படுபவள் புரிந்து கொள்வதற்கு மிக எளிது. தாய் என்பவள் யார் தெரியுமா? 'ரஜினீஷிடிஸ்' என்னும் நோயினால் பீடிக்கப்பட்டிருக்கும் பெண் தாய் எனப்படுவாள்.

